# இராமன்
# குற்றமற்ற கோமகன்





பேராசிரியர்.
இரா. மணிமேகலை

# இராமன்
# குற்றமற்ற கோமகன்



பேராசிரியர் **இரா. மணிமேகலை**

**மணிமேகலைப் பிரசுரம்**



தபால் பெட்டி எண்: 1447,
7 [ப.எண்: 4], தணிகாசலம் சாலை,
தியாகராய நகர், சென்னை – 600 017.
தொலைபேசி: 24342926, 24346082
மின் அஞ்சல் : manimekalai1@dataone.in
இணைய தளம் : www.tamilvanan.com

# நூல் விவரம்

| | | |
|---|---|---|
| நூல் தலைப்பு | : | இராமன் – குற்றமற்ற கோமகன்! |
| ஆசிரியர் | : | பேராசிரியர் இரா. மணிமேகலை |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு ஆண்டு | : | ஏப்ரல் 2009 |
| பதிப்பு விவரம் | : | முதல் பதிப்பு |
| உரிமை | : | © ஆசிரியருக்கு |
| தாளின் தன்மை | : | மேப்லித்தோ |
| நூலின் அளவு | : | டெம்மி சைஸ் (14 X 21 செ.மீ.) |
| அச்சு எழுத்து அளவு | : | 11 புள்ளி |
| மொத்தப் பக்கங்கள் | : | xvi + 362 = 380 |
| நூலின் விலை | : | ரூ. 160 |
| அட்டைப்பட ஓவியம் | : | பான்ராஜா கிராஃபிக்ஸ் |
| லேசர் வடிவமைப்பு | : | ஸ்ரீ விக்னேஷ்வரா கிராஃபிக்ஸ், போன் : 2650 3802. |
| அச்சிட்டோர் | : | எம்.கே.எண்டர்பிரைசஸ், சென்னை–15. |
| நூல் கட்டுமானம் | : | தையல் |
| வெளியிட்டோர் | : | மணிமேகலைப் பிரசுரம், சென்னை–17. |

★★★

# படைப்பு

*என்னுடைய வணக்கத்திற்குரிய ஆசானாகவும்,*
*போற்றுதலுக்குரிய சிந்தனையாளராகவும்*
*வாழ்ந்து இன்று என் வழிபாட்டுக்குரிய தெய்வமாக*
*என் உள்ளத்தில் உறைகின்ற என் கணவர்,*

**அமரர் திருமிகு. ஷிலன்**

*அவர்களுக்கு அன்புடன் இந்நூலைப்*
*படைக்கிறேன்.*

# என்னுரை

இராமன் என்பவன் யார் ? இராமாயணக் காப்பியத்தின் கதை நாயகன் மட்டுமா ? மன்னு புகழ் வேதங்களையும், கன்னிக் கருக்கழியாத கலைகளையும் காப்பியங்களையும், நண்ணியும் நயந்தும் நின்ற புண்ணிய நாடாம் நம் பாரதத்தில் தோன்றிய ஆன்றோரும் சான்றோரும், தலைமுறை தலைமுறையாகத் தாம் போற்றி வளர்த்துப் பாதுகாத்து நமக்கு விட்டுச் சென்றுள்ள பாரதப் பண்பாட்டின் சாரமான 'அறம்' (வட மொழியில் தர்மம்) என்ற வாழ்வியல் கருத்தின் ஒட்டுமொத்த உருவகமே இராமன்! மனித வாழ்க்கை பூரணத்துவம் அடைவதற்கான வழிகாட்டு நெறியே அறம் எனப் பெறுவது. அந்த அறவழி வழுவாது வாழ்ந்த இலட்சிய மனிதனே இராமன்.

விதியின் வழி பயணப்பட விதிக்கப்பட்டதே மானுட வாழ்க்கை. இதுதான் முடிந்த முடிவான உண்மை. ஒவ்வொரு மனிதனுக்கு முன்னாலும் விதி நடந்து அவனுக்கு வழிகாட்டுகிறது. பின்னால் இருந்து பிடர் பிடித்து அவனை உந்தித் தள்ளுகிறது. இவ்வாறு முன்னும், பின்னும் விதியால் வழி நடத்தப்படும் மனிதன் தடம் மாறி, நிலை தடுமாறி, அப்போதைய சூழ்நிலைக்கேற்ப வாழ்க்கையை வாழ்ந்துவிட்டுப் போகிறான். அப்படி விதியின் கைகளால் உருட்டப்பட்டாலும், சந்தர்ப்பவாத வாழ்க்கைக்கு இடம் கொடுத்துவிடாமல், முடிந்தவரை விதியுடன் போராடி அதன் கைகளினின் றும் விடுவித்துக்கொண்டு, என்றும் நிலைத்து நிற்கும் அறத்தின் கரங்களைப் பற்றி வாழ்வதே மனிதனுக்குப் பெருமை சேர்ப்பதாகும். இதனையே வள்ளுவர், ''வாழ்வாங்கு வாழும் வாழ்க்கை'' என்கிறார். அதாவது, வாழ்க்கையைச் சில நெறிமுறைகளுக்கு உட்படுத்தி, 'இப்படித்தான் வாழ வேண்டும்' என்று வாழ்ந்தால், அது கலையாகப்

பரிணமிக்கும்; போற்றுதலுக்குரியதாகும்; பிறர்க்கும் உதாரணமாகும். அவ்வாறு தன் வாழ்க்கையை வாழ்ந்தவனே இராமன்.

இராமனுடைய ஆளுமைக்கு இருந்த பரிமாணங்கள் பல. அவன் ஒரு நல்ல மகன்; பாசம் மிக்க தமையன்; காதற் கணவன்; தறுகண் மேவிய வீரன்; அண்டியவர்க்குக் காவலன்; சிறந்த நீதிமான்; அறம் வழுவா அரசன்; இடர் களையும் நண்பன்; வாரி வழங்கும் வள்ளல்; நன்றி மறவா மனிதன்; தீயவர்களுக்குக் கூற்றுவன்; நல்லவர்களுக்குத் தெய்வம்..... பட்டியல் நீண்டு கொண்டே போகும். தன்னுடைய ஆளுமையின் அனைத்துப் பரிமாணங்களும் எப்படிச் செயல்பட வேண்டும் என்பதற்கான விதிகளும் சட்டங்களும் அவனுடைய உடலின் அணுக் கூறுகளிலெல்லாம் உறைந்து கிடந்தன. அந்தச் சட்டங்களின் ஊடே ஊடாடி, அவனுடைய உயிர் போல் நின்ற உயர் நெறியாகிய ‘அறம்’ என்னும் உரை கல்லில் உரசி உரசிப் பார்த்தே தன் ஒவ்வொரு செயலையும் அவன் இயல்பாகச் செய்தான். எனவே நடையில் நின்றுயர் நாயகனானான். தருமத்தின் தனி மூர்த்தியும் ஆனான்.

நம் தேசத் தந்தை மகாத்மா காந்தியடிகள், கண்ணன் உரைத்த கீதையை வேதம் என்றார். ஆனால் அந்த வேதத்தை நடைமுறையில் வாழ்ந்து காட்டியவன் இராமன் ஆதலால், அவனே அவருடைய மனதுக்கு உகந்த தெய்வம் என்றார்.

எல்லையொன்றில்லாத பரம்பொருளை, இராமனின் உயர் பண்புகள் என்னும் குறிகளால் காட்ட விழையும் கம்பனின் முயற்சியின் காரண மாகவே, தமிழ் மொழி அமரத்துவம் பெற்றது என்று கம்பனின் இராம காதையைப் போற்றிப் புகழ்கிறான் பாரதி. இராமனைப் பரம்பொருள் என்று ஏற்றுக் கொள்வதில் இரு வேறு கருத்துக்கள் இருக்கலாம். ஆனால் வாழ்வாங்கு வாழ்க்கையை வாழ்ந்தவன் இராமன் என்பதில் இருவேறு கருத்துக்கள் இருக்க முடியாது.

*“வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் – வானுறையும்*
*தெய்வத்துள் வைக்கப் படும்’’ (குறள் –50)*

என்ற பொய்யாமொழி பொய்க்கக் கூடுமோ? எனவே வாழ்வாங்கு வாழ்ந்த இராமனைப் பாரத தேசத்தினர் தெய்வமாக்கி விட்டனர். அத்தகைய பெருமைக்கு இராமன் முற்றிலும் தகுதியுடையவனே ஆவான்.

ஆனால் இந்தத் தகுதி கேள்விக்குள்ளாக்கப்படுவது, இராமனுடைய வாழ்க்கையில் நடந்த 'வாலிவதம்', 'சீதையின் தீக்குளிப்பு' ஆகிய இரு நிகழ்ச்சிகளால். அவ்விரு நிகழ்ச்சிகளும் இராமனுக்குப் பழி சேர்ப்பவை அல்ல. மாறாக, புகழ் சேர்ப்பவையே என்று விளக்குவதே இந்நூலின் நோக்கமாகும். என் சிற்றறிவுக்கு எட்டிய கருத்துக்களைக் கொண்டு நூலின் நோக்கத்தைச் செம்மையாக நிறைவு செய்துள்ளதாகவே எண்ணுகிறேன். தீர்ப்பை வாசகர்களுக்கு விட்டு விடுகிறேன்.

நான் கம்பனை மட்டுமே கற்றேன். கம்ப ராமாயணத்தின் நிகழ்ச்சிகளை அடிப்படையாக வைத்தே நூலை எழுதியுள்ளேன். ஆனால் நூலில் இடம் பெற்றுள்ள – தயரதன், கைகேயியை மணம் புரிந்த காலத்தில், ''கைகேயிக்குப் பிறக்கும் மகனே அயோத்தியை ஆள்வான்'' என்ற வாக்கைக் கன்யாசுல்கமாகக் (மகட்கொடை) கொடுத்துவிட்டு மணம் புரிந்து கொள்கிறான் என்பதும், பின்னர், இராமன் முதலில் பிறந்தவுடன் அந்த வாக்கு வலுவிழந்து விடுகிறது என்பதுமான செய்திகள் கம்பனின் காப்பியத்தில் இல்லை. ஆனால் அந்தக் கன்யாசுல்க நிகழ்ச்சிப் பின்னணியை மறவாமல், மந்தரை, பிற்காலத்தில் கைகேயியை வரம் கேட்க வைக்கிறாள் என்பதைக் கம்பன் சில சொற்கள் மூலமாகச் சூசகமாகத் தன் காப்பியத்தில் கூறவே செய்கிறான். அவ்விடங்களை இந் நூலில் நானும் குறிப்பிட்டிருக்கிறேன். கம்பனில் வெளிப்படையாகக் காணப்படாத கைகேயியின் திருமணக் கால விவரங்களை, நான், நாவலர் திரு. சோமசுந்தர பாரதியார் அவர்கள் எழுதிய 'கைகேயியின் நிறையும் தயரதனின் குறையும்'' என்ற நூலிலிருந்து பெற்றேன் என்பதைத் தெரிவித்துக் கொள்ளக் கடமைப்பட்டுள்ளேன்.

சிறு வயது முதல் என்னுடை கருத்தைக் கவர்ந்த நாயகன் இராமன்; என் அறிவில் ஆட்சி புரிபவனும் அவனே; மனத்தில் தெய்வமாக நிறைந்திருப்பவனும் அவனே.

இராமனுடைய செப்பருங்குணங்களால் ஈர்க்கப்பட்டும் அவன் கதையைப் பிறர்க்கு எடுத்துச் சொல்லும் ஆசையால் உந்தப்பட்டும் 'இராமாவதாரம்' எழுதியதாகக் கூறுகிறான் கம்பன்.

அந்தக் கம்பராமனால் ஈர்க்கப்பட்டுத்தான் நானும் அவனுடைய பண்பு நலன்களை மையப்படுத்தி இந்நூலை ஆசை காரணமாக எழுதியிருக் கிறேன்.

இந்நூலின் கருத்துக்கள் அறிஞர் உலகத்தாலும், ஆன்மீகச் செம்மல் களாலும் ஏற்றுக் கொள்ளப்படுமாயின் அது நான் செய்த பேறு. நூல் இலக்கியத் தரமும் சிறப்பும் வாய்ந்தது என்று இலக்கியவாதிகள் ஏற்றுக் கொண்டால், அந்தப் பெருமை முழுதும் முதலில் கம்பனையே சாரும். முடிவில், கம்பன் மனத்துக்குள்ளிருந்தும், என் மனத்துக்குள்ளிருந்தும் மட்டுமன்றி, பாரத தேசத்தின் பல்லாயிரக்கணக்கான பக்தர்களின் மனத்துக்குள்ளிருந்தும் இயக்கும் தெய்வ மகன் இராமனையே சாரும்.

**– இரா. மணிமேகலை**

---

*குறிப்பு: இந்நூலில் எடுத்தாளப்பட்டிருக்கும் கம்பன் பாடல்கள் அனைத்தும் கங்கை புத்தக நிலையத்தாரின் 2002–ஆம் ஆண்டு பதிப்பிலிருந்து பெறப்பட்டவையாகும்.*

# அணிந்துரை

“இப்படியும் ஒருவன் வாழ முடியுமா என்ற வியப்பையும், இப்படித்தான் மனிதன் வாழ வேண்டும் என்ற உறுதியையும் பிறரிடத்து உருவாக்கும் தன்மை கொண்ட வாழ்க்கை இராமனுடைய வாழ்க்கை" என்ற முன்னுரையுடன் பேராசிரியர் மணிமேகலை அவர்கள் இந்த நூலை எழுதத் தொடங்கினாலும், கவிச்சக்கரவர்த்தி கம்பன் படைத்த இராமன் மானிடத்திற்குக் கிடைத்த ஈடும் இணையுமில்லாத உதாரண புருஷன் (Role Model) என்பதை நூலின் முன்னூற்று எண்பத்தேழு பக்கங்களில் மிகமிகத் தெளிவாக நம் மனங்களில் பதிந்துவிடுகிறார்.

ஆனாலும் "காசில் கொற்றத்து இராமன்" என்ற கம்பனின் காவிய வரிகளை இராமனின் திருமுடியாய்க் கவிக்கு முன்னர், 'வாலி வதம்', 'சீதை தீக்குளிப்பு' என்ற இரண்டு சேற்றுத் துண்டுகள் அதில் ஒட்டிக் கொண்டிருப்பதை கண்டும் கேட்டும் நொந்த தன் சிந்தையைத் தளர விடாமல் நிமிர்ந்து நின்று, அவை காற்றில் அடித்து வரப்பட்டனவே எனத் தெளிந்து, அச்சிறு தூசியையும் துகளையும் கூட உலக மகா காவிய உதாரண புருஷனின் திருமுடியிலிருந்து மிகக் கவனமாக துடைத்துத் துப்புரவாக்கும் ஒப்பற்ற திருப்பணியாக இந்நூலை ஆக்கியதற்காக ஆசிரியருக்கு நம் மனங் கனிந்த பாராட்டுகள்.

இந்த நூலை வேறு பல கம்பனைப் பற்றிய நூல்களைப் படித்து விட்ட எழுதப்பெற்ற Quotable Quote நூல்களில் ஒன்றாக ஆக்காமல், ஆசிரியர் கம்பனில் ஆழங்காற்பட்டு, நின்று நிதானித்துத் துளையமாடிப் பெற்ற ஆய்ந்த அறிவான முத்துக்களை வாரிக் கொண்டு வந்து நம் முன் படைத்திருக்கிறார்.

"நான் கம்பனை மட்டுமே கற்றேன்" என்று சொல்கிற அவர் துணிவு, நூல் நெடுகத் தெளிவாய் மிதக்கிறது. அதிலும் ஆசிரியர் கம்பமாகடலில் முதன் முதலில் நீந்தி விளையாடி இத்தகு முத்துச் சரமாலையாய் அணிவிப்பதற்கு நம் நன்றி பின்னிய வாழ்த்துக்கள்.

கம்பனின் காவியத்திலிருந்தே அகச்சான்றுகள் தந்தே தம் முடிவான "இராமன் குற்றமற்றவனே" என்பதனை நிறுவுவதனாலேயே இந்நூலின் தரம் கூடுகிறது. "இடர் கழிந்தது" என்ற தயரதனின் வாய்ச் சொல்லை விளக்கிக் காட்டும் (பக்கம் 21) நுணுக்கம் ஒன்றே போதுமே!

"அனைத்து வகையிலும், தனக்குச் சாதகமாகவே அயோத்தியில் அரசியல் சூழ்நிலை இருந்தாலும் இராமன் அறத்தின் மூர்த்தியாகவே முடிவுகளை எடுக்கிறான்" என்பதை நிறுவ வருங்காலை, தற்காலச் சூழலுக்கு ஒப்ப ஒரு கற்பனையை ஆசிரியர் விவரிக்கப் புகுவது (பக்கம் 38) அவர் தம் காலத்திற்கேற்ற வாதத் திறமையை பளிச்சிட்டுக் காட்டுகிறது.

"தீயள் என்று நீ துறந்த என் தெய்வமும் மகனும்" என்று தொடங்கும் அனைவரும் அறிந்த மீட்சிப் படலப் பாடலுக்கு இதுவரை யாரும் காட்டாத நயமான விளக்கத்தினை (பக்கம் 55) சாதாரண நடைமுறைக் கண் கொண்டும், உளவியல் கண் கொண்டும் காட்டும் தெளிந்த சிந்தனை ஓட்டம் ஆசிரியருக்கு எளிவந்த கலையாக வாய்த்துள்ளது என்பது நூலைப் படிப்போர் நெஞ்சங்களில் படியும்.

கம்பனுடைய எந்த ஒரு சொல்லும் தேவையற்று அமைவதன்று என்பதற்கு "தீயவர்ச் சேர்கிலாது, செவ்வியோர்ச் சேர்ந்து" என்ற கவந்தனின் வாய்ச் சொற்களைக்

கொண்டு இராம - சுக்ரீவ நட்பிற்கு ஆக்கம் சேர்க்கும் விதம் - வாசிப்பவர்களை முன்னிறுத்தி பொழிவு நிகழ்த்தும் பாங்கில் தெளிந்த நீரோட்டம் போன்ற ஆசிரியரின் எளிய ஆனால் அழுத்தமான தடையற்ற தமிழ் நடைக்கும், இயல்பான ஆற்றொழுக்கான எழுத்துத் திறமைக்கும் கட்டியம் கூறிடும். (பக்கம் 75)

"ஒப்பனை என்பது அணிகளால் ஒப்பற்றதாக இருக்கலாம்; ஆனால் அதில் தெய்விகம் மிளிர வேண்டும். காண்பவர் உள்ளத்தில் பெருமித உணர்வை எழுப்ப வேண்டுமே தவிர இன்ப உணர்வுப் பெட்டகம் பெண் எனும் உணர்வை எழுப்பக் கூடாது" என்ற எளிய சொற்களால் (பக்கம் 266) சீதை தீக்குளிப்பினை விளக்கிடும் ஆசிரியரின் திறம் (அவரும் பெண் என்பதாலோ?) கம்பனின் புதிய சிந்தனை ஓட்டம்; பாராட்டிற்குரிய புதிய பாட்டை.

"ஒழுக்கம் பாழ்பட மாண்டிலை" என்ற கம்ப வார்த்தைகளுக்கு ஆசிரியரின் இயல்பான, யதார்த்தமான உளவியல் பூர்வமான சிந்தனையும் (பக்கம் 317 & 318) இதன் பாற்பட்டதேயாகும்; இக்காரணம் பற்றியதேயாகும்.

"புலவர் புந்தியான்" என்ற தொடருக்கான நியாயமான வாதமும் (பக்கம் 324 & 325) இத்தகையதே. வேறு எந்த ஒரு புறச் சான்றும் தேடாது, கம்பனைக் கொண்டே கம்பனை விளக்குவது என்பது ஆசிரியருக்குக் கைவந்த கலை என்பதை மேற் சொன்ன எழுத்துக்கள் எல்லாம் விண்டு காட்டிடும்.

அக்னி சாட்சியை உலகம் ஏற்றுக் கொள்ளும் இன்றைய நடைமுறை உலகியலோடு ஒப்பிட்டு விளக்குவதும் (பக்கம் 346) ஆசிரியர் தன்னை முற்றிலுமாக கம்பனில் கரைத்துக் கொண்டுவிட்ட தன்மையாலே என்பதனை எவ்வளவு பாராட்டினாலும் தகும். அவருடைய எழுத்தின் வெற்றிக்கு இதுவே சாட்சியம் அளிக்கும்.

"தனக்கு ஏற்படும் பழியைவிட, சீதையின் பழி துடைக்கப்பட வேண்டும் என்பதிலேயே அதிக நாட்டம்கொண்டவன் இராமன்" (பக்கம் 351) என்ற ஆசிரியரின் எழுத்துக்கள் கம்பனை உண்மையில் உணர்ந்தோருக்கு கற்கண்டாய் இனித்திடும்.

இந்த நூலினை முதலில் புரட்டியதுமே ஏற்பட்ட ஆர்வத்தாலும், வியப்பாலுமே இதனைப் பல தடவை படித்து உள்வாங்கிக் கொண்டு மகிழ்ந்தேன்; அதனாலேயே அணிந்துரை எழுதி முடிக்க சில மாதங்களும் ஆயிற்று; ஏனெனில் நூலின் கருத்தாழமும், எழுத்து வளமும் அத்தகையன.

அக்காரணத்தாலேயே நூலின் நயமான பகுதிகளை கோடிட்டுக் காட்டியதோடு விட்டேன்; அவற்றை வாசிப்பவர்களே படித்து நேரிடையாக இன்புற வேண்டியே அணிந்துரையில் விளக்காது விட்டேன்.

கற்றோர் இதயம் களித்திடும் வகையில் கம்பனின் "காசில் கொற்றத்து இராமன்" என்ற சொற்களுக்கு கம்பனைக் கொண்டே கம்ப சித்திரமாய் நூலாக்கிக் காட்டி, என்றுமுள தென்றமிழ் எழுத்தால் இசை கொண்டமைக்கு ஆசிரியருக்கு இலக்கிய உலகமும், கம்பன் ஆர்வலர் உலகும் நன்றி பல நயந்து சொல்லி வரவேற்கும்.

ஆசிரியர்தம் பெயருக்கு ஏற்ப, மணிமேகலையின் அட்சய பாத்திரம் அள்ளித் தருவது போன்று, கம்பனை நமக்கெல்லாம் வாரி வழங்கியுள்ளார். வாழ்க அவர்தம் கம்பவளம்! வளர்க அவர்தம் எழுத்தாளுமை!

03-05-2009

கம்பனடிசூடி

# பதிப்புரை

நூலின் தலைப்பு பெரும்பான்மையினருக்குத் திகைப்பையும், வியப்பையும் உண்டு பண்ணுவதாக வெளிப்படைக் கண்ணோட்டத்தில் காண்போர்க்குத் தோன்றக் கூடும். நூலின்கண் உட்புகுந்து ஆய்பவர் களுக்குத்தான் உண்மை இன்னவென்பது புலனாகும்.

'இராமன் – குற்றமற்ற கோமகன்' என்பதில் எள்ளளவும் யார்க்கும் ஐயம் இருக்க முடியாது. கணிதப் பாடத்தில் 'Reductio add absurdum' என ஒரு ஆங்கிலச் சொல் பயன்படுத்தப் பெறும். முதலில் ஒரு தவறான பாதையில் சென்று திசையறியாது திகைத்துப் பின்னர் சரியான பாதை இன்னதென்று தேர்ந்து இலக்கை எட்டுவது தான் மேற்கண்ட ஆங்கிலப் பதத்தின் முழு விளக்கமாகும். 'காமாலைக் கண்களுக்குக் காண்பதெல்லாம் மஞ்சள் நிறம்' எனும் கடுமொழியையும் இதனோடு ஒப்பிடலாம். அறிவு மயக்கத்தில் மேற்கொள்ளும் தவறான முடிவுகளைத் தவிடுபொடியாக்கும் நோக்கில் எழுதப் பெற்ற நூலாகும் இது.

இராமனின் வாழ்வுப் பயணத்தின் ஊடே நடந்துவிட்ட 'வாலிவதம்', 'சீதையின் தீக்குளிப்பு' ஆகிய இரு நிகழ்வுகளும் இரவிகுலத் தோன்றல் ஸ்ரீ இராமனின் கருணையுள்ளத்திற்குக் களங்கம் விளைவிக்கும் செயல்களாக மேலெழுந்தவண்ணமாக எண்ணம் கொண்டோர்க்குத் தோன்றக்கூடும். இராம பிரானின் அருமைபெருமைகளை முழுதுணர்ந்த கற்றோர்க்கு அவ்விதம் தவறான எண்ணம் எழாது! ஏனெனில், 'காரணமில்லாமல் காரியம் இல்லை' எனும் வாக்கிற்கொப்ப, மேற்கண்ட

இரு செயல்களும் கொடுஞ்செயல்களல்ல; உலக நீதியை ஒட்டியே இவை நடந்தன என்பது நூலின் வாயிலாக நாம் அறியப் பெறும் உண்மைகள்.

'இராமாவதாரம்' பற்றிப் படித்தறிந்தோர் இதனை நன்கறிவர். அயோத்தி மன்னன் தயரதனின் தவப்பெரும் தலைமகனாய் ஸ்ரீஇராமன் மண்ணுலகில் அவதரித்தார். மானுடனாகப் பிறந்தால் மானிடர்க்குரிய குணாதிசயங்கள் அமைவது இயல்புதானே!

மனிதன் பிறக்கும்போதே 'விதி' அவனை முற்றிலும் ஆட்கொண்டு விடுகிறது. 'ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடாதாரே!' என்பது பொன்மொழி! இராம காதையிலும் 'விதி' ஆனது தயரதனின் மற்றுமொரு மனையாட்டி கைகேயியின் அந்தரங்கத் தோழியாம் மந்தரை (கூனி) உருவில் தோன்றிச் செயல்படுகிறது!

கைகேயி இராமனைத் தருவித்து, 'பதினான்காண்டு நீ வனவாசம் செய்ய வேண்டும் என்பது மன்னனின் கட்டளை' என இயம்புகிறாள். தயவே உருவாய ஸ்ரீ இராமன், உடனே, ''மன்னவன் பணியன்றாகில் நும் பணி மறுப்பெனோ ?' என விடை பகர்கிறான்! இவ்வாறு இராமன் கூறிய அக்கணமே விதி அவனை ஆட்கொண்டு விடுகிறது!

வனவாசக் கட்டளை பற்றி ஈன்றெடுத்த தாயிடம் கூறி விடைபெறக் கோசலை முன் சென்று நிற்கிறான்.

*'குழைக்கின்ற கவரியின்றிக் கொற்றவெண் குடையுமின்றி*
*இழைக்கின்ற விதி முன்செல்லத் தருமம் பின்னிரங்கியேக*
*மழைக்குன்ற மனையான் மௌலி கவித்தனன் வருமென்று*
*தழைக்கின்ற உள்ளத்தன்னாள்முன் ஒருதமியன் சென்றான்'*

மேற்கண்ட பாடலும் விதியின் செயல்பாட்டு வலிமையை உணர்த்துவதே ஆம்.

'இராமன் அருங்குணத்துப் பண்பினனாக இல்லாமல் ஒரு சராசரி மனிதனாகவோ – மன்னனாகவோ – இருந்திருந்தால் என்னவாகி இருக்கும்? இப்படி எதிர்மறை நிலையில் அணுகியும்கூட இராமனின் உயர்ந்த பண்பைத் தெளியலாம்'– இவ்வாறு நூலாசிரியை இரா.மணிமேகலை அவர்கள் ஒரு கேள்வியை வாசகர்கள் முன் எழுப்பிவிட்டு, இதற்கான விடையையும் கம்ப நாட்டாழ்வாரின் தீந்தமிழ்ப் பாடல்களின் உதவிகொண்டே அலசி ஆய்ந்து ஒரு நல்ல முடிவினையும் காண வைக்கிறார்! 'இது ஒரு கற்பனைக் கண்ணோட்டம்' என்று 'அறத்தின் மூர்த்தி இராமன்' எனும் பிரிவின் கீழ் ஆசிரியப் பெருந்தகை ஒரு தற்காப்புக் கவசமேந்தி விளக்கி இருப்பது புதுமையிலும் புதுமை எனலாம்! இதன் சிறப்பினை பதிப்புரை வாயிலாக யாம் விளக்கப் போந்தால், பதிப்புரையானது நூல் பக்கத் தாள்களை விழுங்குவதோடு, வாசகர்களின் ஊக்கத்தையும் குறைத்துவிடும். ஆகவே, வாசகர்களே படித்தறிந்து நூலாசிரியை அவர்களின் ஆய்வுத் திறனை வியந்து மகிழட்டும் என விட்டு விடுகிறோம்!

இதுபோன்ற அருமையான ஆய்வு நூல்களுள் 'இது தலைசிறந்த ஆய்வு நூல்' என வாசக வட்டம் விரும்பி வரவேற்கும் என்பதை இந்நூலைப் படித்து இன்புறும் வாசகப் பெருந்தகைகள் மனமார உறுதிகூறி வரவேற்பர். சிறந்த நூல்களை வெளியிடுவதில் எமது மணிமேகலைப் பிரசுரம் என்றுமே முன்னுதாரணமாக நிற்கிறது என்பது வாசக வட்டம் தெளிவாக அறிந்துள்ள உண்மை.

'வங்கக் கடல் கடைந்த மாதவனை'ப் போல், **இரா.மணிமேகலை** அவர்களும், இராம காதையை, 'கம்பன் காவியம்' எனும்படியான அணை கயிறு கொண்டு கடைந்தெடுத்து, **'இராமன் குற்றமற்ற கோமகன்!'** எனும் இன்னமுதாய வெண்ணெய்யை வாசக மணிகளாகிய உங்கள் கரங்களில் உருட்டியெடுத்துத் தருகிறார்! அமுதம் சுவைத்திட வாரீர்!

இராமனின் செயல்பாடுகளில் குறைகள் இருப்பதாகக் குதர்க்கம் செய்வோர்க்கு இந்நூல் பதிலடி கொடுக்கும் என்பது திண்ணம்! மணிமேகலை அம்மையின் சிறந்ததான இந்நூலை, அவரது பெயர் தாங்கி இயங்கிவரும் மணிமேகலைப் பிரசுரமே வெளியிடுவது மேலும் சிறப்பல்லவா? எமதருமை வாசக வட்டத்திற்கு யாமளிக்கும் சிறந்த பல நூல்களில் இதுவும் ஒன்றெனக் கூறத் தேவையில்லை; வாசக மணிகளே இதனை நன்கறிவர்!

வாழ்க தமிழ் எழுத்துலகம்! வளர்க வாசக வட்டம்!

**– பதிப்பாளர்**

★★★

# நன்றியுரை

இராமாயணம் என்றால் 'இராமன் நடந்த வழி' என்று பொருள். ''நிலையற்ற உலகில் நிலைத்து நிற்பது அறமே'' என்ற உண்மையை அறத்தின் வழி நின்று இம்மண்ணுலகில் வாழ்ந்து காட்டியவன் இராமன்! 'இப்படியும் ஒருவன் வாழ முடியுமா?' என்ற வியப்பையும், 'இப்படித்தான் மனிதன் வாழ வேண்டும்' என்ற உறுதியையும் பிறரிடத்து உருவாக்கும் தன்மை கொண்ட வாழ்க்கை இராமனுடைய வாழ்க்கை. உலகின் எந்த இதிகாசத்திலும் காணக் கிடைக்காத பெரும் பேறாக விளங்கும் பாரத நாட்டு 'இதிகாசச் செல்வ'னாகிய இராமன்பால் நான் கொண்டிருந்த அளவற்ற போற்றுதலுணர்வு காரணமாகவே, இந்நூல் எழுதப்பெற்றுள்ளதால், என்னை உள்ளிருந்து ஊக்கிய அந்த 'அறவாழிச் செல்வ'னுக்கு முதற்கண் என் நன்றியை உரித்தாக்குகிறேன்.

'கற்றவர் என்றால் அவர் கம்பனைக் கற்றவரே' என்ற சொற்றொடர் உருவாகும் வண்ணம் செப்பருங்குணத்து இராமனை மையப்படுத்தி, ஓர் ஒப்பற்ற காவியம் புனைந்த கவிச்சக்கரவர்த்தி கம்பனுக்கு என் நன்றி உரியதாகும். ஆன்மாவுக்குள் புகுந்து கற்போரின் உணர்வை நெகிழ்த்திக் கசிந்துருக வைக்கும் இராமன் என்னும் கதாபாத்திரத்தைக் கம்பனன்றி வேறு எவரே இத்தனை ஆழமாகப் படைத்து, அழகாகச் சொற்சித்திரம் தீட்டியிருக்க முடியும்! கால காலத்துக்கும் அழியாத ஓர் அமர காவியத்தைத் தமிழுக்கு மட்டுமன்றி, மனித குலத்துக்கே வழங்கிச் சென்றிருக்கும் கவிச் சக்கரவர்த்தி கம்பனுக்கு என் நன்றி உரியதாகும்.

எப்பொழுதும் என் நூல்களின் கையேட்டுப் பிரதிகளைப் படித்து, என்னை எழுத ஊக்குவிக்கும் என் கணவர் இப்பொழுது அமரர் காலன்

இழைத்து விட்ட கொடுமையால், காலம் என்னை அவரிடமிருந்து உடலால் பிரித்துவிட்டது! 'கண்ணை விட்டுப் போனாலும் கருத்தை விட்டுப் போகாமல்' என்னை உறுதியாகச் செயல்பட வைப்பவர் அவரே என்று நான் நம்புகிறேன். அமரர் உலகத்தில் இருந்துகொண்டு என்னை வழிநடத்திக் கொண்டிருக்கும் என் இதய தெய்வத்திற்கு என் நன்றியை உரித்தாக்கு கிறேன்.

என் அன்பு மகள் சிந்து, ஜெர்மனியில் இயற்பியல் பாடத்தில் முனைவர் பட்டத்துக்கான ஆய்வுக் கல்வி பயிலும் அவர்கள் 2008ஆம் ஆண்டு ஜூன், நவம்பர் ஆகிய இரு மாத காலங்களில் இந்தியாவிற்கு வந்திருந்தார்கள். அப்பொழுது தன்னுடைய பல்வேறு பணிகளுக்கிடையில் வலிந்து முயன்று காலம் ஒதுக்கி, இந்நூலுக்குப் பிழை திருத்தம் செய்து கொடுத்தார்கள். உரை நடையில் திருத்தம் செய்ததோடு, நூலில் வரும் மேற்கோள் பாடல்களை மூலநூலோடு ஒப்பிட்டுச் சரிபார்த்து, பிழை திருத்தி அதைக் கணிணியில் பதிவு செய்தார்கள். இரவு பகல் பாராது, ஓய்வும் உறக்கமும் துறந்து, கணிணியின் முன் அமர்ந்து அவர்கள் ஆற்றிய அந்த ஈடு இணையற்ற பணியின் காட்சி சித்திரமாய் என் மனதில் பதிந்துவிட்டது! இந்நூல் பிழையின்றி உருப்பெற்றிருக்குமானால், அதன் முழுச் சிறப்பும் என் அருமை மகள் சிந்துவையே சாரும். அவர்களுக்கு என் இதய ஆழத்திலிருந்து வரும் நன்றி உணர்வைச் சமர்ப்பிக்கிறேன்.

இறுதியாக இந்நூலைத் திருத்தமாக அச்சிட்டு அழகிய வடிவில் உருவாக்கித் தந்துள்ள மணிமேகலை அச்சகத்துக்கு என் நன்றியை உரித்தாக்கிக் கொள்கிறேன்.

**– இரா. மணிமேகலை**

★★★

# பொருளடக்கம்



⌘ ⌘ ⌘

# I

# காசில் கொற்றத்து இராமன்

## முன்னுரை

**வா**ன்மீகியால் வடமொழியில் இயற்றப்பெற்ற இராமாயணம் என்னும் ஆதிகாவியத்தைக் கம்பன் கசடறக் கற்றான். அக்காவியத்தின் கதைச் செறிவிலும் அழகிலும் மனம் பறி கொடுத்தான். தான் பெற்ற இன்பத்தை இவ்வையகமும் பெற வேண்டுமென்று விழைந்த அச்செம்மனத்தோன், மூல காவியத்தை அடியொற்றித் தீஞ்சுவைத் தமிழிலே 'இராமாவதாரம்' எனும் வழிநூலைப் படைத்தான். அவ்வழிநூலோ மூலநூலையே பல வகையிலும் விஞ்சும் வண்ணம் அமைந்து காலத்தை வென்ற படைப்பாக அமரத்துவம் பெற்று, ஒரு ஈடு இணையற்ற காப்பியமாகச் சிறந்து விளங்குகின்றது!

அழகும் ஆழமும் விரிவும் செறிவும் நிறைந்த வான்மீகியின் இராமாயணத்தை வடமொழியில் பழுதறக் கற்ற பின்னர், கம்பன் அதனை அடியொற்றித் தானும் தமிழில் ஒரு நூல் படைக்க எண்ணிய தன் பேதைமையை அவையடக்கமாக ஒரு அழகான உவமையில் கூறுகிறான். அப்படிக் கூறும்பொழுது எத்தகைய நோக்கத்துக்காக இந்தப் பேதைமை நிறைந்த செயலைத் தான் செய்யத் துணிந்தான் என்ற காரணத்தையும் ஒருங்கே கூறுகிறான். அந்த அழகான பாடல் பின்வருமாறு:

*"ஓசை பெற்று உயர் பாற்கடல் உற்று, ஒரு*
*பூசை, முற்றவும் நக்குபு புக்கென,*
*ஆசை பற்றி அறையலுற்றேன் – மற்று, இக்*
*காசில் கொற்றத்து இராமன் கதை அரோ!"*

*(பாயிரம் – அவையடக்கம் – 4)*

பாடலின் பொருள்: "பொங்கி நுரைத்துச் சுழித்து அலை புரண்டு, ஓசையிடும் பாற்கடலின் முன் நிற்கும் ஒரு பூனை, அக்கடல் முழுவதையும் நக்கியே குடித்து முடித்து விடலாம் என்று பேதைமை கலந்த ஆசையோடு எண்ணுவதுபோல, நானும் வான்மீகியின் ஆதி காவியக் கதையை அழகான தமிழில் உலகத்துக்குக் கூறி விடலாமென்று பேதைமை கலந்த ஆசையோடு எண்ணுகிறேன். அதாவது, பேதைமை என்றறிந்திருந்தும் அத்தகைய செயலை நிறைவேற்ற ஆசைப்படுகிறேன். என்னை அத்தகைய ஆசைக்கு ஆளாக்கியது யார் தெரியுமா? அந்தக் காப்பியத்தின் நாயகனான இராமன்தான். குற்றங்குறைகள் காண முடியாத நற்பண்புகளின் உறைவிடமாகவும், அறத்தின் கொள்கலனாகவும் விளங்கும் நடையில் நின்றுயர் நாயகனான இராமனே, அவனுடைய மாசு மறுவற்ற ஆளுமை அழகினால் என்னை ஈர்த்து இந்நூலை யாத்தற்கு என்னைத் தூண்டியவன். எனவேதான், எண்ண எண்ண, சித்தத்தில் விரிந்து பரந்து வளர்ந்து கொண்டே போகும் இராமனின் ஆளுமையைப் பற்றி மற்றவர்க்கு எடுத்துக் கூறுதல் என் திறமைக்கு வசமாகாது என்றறிந்திருந்தும், அவன் புகழைப்பாடிப் பரவுவதிலே இருக்கின்ற இன்பத்தை அனுபவிக்கும் ஆசையைத் துறக்க மனமின்றி, அவன் கதையைப் பிறர் அறியும் வண்ணம் எழுத்தில் வடிக்க மனம் கொண்டேன்"

பாடலின் 'காசில் கொற்றத்து இராமன்' எனும் இறுதி வரி சிந்தனைக்குரியது. இச் சொற்றொடரின் பொருள்தான் 'இராமன் – குற்றமற்ற கோமகன்!' என இந்நூலின் தலைப்பாகவும் ஆகியுள்ளது.

இவ்வரியில் குற்றங்குறைகளற்ற இராமன் என்று மட்டும் கம்பன் குறிப்பிடவில்லை. குற்றம் குறைகளற்ற ஒரு கொற்றவனாகிய இராமன் என்று அவனுடைய அரச அடையாளத்தைச் சேர்த்தே குறிப்பிடுகிறான், 'கொற்றத்து இராமன்' என்ற சொற்கள் மூலம்.

'இராமாவதாரம்' என்ற கம்பனின் காப்பியம் கூறுவது அரசுப்பட்டம் துறந்து வனமேகி வாழ்ந்த இராமனின் சரிதத்தை. இராமன் அயோத்தி மன்னனாக முடி சூட்டிக் கொள்வதோடு கம்பனுடைய காப்பியம் நிறைவடைகிறது. சரியாகச் சொல்லப் போனால், கொற்றத்து இராமன் – அரசன் இராமன் – என்பவன் அதன் பிறகுதான் உருவாகிறான். எனவே இராமன் அயோத்தியை ஒரு அரசனாக எவ்வாறு குற்றமற்ற முறையில் ஆட்சி புரிந்தான் என்று கம்பன் காப்பியத்தில் கூற வாய்ப்பே இல்லை. ஆயினும் குற்றமற்ற அரசன் இராமனின் கதையைக் கூற விழைந்தேன் என்று தெளிவாகக் கூறுகிறான் கம்பன். அக்கதையில், இராமன், அரசு துறந்து வனம் ஏகுவது தொடங்கி, இராவண வதம் முடித்துப் பின் அயோத்தி திரும்பி முறையாக முடிசூடிக் கொள்வது ஈறாக – இராமனுடைய வாழ்க்கையை வருணிக்கிறான் கம்பன்.

அப்படியென்றால் கம்பனின் கணிப்பில், அரசு துறந்து வனத்தில் வாழ்ந்த பொழுதும் இராமன் அயோத்தி வேந்தனே ஆகிறான். அதாவது அயோத்தியின் அரசனாகிய இராமன் வனத்தில் வாழ்ந்தான் என்பதும், அப்படி வாழ்ந்த பொழுது அரசனுக்குரிய தர்மங்களைப் பின்பற்றியே அவன் வாழ்ந்தான் என்பதும், அப்படி அவன் வாழ்ந்த வாழ்க்கையில் அவன் எடுத்த முடிவுகள் யாவும் ஒரு அரசனுக்குரிய கடமைகளேயாதலால், அவனது செயல்பாடுகள் அனைத்தும் – பல காலம் பலராலும் விமர்சிக்கப்பட்டுள்ள வாலி வதம், சீதையின் தீக்குளிப்பு ஆகிய செயல்பாடுகள் அடங்க அனைத்தும் – குற்றமற்றவைகளே என்பதே கம்பனின் முடிவு. எனவேதான் குற்றமற்ற அரசனாக வாழ்ந்த இராமனின் கதையே இக்காப்பியத்தின் பாடுபொருள் என்று பாயிரத்தில் குறிப்பிடுகின்றான்.

கம்பனின் கூற்றை அடியொற்றி, இராமன் கைகேயியின் ஆணைப்படி வனத்தில் வாழ்ந்திருந்த பொழுதும் அயோத்தியின் வேந்தனாகவே அங்கு வாழ்ந்தான் என்பதையும், அத்தகைய காடுறை வாழ்க்கையில் அவன் எடுத்த முடிவுகளெல்லாம் அரசதர்மத்துக்கு உட்பட்டவையேயாகையால் அவை குற்றங்களல்ல என்பதையும் நிருபித்துக் ‘குற்றமற்ற கொற்றவன் இராமன்’ என்ற கம்பனின் எண்ணத்தை நிலைநிறுத்துவதே இந்த நூலின் நோக்கமாகும்.

தயரதனின் மக்கள் நால்வருள், அயோத்தி மக்கள் இயல்பாக ‘கடல் தரு முகில் ஒளிர் கமல முகத்தோனாகிய’ இராமனையே தம் அரசன் என்று கருதி, அவன் வசிட்டரிடம் கல்வியும், கலைகளும் கற்றுத் திரும்பும்பொழுது, ‘ஏழுலகும் எம் உயிரும் உனது உரிமை’ என்று கூறி அளவு கடந்த அன்பு பாராட்டுகின்றனர்.

*“....... ‘ஐய! நினை எமது அரசு என உடையேம்;*
*இஃது ஒரு பொருள் அல; எமது உயிருடன் ஏழ்*
*மகிதலம் முழுதையும் உறுக, இ மலரோன்*
*உகு பகல் அளவு’ என, உரை நனி புகல்வார்”*

*(பால – திரு அவதாரம் – 133)*

மேலும் கம்பன் எழுதுகிறான்:

*“இப்பரிசு, அணி நகர் உறையும் யாவரும்,*
*மெய்ப் புகழ் புனைதர, இளைய வீரர்கள்*
*தப்பு அற அடி நிழல் தழுவி ஏத்துற*
*முப்பரம் பொருளுக்கு முதல்வன் வைகுறும்”*

*(பால – திரு அவதாரம் – 134)*

திருமாலின் திரு அவதாரமான இராமன் மக்களுடைய அன்பு முழுவதையும் பெற்று இனிது இருந்தான். இராமன் முடி சூடித் தம்மை ஆளும் நாட்களை அயோத்தி மக்கள் எதிர்நோக்கியே வாழ்ந்தனர் என்பதைக் கம்பன் காட்டுகிறான்.

மன்னன் தயரதனோ 'இராமனன்றி வேறு உயிரிலாத தந்தையாக' வாழ்கிறான். இராமனும் அவர்களுடைய உள்ளத்தையெல்லாம் கொள்ளை கொள்ளும் பண்பினனாக – அறத்தின் மூர்த்தியாக – வளர்ந்து வருகிறான். குல குரு வசிட்டரிடம் கேடில் விழுச் செல்வமாம் கல்வியைக் கற்கிறான். பிரபஞ்சம், பரம்பொருள், உலகம், மனிதன், உயிர்கள், வினைகள் இவையெல்லாம் ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்து இணைந்து இயங்கும் அற்புதங்களையெல்லாம் ஆயிரமாயிரம் விதங்களில் விளக்கும் வேதபாடங்களைப் பழுதறக் கற்று ஞானம் பெற்றான். ஒரு நாட்டை ஆளும் மன்னனுக்கு விதிக்கப்பட்ட பண்புகள் எவையெவையென்பதையும் கோதறக் கற்றான். மானுட வாழ்க்கைக்கும், அம்மானுட வாழ்க்கையை நெறிப்படுத்தும் வண்ணம் தலைமைப் பொறுப்பேற்று வாழும் மன்னனுடைய வாழ்க்கைக்கும் வழிகாட்டியாக விளங்கும் மனுதர்மத்தை மனத்தில் இருத்தினான். கற்ற கல்விக்குத் தக்கவாறு வாழ்ந்து காட்டவேண்டும் என்ற பெருநோக்கோடும், கொள்கைப் பிடிப்போடும் வாழ்ந்தவன் இராமன். தன் வாழ்க்கையின் ஒவ்வொரு கட்டத்திலும், ஒவ்வொரு நிலையிலும் தான் எடுக்கும் முடிவுகள் அறம் சார்ந்தவையா என்று மனுதர்மமும் வேதங்களும் தனக்குப் போதித்த அறிவு என்னும் உரைகல்லில் உரசிப் பார்த்து அதன் பின்னரே செயல்களில் இறங்கியவன் இராமன்.

இராமன் தன்னைப் பரம்பொருள் என்று உணர்ந்ததுமில்லை. எவ்விடத்தும், எவரிடத்தும் அவ்வாறு கூறிக் கொள்வதுமில்லை. அந்தமில் பெருங்குணங்கள் எல்லாம் தனக்கு இயல்பாய் அமைந்திருக்க, அறத்தின் வழி வாழும் இயல்பு கொண்ட மனிதனாகவும், அவ்வகையில் 'அறநெறி முதற்றே அரசின் கொற்றம்' என்ற தர்மத்தை அறிவில் ஏற்று, அறத்தை உயிர்நாடியாகக் கொண்டே அரசன் நாடாள வேண்டும் என்ற சீரிய நெறியில் தளராத பிடிப்புள்ள இரவி குலத்தோன்றலாகவும் ஒரு கர்மயோகி போன்று வாழ்கின்றானேயன்றி, முக்காலமும் உணர்ந்த மகான் போன்றும், அதிசயங்கள் நிகழ்த்தும் அவதாரம் போன்றும் அவன் வாழவில்லை. மானுட சக்திக்குட்பட்ட வகையில் கூடியவரை அறத்தின்பால் சார்ந்தே தனிப்பட்ட தன்னுடைய வாழ்க்கை முடிவுகளையும், அரசன் என்ற முறையில் தன் பொது வாழ்க்கை முடிவுகளையும் எடுத்துச் செயலாற்றுகின்றான் இராமன்.

ஒரு இலட்சியத்தை ஏற்று இப்படித்தான் வாழவேண்டும் என்பதில் உறுதியாக இருப்பவர்களுக்குத்தான் சோதனைகள் ஏற்படும்! இராமனுடைய வாழ்க்கையும்

அப்படித்தான் அமைந்தது. இடர்களே வாழ்க்கையாகிப் போன கதைதான் இராமனுடைய கதை. 'மானுட குலத்தின் மிகச் சிறந்த மானுடன்' என்று போற்றப்பெறும் இராமன் இப்பூவுலகில் வாழ்ந்த வாழ்க்கை, மானுட குலத்துக்கு ஒரு பேருண்மையை உணர்த்தியது. எத்துணைச் சிறப்புக்குரியவனாக ஒரு மனிதன் இருந்தாலும் – தெய்வ அவதாரமேயானாலும் – 'மனிதன் விதியின் கைகளில் ஒரு விளையாட்டுப் பொம்மையே' என்ற உண்மைதான் அது. அறக்கடவுளே ஓருருக் கொண்டதென்ன தோன்றிய இராமனை வழி நடத்திச் சென்றது விதியே. அவ் விதியின் வழி, வேறு கதியின்றி ஏகியவன் இராமன் என்பது கவிச் சக்கரவர்த்தி கம்பனின் கூற்றாகும். அரசனும் தந்தையுமாக உள்ள தயரதன் அரசுரிமை அருளிய சில நாழிகைகளுக்குப் பின்னர், அன்னை கைகேயியின் ஆணையால் அது இராமனுக்கு மறுக்கப்படுகிறது. இக்கட்டத்தில் கம்பன் கூறுகிறான். 'இராமனுடைய வாழ்க்கை நிகழ்ச்சிகளை இழைத்து இழைத்துக் கோலமிட்டுச் செல்லும் விதி முன்னே செல்ல, தருமத்தின் தனி மூர்த்தியாக இருந்தும் அதனை வெல்ல இயலாத கையறு நிலையில் அதன் பின்னே இரங்கி ஏகி நடந்தான் இராமன்' என்று.

*'இழைக்கின்ற விதி முன் செல்ல தருமம் பின் இரங்கி ஏக'*
*(அயோத்தியா – நகர் நீங்கு – 1)*

என்பது கம்பனுடைய கவிதை வரி.

இராமன் தன் வாழ்க்கையின் பல்வேறு காலக்கட்டங்களில் பலவிதமான சிக்கல்களையும் சங்கடங்களையும் எதிர் கொள்கிறான். அவற்றை வெற்றிகரமாகச் சமாளித்து வெளிவரும் முயற்சிகளில், ஆத்மார்த்தமாக அறத்தின்பாற்பட்ட முடிவுகளை எடுக்கவே விழைகிறான். ஆயினும் வாழ்க்கை இராமனுக்கு வெற்றிகளை எளிதாக ஈட்டித் தந்து விடவில்லை. விதி எப்பொழுதும் அறச்சார்புடைய அவனது மனத் திட்பத்தையும் உள்ளத்தின் உள் வலிமையையும் சோதித்துக் கொண்டே இருந்தது! ஒரு கோணத்தில் அறமாகவும் மறு கோணத்தில் அறப்பிறழ்வாகவும் தோன்றும் தீர்வுகளை முன்வைத்து அவனை மருட்டியது. ஒன்றுக்கொன்று முரண்படும் தீர்வுகளில் எதைத் தேர்ந்தெடுத்துச் செயல்படுத்துவது என்பது எல்லோருக்கும் ஏற்படும் வாழ்க்கைச் சிக்கல்தான். இவ்வாறு "சூழ்நிலையின் கைதிகளாக" வாழ்வது தான் மானுட வாழ்க்கை. இந்த உண்மையை உணர்த்துவதே இராமனுடைய வாழ்க்கை.

விதியின் சதிக்கு ஈடுகொடுத்துக் கொண்டே வாழும் இராமன், துயரம் மிகுந்த இக்கட்டான சூழ்நிலைகளிலும் கூட ஒரு மாமன்னனைப் போன்று கம்பீரமாகவும், ஒரு கர்மயோகியைப் போன்று மனச்சீர்மையுடனும் வாழ்க்கையின் முடிவுகளை

எடுக்கிறான்! .... உறவுகள் தரும் பாச உணர்வுகளுக்குக் கட்டுப்பட்டும், துயர் சூழும் காலக்கட்டங்களில் மனம் தளர்ந்து கண்ணீர் விட்டுக் கதறியும், சில சமயங்களில் இராமன் உணர்வு பூர்வமாக எதிர்வினையாற்றுகிறான் என்பது உண்மையே. ஆயினும், அதில் இராமன்பால் குற்றம் காணவே இயலாது. காரணம், அப்படிப்பட்டவன்தான் இயல்பான மனிதன் ஆவான். மானுட அவதாரம் எடுத்த இராமன் மனிதனுக்குரிய இயல்பான உணர்வுகளைப் புறந்தள்ளி வாழ்ந்துகாட்ட இயலாது. எனவேதான் தந்தையின் மரணம், சீதையின் பிரிவு, இலக்குவனின் மயக்கமுற்ற நிலை ஆகிய அனுபவங்களின் பொழுது, இராமன் உணர்வு பூர்வமாகப் பேசவும் செயலாற்றவும் செய்கிறான். இதில் குற்றம் எதுவும் இல்லை. உள்ளத்தை உலுக்கும் உணர்வுகளுக்கு மதிப்பளிக்காமல் வாழ்பவன் மனிதனே அல்லன்! ஆயினும், இராமன் துன்ப உணர்வுகளினின்றும் மீண்டும் வந்து செயலாற்றுகிறான் என்பதுதான் அவனுக்குரிய சிறப்பு.

துயர்க்கடலில் மூழ்கித் தன்னைத் தொலைத்து விடுபவன் சாதாரண மனிதன். அதனின்றும் மீண்டு வருபவனே இலட்சிய மனிதன். இலட்சிய மனிதன் என்பவன், உயர்ந்த இலக்குகளை முயன்று அடையும் முயற்சியில், துன்ப அலைகளைத் தன் அறக் கரங்களால் புறந்தள்ளி, துயர்க் கடலினின்றும் மீண்டு வருவதோடு, துன்பத்தையே அனுபவமாக்கி, தோல்வியையே படிப்பினையாக்கித் துணிவுடன் தொடந்து செயல்பட்டு இலக்கை அடைந்து வெற்றிக்கொடியை நாட்டிய பின்னரே தன் வரலாற்றை முழுமை பெறச் செய்வான். இத்தகைய வாழ்க்கையை வாழ்ந்த இலட்சிய மனிதன் இராமன் ஆதலால், மேற்கூறப்பெற்ற வாழ்க்கை உண்மைகளே அவன் மானுட குலத்துக்கு விட்டுச் சென்றுள்ள செய்தியும் ஆகும்.

இராமன் வாழ்ந்த வாழ்க்கை மானுட குலத்துக்குப் பல உண்மைகளை உணர்த்தியது. அவற்றில் குறிப்பாகச் சில உண்மைகளை மட்டும் இராமனுடைய வாழ்க்கைச் சரிதத்தோடு பொருத்திப் பார்த்து விளக்கம் பெறலாம்.

மனிதனின் சித்தத்தில் விளைந்த எண்ணம் நாவின் வழி மொழியாகப் பூத்துச் சொற்களாக வெளி வந்துவிட்டாலே அவை மந்திரச் சொற்களுக்கொப்பானவைதாம்! அத்தகைய சொற்கள், பல மனிதர்களுடைய உள்ளத்து உணர்வுகள் சம்பந்தப்பட்ட ஒரு சூழலில், ஒரு மனிதனால் கூறப்பட்டு விட்டால், அச்சொல்லைக் காப்பாற்றுவதற்கு மனிதன் எந்த விலையையும் கொடுப்பதற்குச் சித்தமாக இருக்க வேண்டும். இதுவே 'உள்ளத்தால் பொய்யாது ஒழுகும் நிலை'. தந்தை என்ற முறையில் தயரதன் உள்ளத்தால் பொய்யாது ஒழுகும் நிலை தவறாதிருக்க, இராமன் தனக்குற்ற அரசுரிமையைத் துறந்து, வனம் ஏகி வாழ்ந்து, இந்த உண்மையை உலகுக்கு

உணர்த்தினான். அடுத்து, தெய்வமே ஆயினும், அது மானுட உருக் கொண்டு விட்டால் மாயையில் உழல்வது தவிர்க்கவே இயலாதது என்ற வேதத்தின் உட்பொருளை சீதையின் நாயகன் பொய்மானைத் துரத்திச் சென்று இடர்ப்பட்டதன் மூலம் உலகுக்கு உணர்த்தியது இராமனின் வாழ்க்கை. அடுத்து, பேரறம் ஒன்றைக் காப்பதற்காகவேண்டி, வேறு ஒரு அறம் பிழைக்கும் இடரான நிலைக்குத் தள்ளப்படுவது என்பது மானுட வாழ்க்கையில் தவிர்க்க இயலாதது என்பதை **"வாலி வதம்"** மூலம் உலகுக்கு உணர்த்தியது இராம காதை. மேலும், "அறநெறி முதற்றே அரசின் கொற்றம்" என்ற நீதியை அடித்தளமாகக் கொண்டு அரியாசனத்தில் அமரும் மன்னன், தண்டிக்கப்பட வேண்டியவர் எவரேயாயினும் - தன் ஆவியில் கலந்த தேவியேயாயினும் - அரச தர்மத்திலிருந்து தப்ப முடியாது என்பதைச் **'சீதையின் தீக்குளிப்பு'** மூலம் உலகுக்கு உணர்த்தியவன் இராமன். எனவே கம்பனுடைய நோக்கிலே இராமனுடைய செயல்கள் எவையாக இருப்பினும், அவையனைத்தும் அறப் பிறழ்வே இல்லாத நிறைச் செயல்களே. எனவேதான், அறத்தின் மூர்த்தியாகிய இராமனின் நற்பண்புகளிலும், குறையில்லாத குணங்களிலும் மனம் பறிகொடுத்து அவன்பால் ஆசையை வளர்த்துக் கொண்டு விட்டதனால் காசில் (காசு + இல் - குற்றமில்லாது) கொற்றத்து இராமன் கதையை ஆசை பற்றிக் காப்பியமாக்க முடிவு செய்தேன் என்கிறான் கம்பன்.

எல்லோருடைய வாழ்க்கையையும் விதியே தீர்மானித்து நடத்தி வைக்கிறது என்பதுதான் மெய்யறிவு காட்டும் உண்மை. இராமன் அவதார புருஷனாகையால் அவனுடைய வாழ்க்கையில் விளையாடிய விதி சிறப்பான அங்கீகாரம் பெற்று, ஈடு இணையற்ற ஒரு காப்பிய உருவாக்கத்துக்கான கருவை வார்த்தெடுத்துவிட்டது! இராமனுடைய வாழ்க்கை, மானுட வாழ்வின் அனைத்துப் பரிமாணங்களையும் உள்ளடக்கியதோடு, அவற்றிலிருந்து மனித குலம் ஞானம் பெறும் வகைக்கான ஓர் அற்புத வரலாறாகவும் வடிவம் கொண்டுவிட்டது. அத்துடன் பருவுடல் வாழ்க்கைத் தத்துவங்களுக்கும் மேலான மெய்ப்பொருள் தத்துவத்தை விளக்குவதாகவும் அமைந்துவிட்டது. இத்தகைய உண்மைகளை விளக்கிய பெருங்காப்பியமாகிய இராமாயணம் தமிழ் மொழியில் உருவான ஒரு காரணத்தினாலேயே தமிழ் அமரத்துவம் பெற்றுவிட்டது என்கிறார் நம்முடைய சமகாலப் புலவர் சுப்பிரமணிய பாரதி. எனவே, காசில் கொற்றத்து இராமன் கதை தமிழ் உலகத்துக்குக் கம்பன் அருளிய ஓர் ஒப்பற்ற கதை என்பது தெளிவு. இனி, நாம் நூலின் தலைப்பை நியாயப்படுத்தும் விளக்கங்களுக்குச் செல்வோம்.

⌘ ⌘ ⌘

# அயோத்தி மன்னன் இராமன்

வனமேகி தவக்கோலம் பூண்டு இராமன் வாழ்ந்திருந்த போதிலும் அயோத்தியின் மன்னன் இராமனே என்பதுதான் கம்பனின் கருத்து. காப்பியக் கதை அனைவரும் அறிந்ததே.

..................... தந்தையின் ஆணை என்று கூறி கைகேயி இராமனை வனத்திடைப் போக்கினாள். பரதனே நாட்டை ஆளட்டும் என்ற பெருநோக்கோடு, 'தான் வன வாழ்க்கை முடித்து, பதினான்காண்டுகளுக்குப் பிறகு அயோத்திக்குத் திரும்ப வந்தாலும், பரதனின் ஆளுகைக்குட்பட்ட ஒரு குடிமகனாகத்தான் வாழ வேண்டும்' என்ற கருத்தை நன்குணர்ந்தவனாகவே, இராமன், தனக்கு முறையாக வாய்த்திருக்க வேண்டிய அரச பதவியைச் சற்றும் மனக்கிலேசம் இன்றித் தம்பி பரதனுக்கு அளித்துவிட்டுக் காடேகுகிறான்.

ஆனால், இராமனுடைய இத்தகைய விதியை மாற்றியமைப்பவன் பரதனாவான்.

கேகய நாட்டினின்றும் பயணப்பட்டு அயோத்தி மீண்ட பரதனுக்குத் தான் அயோத்தியில் இல்லாத காலத்தில் நடந்துவிட்ட அவலங்களெல்லாம் தெரிய வருகிறது. **'பங்கமில் குணத்துப் பரதன்'** என்று கம்பன் போற்றுகின்ற இராமனின் இளவல், தாய் தனக்கு ஆக்கி வைத்திருந்த அரச சம்பத்தை நஞ்சு என்று அஞ்சுகிறான். பார் அவன் மேல் சுமத்தும் பழியை எண்ணி மனம் பதறுகிறான்.

*"மாளவும் உளன், ஒரு மன்னன் வன்சொலால்;*
*மீளவும் உளன் ஒரு வீரன்; மேய பார்*
*ஆளவும் உளன் ஒரு பரதன்; ஆயினால்,*
*கோள் இல அறநெறி! குறை உண்டாகுமோ?"*

*(அயோத்தியா - பள்ளிப்படை - 73)*

இவ்வாறு பழியோடு கூடிய ஒரு நிலையை விதி தனக்கு உருவாக்கிவிட்டதை எண்ணி உள்ளம் நைகிறான் பரதன். "இராமனை வனத்திடைப் போக்கி விட்டு இன்னும் நான் உயிருடன் வாழ்வது என்பதே, நான் இராமனுக்குரிய அரசை அபகரித்துக் கொண்ட பழிக்குரிய செயலுக்கு ஒப்பதேயாகும்" என்று மாய்ந்து மறுகுகின்றான். "அயோத்தி அரசு இராமனுக்குரியதே" என்பதில் காப்பியத்தில் மிகத் தெளிவாக இருப்பவன் பரதன் ஒருவனே என்றுதான் கூற வேண்டும். எனவேதான், தாய் கைகேயி இராமனுக்கு உருவாக்கி வைத்திருந்த விதியையே மாற்றி அமைத்து 'அயோத்தியின் அரசன் எக்காலத்தும் இராமனே' என்றாக்குகிறான். இத்தகைய கருத்துக்கு அனைவரையும் – இராமன் உட்பட அனைவரையும் – அவன் இட்டுச் செல்லும் நிகழ்ச்சிகளைக் காண்போம்.

வனத்துள் உறையும் இராமனைப் பரதன் உறவோடும், சுற்றத்தோடும், குடி படைகளோடும் சந்தித்து, முடி புனைந்து இராமன் அரசாள வேண்டுமென்று மன்றாடுகின்றான். இராமனோ, தந்தையின் ஆணையைத் தான் மீற இயலாது என்பதனால் பிடிவாதமாக அரசை ஏற்க மறுத்து விடுகிறான். பரதனோ, தவ வேடம் தலைக் கொண்ட நிலையில், 'தந்தையைக் கூற்றுவனுக்கு இரையாக்கிவிட்டு, அன்புடைய முன்னவனை வனத்துக்குத் துரத்தி விட்டு நாடாள முனைவதற்கு நான் என்ன உன் பகைவனா? இச்செயலை நான் எவ்வாறு செய்ய இயலும்? தாய் செய்த கொடுமை நீங்க அரசை ஏற்று என் மீது சார்ந்து விட்ட பழியை நீ போக்க வேண்டும்' என்று இராமனிடம் கல்லும் உருகக் கனிந்து வேண்டுகிறான். மேலும் 'அரசு இப்பொழுது என்னுடையதாகவே இருக்கட்டும். நான் மன்னன் என்ற நிலையில், அந்த அரசை உனக்குத் தந்துவிட்டேன். இப்பொழுது, நீ முடி சூடி அரசாள்க' என்கிறான் அண்ணனிடம்.

*" 'முன்னர் வந்து உதித்து, உலகம் மூன்றினும்*
*நின்னை ஒப்பு இலா நீ, பிறந்த பார்*
*என்னது ஆகில், யான் இன்று தந்தனென்;*
*மன்ன! போந்து நீ மகுடம் சூடு' எனா "*

*(அயோத்தியா – திருவடிசூட்டு · 112)*

மேற்காணும் பாடல் நூலின் தலைப்புக்கு அரணாக நிற்பது. பரதன், உறவுச் சுற்றமும், நட்புச் சுற்றமும், மந்திரச் சுற்றமும், குடிமக்களும், முனிவர்களும், குறுநில மன்னர்களும், சூழ்ந்து நிற்கும் ஒரு சூழலில், அனைவரின் சாட்சியாகத் தனக்கென்று தாயால் வரமாகப் பெறப்பட்ட அயோத்தி அரசை இராமனுக்கு அளித்துவிட்டான். அயோத்தி அரசன் பரதன் என்று இராமன் கருதும் பட்சத்தில் இது அரசகட்டளையும்

ஆகிறது. அரசன் பரதனின் ஆணைக்குட்பட்ட இராமனால் இந்த அரசகட்டளையை மீற இயலாது. இத்தகைய இக்கட்டான சூழலின் தன்மையை நன்கு புரிந்து கொண்ட இராமன், பரதனை அமைதிப்படுத்த வேண்டியும், பரதன் மேல் படிந்துவிட்ட பழியை நீக்க வேண்டியும், பின் வருமாறு கூறுகிறான்.

"நிறைகுணத்துப் பரத! நீ பாரளிக்க நான் அதை இப்பொழுது ஏற்றுக் கொண்டுவிட்டதாகவே நீ எண்ணலாம். ஆயினும், தயரதன், "மணி முடி சூடுக" என்று என்னைப் பணித்தபொழுது, நான் மறுமொழி பேசாமல் அப்பணியை ஏற்றுக் கொண்டு விட்டதை உலகம் அறியும். அதற்கான காரணம் என்ன? அது மன்னவன் ஆணை என்ற ஒரே காரணம்தான். அடுத்து அதே மன்னன் "அரசுரிமை துறந்து வனம் செல்க" என்றான். அதனையும் மறுமொழி பேசாமல் ஏற்றுக் கொண்டேன். காரணம் என்ன? மன்னனுடைய ஆணைக்குக் குடிமகன் கட்டுப்பட வேண்டும் என்ற அதே காரணத்துக்காகத்தான். எனவே, அயோத்தியின் அரசன் நானே என்றாகும் பட்சத்தில் நான் இப்பொழுது உனக்கு மகுடம் தந்து நீ அரசை ஆள வேண்டுமென்று பணிக்கின்றேன். அரசனுடைய ஆணையை மறுக்காது ஏற்றுக் கொள்" என்று அரசுரிமையைப் பரதனுக்கு அளிக்கிறான் இராமன்.

காப்பியத்தில் காணப்படும் கவிதை வரிகள்:

*" 'மன்னவன் இருக்கவேயும், "மணி அணி மகுடம் சூடுக"*
*என்ன, யான் இயைந்தது அன்னான் ஏயது மறுக்க அஞ்சி;*
*அன்னது நினைந்தும், நீ என் ஆணையை மறுக்கலாமோ?*
*சொன்னது செய்தி; ஐய! துயர் உழந்து அயரல்' என்றான்."*

*(அயோத்தியா – திருவடி சூட்டு – 117)*

இந்த முடிவைக் கூறுவதற்கு முன், இவ்விடத்தில் மிகவும் பொருள் பொதிந்ததும், இந் நூலின் தலைப்புக்கு அரண் செய்யும் விதமாகவும் அமைந்த கருத்து ஒன்றை இராமன் பரதனிடம் கூறுகிறான். 'நான் வனத்தில் வைகும் பதினான்கு ஆண்டுகள் வரையிலும், என் ஆணையால் நீ என் நாட்டை ஆண்டு வருக' என்பதே அக் கருத்து. காப்பிய வரிகள் பின் வருவன;

*" 'எந்தை ஏவ, ஆண்டு ஏழொடு ஏழ் எனா*
*வந்த காலம் நான் வனத்துள் வைக, நீ*
*தந்த பாரகம் தன்னை, மெய்ம்மையால்*
*அந்த நாள் எலாம் ஆள், என் ஆணையால்' "*

*(அயோத்தியா – திருவடி சூட்டு – 116)*

இராமன், தான் வனமாளும் பதினான்காண்டு காலமும், பரதன் அயோத்தியை ஆள வேண்டுமென்று, தான் ஒரு மன்னவன் என்ற நிலையில் ஆணையிடுகிறான். அதாவது, அயோத்தியை தான் இனி எக்காலத்திலும் ஆளப் போவதில்லை என்ற தன் முந்தைய நிலையிலிருந்து பின் வாங்கி, தான் வனத்தில் வைகும் பதினான்காண்டுகள் மட்டும் ஆளப் போவதில்லை என்றும், அதுநாள் வரை தன் ஆணையை ஏற்றுப் பரதன் அரசு புரிய வேண்டும் என்றும் கூறுகிறான். ஆனால் இந்த முடிவைப் பரதன் ஏற்றுக் கொண்டானா? இல்லை. பரதன் தானும் இராமனோடு சேர்ந்து காடுறை வாழ்க்கையைத் தேர்ந்தெடுத்து விட்டதாகவே கூறுகிறான். எனவே சிக்கல் தொடர்கிறது. இமையவரோ, தங்கள் இடர் தீர வேண்டி, பாற்கடலினின்றும் இறங்கி வந்த பரந்தாமனாகிய இராமனுடைய அவதார நோக்கத்துக்கு இடையூறு வந்து விடுமோ என்று பதறுகின்றனர். எனவே இமையவரே இதற்குத் தீர்வும் கூறுகின்றனர். **'இராமனே மன்னன். பரதன் இராமனுடைய ஆணையை ஏற்றுப் பதினான்கு ஆண்டுகள் அயோத்தியை - இராமனுடைய அயோத்தியை - பாதுகாத்து வரவேண்டும்'** என்கின்றனர்.

காப்பிய வரிகள்:

*" 'ஏத்த அரும் பெருங் குணத்து இராமன் இவ்வழிப்*
*போத்து அரும் தாதை சொல் புரக்கும் பூட்சியான்;*
*ஆத்த ஆண்டு ஏழினொடு ஏழும் அந்நிலம்*
*காத்தல் உன் கடன்; இவை கடமை' என்றனர்"*
*(அயோத்தியா - திருவடிசூட்டு - 131)*

**இந்த முடிவைப் பரதன் ஏற்றுக் கொள்கிறான். அதாவது பரதன் இப்பொழுது அயோத்தியின் அரசன் அல்லன். இராமனுடைய அரசுக்குப் பாதுகாவலனே ஆவான். இராமனுடைய பிரதிநிதியாக இருந்து நாட்டைப் பாதுகாப்பவனாகத்தான் பதினான்காண்டுகள் நாட்டில் வாழப் போகிறான். எனவே முடிவாக, அயோத்தியின் அரசன் இப்பொழுது (வனத்தில் வாழ்ந்தாலும்) இராமனே ஆவான். இதுவே அனைவரும் ஏற்கும் முடிவு.**

சரி. பதினான்காண்டு காலத்தில் எத்தனையோ மாறுதல்கள் ஏற்பட்டு விடலாம். மக்களும் கூட மனம் மாறி, நற்குணத்தில் இராமனையே விஞ்சும் பரதனை எக்காலத்துக்கும் தமக்குரிய அரசன் என்று ஏற்றுக் கொண்டு விடலாம் (அறிவியல் ரீதியாக பதினான்காண்டு காலத்தில் ஒரு மனிதனுடைய குருதியின் தன்மை முழுதும் மாறி விடும். உருவத்திலும் மாற்றம் ஏற்பட்டு விடும். குணமும் மாறிப் போகும்.

(இன்றும் குற்றம் புரிந்தவர்கள் திருந்தி நல்வழிப்படும் வண்ணம் ஆயுள் தண்டனையாக அவர்களுக்குப் பதினானகாணடுகள சிறை வாசம் விதிக்கப்படுவதை ஈண்டு நினைவு கூர்தல் நலம்). எனவேதான அயோத்தி மக்களும் சுற்றமும் இராமன் பேரில் கொண்டுள்ள பேரன்பு, பதினான்காண்டுகளில் மாறிப்போய், பரதனையே என்றும் தம் மன்னனாக ஏற்றுக் கொண்டு விடுவர் என்ற எண்ணத்தில் மந்தரை இராமனைப் பதினான்காண்டுகள் வனம் ஏக வைக்கிறாள்). ஆனால் "அத்தகைய மாறுதல்கள் – இராமனைப் புறக்கணித்து மக்கள் தன்னையே மன்னனாக ஏற்றுக் கொண்டு விடும் மாறுதல்கள் – பதினான்காண்டுகளுக்குப் பிறகும் கூட ஏற்பட்டுவிட முடியாது" என்ற கருத்திலும் "என்றைக்கும் அயோத்தி வேந்தன் இராமனே" என்ற கருத்திலும் பரதன் கூறுகிறான்: "பதினான்காண்டுகள் கழித்து, நான் பாதுகாத்து வைத்திருக்கும் உன் நாட்டின் அரசுரிமையை ஏற்க நீ வரவில்லை என்றால், நான் எரி புகுந்து இறப்பேன். இது உன் மேல் ஆணை" என்று வஞ்சினம் கூறுகிறான்.

கவிதை வரிகள்:

*" 'ஆம் எனில், ஏழ் இரண்டு ஆண்டில், ஐய! நீ*
*நாம நீர் நெடு நகர் நண்ணி, நானிலம்*
*கோமுறை புரிகிலை என்னின், கூர் எரி*
*சாம் இது சரதம்; நின் ஆணை சாற்றினேன்' "*

*(அயோத்தியா – திருவடி சூட்டு – 133)*

எனவே ஒருபோதும் பரதன் அயோத்தி மன்னனாக ஆகவே இல்லை. மேலும் நாட்டை அண்ணனுடைய பெயரால் பாதுகாத்து வருவதற்குக்கூட தன்னுடைய ஆளுமையைச் சிறிதும் பயன்படுத்த விரும்பவில்லை பரதன். அதனைச் செய்வதும் கூட இராமனுடைய ஆளுமையாகவே இருக்க வேண்டும் என்றெண்ணி இராமனுடைய இணையடிகளை ஏந்தியிருந்த அவனது பாதுகைகளை வேண்டிப் பெற்று, அவற்றைத் தன் முடிமேல் சுமந்து எடுத்து வந்து நந்தியம்பதி எனும் கிராமத்தில் தவக்குடில் அமைத்து, ஆங்கே ஒரு சிம்மாசனத்தில் அப் பாதுகைகளை இருத்தி விடுகின்றான். எனவே இராமனின் இணையடித் தலங்களே நாட்டை ஆளும் அதிசயம் அயோத்தியில் அரங்கேறுகிறது.

*"நந்தியம்பதியிடை, நாதன் பாதுகம்*
*செந்தனிக் கோல் முறை செலுத்த"*

*(அயோத்தியா – திருவடிசூட்டு – 140)*

என்பது காப்பிய வரிகள்.

எனவே இராமனின் பாதுகைகளே செம்மையான செங்கோல் செலுத்துகின்றன. (இராமனில்லாத அயோத்தியில் பரதன் தன் பாதங்களையும் கூடப் பதிக்கவில்லை). தவக்கோலத்தில் இராமன் காட்டிலிருந்தாலும் அவன் அயோத்தியின் அரசனே. நாட்டில் வாழ்ந்து அரசைக் காக்கும் பரதன் ஓர் அரும் பெரும் தவசியே என்ற அதிசயமான நிலை உருவாகிறது. நாட்டை ஆள்வது இராமனின் இணையடித் தலங்கள். நாட்டின் பாதுகாப்புக்கான பொறுப்பை இராமனுடைய ஆணையால் ஏற்றுச் செயல்படுபவன் பரதன். இத்தகைய அபூர்வமான முடிவினால் இதுகாறும் ஒன்றுக்கொன்று முரண்பட்டுக் கிடந்த மரபும் வாய்மையும் ஒருசேரக் காப்பாற்றப்பெறுகின்றன. பாதுகை ஏற்பாட்டால் தந்தைக்குத் தலைமகனே அரசுரிமைக்குரியவன் என்ற மரபு காப்பாற்றப்பெறுகிறது. அதே சமயத்தில், இராமன் அயோத்தியில் இல்லாத நிலையில் ஆட்சி தொடர்பான முடிவுகளையெல்லாம் இராமனைக் கலந்து ஆலோசிக்காமலேயே இராமன் பெயரால் எடுக்கக் கூடிய அங்கீகாரம் பெற்ற பாதுகாவலனாக பரதனே நிலைபெறுவதால், அயோத்திக்குரிமையுடையவனாக பரதனே இருக்க வேண்டும் என்ற கன்யாசுல்க (திருமணத்தின் பொழுது ஆண் பெண்ணுக்குத் தரும் மகட் கொடை) வாக்கும் நிறைவேற்றப்பெறுகிறது. அதே சமயத்தில், கைகேயி விரும்பிப் பெற்று, தயரதன் அளிக்கக் கடமைப்பட்டிருந்த இரு வரங்களில் முதல் வரம் (பரதன் நாட்டில் வாழ வேண்டும் – அரசாள வேண்டும் என்ற வரம்) எல்லோருக்கும் மனநிறைவு ஏற்படும் வண்ணம் நிறைவேற்றப்பெறுகிறது. ஆனால் இனி வரும் காலங்களில் என்றென்றும் பரதனே அயோத்தி வேந்தனாக வேண்டும் என்ற கைகேயியின் வரம், உருமாறி, இராமன் வனத்தில் வாழும் பதினான்காண்டு காலம் மட்டும் என்ற நிலையைக் கொண்டு விடுகிறது. இதை இராமனும் ஏற்கிறான். எனவே ‘அயோத்தி மன்னன் இராமனே’ என்ற கருத்து காப்பியத்தில் நிலை நிறுத்தப்பட்டது.

ஆனால் முதல் வரத்தில் சமரசம் செய்து கொள்ளும் இராமன், இரண்டாம் வரத்தைப் பொறுத்தவரையில் எந்தவித சமரசத்துக்கும் தயாராகவில்லை. காரணம் இரண்டாவது வரம் ( இராமன் பதினான்காண்டு காலம் வனவாசம் புரிய வேண்டும் என்பது) சிற்றன்னை தன்னுடைய குற்றத்துக்குக் கொடுத்த தண்டனை எனில் அந்தத் தண்டனையைத் தான் ஏற்று முடிப்பதே தர்மம் என்று நினைக்கிறான் இராமன். இத்தகைய அணுகுமுறையால் இதுகாறும் கொற்றவன் இராமன் ஆக இருப்பவன் இப்பொழுது ‘‘குறைகளற்ற கொற்றவனாக” உருவெடுக்கிறான். காரணம், முதல் வரத்தில் சமரசம் செய்து கொண்ட விதத்தில் அரச மரபும், தந்தையின் வாய்மையும் காத்து, தந்தைக்குத் தகுதியான மகனாகத் தன்னை நிருபித்தவன், இரண்டாவது வரத்தைப் பொறுத்தவரையில் எந்த சமரசமும் செய்து கொள்ளாமல், தந்தையின்

ஆணையை முழுமையாக நிறைவேற்றி வைப்பதில் உறுதியான முடிவெடுத்து அறக்கடவுளுக்கு உரிமையுடைய மகனாகத் தன்னை உயர்த்திக் கொள்கிறான். இதன் விளக்கத்தைக் காப்பிய நிகழ்ச்சிகளின் துணை கொண்டு ஆய்வோம்.

காப்பிய நிகழ்ச்சிகளின் விரிவான விளக்கத்துக்குச் செல்லும் முன், கதை தொடர்பான சில குறிப்புகளை அறிவில் தேக்குதல் நலம். அவை கம்பன் எழுதிய காப்பியத்தில் வெளிப்படையாகச் சொல்லப்படாதவை. காப்பிய மாந்தர்களின் உரையாடலைக் கொண்டும், நடக்கும் நிகழ்ச்சிகளைக் கொண்டும் குறிப்பால் உணரப்பட வேண்டியவை.

- தவறுக்கு மேல் தவறுகள் செய்து கதை தொடர்பான மாந்தர்கள் வாழ்வில் சிக்கலை உருவாக்கி வைப்பவன் மன்னன் தயரதன்

- மூன்று பெண்களை மணக்கிறான் – மூன்றாவது மனைவி கைகேயி

- தயரதன் கைகேயியை மணந்த ஆதி நாளில் அவளுக்குப் பிறக்கும் மகனே அயோத்தி மன்னனாவான் என்று ஒரு வாக்குறுதி கொடுக்கிறான்.

- ஆனால் இராமன் பிறந்த பிறகு பிற்காலத்தில் அந்த வாக்கைக் காப்பாற்ற வேண்டிய அவசியமில்லை என்ற எண்ணத்தை வளர்த்துக் கொள்கிறான்.

- வாக்கு காப்பாற்றப்பட வேண்டிய அவசியமில்லை என்ற மனோநிலையை கைகேயிக்கும் ஏற்படுத்துகிறான். கைகேயியும் அவ்வண்ணமே மாறுகிறாள்.

- (விதியை மதியால் வென்றதாக எண்ணும் தயரதனை விதி துரத்துகிறது. கொடுத்த வாக்கைப் பிற்காலத்தில் புறக்கணித்துவிடுவான் தயரதன் என்பதைப் புரிந்து கொண்டுவிட்டதாலோ என்னவோ, விதி, தயரதனை ஒரு அசுரனுடன் போர் புரிய வைத்து, அதில் அவனுக்கு உதவியாகக் கைகேயியைத் தேரோட்ட வைத்து, தயரதன் தோல்வியுற்று உயிருக்கு மன்றாடும் வேளையில் கைகேயி அவனைக் காப்பாற்றும்படிச் செய்து விடுகிறது. இதற்குப் பிரதியுபகாரமாகத் தயரதன் கைகேயிக்கு இரு வரங்கள் அருளுகிறான். கைகேயி வரங்களை உடனடியாகப் பெறவில்லை. பிற்காலத்தில் பெற்றுக் கொள்வதாகச் சொல்கிறாள்.)

- திருமண ஒப்பந்தத்தின்படி தயரதனால் நிறைவேற்றப்பட வேண்டிய கன்யாசுல்க வாக்கு, இராமன் தலைமகனாகப் பிறந்த பிறகு, அத்தனை

முக்கியமில்லை என்று கைகேயியே விட்டுக் கொடுத்துவிட்டாலும் கூட, அடுத்து இரண்டு வரங்களைக் கைகேயி கேட்கும்பொழுது அவற்றை அருளக் கடமைப்பட்டவன் ஆகிறான் தயரதன்.

- ஆனால் அவற்றைக் கேட்கும்பொழுது கைகேயியிக்கு அவற்றைத் தர மறுப்பதோடு அவள் மேல் பழியும் சுமத்துகிறான் தயரதன்.

- கைகேயி வலிந்து தன் வரங்களைப் பெற வேண்டியுள்ளது.

- கொடுத்த வாக்கை நிறைவேற்றாமல் தன்னை ஏமாற்ற எண்ணிய தயரதனை இரண்டு விதங்களில் அவனிடமிருந்து பெறும் வரங் களினாலேயே தண்டித்து விடுகிறாள் கைகேயி.

- தயரதனைத் தண்டிக்கும் திட்டத்தினூடே அவள் இறுதியில் தண்டிப்பது தயரதனின் உயிரனைய மகன் இராமனையே.

- தவறு செய்பவன் தயரதன். தண்டனை பெறுபவனோ இராமன்.

- இராமன் தண்டனைகளைச் சற்றும் மனவருத்தமின்றி மகிழ்ச்சியோடு ஏற்று நிறைவேற்றுகிறான்.

- இதன் மூலம் தந்தையின் வாக்கைக் காப்பாற்றுகிறான்.

- இத்தகைய நடத்தையால் அவன் உலகம் புகழும் உத்தமனாகிறான். குற்றமற்ற கொற்றவனுமாகிறான். இத்தகைய செயல் இராமனுக்கு எப்படிச் சாத்தியமாகிறது?

அறத்தையே தன் உயிர் மூச்சாகக் கொண்டு வாழும் இராமன், அறத்தின் அளவுகோலால் பிறரது செயல்களை அளப்பது மட்டுமல்ல, தன்னையும் தன்னுடைய செயல்களையும் அளப்பவன். தான் அறத்தின் மூர்த்தியாக வாழ்வதாக அவன் காப்பியத்தில் எங்கும் பறைசாற்றிக் கொள்வதே இல்லை. காப்பியத்தில் மிகக் குறைவாகப் பேசுபவன் காகுத்தன். அப்படிப் பேசும் குறை சொற்களெல்லாம்கூட நிறை சொற்களாக நிலைக்கும் தன்மையனவாக இருப்பவையே. அறத் தராசின் ஒரு தட்டில் அறத்தை வைத்து, மறு தட்டில் தன்னுடைய மனத்தை ஏற்றி வைத்து, அறத்தின் சீர்மையும், தன் மனத்தின் முடிவுகளும் ஒரே நிறையில் நிற்கின்றனவா என்று பார்த்துப் பார்த்து ஆய்ந்து ஆய்ந்து வாழ்ந்தவன் இராமன். அவன் வாழ்க்கை தொடர்பான அனைத்து முடிவுகளுக்கும் அறமே நடு நிலையில் நின்று அவனை வழிகாட்டுவதாக

ஆரம்பம் முதலே தன் வாழ்க்கை நெறியை அமைத்துக் கொண்டவன் இராமன். அந்த அறத்தின் நடுநிலைமையான தீர்ப்பில் கைகேயி அன்னை தனக்கிட்ட இரண்டாவது ஆணை – இராமன் பதினான்காண்டுகள் வனத்தில் வாழ வேண்டும் என்ற ஆணை – தன்னால் சிரமேற்கொள்ளப்பட்டு முடிக்கப்பட வேண்டியதே தர்மம் என்று நினைக்கிறான் இராமன். பரதன் அயோத்தியின் அரசுக்குரியவன் என்ற வரம் புதியதல்ல. அது தயரதன் கைகேயியை மணந்த காலத்திலேயே முடிவானது. அதன் பிறகு – கைகேயி இராமனை மகனாக ஏற்றுக் கொண்டு விட்ட பிறகு – அந்த நிபந்தனையை அவளே மறந்துவிட்டாள். எனவேதான் இராமன் நாடாளப் போகிறான் என்ற செய்தியை முதலில் வரவேற்று மகிழ்கிறாள். ஆக, இராமன் நாடாள்வது கைகேயியிக்குச் சம்மதமே என்பதால் இராமன் முதல் வரத்தில் சமரசம் செய்து கொண்டான். ஆனால் இராமன் காடாள வேண்டுமென்பது கைகேயி புதிதாகப் பெற்ற வரம். கைகேயியின் இரண்டாவது ஆணை தந்தையிடமிருந்து வரமாகப் பெறப்பட்டுவிட்டதால் தந்தையின் வாக்கு காப்பாற்றப்பட வேண்டும் என்பது இராமனுக்கு ஓர் அறமாகிறது. ஆனால் இதை மட்டும் எண்ணி இந்த முடிவை இராமன் எடுக்கவில்லை. விதியின் பிழையால் நேர்ந்துவிட்ட ஒரு குற்றத்தில் தனக்கும் பங்குண்டு என்று எண்ணி, அந்தத் தவற்றுக்கு உரிய தண்டனையைத் தான் அனுபவித்தே தீர வேண்டுமென்று அறத்தின் வழி நின்று தனக்கே தீர்ப்பெழுதிக் கொள்கிறான் இராமன். இத்தகைய தீர்ப்பினால்தான் இராமன் 'குற்றமற்ற கோமக'னாகிறான். உலகெலாம் ஒருங்கு நின்று தொழுதேத்தும் "தருமத்தின் தனி மூர்த்தியும்" ஆகிறான்.

இராமனுடைய இந்த முடிவுக்கான பின்னணியை அவனுடைய மனப் போக்கிலிருந்தே ஆராய்வது நலம். அப்படியே கதை நிகழ்ச்சிகளின் விளக்கங்களையும் ஆங்காங்கே பெறுவதும் நலம்.

"விராவரும் புவிக்கெல்லாம் வேதமே அனைய இராமன்" என்று கைகேயியால் புகழப்பட்டவன் இராமன். வேதத்தின் சாரம் என்ன? உண்மை வெற்றி பெறும் என்பதுதான். ''உண்மையே நின்று நிலைபெறும் அறம்'' என்பதனை உயிர் மூச்சாகக் கொண்டவன் இராமன். உலக மக்களின் வாழ்க்கையில் நடைபெறும் நிகழ்ச்சிகளுக்கெல்லாம் 'வினைக்கு விளைவுண்டு' எனும் இயற்கை விதியே பின்னணியில் இருப்பதால், தன்னுடைய வாழ்விலும் அந்த விதியே தன்னை வழிநடத்திச் செல்கிறது என்ற உண்மையை ஐயமற அறிந்து தெளிந்தவன் இராமன். இந்த உண்மையை ஐயமறத் தெளிந்து உணர்ந்தவர்கள் காப்பியத்தில் அவனைத் தவிர வேறு எவருமில்லை எனலாம்.

தந்தை தயரதன், தாய் கோசலை, அமைச்சர் பெருமக்கள், அயோத்தி ஆட்சிக்கு அடங்கிய சிற்றரசர்கள், அயோத்தி மக்கள் அனைவரும், இராமன்பால் கொண்ட எல்லையற்ற அன்பினால், தம் வாழ்வும், நாடும் அவனைச் சார்ந்தே அமைய வேண்டுமென்று எண்ணுகின்றனர். ஆனால் இராமன் ஒருவன்தான் அறத்தைச் சார்ந்தே – தான் உட்பட அனைவரும் – வாழ வேண்டும் என்று எண்ணுகிறான். அதன்படியே தனக்காகவும், தன்னைச் சார்ந்து வாழும் பிறருக்காகவும் முடிவுகளை எடுக்கிறான்...........

.................. மீண்டும் காப்பிய நிகழ்ச்சிக்கு வருவோம். நிகழ்ச்சிகளின் விரிவான விளக்கத்தையும் காண்போம்.

அயோத்திப் பேரரசின் பேரரசனாகிய தயரதனின் முதல் பட்டத்தரசி கோசலைக்குப் பல காலம் மகப்பேறு வாய்க்கவில்லை. அவனுடைய இரண்டாம் மனைவியாகிய சுமித்திரைக்கும் மகப்பேறு வாய்க்கவில்லை. இதனால் மிகுந்த மனத் துயருற்றான் தயரதன். தன்னுடைய பேரரசுக்கு ஒரு வாரிசு வேண்டும் என்று ஒரு மன்னன் என்ற நிலையிலும், தான் 'புத்' எனும் நரகத்தில் வீழ்ந்துவிடாமல் தன்னைக் கடைத்தேற்ற ஒரு மகன் வேண்டும் என்று ஒரு தந்தை என்ற நிலையிலும், நின்று மனம் மறுகும் தயரதன், இத்தகைய காரணங்களுக்காகவே கேகயப் பேரரசனின் மகளான கைகேயியை மூன்றாவது மனைவியாக மணக்க முடிவெடுக்கிறான். வயதில் மூத்தவனான தயரதன் பேரரசனின் மகளான கைகேயியை மனைவியாகக் கைத்தலம் பற்றும் பேற்றுக்காகவும், கன்யாசுல்கம் (வரதட்சணை) கொடுத்து ஆண் பெண்ணை மனைவியாக்கிக் கொள்ளும் அக்கால வழக்கத்தையொட்டியும் "கைகேயிக்குப் பிறக்கப் போகும் மகனே தனக்குப் பிறகு அயோத்தி அரசின் மன்னனாக முடி சூட்டப் பெறுவான்" என்ற வாக்கைக் கொடுத்து கைகேயியை மணக்கிறான். அதாவது இனிமேல் கோசலை, சுமித்திரை ஆகியோர் தனக்கு ஒரு மகவை ஈன்று தர இயலாத சூழலில், கைகேயி அத்தகைய பேற்றைத் தனக்கு அருள இயலும் என்ற நம்பிக்கையில் அத்தகையதொரு வாக்கைக் கொடுத்து அவளை மணந்து கொள்கிறான். கோசலை, சுமித்திரை ஆகியோரின் ஒப்புதலோடு தயரதன் எடுக்கும் முடிவு இது. அரசனின் இத்தகைய முடிவால் மூத்த பட்டத்து அரசியாகக் கோசலை இருக்க, இளைய பட்டத்தரசியாக – ஆனால் கோசலைக்கும் இல்லாத – கிட்டாத – ஏற்றம் (பேரரசனின் மகள் – பேரரசன் மனைவி – பேரரசனாக எதிர்காலத்தில் முடி சூடவிருக்கும் மகனின் தாய் என்ற ஏற்றம்) பெற்றவளாக வாழ்கிறாள் கைகேயி. தயரதனின் தனித்த சிறப்பான அன்புக்கும் ஆளாகிப் பெருவாழ்வு பெறுகிறாள். ஆயினும் அவளுக்கும் மகப்பேறு வாய்க்கவில்லை. எனவே தயரதன் முனிவர்களின் அறிவுரைப்படி புத்திர காமேஷ்டி

யாகம் செய்து அதிலிருந்து பெற்ற அவிர்ப்பாகத்தை முறையே கோசலை, கைகேயி, சுமித்திரை என்ற வரிசையில் தம் தேவியர் மூவருக்கும் பகிர்ந்தளிக்கிறான். இதன் பயனாகக் கோசலை முதலில் கருவுற்று இராமனைப் பெறுகிறாள். தயரதனின் மகிழ்ச்சி எல்லை மீறியதாகிறது. தன்னைப் புத்திர சோகத்தினின்றும் காப்பாற்றி, அயோத்தி அரசுக்கும் உரிமையுடையவனாகி விட்ட இராமனைத் தன் உயிரென மதிக்கிறான் தயரதன். "மைந்தனன்றி வேறு உயிர் இலாத மன்னன்" என்று தயரதனுடைய நிலையைக் குறிக்கிறான் கம்பன்.

முதல் பட்டத்தரசிக்குப் பிறந்த முதல் மகனாக இராமன் ஆகிவிட்டதால், கைகேயியைத் தான் மணந்த பின்னணியைப் புறந்தள்ள விரும்புகிறான் தயரதன். அரச மரபுக்கொத்த நியதிப்படி தலைமகன் பட்டத்துக்குரியவனாகி விடுவதை கைகேயி உள்பட அனைவரும் ஏற்றுக் கொண்டே ஆக வேண்டும் என்ற மனநிலையை வளர்த்துக் கொள்கிறான். இந்த விஷயத்தில் வேறு எவரையும் விட கைகேயியின் மனத்தைப் பக்குவப்படுத்தி அவளால் இடர் வராமல் காத்துக் கொண்டாலே போதும் என்றெண்ணி அதற்குத் திட்டமிட்டு வேலை செய்கிறான் தயரதன். இராமனைக் கைகேயியே வளர்ப்பதற்கு ஏற்பாடு செய்து விடுகிறான். மேலும் அவனும் தன் அக வாழ்க்கையின் பெரும் பொழுதைக் கைகேயியின் மாளிகையிலேயே கழித்ததால் இராமனுடைய உடனிருப்பு அங்கு அவசியமும் ஆகிவிடுகிறது. கள்ளமற்ற கைகேயி இராமனிடம் நிறைந்த அன்பு செலுத்திப் பெற்ற தாயினும் மேலாக இராமனைப் பேணி வளர்க்கிறாள். காப்பியச் சான்று ; அயோத்தி மக்கள் இராமனைப் பற்றிப் பேசும் பொழுது "இவன் தன்னைப் பெற்ற தாய் கோசலையால் வளர்க்கப்படவில்லை. கையேகியால் வளர்க்கப்ட்டான்" என்கின்றனர். ("தாய் கையில் வளர்ந்திலன்; வளர்த்தது தவத்தால் கேகயன் மடந்தை ...........” அயோத்தியா – கைகேயி சூழ்வினை – 101). இராமனே அரசுரிமைக்குரியவன் என்ற எண்ணத்தை வளர்த்துக் கொண்டதோடு, அத்தகையதொரு நிலையைக் களிப்போடு ஏற்றுக் கொண்டும் விடுகிறாள் கைகேயி. கைகேயியின் இத்தகைய மனநிலையைப் பற்றி அயோத்தி மக்கள் உரையாடுகின்றனர். காப்பியச் சான்று;

*" ' ................. கிளர் ஞாலம் இவன் (இராமன்) ஆள,*
*ஈகையில் உவந்த அவ்வியற்கை இது என்றால்,*
*தோகை அவள் (கைகேயி) பேர் உவகை சொல்ல அரிது' என்பார்,"*
*(அயோத்தியா – கைகேயி சூழ்வினை – 101)*

இராமனுடைய முடிசூட்டு விழாச் செய்தியைக் கொணரும் மந்தரைக்கு மகிழ்ச்சி பொங்க, முத்தாரத்தைப் பரிசாகத் தரும் நிகழ்ச்சியும் காப்பியத்தில் உள்ளது. கைகேயி

உட்பட நாட்டு மக்கள், வேந்தர் பெருமக்கள் அனைவரும் இராமனையே பட்டத்துக்குரிய இளவலாகக் காண்பதாகவே கதை நிகழ்ச்சிகள் பின்னப்பட்டுள்ளன.) இத்தகைய சூழலில் (தயரதனே எதிர்பாராத வண்ணம் கூட இருக்கலாம்) கைகேயி, சுமித்திரை ஆகியோர் கருவுறுகிறார்கள். சுமித்திரைக்குப் பிறக்கும் பிள்ளையைப் பற்றித் தயரதன் கவலை கொள்ள முகாந்திரமில்லை. ஆனால் கைகேயி பரதனைப் பெற்ற செய்தியைத் தயரதன் கலப்படமற்ற மகிழ்ச்சியுடன் எதிர்கொண்டிருந்திருக்க மாட்டான் என்றே தோன்றுகிறது. காரணம், காப்பிய நிகழ்ச்சிகள் அப்படித்தான் அமைந்துள்ளன. தன் வாழ்வின் துயர் தீர்க்க வந்த தெய்வ மகனாக இராமனைக் காணும் தயரதன், ஆதி முதல் தன்னைத் தருமசங்கடத்தில் ஆழ்த்த வந்த ஒருயிராகவே பரதனைக் காண்பதாகத் தோன்றுகிறது. இராமனிடம் அவன் கொண்டுள்ள எல்லையில்லாத அன்பில் ஒரு துளியளவு அன்பு கூட பரதனுக்குத் தயரதன் சொந்தமாக்க விரும்பவில்லை என்பது போலவே காப்பியத்தை ஆழ்ந்து கற்போர் உணரக்கூடும். காப்பியத்தின் எந்த இடத்திலும் பரதன் தந்தையன்பை அனுபவித் ததாக நிகழ்ச்சிகளே இல்லை. மாறாக, தன் அருமை இராமனுடைய அரசுரிமைக்குப் போட்டியாக வந்து விட்டவனாகவே தயரதன் பரதனைக் காண்பதாகத் தோன்றுகிறது. கைகேயியின் திருமணப் பின்னணியை எவர் மறந்திருந்த போதிலும் – தயரதனே இராமன் பிறப்புக்குப்பின் தானே மறந்துவிட்டதாகப் பாவனை செய்திருந்த போதிலும் – பரதனுடைய பிறப்புக்குப் பிறகு அது மறக்க இயலாத நிகழ்ச்சியாக அவனுடைய ஆழ்மனத்தில் பேருருவம் கொண்டு விடுகிறது.

கோவேந்தன் என்ற நிலையில், தான் இறுதியில் எடுக்கும் முடிவு ஒன்றே உறுதி பெறும் என்றாலும் கூட, தயரதனின் ஆழ்மனத்தில் குற்றவுணர்ச்சி குறு குறுத்துக் கிடக்கவே செய்கிறது. பரதனிடம் பாராமுகத்துடன் தான் நடந்து கொள்ளும் தன் மன இயல்பு வெளிப்படாத வண்ணமும், பரதனிடத்துக் கைகேயிக்கு இயல்பான தாய்ப்பாசம் கூட ஏற்பட்டுவிடாத வண்ணமும், பரதனைக் கோசலையே வளர்ப்பதற்கு ஏற்பாடு செய்து விடுகிறான். அடுத்தடுத்து இது தொடர்பான சில முடிவுகளை எடுத்துத் தயரதன் செயல்படுத்தும் விதத்தைப் பார்க்கும்பொழுது இவற்றையெல்லாம் அவன் திட்டமிட்டே செய்கிறான் என்பது தெளிவு. மேலும் கைகேயியை மணந்த காலத்தில், "கோசலைக்கு மகன் பிறக்கவில்லையென்றால் மட்டுமே உன் மகனுக்குப் பட்டம் சூட்டப்படும்" என்று தெளிவான வாக்கு கொடுக்காமல் தான் தவறு செய்து விட்டதாக எண்ணித் தயரதன் மனத்துக்குள் வருந்தியுமிருக்கலாம். அப்படிச் சொல்லியிருந்தால் கைகேயியை அந்தச் சூழ்நிலையில் மணக்க இயலாமலும் போயிருக்கலாம். **இரும்புக் கரங்கள் கொண்டு மனிதனைப் பற்றும் விதிக்கு முன் யாரே நிற்க இயலும்?** எப்படியாயினும், தற்போதைய சூழலில் மன்னுயிரெல்லாம் விரும்பித் தொழுது அன்பு செய்யும் அருங்குணத்து இராமனுக்கே முடி புனைய வேண்டும் என்ற தீவிர நோக்கில், வாய்மை,

வாக்கு போன்ற பண்புகளைத் தயரதன் காற்றில் பறக்கவிட்டு விட்டான் என்பதே உண்மை. தவற்றைத் தான் செய்து விட்டு, வாக்கைக் காப்பாற்ற வேண்டித் தன்னிடம் வரம் கேட்கும் கைகேயியைப் பழிக்கு ஆளாக்குகிறான் என்பதும் உண்மையே.

கள்ளமற்ற கைகேயி, தயரதன், தன் மகன் பரதனிடம் பாராமுகத்துடன் நடந்து கொள்வதைக் கூட அறிந்துகொள்ளவில்லை. மந்தரை இச்செய்தியை அவளுக்குக் கூறி, 'உன் வயிற்றில் பிறந்ததால், பரதன் என்று ஒரு அரச குமாரன் உலகில் பிறந்தவனாகவே இல்லாமல் போய்விட்டான். பரதனே! தந்தையும் கொடியன்; நற்றாயும் தீயள்; எந்தையே பரதா? நீ ஏன் பிறந்தாய்? உன்னைக் கேகய நாட்டிற்கு அனுப்பி வைத்ததன் பின்னணி இதுதானோ? கல்வியும், இளமையும், கணக்கில்லாத ஆற்றலும், வில்வினைத் தேர்ச்சியும், அழகும் வீரமும், எல்லையில் குணங்கள் அனைத்தும் உனக்கு இயைந்திருந்தும், அமைந்திருந்தும் அவையெல்லாம் புல்லிடை உகுத்த அமுதம் போல் வீணாயிற்றே' என்று அரற்றுகிறாள். அப்பொழுதுகூட கைகேயி உண்மையறியாமல், "எவர்க்கும் நல்லன கூறாத மதியிலி மந்தரையே! வரன் முறை திறம்பாத வகையில் மரபுப்படியே இராமன் முடி சூடுகிறான். இதில் என்ன தவறு?" என்று கேட்கிறாள். *ஆனால் வரங்களைத் தன் கணவனிடமிருந்து வலிந்து பெறும் பொழுது தயரதன் இராமனைக் குறிப்பிடும்போது மட்டும், "என் கண், கண்ணின் கருமணி, என் உயிர், உயிரின் ஊற்று" என்ற சொற்களைப் பயன்படுத்திவிட்டுப் பரதனைப் பற்றிக் குறிப்பிடும்போது, "உன் சேய்; உன் மகன்" என்ற சொற்களையே பயன்படுத்துவதை உற்று நோக்கிய அக்கணத்தில்தான் உண்மையை உணர்ந்திருப்பாள் கைகேயி....*

தயரதன் அடுத்தடுத்து எத்தகைய திட்டங்களைத் தீட்டிச் செயல்படுத்துகிறான் என்று பார்ப்போம். மந்தரை மிகச் சரியாக ஊகித்தபடி, பரதன் கேகய நாட்டுக்குச் சென்ற பின், அவன் அயோத்தியில் இல்லாத வேளையைச் சரியாகப் பயன்படுத்திக் கொண்டு இராமனுடைய முடிசூட்டு விழாவுக்கு நாள் குறிக்கிறான். எத்தனை அளவு அதில் அவசரம் காட்டுகிறான் என்றால் ஒரு பகல் பொழுதில் முடிவெடுத்து, அயோத்தியின் ராஜ்யத்திற்குட்பட்ட வேந்தர்களுக்கு உடன் ஓலை போக்கி, அவர்தம் துணையையும் இராமனுக்குரியதாக்கி, கோசலைக்கு மட்டும் செய்தி சொல்லியனுப்பி, விழாவுக்குண்டான ஏற்பாடுகளை இரவில் செய்யச் சொல்லி மறுநாளே இராமனுக்கு முடி சூட்டி விட எண்ணுகிறான். ஏன் இந்த அவசரம்? "எவராலும் வெற்றி கொள்ள முடியாதது" என்ற பொருள்படும் அயோத்தி என்ற பெயர் கொண்ட பேரரசுக்கு உரிமையுடைய முடி மன்னன், தன் உயிரினும் இனிய தலைமகனுக்கு முடிசூட்டு விழா நடத்துகிறான்! மக்களும், உலகமும், மன்னுயிரெலாம் தம் ஆவியை வைத்து அன்பு பாராட்டுகின்றனர் இராமனிடம்! அவனுடைய முடிசூட்டு விழாவுக்கு ஏற்பாடுகள் இரவில்

நடப்பதேன்? அதிலும் தனக்கு மாமனாராகவும், தன்னையொத்த பேரரசனாகவும் உள்ள கேகயனுக்குத் தயரதன் ஓலை அனுப்பவில்லை! மேலும் தன் அரசுக்குட்பட்ட வேந்தர்களை மட்டும் அழைத்து "இராமனுக்கு முடி சூட்ட நான் விரும்புகிறேன் என்பது இருக்கட்டும், அயோத்தி மன்னனாவதற்கு அவனுக்குள்ள தகுதிகள் என்னவென்று நீவிர் எண்ணுகிறீர்?" என்று கேட்டு இராமனின் தகுதிகளை அவர்கள் வாயாலேயே சொல்லச் செய்கிறான். அது கேட்டு "கழிந்தது ஓர் இடர்" (அயோத்தியா - மந்திரப் - 83) என்று தயரதன் எண்ணி உவகை பூப்பதாகக் கம்பர் கூறுகிறார். என்ன இடர் கழிந்ததாக எண்ணுகிறான் மன்னன்? இராமனுக்கு முடிசூட்டப்படுவதற்குள்ளோ, அதன் பின்னரோ இராமனுடைய அரசு உரிமைக்குப் பங்கம் நேருமானால், வேந்தர்களாகிய நாங்களும் இராமனையே அயோத்தியின் அரசனாக ஏற்கச் சித்தமாக இருந்தோம் என்று அவர்களே கூறும் வண்ணம், தான் செய்யும் ஏற்பாடுகள் பற்றி மனநிறைவு கொண்டே, "இடர் கழிந்தது" என்று எண்ணுகிறான். மேலும் பிற்காலத்தில் அரசுரிமைப்போர் ஏதேனும் ஏற்படுமானால், அப்போரில் உணர்வு பூர்வமான உதவியை முடி வேந்தர்கள் இராமனுக்கு நல்க வேண்டுமென்பதற்காகவே, "இராமன் இனி என் மகன் இல்லை, உங்கள் மகன். அவனை உங்களிடம் அடைக்கலம் அளித்துவிட்டேன். அவனைக் காப்பது உம் கடமை" (அயோத்தியா - மந்திரப்-84) என்று இராமனைக் கையடையும் கொடுத்து விடுகிறான் தயரதன்.

இத்தகைய அவசர முடிவுகளைப் பற்றி அறிந்தவளாகவும், தயரதனுடைய விருப்பத்தில் பங்கு கொள்பவளாகவுமே தோன்றுகிறாள் கோசலை. முடி சூட்டு விழா பற்றிய செய்தி அறிய வரும் கோசலை, தன் அருமைத் தோழி சுமித்திரையை அழைத்துக் கொண்டு கோயிலுக்குச் செல்கிறாள்.அவளுடனிருக்கத் தான தர்மங்கள் செய்கிறாள். காப்பியச் சான்று;

> " *துன்னு காதல் சுமத்திரையோடும் போய்*
> *மின்னும் நேமியன் மேவு இடம் மேவினாள்* "
>
> *(அயோத்தியா - மந்தரை சூழ்ச்சி - 6)*

(கைகேயி எப்பொழுதும் முதல் இரு அரசியராலும் புறக்கணிக்கப்பட்டுத் தனித்தே விடப்படுகிறாள் என்பதை நோக்குக) அத்துடன் இராமன் முடி புனைவதற்கு இடையூறு எதுவும் ஏற்பட்டுவிடக்கூடாது என்று தயரதன் போலவே கோசலையும் மன நெருக்கடிக்குள்ளாகி இருப்பவளாகத் தோன்றுகிறாள். அதனால்தான் நெடு முடி புனைந்து இராமன் தன்னிடம் ஆசி பெற வருவானென்று தழைக்கின்ற ஆர்வத்தோடு காத்துக் கிடக்கும் கோசலை, இராமன் 'குழைக்கின்ற கவரி இன்றி, கொற்ற வெண் குடையுமின்றித்' தனித்துத் தன் முன் தோன்றும்பொழுது,

*"முடி புனைவதற்கு இடர் ஏதும் உண்டோ?"*
*(அயோத்தியா – நகர் நீங்கு – 2)*

என்று கேட்கிறாள். இராமனும் பதில் கூறும்பொழுது, "பங்கமில் குணத்துப் பரதனே துங்கமா முடி சூடுகின்றனன்" என்று பரதனே என்று ஏகார இசையோடு கூறுகிறான். அதாவது, "இதுகாறும் நான் முடிபுனையப் போவதாக நினைத்திருந்தோமல்லவா? நான் அல்ல. பரதனே முடி புனைகிறான்" என்கிறான். இதிலிருந்து தெரிவது என்ன? இராமன் அரசனாக வரவேண்டும் என்ற ஆசை எல்லாருடைய உள்ளத்திலும் இருந்தாலும், அரசுரிமை இராமனுக்கா அன்றிப் பரதனுக்கா என்ற கேள்வி விடை தெரியாத ஒரு புதிராகவும், மறைவாகப் பேசப்பட்ட அல்லது கேட்கப்பட்ட கேள்வியாகவுமே அனைவர் மனதிலும் இருந்திருக்க வேண்டும். இராமனுக்கு முடி புனைந்தால் அது மரபை ஒட்டியும், பரதனுக்கு என்றால் அது தயரதனுடைய வாக்கை ஒட்டியும் அமைவதாக இருக்கும் என்றும், எவருக்கு உரிமை வாய்க்கப் போகிறதோ என்றும் நாட்டு மக்கள் உட்பட அனைவரும் இதைப்பற்றி இலைமறை காய் மறையாகப் பேசியே இருந்திருப்பார்கள். 'இராமன்' என்று முடிவான அக்கணங்களில் மக்கள் இறுதியில் அரசுரிமை 'இராமனுக்குத்தான்' என்றுதான் பேசியிருப்பார்கள். அந்த மனநிலையைப் பிரதிபலிக்கும் வண்ணம்தான் இராமனும், 'பரதனுக்குத்தான்' என்ற தொனியில் தாய்க்கு விடையளிக்கிறான். கேட்டிருக்கும் கோசலையும், "சிறிது கால இடைவெளிக்குள் மந்திரச் சுற்றமோ அல்லது மன்னனோ மனம் மாறியிருக்கக்கூடும்" என்றெண்ணி, "அரச மரபுக்குரிய நியதியென்று ஒன்றுண்டு, அதன்படி நீதான் மகுடம் ஏற்க வேண்டும். ஆயினும் குற்றமில்லை. பரதன் நின்னினும் நல்லவன்; நிறை குணத்தவன். தம்பியோடு ஒற்றுமையாகப் பல காலம் நானிலத்தைக் காத்து நீ வாழ்வாயாக" என்று ஆசி கூறி அமைந்து விடுகிறாள். திட்டம் மாறி விட்டது பற்றி ஐயமில்லை; சீற்றமில்லை; போர்க்குணமில்லை; உரிமைக்காகப் போராடவில்லை. அமைதியோடு மாற்றத்தை ஏற்றுக் கொள்கிறாள் கோசலை என்றால், எது நடந்தாலும் ஏற்றுக் கொள்ளும் மனப்பக்குவத்தைப் பல காலமாக அவள் வளர்த்து வந்திருக்கிறாள் என்றே தோன்றுகிறது. ஆக, எல்லோருடைய மனத்திலும் உறைந்திருக்கின்ற ஒரு விஷயத்துக்குத் தீர்வைத் தயரதன் மிக அவசரமாக எடுத்ததன் நோக்கம் என்ன? விவாதித்து முடிவெடுக்கப் புகுந்தால், விவாதம் விபரீதமாகி, செய்தி கேகயன் வரை போய், பிறகு கைகேயி மனம் மாறி ............... இறுதியில் இராமனுக்கு அரசுரிமை இல்லாமல் போய்விடக்கூடும் என்று அஞ்சியே அரசர்க்கு அரசனாகிய தயரதன் விவாதித்து முடிவெடுக்க வேண்டிய ஒரு விஷயத்தில் தன்னிச்சையாக முடிவெடுத்து, எவரும் மாறுபட்ட கருத்தைக் கூறுவதற்கே கால அவகாசம் இல்லாத வகையில் மிக வேகமாகக் காரியங்கள் ஆற்றி விழா ஏற்பாடுகளை இரவில் செய்கிறான். அவன் பல

காலம் இட்ட திட்டமும், அன்றைய ஒரு நாளில் எடுத்த தீர்மானமும் அவன் எண்ணப்படி நிறைவேறித்தான் இருக்கும். ஆனால்....

*"ஊழிற் பெருவலி யாவுள – மற்றொன்று*
*சூழினும் தான் முந்துறும்"* *(குறள் – 380)*

என்ற பொய்யாமொழி பொய்க்கக் கூடுமோ?

**விதி மந்தரை உருவில் பல காலமாக கைகேயி மாளிகையில் காத்துக் கிடக்கிறதே! அந்த விதியின் முன் தயரதனின் பல காலத் திட்டம் ஓரிரவில் தவிடு பொடியாகிவிட்டதுதான் உண்மை .........** ஆக, நெருங்கிய சுற்றத்தில் தயரதன், கோசலை, சுமித்திரை, இராமன் ஆகியோர் மட்டும் அறிய வருகின்ற – பங்கு பெறுகின்ற – ஒரு திட்டம், கைகேயி, கேகயன், பரதன் ஆகியோர் திட்டமிட்டு ஒதுக்கப்பட்ட நிலையில், அயோத்தி அரண்மனையில் ஓர் இரவில் மறைவாகச் செயல்படுத்தப்படுகின்றது என்பது உண்மையே அல்லவா? இந்த உண்மையைத் தெளிவாகப் புரிந்து கொள்பவள் மந்தரை. அவளுக்கு இணையாகப் புரிந்து கொள்பவன் இராமன். **மந்தரை இவ்விஷயத்தை மற உணர்வோடும், இராமன் உள்ளிட்ட அனைவரிடமும் வெறுப்புணர்வோடும் அணுகுகிறாள். இராமனோ அறவுணர்ச்சியோடும், இதில் தொடர்புடைய அனைவரிடத்தும் அன்புணர்ச்சியோடும் அணுகுகிறான். இதுதான் வேறுபாடு.**

இதில் மந்தரையின் போதனையால் கைகேயி மனம் மாறியதில் வியப்பென்ன? அறிவின் மிக்க கோசலையே – இராமனிடம், பரதனைப் பற்றிக் குறிப்பிடும்பொழுது "நின்னினும் நல்லவன்; நிறை குணத்தவன்" என்று கூறும் நல்ல மனம் கொண்ட கோசலையே – துயரச் சம்பவங்கள் நிகழ்ந்து துயர்க் கடலில் வீழ்ந்த பின்பு மனமும் அறிவும் பேதலித்துக் போகிறாள். துன்பமே ஓர் உருக் கொண்டாற்போலத் தன்னிடம் நீர் வார் கண்ணனாய் வரும் பரதனிடம் " கைகேயி இழைத்த கொடுமையின் விளைவாக, அடுத்து, இங்கு நிகழ்ந்த நிகழ்ச்சிகளைப் பற்றி ஏதும் நீ அறியவில்லையோ?" என்று கேட்கிறாள். (அனைத்துத் துயரங்களுக்கும் நீயே காரணமாகப் பங்களிப்பு செய்துவிட்டு இப்பொழுது ஒன்றும் தெரியாதவன் போல் பேசுகிறாயே என்னும் பொருள் தொனிக்கக் கேட்கிறாள்.)

காப்பிய வரிகள்;

*" 'கைகயர் கோமகள் இழைத்த கைதவம்,*
*ஐய! நீ அறிந்திலை போலுமால்?' "*

*(அயோத்தியா –பள்ளிபடை – 96)*

அறிவில் தெளிவு கொண்ட கோசலையே, துயரச் சுமையில் மனம் மாறக் கூடுமானால், கள்ளமற்ற உள்ளத்தவளாய், தன் கணவன் விருப்பமே தன் விருப்பமென்று வாழ் நெறி அமைத்துக் கொண்ட தெய்வக் கற்பினளாகிய கைகேயி "தன் காதற் கணவனும், அன்பு மகனும் தன்னை வஞ்சிக்கவே திட்டமிட்டு இதுகாறும் செயலாற்றியுள்ளனர்" என்பதை மந்தரை உணர்த்த, அதனை நம்பி மனம் மாறினால் அதில் தவறு ஏதும் உண்டோ? தயரதன் திட்டமிட்டு அவளை வஞ்சித்தது உண்மைதானே! அதனை அவள் புரிந்து கொண்டு விட்டாள் என்பதனால் அவள் எப்படித் தீயவளாக முடியும்? **கைகேயிக்குள்ள நியாயங்கள் அனைத்தையும் புரிந்து கொண்டவன் இராமன் ஒருவனே!** நடந்து முடிந்துவிட்ட நிகழ்ச்சிகளில் தனக்குப் பங்கில்லை என்பதை இராமன் கைகேயிக்கு எப்படி உணர்த்துவான்? பால் போல் வெளுத்துப் பளிங்கு போல் ஒளிர்ந்த கைகேயியின் தூய உள்ளம் உண்மையின் வெம்மை தாங்க வொண்ணாமல் கொல்லன் உலை போல் கொதித்துக் கிடக்கிறது என்பதை இராமன் உணர்கிறான். எந்த விளக்கமும் அவளை அமைதியடையச் செய்ய இயலாது. அவளை அமைதியுறச் செய்வதற்கு ஒரே வழி அவள் விரும்பிய வண்ணம் நடப்பதே. அவளுடைய விருப்பம் என்ன? "தன் மணி வயிறு உதித்த பரதன் நாடாள வேண்டும்; தன்னை இதுகாறும் வஞ்சித்து வந்த தயரதனின் அருந்தவப் புதல்வன் காடாள வேண்டும்" என்பதே. இவ்விரண்டு ஆணைகளையும் சிரமேற்கொண்டு உடனே நிறைவேற்ற ஆயத்தமாகிவிடுகிறான் இராமன். நடந்துவிட்ட நிகழ்ச்சிகளில் தன் பங்கு இல்லை என்பதை நிருபிக்கவும், இருக்கிறதென்று கைகேயி எண்ணினால் அதற்குரிய தண்டனையைத் தான் உரியவர்களுக்கு அளித்துவிட்டதை எண்ணியாவது மன ஆறுதலையும் அமைதியையும் அன்னை அடையட்டும் என்று கருதியும் உடன் மரவுரி புனைந்து காடேகச் சித்தமாகி விடுகிறான்.

ஆனால் பரதன் கேகய நாட்டினின்றும் திரும்பி வந்து "அயோத்தி மன்னன் என்றென்றைக்கும் இராமனே" என்றாக்கி விடுகிறான். கைகேயி பெற்ற முதல் வரம் பரதனுடைய பிடிவாதத்தால் இராமனைப் பொறுத்தவரையில் பயனற்றதாகி விடுகிறது. இரண்டாவது வரத்தையும் பயனற்றதாக்குவதன் மூலம் தந்தையின் புகழ் மங்கவே செய்யும் என்பதனை இராமன் உணர்கிறான். தந்தையின் செயல்களில் குற்றம் இருக்கும்பட்சத்தில் அதற்கான தண்டனையைத் தான் நிறைவேற்றிப் பொன்றாத புகழைத் தன் தந்தைக்கு ஆக்க நினைக்கிறான். வாய்மையை – அதாவது கொடுத்த வாக்கைக் காப்பாற்றிய பெருமையுடையவன் தயரதன் என்ற புகழ் தந்தைக்கு நிலைக்க வேண்டும் என்பதற்காகவே தான் வனம் செல்ல மனம் கொண்டதாகக் கோசலை, சுமித்திரை, இலக்குவன் ஆகியோரிடத்து இராமன் மீண்டும், மீண்டும் கூறுகிறான். தாய் கோசலையிடம்,

*"சிறந்த தம்பி திரு உற, எந்தையை*
*மறந்தும் பொய் இலன் ஆக்கி, வனத்திடை*
*உறைந்து தீரும் உறுதி பெற்றேன்; இதின்*
*பிறந்து யான் பெறும் பேறு என்பது யாவதோ?"*
*(அயோத்தியா - நகர் நீங்கு - 16)*

என்று கூறித் தன் மனநிலையைத் தெளிவுபடுத்தியதோடு, தாய் கோசலையையும் தந்தையின் வாக்கைக் காப்பாற்றும் பொருட்டு, சூழ்நிலைக்கு இணக்கமாகவே நடக்க வேண்டும் என்று பின்வருமாறு அறிவுறுத்துகிறான்.

*"............. 'அருங் கற்பினோய்!*
*பொய்த் திறத்தினன் ஆக்குதியோ? - புகல் -*
*மெய்த் திறத்து நம் வேந்தனை, நீ?' என்றான்"*
*(அயோத்தியா - நகர் நீங்கு - 14)*

அன்னை சுமித்திரையிடமும்,

*" 'போர் வாள் அரசர்க்கு இறை பொய்த்தனன் ஆக்ககில்லேன் ;*
*கார் வான் நெடுங் கான் இறை கண்டு, இவன் மீள்வென்' என்றான்"*
*(அயோத்தியா - நகர் நீங்கு -140)*

வசிட்ட முனிவரிடம்

*" 'அன்னவன் பணி தலை ஏந்தி ஆற்றுதல்*
*என்னது கடன்; .................. ' "*
*(அயோத்தியா - நகர் நீங்கு - 162)*

என்கிறான்.

கைகேயி பெற்ற இரு வரங்கள் பற்றிய செய்தி கேட்டு எவரும் மூட்டாத காலத் தீ போல் மூண்டெழும் இலக்குவன், "தயரதனை அழித்து, கைகேயியைத் தொலைத்து இராமனுக்கே அரசுரிமையாக்குவேன்" என்று வில்லோடு புறப்படுகிறான். இராமனுடைய அறிவுரைகளையும் ஏற்க மறுத்து, "இந்த வில்லும், கணைப்புட்டிலும் வீணே சுமக்கப் பிறந்தேனோ?" என்று வெகுண்டுரைக்கும்பொழுது, "எனக்குப் பிறப்பளித்து, நாளும் நற்சொற்கள் தந்து, காதலுடன் பேணி வளர்த்த தந்தை வாக்கைப் புறந்தள்ளிவிட்டு அரசைப் பறித்து ஆள்வது எனக்குத் தக்கது எனும்

பட்சத்தில், என் சொல்லை மீறி நீ ஆற்றும் செயல்களும் உனக்குத் தக்கதே" என்று கூறுவதன் மூலம், இலக்குவனின் சினம் ஆற்றுகிறான் இராமன்.

அடுத்து, தேரோட்டித் தன்னை வனத்துக்கு இட்டுச் செல்லும் சுமந்திரனிடம்,

*" 'வினைக்கு அரு மெய்ம்மையின் வனத்து விட்டனன்,*
*மனக்கு அரும்புதல்வனை' என்றல் மன்னவன் –*
*தனக்கு அருந்தவம்; அது தலைக் கொண்டு ஏகுதல்*
*எனக்கு அருந்தவம்; ......................................."*

*(அயோத்தியா – தைலம் ஆட்டு – 31)*

என்கிறான். தந்தையின் வாக்கு பரிபாலனம் செய்யப்படவில்லை என்றால் தந்தைக்கு நரகம் வாய்த்து விடும் என்றும் அஞ்சுகிறான். இந்தக் கருத்தை வனத்தில் பரதனிடம் இராமன் வெளியிடுகிறான்.

*" 'இம்மை, பொய் உரைத்து, இவறி, எந்தையார்*
*அம்மை வெம்மை சேர் நரகம் ஆள, யான்,*
*கொம்மை வெம் முலைக் குவையின் வைகி வாழ்*
*செம்மை சேர் நிலத்து அரசு செய்வெனோ?' "*

*(அயோத்தியா – திருவடி சூட்டு – 110)*

என்கிறான். அதாவது தந்தைக்கு நரகம் நேரிடாதபடிக்குத் தான் பரிகாரம் செய்ய வேண்டும் என்றும் நினைக்கிறான். இப்பொழுது ஒரு வரம் கைகேயிக்கு மறுக்கப்பட்ட நிலையில் மற்றொரு வரமாவது தன்னால் நிறைவேற்றப்பட்டு, தந்தைக்கு என்றென்றும் பழி நேராதிருக்கப் பதினான்காண்டு தண்டனையை அனுபவிப்பதில் உறுதிபட நிற்கிறான்.

இதுவரை கூறப்பட்ட விளக்கங்களெல்லாம் ஒரு புறமிருக்க, காப்பியத்தை ஊன்றிக் கற்போருக்குச் சில ஐயங்கள் எழவே செய்கின்றன. இராமன் உண்மையிலேயே குற்றமற்றவன்தானா? குற்றவுணர்ச்சி சிறிதும் அற்றவனாகத்தான் இருக்கிறானா? தயரதனுடைய சூழ்ச்சியிலும் திட்டத்திலும் இராமனுக்குப் பங்கு சிறிது கூட இல்லையா? இந்தக் கேள்விகளுக்கெல்லாம் விடை ஒன்றுதான். இராமன் மனமறிந்து அதில் பங்குபெறவில்லை என்பதுதான் உண்மை. மேலும் ஒரு கேள்வி, இத்தகைய ஒரு சூழ்நிலையை இராமன் தவிர்த்திருக்கலாமா? தவிர்த்திருக்க முடியும். ஆனால் தவிர்க்கவில்லை. அப்படித் தவிர்க்க இயலாமல் போனதற்கு அவனுடைய

நற்பண்பே காரணமாகிப் போகிறது. தான் முயன்றால் தவிர்த்திருக்கக்கூடிய ஒரு சூழலில், விதியின் பிழையால், முயற்சி செய்யாமல் பரதனுக்குரிய அரசுரிமையைப் பெறுவதற்கு இசைந்து கொடுப்பதன் மூலம் இராமன் தயரதனுடைய திட்டத்தில் தான் பங்கு பெற்று விடுவதாகவே கருதுகிறான். அவனுடைய இத்தகைய கருத்துக்கு அரணாக நிற்கும் காப்பிய நிகழ்ச்சிகளைக் காண்போம்.

இராமன் அனைத்து நிகழ்ச்சிகளையும் பற்றி அறிவான். எல்லாவற்றிலும் ஊடுருவி உறைந்து கிடக்கின்ற அறக்கூறுகள், மறக் கூறுகள் அனைத்தையும் அறிவான். பரதன் பிறந்துவிட்டதால் தனக்கு அரசுரிமை இல்லை என்பதைப் பற்றித் தெளிவாக அறிந்து வைத்திருந்தவன் இராமன்.

*" 'உரனின் நீ பிறந்து உரிமை ஆதலால்,*
*அரசு நின்னதே; ஆள்க' ............. "*

*(அயோத்தியா – திருவடி சூட்டு – 11)*

என்று பரதனிடம் வனத்தில் கூறுகிறான் இராமன். இந்த வார்த்தைகளுக்கு முன்னர் இரு கருத்துகளைக் கூறி விடுகிறான்.

*" 'வரன் இல் உந்தை சொல் மரபினால், உடைத்*
*தரணி நின்னது என்று இயைந்த தன்மையால்' "*

*(அயோத்தியா – திருவடி சூட்டு – 11)*

என்கிறான். அதாவது "தாய் கைகேயியைத் தந்தை மணந்த காலத்தில் கூறிய சொல்லினாலும், (கைகேயிக்குப் பிறக்கும் குழந்தைக்கே அயோத்தியின் அரசுரிமை அளிக்கப்படும் என்பது) அடுத்து, கூனியின் போதனையால் தந்தையிடம் கைகேயி வேண்டிப் பெற்ற வரத்தின் தன்மையாலும், (இராமன் வனம் ஏக, பரதன் அயோத்தியை ஆள வேண்டும் என்பது) அரசுரிமை உனக்கே ஆகும். எனவே நீயே இத்தரணியை ஆள்வதுதான் உசிதமானது" என்கிறான்.

இந்த உண்மை தெரிந்திருந்தும் தயரதன் வேண்டுகோளுக்கு – ஏவலுக்கு அல்ல – ஏன் இராமன் இசைந்தான்? உண்மையில் காப்பியப் போக்கின்படி பார்த்தால் தயரதன் இராமனை நயந்து வேண்டிக் கேட்டுக் கொள்கிறானே தவிர, ஏவல் தொனியில், "அரசுரிமையை ஏற்றுக் கொள்" என்று ஆணையிடவே இல்லை. தயரதன் இராமனைத் தன்னிருப்பிடத்திற்கு வரவழைக்கிறான். அவனிடம்,

*" 'நீண்ட தோள் ஐய! நிற் பயந்தெடுத்த யான், நின்னை*
*வேண்டி, எய்திட விழைவது ஒன்று உளது ' என விளம்பும்"*
*(அயோத்தியா - மந்திர - 60)*

என்று தன் வேண்டுதலையே தெரிவிக்கிறான். "என் எண்ணம் ஈடேற, ஐய! நீ ஈது அருளிட வேண்டும்" என்கிறான்.

*" 'புனையும் மாமுடி புனைந்து, இந்த நல்அறம் புரக்க*
*நினையல் வேண்டும்; யான் நின்வயின் பெறுவது ஈது' "*
*(அயோத்தியா - மந்திரப் - 68)*

என்று வார்த்தைகளைக் குழைத்து இராமனை வேண்டிக் கேட்டுக் கொள்கிறான் தயரதன். இராமனை நீண்ட நெடுங்காலம் தொடர்ந்து கண்காணித்து வரும் தயரதன், மகனுக்கு அரசாளும் ஆர்வம் இல்லை என்பதை அறிந்தே இருந்திருப்பான்! ஆனால் தகுதியுடைய மகனைத் தரணியாள அனுமதியாமல் விட்டுவிட 'மகனே தன் இன்னுயிர்' என்று வாழும் தயரதன் போன்ற ஒரு தந்தைக்கு எப்படித்தான் மனம் வரும்? எனவே அன்பு கனிந்த வார்த்தைகளால் இராமனை அருள்புரிய வேண்டிக் கேட்டுக் கொள்கிறான். இதற்கு இராமன் எப்படி எதிர் வினையாற்றுகிறான்? 'காதல் உற்றிலன்; இகழ்ந்திலன்; கடன் இது என்று உணர்ந்து இருந்தான்' என்று கம்பன் கூறுகிறான். 'மகுடம் கிடைத்துவிட்டது' என்று ஆர்வமும் காட்டவில்லை. 'மகுடத்தை ஏற்கமாட்டேன்' என்று மறுக்கவும் இல்லை (வாய்மைக்குப் புறம்பாகத் தயரதன் நடக்கிறானே என்று தந்தையை இகழவுமில்லை என்றும் கொள்ளலாம்). ஆணையிடுவது அயோத்தி மன்னன், அதனை நிறைவேற்றுவது குடிமகனாகிய தனது கடன் என்ற நிலையில் அப்பணி செய்யத் தலை நின்றான் இராமன் என்கிறான் கம்பன். காப்பியப் பாடல் பின்வருமாறு:

*"தாதை, அப்பரிசு உரை செய, தாமரைக் கண்ணன்*
*காதல் உற்றிலன்; இகழ்ந்திலன்; 'கடன் இது' என்று உணர்ந்தும்,*
*'யாது கொற்றவன் ஏவியது அது செயல் அன்றோ,*
*நீதி எற்கு?' என நினைந்தும், அப்பணி தலை நின்றான்"*
*(அயோத்தியா - மந்திரப் - 69)*

இவ்விடத்தில் தயரதனைத் தந்தை என்றே இராமன் கொள்ளவில்லை. கொற்றவன் – மன்னன் – என்றே கொள்கிறான். அவன் 'அருளிச் செய்ய வேண்டும்' என்று நயந்து கேட்பதை, இவன் ஏவல் என்றே கொள்கிறான். காரணம், இராமன்

தயரதனை மந்திராலோசனை மண்டபத்தில் வைத்துச் சந்திக்கிறான். அங்கே நிற்பவன் தன் தந்தையல்ல; அயோத்தி வேந்தன் என்றே எண்ணுகிறான். ஆனால் தயரதனோ தன் குலம் தழைக்க வந்த தலைமகனாகத்தான் இராமனைக் காண்கிறான். இராமனுடைய உருவத்தைக் கண்டவுடனேயே உள்ளம் நெக்குருகுகிறான் தயரதன்,

*"காதல் பொங்கிட, கண் பனி உகுத்திட, கனி வாய்ச்*
*சீதை கொண்கனைத் திரு உறை மார்பகம் சேர்த்தான்"*
*(அயோத்தியா - மந்திரப் - 58)*

இவ்விடத்தில் ஒரு தந்தையின் உணர்வோடு பேசும் தயரதனைத் தந்தை என்று இனங்கண்டு கொள்ளத் தவறும் குற்றத்தைத் தான் இழைத்து விட்டதாகத்தான் இராமன் பின்னாளில் மனதுக்குள் மறுகுகிறான். இலக்குவன் போர்க்கோலம் பூண்டவனாய், தயரதனைத் தடித்த வார்த்தைகளால் கடிந்துரைக்கும்பொழுது இராமன் கூறுகிறான்:

*" 'முன், கொற்ற மன்னன், "முடி கொள்க" எனக் கொள்ள மூண்டது*
*என் குற்றமன்றோ? இகல் மன்னவன் குற்றம் யாதோ?' ............ "*
*(அயோத்தியா - நகர் நீங்கு - 128)*

என்கிறான்.

சரி. தந்தையின் நிலையில் தன் வேண்டுகோளைத் தயரதன் அரண்மனையில் வைத்துக் கேட்டிருந்தால் ஒத்துக் கொண்டிருப்பானா? அப்பொழுதும் தந்தையை மறுத்துப் பேசும் துணிவு இராமனுக்கு இருந்திருக்காது என்பதுதான் உண்மை. காரணம் இராமனுடைய நோக்கில் தாயும் தந்தையுமே பெரும் தெய்வம். தன்னை வனத்தில் காண வந்த பரதனிடம் இராமன் கூறுகிறான். 'உலகில் பெரியவர் களுக்கெலாம் பெரியவர் யார் எனில் தந்தையும் தாயுமே. அவர்கள் சொற்படி நடப்பதே மைந்தர்களுக்குரிய கடமை' என்கிறான். விசுவாமித்திரரையோ, வசிட்டரையோ மற்றும் எவரையுமே மறுத்துரைக்கத் துணியக்கூடிய இராமன், தந்தை தாயை (குறிப்பாகக் கைகேயியை) மறுத்துரைக்கக் கனவிலும் துணியான்.

*" 'விண்ணும் மண்ணும், இவ் வேலையும் மற்றும் வேறு*
*எண்ணும் பூதம் எலாம் அழிந்து ஏகினும்,*
*அண்ணல் ஏவல் மறுக்க, அடியனேற்கு ஒண்ணுமோ?' ....... "*
*(அயோத்தியா - நகர் நீங்கு - 17)*

என்கிறான்.

இதுதான் இராமனின் இயல்பு. இராமனுக்கு அரசுரிமையில் ஆசையில்லை. ஆனால் பொறுப்புகள் தோள் மேல் ஏற்றப்பட்டால் ஆற்றுவதில் தடையுமில்லை. இத்தகைய மனநிலையில் – மனச் சமநிலையில்தான்– இராமன் இதுகாறும் இருந்து வந்திருக்கிறான். பரதனிடம் தந்தை போல் பரிவும் அன்பும் காட்டி வந்திருக்கிறான். கைகேயி அன்னையிடம் அவன் கொண்டுள்ள பக்திக்கு அளவேயில்லை எனலாம். தான் பிறப்பதற்கு முன்பு, கைகேயிக்கு தன் தந்தை அளித்த வாக்கைப் புறந்தள்ளிவிட்டு, இப்பொழுது மரபின் வழி நின்று தனக்கு அரசுரிமை அளித்துள்ளான் என்றாலும் கூட, இப்பொழுதுள்ள மாறிய சூழ்நிலையில் தயரதனின் விருப்பத்துக்கு இடையூறு ஏதுமில்லை என்று கருதியே மன்னவன் ஆணையை ஏற்றுக் கொண்டு விட்டான். நிகழ்ச்சிகளை, மக்களின் மனத்தை, சூழ்நிலையை அனைத்தையும் சரியாகக் கணிக்கும் ஆற்றல் கொண்டிருந்த இராமன் மந்தரையைப் பற்றி மறந்து போய் விட்டானல்லவா? உட்பகை ஒன்றுண்டு என்பதை உணரத் தவறிய தான், கொற்ற வனாக இருக்கத் தகுதியுடையவன்தானா என்பதைக் காரண காரியங்களுடன், சிறு பொழுதுக்குள்ளாகவே புரிந்து கொண்டிருந்திருப்பான் போலும்! ('உட்பகை அஞ்சித்தற் காக்க' – குறள் 882) அதனால்தான், பின்னாளில், வாலியை வதைத்துச் சுக்ரீவனுக்கு மகுடம் புனைந்துவிட்டு, நல்லரசு பற்றிய நல்லுரைகளைச் சுக்ரீவனுக்குக் கூறும்பொழுது மந்தரையைப் பற்றி மறவாது குறிப்பிடுகிறான்.

> " '*சிறியர் என்று இகழ்ந்து நோவு செய்வன செய்யல்; மற்று இந்*
> *நெறி இகழ்ந்து, யான் ஓர் தீமை இழைத்தலால், உணர்ச்சி நீண்டு,*
> *குறியது ஆம் மேனி ஆய கூனியால், குவவுத் தோளாய்!*
> *வெறியன எய்தி, நொய்தின் வெந்துயர்க் கடலில் வீழ்ந்தேன்*' "
>
> *(கிட்கிந்தா – அரசியல் – 12)*

இராமனின் இந்தக் கருத்துக்குப் பின்னணி ஒன்று உண்டு. சிறு வயதில் அரசிளங் குமரர் நால்வரும் வில் வைத்து விளையாடிய பொழுது இராமன் கூனியின் கூன் முதுகை இலக்காக வைத்து வில் விளையாட்டு விளையாடியிருந்தான். அந்த விளையாட்டுதான் தன் வாழ்க்கைக்கு வினையாகி மந்தரை உருவில் விதியாகித் தன் வாழ்வில் விளையாடி விட்டது என்று சுக்ரீவனிடம் கூறுகிறான். தனது கூர்த்த உள்ளுணர்ச்சியினால் பிற்காலத்தில் இவ்வுண்மையை உணர்கிறான். இதில் விந்தை என்னவெனில் எந்தக் காரணத்தால் கூனி தன் மேல் பகை வளர்த்தாள் என்று இராமன் உள்ளுணர்ச்சியினால் பின்னாளில் உணர்கிறானோ, அதே காரணத்தைத்தான் மந்தரை அயோத்தியா காண்டத்தில் இராமனுக்கு ஏதம் இழைக்க விழையும் பொழுது எண்ணுகிறாள். காப்பியப் பாடல் பின்வருமாறு:

*"தொண்டை வாய்க் கேகயன் தோகை கோயில் மேல்*
*மண்டினாள் - வெகுளியின் மடித்த வாயினாள்,*
*பண்டை நாள் இராகவன் பாணி வில் உமிழ்*
*உண்டை உண்டதனைத் தன் உள்ளத்து உள்ளுவாள்"*
*(அயோத்தியா - மந்தரை - 49)*

தான் அரசு இழந்தமைக்கு உரிய காரணத்தை இராகவன் உடனடியாக அறிய முடிந்திருக்காதென்றாலும், மரவுரி தரித்து நகரை நீங்கும் முன்பு நன்கு அறிந்திருக்க வாய்ப்பிருந்திருக்கும். தனது கூர்த்த மதியினால் மந்தரையின் பங்களிப்பிற்கான காரணத்தை உடனே உணர்ந்திருந்திருப்பான். எப்படியாகினும், உடல் மட்டுமின்றி அவள் உள்ளமும் ஊனமுடையவளாக இருப்பவள் என்பதை உணரத் தவறித் தானே போய்விட்டான் இராகவன்! தந்தைக்கும் தனக்கும் கேடு சூழ இத்தகையதொரு உட்பகை உள்ளே இருப்பதை உணர்ந்து இராமன் தனக்களிக்கப்பட்ட அரசுரிமையைத் தவிர்த்திருக்கத்தானே வேண்டும்! அப்படித் தவிர்க்காதது தன்னுடைய குற்றம் என்றே உணர்கிறான் இராகவன். சரி அந்தக் குற்றமும் பின்னாளில் தீர்ந்து போகிறது என்றே வைத்துக் கொள்வோம். காரணம், மந்தரையின் சூழ்ச்சி அனைவரும் அறிய வெளிப்பட்ட பின்னர், பரதனே அரசுரிமையை உதறித் தள்ளிவிட்ட பின்னர், இனி மந்தரை உட்பகையாக இருந்து உறுத்தல்களை உருவாக்கமாட்டாள் என்பது திண்ணம். எனவே அந்த நம்பிக்கையிலும் கூட இராமன் அரசுரிமையைப் பரதனிடமிருந்து ஏற்றுக் கொண்டிருக்கலாம். அதனால், முதல் வரத்தில் உடன்பாடு கண்டிருக்கலாம். அதாவது பரதன் அளித்த அரசை ஏற்றுக் கொண்டு, தான் வனமாளும் பதினான்காண்டு காலம், பரதன், தன் அரசைக் காத்து வரட்டும் என்ற முடிவுக்கு இசைவு தெரிவித்திருக்கலாம். அதைப்போலவே இரண்டாவது வரத்திலும் இப்படி ஏதாவது சமரசம் கண்டிருக்கக்கூடாதா? உதாரணமாக, ஒரு அடையாளச் செயலாக, வனவாச காலத்தை ஐந்தாண்டுகள் அல்லது ஏழாண்டுகள் என்று குறைத்து ஒரு சமரசத்தை எட்டியிருக்கக்கூடாதா? கூடாது என்பது இராமனின் கருத்து. இந்தக் கருத்துக்கு இராமனின் மனம் மட்டும் அறிந்த நியாயம் ஒன்றுண்டு.

இராமாயணக் கதை நடந்த திரேதாயுகத்தில் வாழ்க்கை நெறிகளுக்கும் அரசாளும் முறைமைக்கும் வழிகாட்டியது மனுதர்மம்தான். அம் மனுதர்மத்திலே தவறுகளுக்குத் தண்டனை குறிக்கப்பட்டுள்ளது. அதிலே ஒன்று பதினான்காண்டு தண்டனை என்பது. பின்வரும் குற்றங்களுக்காகப் பதினான்காண்டு அரச தண்டனை விதிக்கப்பட்டது. இதனைப் பரதன் வாயிலாகக் கம்பன் கூறுகிறான்.

1) கல்வி கற்பித்த குருவை இகழ்தல்

2) தெய்வ நிந்தனை புரிதல்

3) சொல்லாலும் செயலாலும் பிறர்க்குத் தீங்கு செய்தல்

இதில் மூன்றாவது தவற்றைத் தான் செய்ததாக உணர்கிறான் இராமன். முன்பே குறிப்பிட்டது போல சிறு பிள்ளையாக இருந்தபொழுது விளையாட்டுத் தனமாகத்தான் என்றாலும் இராமன் செயலால் மந்தரைக்குத் தீங்கு இழைத்தான். பெரியவனாகிய பிறகு நீதி நெறிமுறைகள் அனைத்தும் அறிந்திருந்தும், தயரதன் தனக்குரிமையற்ற அரசை நல்கிய பொழுது, அதனை மறுக்காததோடு, 'மன்னவன் ஆணையிட்டால் நான் செய்ய வேண்டியவனே' என்று எண்ணி வாய்மையைப் புறக்கணிக்கும் தயரதனின் அறமற்ற செயலுக்குத் தான் துணை நின்று அறத்துக்குத் தீங்கிழைத்து விடுகிறான்.

காப்பிய வரிகள்;

*" ....... 'யாது கொற்றவன் ஏவியது அது செயல் அன்றோ,*
*நீதி எற்கு?' என நினைந்து ........ "*

*(அயோத்தியா – மந்திரப் – 69)*

இத்தகைய தன் நடத்தையால், அயோத்தி அரசின்பால் தான் ஒரு கணம் பற்று வைத்துவிட்டதாகவே இராமன் எண்ணுகிறான். அந்த ஒரு கணப் பற்றுதான் தான் அனுபவிக்கும் இடர்களுக்கெல்லாம் காரணமாகிவிட்டது என்று இலக்குவன் பிரம்மாத்திரத்தில் கட்டுண்டு கிடக்கும்பொழுது புலம்புகின்றான் இராமன்.

*" 'மண் மேல் வைத்த காதலின், மாதா முதலோர்க்கும்*
*புண் மேல் வைத்த தீ நிகர் துன்பம் புகுவித்தேன்' ............ "*

*(யுத்த – பிரம்மாத்திரம் – 21)*

மேலும் வாய்மை தவறிச் செயலிழைத்த தயரதனையும், அவனுக்குத் துணை நின்ற தன்னையும் உலகம் போற்றுகின்றது. ஆனால் உரிமைக்குக் குரல் கொடுத்து, அதன் மூலம் தயரதனின் வாய்மையை நிலைநிறுத்திய கைகேயியை உலகம் பழித்தொதுக்குகிறது. இது கைகேயிக்குத் தானறியாமலேயே – விரும்பாமலேயே இழைத்த பெரும் தீங்கு என்று எண்ணுகிறான் இராமன். உலகம் முழுதும் கைகேயியைப் பழித்தாலும், தான் பழி பூண்டு தன்னையும், தன் தந்தையையும்

பழியிலிருந்து விடுவித்த கைகேயியை இராமன் எக்காலத்தும், எவ்விடத்தும் தெய்வம் எனவே தொழுகின்றான். அணுவளவும் அன்பு அகலாத மனத்தினனாய் இருக்கின்றான். எனவே முதலில் கள்ளமற்ற தூய மனக் கைகேயியின் உரிமையைப் பறித்தது ஒரு தீங்கு என்றால், அவளைப் பழிக்குள்ளாக்கியது மற்றொரு தீங்கு அல்லவா? எனவே அவளுக்கிழைக்கப்பட்ட தீங்கில் விதி வசத்தால் தன் பங்கே அதிகம் என்று மனமார நம்புவதால், இராமன் அந்தக் குற்றத்துக்காகப் பதினான்காண்டு வனவாசத்தைத் தொடர்ந்து மேற்கொள்ள விழைகிறான். இதன் மூலம் தன் ஆத்மாவில் படிந்த கறையைத் தானே அழித்தொழிக்கிறான்.

தயரதனுடைய அரசில் தனக்குரிமை உண்டென்றால், அதைத் தருவதற்கு தந்தை மேற்கொண்ட பாவத்திலும் தனக்குப் பங்குண்டல்லவா? இதை இராமன் வெளிப்படக் கூறவில்லை. தந்தையின் தவற்றைப் பிறரறியக் கூறும் தகாத மகனல்லன் இராமன். தன் நெஞ்சோடு புதைந்து கிடக்கும் இரகசியமாகவே தந்தையின் குற்றத்தைத் தன் நெஞ்சம் சுமக்கும் சுமையாக ஏற்கிறான். அந்த குற்றத்திற்குத் தானே தண்டனை அனுபவித்துப் பரிகாரம் தேடிக் கொண்டு விடுகிறான். அத்துடன் தவிர்த்திருக்கக்கூடிய ஒரு அறமற்ற செயலைத் தான் தவிர்க்காததோடு, குற்றமற்ற அன்னைக்குப் பழியைத் தேடிக் கொடுத்துவிட்ட பெரும் தீங்குக்காக, மனுதர்மம் விதித்த பதினான்காண்டு வனவாசத்தை வாழ்ந்து முடிக்கிறான். இச்செயல் மூலம் தன் வாழ்வின் அடித்தளமான அறத்துக்கும் உரம் சேர்த்து விடுகிறான். கம்ப நாட்டாழ்வார் கூறுவது போல், இராமன்.

*"நியாயம் அத்தனைக்கும் ஓர் நிலயம் ஆயினான்"*

*(அயோத்தியா - திருவடி சூட்டு - 55)*

⌘ ⌘ ⌘

# அறத்தின் மூர்த்தி இராமன்

இவ்விடத்தில் ஒரு கற்பனை! இராமன் அருங்குணத்துப் பண்பினனாக இல்லாமல் ஒரு சராசரி மனிதனாகவோ – மன்னனாகவோ – இருந்திருந்தால் என்னவாகி இருக்கும்? இப்படி எதிர்மறை நிலையில் அணுகியும் கூட இராமனின் உயர்ந்த பண்பைத் தெளியலாம்.

இராமன் போர்க்குணமும் பகையுணர்ச்சியும் பேராசையும் பதவி மோகமும் கொண்டவனாக இருந்திருந்தால் என்ன செய்திருப்பான்? அகங்காரம் தலைக்கேறி அயோத்தியை நிலை கலங்கடித்திருப்பான். 'அயோத்தி போன்ற அரசை ஆள்வதற்குத் தன்னைவிட தகுதி வாய்ந்தவர் உண்டோ?' என்று தற்பெருமை பேசியிருப்பான். அரசை மறுத்த சிற்றன்னையை வசை பாடியிருப்பான். "முறையாக நான் பெற வேண்டிய உரிமையைத் தடுக்க நீ யார்? மக்கள், மந்திரச் சுற்றம், உற்றார், மன்னர் கூட்டம், முனிவர்கள், அந்தணர்கள், குடி, படை கொற்றம் அனைத்தும் என் பக்கம்! ஏன்?... பரதனும் கூட என் பக்கமே! அவ்வாறு இன்றி பரதன் என்னை எதிர்ப்பானாகில் அவனைப் பரலோகம் அனுப்புவேன். என் விதியை மாற்ற வல்லவர் எவர்? விதிக்கும் விதி செய்யும் என் வில் தொழிலைக் காண்பீர்" என்று மூட்டாத காலத் தீப்போல் மூண்டெழுந்து கனன்றிருப்பான். (இலக்குவன் இப்படி எல்லாம் பேசுவதைக் காப்பியம் காட்டும்) அயோத்தி அரசியல் முதலில் இராமன் அணி, பரதன் அணி என்று இரண்டாகப் பிரிந்திருக்கும். பிறகு அதுவே நிலைத்துத், தழைத்துப் பின், கேகயன் தூண்டிவிட, கைகேயி அணி, சனகன் பின் புலத்தில் இருக்க சீதை அணி, கோசலையின் பிறந்தகத்தார் துணை நிற்க கோசலை அணி, சுமித்திரையின் துணையுடன் இலக்குவ சத்ருக்ன அணி என்று பல அணிகள் உருவாகி, அயோத்தி அரசியல் பன்முகப் பரிமாணம் கொண்டிருக்கும். இராமனுடைய ஒரு கண்ணசைவில் அயோத்தியின் சரித்திரமே மாறியிருக்கும். காரணம், அயோத்தி மக்கள் இராமன் மீது அளவற்ற பக்தியையும், காதலையும் கொண்டிருந்தனர். இராமன் சிறுவனாக இருந்த பொழுதே

அவனை, மக்கள், தம் மன்னனாகவே விரும்பி ஏற்றுத் தம் உடல் பொருள் ஆவி அனைத்தையும் அவனுக்கு உரிமையாக்கிட விழைவு தெரிவித்தனர். "உண்ணும் நீரினும் மக்கள் இராமனையே பெரிதும் உவக்கின்றனர்" என்று வசிட்டர் கூறுகிறார். அயோத்தி இராம ராஜ்யமாக மாறும் நாளை எதிர்நோக்கியே மக்கள் வாழ்கின்றனர் என்றாலும்கூட, அது மிகைக் கூற்று அல்ல. இராமனுக்கு அரசுரிமை கிடைத்துவிட்டது என்பதை அறிந்த மக்களின் மகிழ்ச்சி எல்லை மீறுகிறது. முடி புனைய இராமன் செல்கின்றான் என்றறிந்தவுடன் மக்கள் எல்லையற்ற களிப்பில் ஆழ்ந்தவராய் எப்படியெல்லாம் உணர்ந்தார்கள் என்பதைப் பதினெட்டு பாடல்களில் உரைக்கிறான் கம்பன். அதில் ஒரு சிலவற்றை மட்டும் இங்குக் காணலாம்.

*"திரு மணி மகுடம் சூடச் சேவகன் செல்கின்றான் என்று,*
*ஒருவரின் ஒருவர் முந்த, காதலோடு உவகை உந்த,*
*இரு கையும் இரைத்து மொய்த்தார்; இன் உயிர் யார்க்கும் ஒன்றாய்ப்*
*பொரு அரு தேரில் செல்ல, புறத்திடைக் கண்டார் போல்வார்"*

*(அயோத்தியா - கைகேயி சூழ் வினை - 87)*

பொருள்: மகுடம் புனைவதற்குத் தேரில் இராமன் செல்கின்றான் என நினைந்து மக்கள் ஒருவரையொருவர் முந்தித் தள்ளிக் கொண்டு முனைந்து முயன்று அவனைக் காண்கின்றனர். அப்பொழுது தம் அனைவருடைய தனித்தனி உயிரும் மொத்தமாக இராமன் எனும் ஓருருக் கொண்டு புறத்தே போய்க் கொண்டிருப்பதாக உணர்கின்றனர்.

அடுத்து, தம் வாய் தந்தனவெல்லாம் கூறி வாழ்த்துகின்றனர் மக்கள்.

*" 'உய்ந்தது இவ்வுலகம்' என்பார்; 'ஊழி காண்கிற்பாய்' என்பார்;*
*'மைந்த! நீ கோடி எங்கள் வாழ்க்கை நாள் யாவும்' என்பார்;*
*'ஐந்து அவித்து அரிதின் செய்த தவம் உனக்கு ஆக' என்பார்;*
*'பைந்துழாய்த் தெரியலாய்க்கே நல் வினை பயக்க' என்பார்"*

*(அயோத்தியா - கைகேயி சூழ் வினை - 92)*

பொருள்: இராமன் முடி சூடுதலால் இவ்வுலகம் உய்ந்தது என்றும், 'இராமயுகம் தோன்றிவிட்டது' என்றும் மக்கள் வாழ்த்துகின்றனர். சிலர் "எங்கள் வாழ்நாளெல்லாம் சேர்த்து நீயே பெற்று வாழ்" என்கின்றனர். "ஐந்தவித்து யாம் பெற்ற தவத்தின் பயனெல்லாம் உனக்கே ஆகுக" என்று சிலரும், "நல் வினையனைத்தும் உனக்கே சேர்க" என்று சிலரும் இராமனை வாழ்த்துகின்றனர்.

மேலும் இத்தகைய செம்மலைத் தமக்கு அரசனாகத் தந்த தயரதனுக்கு நாம் என்ன கைம்மாறு செய்வது? என்று கேட்டுக் கொள்கின்றனர். 'காத்தல் தொழிலைச் செய்வதில் இவன் நாராயணனையே ஒப்பான்' என்கின்றனர் சிலர். 'இராமனது முந்தையோர் புகழெல்லாம் இனி இவனுடைய புகழைச் சார்ந்தே பேசப்படும்' என்கின்றனர் சிலர். மேலும் சிலர், எதையும் நினைக்கவும் கூறவும் தோன்றாமல், ஆனால் காரணம் எதுவுமின்றியே இராமன் பால் காதல் மீதூறக் கண்கள் நீர் சொரிய நிற்கின்றனர். இராமனை அரசனாகக் காண விழையும் மக்களின் மனநிலையை நாம் அறிந்து கொள்ள உளவியல் நோக்கில் ஒரு பாடலைக் கம்பன் எழுதுகிறான். இந்த ஒரு பாடலாலேயே அவன் "கவிமேரு" என உயர்ந்து நிற்கின்றான். மக்களில் பல்வேறு வயதினர் உள்ளனர். அவரவர்களுடைய வயது, பாலினம், இயல்பு ஆகியவற்றைக் கொண்டு ஒவ்வொருவரும் எவ்வாறு 'இராமனுக்கு அரசுரிமை' என்ற செய்தியை எதிர் கொண்டனர் என்பதை உளவியல் நோக்கில் மிக அருமையாக விளக்குகிறான் கம்பன் பின்வரும் பாடல் மூலம்.

*"மாதர்கள், கற்பின் மிக்கார்; கோசலை மனத்தை ஒத்தார்;*
*வேதியர் வசிட்டன் ஒத்தார்; வேறு உள மகளிர் எல்லாம்*
*சீதையை ஒத்தார்; அன்னாள் திருவினை ஒத்தாள்; அவ் ஊர்ச்*
*சாதுகை மாந்தர் எல்லாம் தயரதன் தன்னை ஒத்தார்"*

*(அயோத்தியா – கைகேயி சூழ் வினை – 70)*

பொருள்: 'இராமனுக்கு முடி சூட்டு விழா' என்றறிய வந்தபோது, மூத்த மகளிரும், கற்புடைய இல்லறத்துப் பெண்டிரும், கோசலையைப் போன்று, தம் மகனே முடிசூடப் பெறுவதாக எண்ணினர். வேதியர் அனைவரும் வசிட்டரைப் போன்று தம் மாணாக்கனே பெரும் பேறு பெறுவதாக எண்ணினர். மற்றும் இருந்த இளைய மகளிர் எல்லோரும் சீதையைப் போன்று மகிழ்ச்சியால் மனம் களித்தனர். சீதையோ இலக்குமியைப் போன்று தோன்றிப் பொலிந்தாள். வயதிலும் ஒழுக்கத்திலும் மிகுந்த ஆண்களோ தயரதனைப் போன்று மகிழ்ந்தனர்.

இவ்வாறு மக்கள் ஆங்காங்கே மனம் களித்தவாறு விழாவுக்கான அலங்கார வேலைகளில் ஈடுபட்டு மகிழ்ச்சிக் கடலில் நீந்துகின்றனர். இத்தகைய மக்கள் இராமன் பொன் முடி புனையாமல் சடா மகுடம் புனைகிறான் என அறிய வந்தால் அமைதியாக இருப்பார்களா என்ன?

அடுத்து, அயோத்தி அரசின் ஆளுகைக்குட்பட்ட மன்னர்களுடைய மனநிலை என்ன? அவர்களுடைய மகிழ்ச்சி நிறைந்த மனநிலையை 7 பாடல்கள் மூலம் கம்பன் விளக்குகிறான். அவற்றின் ஒட்டு மொத்த கருத்தைக் காணலாம்.

இராமன் அயோத்தி மன்னன் ஆகப் போவதை அறியும் மன்னர் குழாம், அமிழ்தம் அருந்தியவர்கள் போன்று களிப்பில் மூழ்கி, உள்ளத்து உவகையெல்லாம் உரோமக் கால்கள் வழியே வெளியாவது போல் உடல் சிலிர்த்து, உடலோடு விண்ணகம் அடைந்த தேவர் போல தம்மை உணர்ந்தனர். உலகம் அறத்தின் பாற்பட்டுவிட்டது என்று மகிழ்ந்தனர். அவர்கள் மனம் உணரும் உவகையை வெளியிடச் சொற்களின்றித் தடுமாறினர். மேலும்,

*" 'ஊருணி நிறையவும், உதவும் மாடு உயர்*
*பார் கெழு பயன்மரம் பழுத்தற்று ஆகவும்,*
*கார் மழை பொழியவும், கழனி பாய் நதி*
*வார் புனல் பெருகவும், மறுக்கின்றார்கள் யார்?' "*

*(அயோத்தியா - மந்திரம் - 81)*

என்று இராமராஜ்யத்தைத் தாம் வரவேற்கும் விதத்தைப் பற்பல உவமைகளால் விளக்குகின்றனர். இறுதியாக "இராமன் எவ்வாறு உலகத்து மன்னுயிர்களையெல்லாம் அன்பு பாராட்டுகின்றானோ அவ்வாறே அனைத்துயிர்களும் அவன்பால் அன்பு பாராட்டி அவனை விழைகின்றன" என்று கூறுகிறார்கள்.

இப்பொழுது இராமனுக்கு ஏற்பட்டுள்ள இக்கட்டான சூழலில் மன்னர்கள் அனைவரும் இராமனுக்காகப் போர் புரிந்து அரசுரிமையை வாளால் ஈட்டித் தரச் சித்தமாக இருப்பர் அல்லவா? இலக்குவனைப் பற்றிக் கூறவே தேவையில்லை. தன் வில் தொழிலால் இராமனுடைய எதிரிகள் அனைவரையும் அழித்து இராமனை மன்னனாக்குவதற்கு முனைந்து போர்க்கோலம் பூண்டு புறப்பட்டே விடுகிறான்! இத்தகைய சூழலில் ஒரு சான்றோன் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதற்குத் தன்னையே உதாரணமாக்கிக் காட்டுகிறான் இராமன். மேலும் 'ஒரு நல்ல அரசன் போரை விரும்புபவனாக இருக்கக் கூடாது' என்ற நல்லற போதனையை வசிட்டரிடமிருந்து இராமன் ஒரு சில கணங்களுக்கு முன்தான் பெறுகிறான். ............ இராமனுக்குரிய அரச நீதிகளை எடுத்துரைக்குமாறு மன்னன் தயரதன் வசிட்டருக்கு ஆ்ணையிடுகிறான். வசிட்டரும் நல்லுறுதிப் பொருள்களை இராமனுக்கு எடுத்துரைக்கிறார். அப்பொழுது அவருடைய அறிவுரையில் ஒரு நன்னெறி வெளிப்படுகிறது. அதுதான் மன்னர்கள் பொருத்தமான காரணங்களின்றி வெறும் புகழுக்காக மட்டுமே போரை விரும்பக் கூடாது என்பது. 'கூடிய வரையில் போர்ச் சூழலை ஒடுக்க வேண்டும்' என்று அறிவுரை கூறுகிறார். அதனால் புகழ் ஓங்கும் என்றும் கூறுகிறார் வசிட்டர்.

*" 'யாரொடும் பகை கொள்ளலன் என்ற பின்,*
*போர் ஒடுங்கும்; புகழ் ஒடுங்காது; தன்*
*தார் ஒடுங்கல் செல்லாது; அது தந்தபின்*
*வேரொடும் கெடல் வேண்டல் உண்டாகுமோ?' "*

*(அயோத்தியா - மந்தரை சூழ்ச்சி - 21)*

என்பது வசிட்டரின் அறிவுரை. வசிட்டரைப் போன்ற ஆன்றவிந்தடங்கிய கொள்கைச் சான்றோன் ஒருவன் மன்னனுக்குக் கூறும் மிகச் சிறந்த அறிவுரை இது என்பதில் ஐயமில்லை. ஒரு அரசனுக்குப் பகை ஏற்படக் காரணம் என்னவாக இருக்க முடியும்? சிந்தனையைத் தூண்டும் கேள்வி இது. மனித குலத்தின் நலத்துக்கே பகையாக இருப்பவை மண்ணாசை, பொன்னாசை, பெண்ணாசை என்ற மூன்று ஆசைகள் தாம். ஆட்சி புரியும் மன்னர்களுக்குக் கேடு விளைவிக்கும் தீய சக்திகள் அவையாகவே இருக்கும். அதிலும் அரசர்களுக்குக் கேடு சூழ வைப்பது பெரும்பாலும் மண்ணாசையே. தன்னுடைய ஆட்சிக்குட்பட்ட பகுதியை விரிவுப்படுத்திக் கொண்டே செல்ல வேண்டுமென்று எண்ணிச் செயல்படும்பொழுது அயல் நாட்டினரின் பகைமையைச் சம்பாதிக்க வேண்டியது அநேகமாக எல்லா மன்னர்களுக்கும் ஏற்படும் அனுபவம்தான். ஒரு நல்ல அரசனுக்கு அழகு தன் சாம்ராஜ்ய எல்லைகளை விரிவுபடுத்துவதுதான் என்ற கருத்தும் உண்டு. ஆயினும் பேரரசனுக்குரிய கடமைகளிலும் ஒரு நற்பண்பும் அறச்சாயலும் இருக்க வேண்டும். உதாரணமாக மக்களுடைய எல்லாத் தேவைகளும் பூர்த்தியாகியுள்ள நிலையில், "எல்லாரும் எல்லாப் பெருஞ்செல்வமும் எய்தி, இல்லாரும் இல்லை உடையாரும் இல்லை" என்ற வகையில் எல்லோரும் நல்வாழ்வு வாழும்பொழுது, தன் தோள்களின் தினவைத் தீர்ப்பதற்காகவே ஒரு மன்னன் அயல் நாட்டின் மேல் படையெடுத்து, அமைதியாக வாழும் இரு நாட்டு மக்களைப் பகைவர்களாக்கி, உயிர் வாழ்க்கையைக் குலைப்பது என்பதை ஒரு நல்ல அரச நீதி என்று ஏற்றுக் கொள்ள இயலாது. எனவே சிறந்த மன்னன் என்பவன் முதலில் மண்ணாசையை ஒழிக்க வேண்டும். மன்னர்களின் மண்ணாசையால் தான் இந்த நிலவுலகில் பகை தோன்றிப் போர்கள் புரியப்பட்டுள்ளன. எனவே பகைக்குக் காரணமான மண்ணாசை ஒழிந்தால் போர்கள் ஒடுங்கும் என்பது திண்ணம். இங்கே கம்பன், 'போர் ஒழியும்' என்று கூறவில்லை, 'போர் ஒடுங்கும்' என்றுதான் கூறுகிறான். அவசியமெனில் குலமானம் கருதியும், நாட்டு நலன் கருதியும், பகைவருடன் போர் புரிந்தே ஆக வேண்டும். அதுவே வீரம். அப்பொழுது ஆசை ஒழிப்புப் பற்றி பேசுவது கோழைத்தனமாகும். இந்தக் கருத்தை அடுத்து வரும் பாடலிலேயே வசிட்டர் மூலம் தெரிவிக்கிறான் கம்பன்.

*" 'கோளும் ஐம்பொறியும் குறைய, பொருள்*
*நாளும் உண்டு, நடுக்குறு நோன்மையின்*
*ஆளும் அவ்வரசே அரசு! அன்னது*
*வாளின் மேல் வரு மா தவம், மைந்தனே! "*
*(அயோத்தியா - மந்தரை சூழ்ச்சி - 22)*

பொருள்: பகைவர் நடுங்குறும்வண்ணம் வாளின் மேன்மையில் வீரம் தோன்ற நாடாளுவதே சிறப்பு. ஆனால் வீணான அகங்காரங்களாலும், மமகாரங்களாலும் நாமே பகையை உருவாக்கிக் கொள்வதைத் தடுத்து விட வேண்டும். பகையாக மாறுமுன்னமேயே, அத்தகைய சூழலை நட்புக்குரியதாக ஆக்கிவிட வேண்டும். இதனால் அரசனின் புகழ் ஓங்குமே தவிர குறையாது. இத்தகைய கருத்தை உள்ளடக்கியே போர் ஒடுங்கும்; புகழ் ஒடுங்காது என்கிறார் வசிட்டர்.

இத்தகைய நல்லுரையை மனம் கொள்ளும் இராமன் உடனடியாகவே அதனைச் செயலாக்கிக் காட்டுகிறான்... போர்க்குணத்தைக் காட்டக்கூடிய ஒவ்வொரு நிலையிலும் அதனைத் தவிர்க்கிறான். ........ தயரதன் இராமனை அழைத்து முந்துறத் தழுவி, முகமலர் ஒளி பெற

*" 'புனையும் மாமுடி புனைந்து, இந்த நல் அறம் புரக்க*
*நினையல் வேண்டும்; யான் நின்வயின் பெறுவது ஈது' "*
*(அயோத்தியா - மந்திரப் - 68)*

என்று கூறி, அயோத்தியின் அரசை இராமனுக்கு உரியதாக்குகின்றான்.

அயோத்தி அரசு எத்தகைய அரசு? அயோத்தி என்றாலே 'எவராலும் வெல்லப்படமுடியாத' என்பது பொருள். எனவே எவரும் பகை பாராட்ட விழையாத பேரரசு. எல்லா வளங்களும் நிரம்பிய நாடு. வானவர் துறக்கம் துறந்து வந்து வாழ்வதற்கு விரும்பும் நகரம் அயோத்தி நகரம் என்கிறான் கம்பன்.

*"எவ்வுலகத்தோர் யாவரும், தவம் செய்து ஏறுவான் ஆதரிக்கின்ற*
*அவ்வுலகத்தோர், இழிவதற்கு அருத்தி புரிகின்றது அயோத்தி மா நகரம்"*
*(பால - நகரப் - 1)*

கல்வியிலும், கலையிலும், பண்பிலும், அன்பிலும், அருளிலும் உயர்ந்தோங்கிய மக்கள் வாழும் இடம் அது. ஒழுக்கத்தை உயிரெனப் போற்றும்

குடிமக்கள் நிரம்பிய நாடு அது. அதை ஆள்வது எளிது! இன்பமானது! புகழுக்குரியது! தந்தையே தனயனுக்கு இசைவாக அரசை அளிக்கிறான். அந்தப் பரிசைக் கேட்டு இராமன் களிக் கூத்தாடினானா? இல்லை. ஆட்சி தனக்கா, பரதனுக்கா என்ற சிக்கல் அரசுரிமையைப் பெறும் நிகழ்ச்சியில் உள்ளது என்பதை அறிந்தவன் என்ற முறையில், இறுதியில் வெற்றி தனக்கே கிட்டியது என்று அகம் மகிழ்ந்தானா? இல்லை. அல்லது "அரசபாரம் என்பது பெருஞ்சுமை. இதை நான் விரும்பவில்லை. நீர் நலத்தோடு இருக்க எனக்கு எதற்கு இந்தப் பெருமை?" என்று கேட்பது போல அப்பரிசை மறுத்தானா? இல்லை. அரசன் ஒரு ஆணையை ஏவுகின்றான். அதனைச் செய்வதே குடிமகனின் கடமை என்பது அரசநீதியின் பாலபாடமாதலால், அரசனின் ஆணையை நிறைவேற்றுவது தன் கடன் என்ற மனப்பாங்கில், 'மன்னன் ஏவியதைச் செய்வேன்' என்று மட்டும் கூறி, அகன்று விடுகிறான். **தன் தந்தை விரும்பியது, வேண்டியது, விழைந்தது என்றெல்லாம் கூறாமல், 'கொற்றவன் ஏவியது' என்ற சொல்லைத்தான் இராகவன் பயன்படுத்துகிறான்.** தயரதன் தன் மீது இன்னுயிரை வைத்து வாழ்கிறான் என்பதை இராமன் அறிவான். தந்தைக்குத் தலைமகன்! முதல் பட்டத்தரசியின் முதல் மகன்! அரசாளும் அனைத்துத் தகுதிகளும் அவனுக்குண்டு. மக்களுடைய எல்லையில்லாத பக்திக்கும், காதலுக்கும் உரியவன். ஆனால் தன்னை மன்னனுடைய ஏவலைச் செய்யும் குடிமகனாகத்தான் எண்ணிக் கொள்கிறான். தன் வில்லாற்றலால் உலகையே வெல்லக்கூடிய ஆற்றல் வாய்ந்த நன்மகன், அரசை தந்தை தனக்களித்த பொழுது சிந்தை களி கூர்ந்து சித்தம் தடுமாறி நிற்கவில்லை. மனச் சீர்மையோடு அமைதியாக இருக்கிறான்.

அடுத்து ஒரு நிகழ்ச்சி நடக்கிறது. தந்தை தன்னை முந்துறத் தழுவி முடியரசு வழங்கிய சில நாழிகைக்குள்ளே தாய் ஆணையிடுகிறாள்

*" 'ஆழி சூழ் உலகம் எல்லாம் பரதனே ஆள, நீ போய்,*
*தாழ் இருஞ் சடைகள் தாங்கி, தாங்க அருந்தவம் மேற்கொண்டு*
*பூழி வெங்கானம் நண்ணி, புண்ணியத் துறைகள் ஆடி,*
*ஏழு இரண்டாண்டின் வா' என்று இயம்பினான் அரசன் என்றாள்".*

*(அயோத்தியா – கைகேயி சூழ் வினை – 11)*

அப்பொழுது அவனது எதிர் வினை எப்படி இருந்தது? கம்பன் எழுதுகிறான் கவிதைகளுக்கெல்லாம் மகுடமாக விளங்கும் ஒரு கவிதையை இங்கே:

*"இப்பொழுது எம்மனோரால் இயம்புதற்கு எளிதே? யாரும்*
*செப்ப அருங்குணத்து இராமன் திருமுகச் செவ்வி நோக்கின்;*
*ஒப்பதே முன்பு பின்பு; அவ் வாசகம் உணரக் கேட்ட*
*அப் பொழுது, அலர்ந்த செந்தாமரையினை வென்றது அம்மா!"*
*(அயோத்தியா – கைகேயி சூழ் வினை – 112)*

நாடாள்வதும், காடாள்வதும் ஒரேவித பயனையே தனக்குத் தரும் என்பதுபோல் அன்றலர்ந்த செந்தாமரையின் அழகையும், ஒளியையும் விஞ்சும் திருமுகப் பொலிவு தோன்ற விளங்கினான் இராமன்.

அடுத்தும் ஒரு பாடல் எழுதுகிறான் கம்பன். இவ்விடத்துக்கு மிக முக்கியமான பாடல். இராமன் மண்ணாசை இல்லாதவன் என்பது மட்டுமல்ல. அதைப் பெருஞ்சுமையாகவே இதுவரை கருதியிருந்திருக்கிறான். அந்தச் சுமை கைகேயியின் ஆணையால் நீங்கப் பெற்றதும் நோய் தீர்ந்தவன் போன்று உணர்ந்தான் என்கிறான் கம்பன்.

*"தெருளுடை மனத்து மன்னன் ஏவலின் திறம்ப அஞ்சி,*
*இருளுடை உலகம் தாங்கும் இன்னலுக்கு இயைந்து நின்றான்,*
*உருளுடைச் சகடம் பூண்ட, உடையவன் உய்த்த கார் ஏறு*
*அருளுடை ஒருவன் நீக்க, அப்பிணி அவிழ்ந்தது ஒத்தான்"*
*(அயோத்தியா – கைகேயி சூழ் வினை – 113)*

பொருள்: மன்னன் தயரதன், "நீ முடி சூடி அயோத்தி ஆள்க" என்று இட்ட ஆணையை மறுக்க இயலாமல் (தனக்கு உரிமையில்லாத) இருள் நிறைந்த இவ்வரசை ஏற்கும் இன்னலுக்கு ஆட்பட்டு இதுகாறும் மனச் சுமையோடு இருந்த இராமன் அன்னை கைகேயி, "பரதன் நாடாள நீ காடேக வேண்டும்" என்று கூறிய சொற்களைச் செவியுற்ற பொழுதில் உருளும் சகடம் பூண்ட வண்டியில் பூட்டப்பட்ட காளை மாடு ஒன்றை, அருள் மனம் கொண்ட ஒருவன் வண்டியினின்றும் அவிழ்த்து விட்டால் அது எந்த அளவுக்கு மகிழ்ச்சியடையுமோ அத்தகைய மகிழ்ச்சியை இராமன் அடைந்தான். (எனவே கைகேயி தானறியாமலேயே தனக்கு அருளுள்ளத்தோடு நன்மை புரிந்ததாக எண்ணி மனத்துள் அவளைத் தன் தெய்வம் என்று போற்றுகின்றான்).

தான் அயோத்தியில் தாமதிக்கும் ஒவ்வொரு கணமும் நாட்டில் குழப்பம் ஏற்படுவதற்கு ஏதுவான கணம் என்பதை உணரும் இராமன், உடனடியாகக் கானகம்

செல்லும் ஆயத்தங்களில் ஈடுபடுகிறான். தாய் கைகேயியிடம் உடனடியாக விடை பெறுகிறான். தாய் கோசலையிடம் அவள் மனம் நோகாதபடிக்கும், அவளே போர்க்குணம் கொள்ளாதபடிக்கும் மிகவும் சாமர்த்தியமாகச் செய்தியை எடுத்துரைக்கிறான். அப்பொழுது கைகேயியிடமோ, பரதனிடமோ தனக்கு வருத்தமில்லை என்பதைக் குறிப்பால் உணர்த்த "பங்கமில் குணத்துத் தம்பி பரதனே துங்க மாமுடி சூடுகின்றான்" என்கிறான். போர்க்கோலம் பூணும் இலக்குவனை அறச் சொற்களால் அமைதிப்படுத்துகிறான். சீதையிடம், "இதோ இங்கேயிருக்கும் கானகம் சென்று, கண்டு மீண்டு வந்துவிடுவேன்" என்று அது ஒரு செய்தியே இல்லை என்பது போல் கூறுகிறான். கானகம் செல்லும் தன்னைப் பின்தொடரும் மக்களிடம் உரையாடல் எதுவும் செய்வதைத் தவிர்க்கிறான். மன்னர்கள், படை வீரர்கள் என்று எவரும் தன்னை அண்டிச் சந்தித்துவிடாத படிக்கு எத்துணை விரைவில் அயோத்தியை விட்டு நீங்க முடியுமோ அத்துணை விரைவில் நீங்குகிறான். அயோத்திக்கே தான் திரும்பிப் போய்விட்டதாக மக்களுக்குப் போக்கு காட்டி விட்டுக் கானகம் செல்கிறான். அதுமட்டுமல்ல, தான் அயோத்தியை நீங்கிய பிறகும்கூட அங்கே குழப்பம் உண்டாகாதவாறு காக்க வேண்டும் என்பதற்காகச் சுமந்திரனிடம் தன்னைப் போன்று அனைவரும் அறத்தின் பக்கமே நிற்க வேண்டும் என்று அறிவுறுத்துகிறான் என்பது போற்றுதலுக்குரியது. இங்கு அறம் என்று இராமன் எச்செயலைக் குறிப்பிடுகின்றான் என்பதைப் பார்க்க வேண்டும். உரிமையுடைய பரதன் அரசாள, அவனுக்கு உறுதுணையாகச் சுமந்திரன் செயலாற்ற வேண்டியதே அறம் என்பதை வலியுறுத்துகிறான். மக்களைத் திசை திருப்புவதற்குத் தன்னோடு இணக்கமாகச் சுமந்திரன் ஒத்துழைத்த போதிலும், இராமனைக் கங்கைக் கரையில் விட்டு விட்டுத் தான் மட்டும் அயோத்திக்கு மீண்டு செல்ல மறுத்து அழுது தொழுது நிற்கிறான் சுமந்திரன். இத்தகைய மனநிலையோடு சுமந்திரன் அயோத்திக்குச் சென்றால் அங்கே குழப்பம் ஏற்படச் சுமந்திரனே கூட காரணமாகிவிடக் கூடும் என்று உணர்ந்து அவனுக்கு அறத்தின் உயர்வை முதலில் எடுத்துக் கூறுகிறான் இராமன். தன்பால் அன்பு கனிந்து நெக்குருகி நிற்கும் சுமந்திரனைத் தன் தடக் கைகளால் எடுத்து, அவனைத் தழுவி, கண்களினின்றும் பெருகியோடும் கண்ணீரைத் துடைத்து, அவனைத் தன் பக்கத்தில் அமர வைத்துக் கூறுகிறான்

*" 'இறப்பினும் திரு எலாம் இழப்ப எய்தினும்*
*துறப்பிலர் அறம் எனல் சூரர் ஆவதே' ...."*

*(அயோத்தியா – தைலம் ஆட்டு – 29)*

அதாவது சூரத்தனம் (வீரம்) என்பது அறத்தைப் பற்றி ஒழுகுதலே என்கிறான் இராமன். மேலும், இரவி குலத்தின் அறப்பெருமைக்குத் தன்னால் ஊறு நேரலாகாது என்கிறான்.

*" 'வான் பிறங்கிய புகழ் மன்னர் தொல்குலம்,*
*யான் பிறந்து, அறத்தினின்று இழுக்கிற்று என்னவோ?' –"*
*(அயோத்தியா – தைலம் ஆட்டு – 30)*

மேலும் இன்பம் துன்பம் ஆகிய இரு அனுபவங்களின்பொழுதும் மனிதன் பற்றி நிற்க வேண்டியது அறம் ஒன்றே என்கிறான்.

*" 'முன்பு நின்று இசை நிறீஇ, முடிவு முற்றிய*
*பின்பும் நின்று உறுதியைப் பயக்கும் பேரறம்*
*இன்பம் வந்து உறும் எனின் இனிது; ஆயிடைத்*
*துன்பம் வந்து உறும் எனின் துறக்கல் ஆகுமோ?' "*
*(அயோத்தியா – தைலம் ஆட்டு – 28)*

இவ்வாறு அறத்தின் மேன்மைகளையெல்லாம் பற்றிக் கூறி 'மன்னவன் தயரதனுக்கு என்னுடைய இத்தகைய சிந்தனையை உணர்த்தி அமைதிப் படுத்துக' என்றும் சுமந்திரனிடம் வேண்டுகிறான். அறத்தின் பெருமைகளைப் பட்டியலிடும் இராமனை இவ்விடத்தில் கம்பன் இறை வடிவமாகவே காண்கிறான்.

*"அடக்கும் ஐம் பொறியொடு கரணத்து அப் புறம்*
*கடக்கும் வால் உணர்வினுக்கு அணுகும் காட்சியான்"*
*(அயோத்தியா – தைலம் ஆட்டு – 26)*

என்கிறான்.

"மனம் மொழி மெய்களால் அறிய இயலாது உயர்ந்த ஆன்மீக அனுபவ அறிவினால் மட்டுமே அணுகப்படக்கூடிய இறைவன்" என்று அற உபதேசம் செய்யும் இராமனைப் பற்றி இங்குக் குறிப்பிடுகிறான் கம்பன்.

காப்பியத்தின் பிற்பகுதியில், கிட்கிந்தா காண்டத்தில், இராமன் சுக்ரீவனுக்கு முடி சூட்டும் பொழுது அவனுக்குச் சில நல்லுரைகள் கூறுகிறான். அப்பொழுது, பகைவரையும் நண்பராக்கிக் கொள்வது தான் ஒரு நல்ல அரசனுக்கு அழகு என்பதை முதல் கருத்தாகக் கூறுகிறான்.

*" 'பகையுடைச் சிந்தையார்க்கும், பயன்உறு பண்பின் தீரா*
*நகையுடை முகத்தை ஆகி, இன்உரை நல்கு, நாவால்' "*
*(கிட்கிந்தா – அரசியல் – 9)*

'அறநெறி முதற்றே அரசின் கொற்றம்' என்பது மட்டுமின்றி மனிதனுக்கும், மானுட வாழ்வுக்கும் உறுதி பயப்பது அறமே என்பது விளங்க மேலும் கூறுவான்:

*" 'புறத்து இனி உரைப்பது என்ன? பூவின் மேல் புனிதற்கேனும்*
*அறத்தினது இறுதி, வாழ்நாட்கு இறுதி; அஃது உறுதி, அன்ப!' "*
*(கிட்கிந்தா – அரசியல் – 15)*

என்று இராமன் கூறுவது நோக்குக.

அடுத்து, இராவணனோடு போர் தொடுக்கும் முன்பும் கூட, வாலியின் மகன் அங்கதனைத் தூதுவனாக்கிப் போரைத் தவிர்க்கவே எண்ணுகிறான் இராமன். அது குறித்து வீடணனிடம் பேசுகிறான். "சீதையைத் தன்னிடம் ஒப்படைத்து விட்டால் போர் இல்லை; இன்றேல் போர் புரிதலே தனக்குக் கடமையாகும் என்பதை இராவணனுக்குக் கூறத் தூதுவன் ஒருவனை அனுப்பக் கருதியுள்ளேன்" என்கிறான் இராமன். இந்நிகழ்ச்சியைப் பற்றிக் கூறும் கம்பன், இத்தகைய முடிவை எடுத்ததனால் கருணையின் நிலயம் போன்றவனானான் இராமன் என்கிறான்.

*'தூதுவன் ஒருவன் தன்னை இவ் வழி விரைவில் தூண்டி,*
*"மாதினை விடுதியோ?" என்று உணர்த்தவே, 'மறுக்கும் ஆகின்,*
*காதுதல் கடன் என்று உள்ளம் கருதியது; அறனும் அஃதே ;*
*நீதியும் அஃதே' என்றான் – கருணையின் நிலயம் அன்னான்*
*(யுத்த – அங்கதன் தூது – 2)*

இதற்கு மாற்றம் உரைக்கும், வீடணனும் "இத்தகைய இரக்கச் செயல் அரசனுக்குரிய பண்பு" என்றே போற்றுகின்றான்.

*"அரக்கர் கோன் அதனைக் கேட்டான், 'அழகிற்றே ஆகும்' என்றான் ;*
*"இரக்கமது இழுக்கம்" என்றான் ............."*
*(யுத்த – அங்கதன் தூது – 3)*

ஆனால் இராமனது இத்தகைய அணுகுமுறையை வீடணன் புகழும்பொழுது இலக்குவனோ, அதனை ஏற்காமல் முரண்படுகிறான். இராவணன் மேல் உடனடியாகப் போர் புரிதலுக்குரிய காரணங்களைப் பட்டியலிடுகிறான்.

*" 'தேசியைச் சிறையில் வைத்தான்; தேவரை இடுக்கண் செய்தான்;*
*பூசுரர்க்கு அலக்கண் ஈந்தான்; மன்னுயிர் புடைத்துத் தின்றான்;*
*ஆசையின் அளவும், எல்லா உலகமும் தானே ஆள்வான்,*
*வாசவன் திருவும் கொண்டான்; வழி அலா வழி மேல் செல்வான்' "*
*(யுத்த - அங்கதன் தூது - 4)*

*" 'வாழியாய்! நின்னை அன்று வரம்பு அறு துயரின் வைக,*
*சூழவு இலா மாயம் செய்து, உன் துணைவியைப் பிரிவு சூழ்ந்தான்;*
*ஏழை பால் இரக்கம் நோக்கி, ஒரு தனி இகல் மேல் சென்ற,*
*ஊழி காண்கிற்கும் வாழ்நாள், உந்தையை உயிர் பண்டு உண்டான்' "*
*(யுத்த - அங்கதன் தூது - 5)*

*" 'அன்னவன்தனக்கு, மாதை விடில், உயிர் அருளுவாயேல்,*
*"என்னுடை நாமம் நிற்கும் அளவு எலாம் இலங்கை மூதூர்*
*மன்னவன் நீயே" என்று, வந்து அடைந்தவற்கு வாயால்*
*சொன்ன சொல் என் ஆம்? முன்னம் சூளுரை என் ஆம்? - தோன்றால்!' "*
*(யுத்த - அங்கதன் தூது - 6)*

*" 'அறம் தரு தவத்தை ஆயும் அழிவினால், அவற்றை முற்றும்*
*மறந்தனை எனினும், மற்று இவ் இலங்கையின் வளமை நோக்கி,*
*"இறந்து இது போதல் தீது" என்று இரங்கினை எனினும் எண்ணின்,*
*சிறந்தது போரே' என்றான், சேவகன் முறுவல் செய்தான்."*
*(யுத்த - அங்கதன் தூது - 7)*

எனவே, "எந்தக் கோணத்திலிருந்து பார்த்தாலும் போர் புரிவதே சிறந்தது. எனவே தூது விடுத்தல் பகையை ஒடுக்க நினைத்தல் ஏற்புடையதாகாது" என்கிறான் இளையோன்.

இலக்குவனின் கருத்துகளைக் கேட்ட இராமன் இளம் முறுவல் செய்தவாறே "இலக்குவ! நீ பதற்றமடைய வேண்டாம். உன்னுடைய முடிவுதான் என்னுடைய முடிவும். ஆயினும் அரசர்க்குரிய போர் முறைப் பண்புகள் என்று நீதி நூல்கள் புகலும் அறத்தைப் புறந்தள்ளுதல் அழகல்லவே? இன்னா செய்தவராயினும் இயன்றவரை அவர்களைப் பொறுத்து வாழ்தலே புகழுக்குரிய செய்கை" என்கிறான்.

காப்பியப்பாடல்,

*"அயர்த்திலென்; முடிவும் அஃதே, ஆயினும், அறிஞர் ஆய்ந்த*
*நயத் துறை நூலின் நீதி நாம் துறந்து அமைதல் நன்றோ?*
*புயத் துறை வலியரேனும், பொறையொடும் பொருந்தி வாழ்தல்*
*சயத் துறை, அறனும் அஃதே என்று இவை சமையச் சொன்னான்"*

*(யுத்த – அங்கதன் தூது – 8)*

இத்தகைய கருத்துக்களை இராமனின் அறிவில் பதித்தவர் வசிட்டர். வசிட்டரின் அறிவுரைக்கிணங்க, தவிர்க்க இயலாத சூழலில் போர் புரிதலும், தவிர்க்கக்கூடிய சூழலில் போரை மறுத்தலுமே நல்லரசனுக்குரிய நற்பண்பு ஆகும் என்றும், போரை ஒடுக்க எண்ணுவதன் மூலமாக மட்டுமே புகழை ஓங்கி வளர்க்க முடியும் என்றும், இராமன் கருதினான் என்பதற்கு இதைவிட வேறு சான்றுகளே வேண்டாம் என்று துணியலாம்.

ஆக, ஒவ்வொருவர் மனநிலைக்கேற்ப அவரவர்களிடம் உரையாடி, தான் வனம் புகுந்த பின்பும் அயோத்தியில் குழப்பமோ, போர்ச்சூழலோ உருவாகி விடாதபடிக்கு, அயோத்தி நகரை நீங்கும் முன்பு வினையாற்றுகிறான் இராமன். எனவே வசிட்டர் கூறியதற்கொப்ப இராமனுடைய அறச்சார்பு நிலையால் – போர்க்குணம் அற்ற நிலையால் – அயோத்தியில் போர் ஒடுங்கியது – ஆனால் இராமனுடைய புகழ் ஒடுங்கிவிடவில்லை. மாறாக ஓங்கியது. காவியம் ஆகியது. உலகம் உள்ளளவும் நிலைத்து நிற்கும் புகழாக அவன் சரிதம் நிலைத்தது.

இராமன் ஒரு வீரன். இள வயதிலேயே இராமனுடைய வீரம் வெளிப்பட்டு நிற்கிறது. எவராலும் வளைக்க முடியாத சிவ தனுசை இராமன் ஒடித்தே விடுகிறான். எவராலும் வெல்ல இயலாத பரசு இராமனைச் சிறு வயதில் வெல்கிறான். எவராலும் தொலைக்க இயலாத தாடகையை அழிக்கிறான். வெற்றியை விளைவிக்கும் விற்றிறம் பெற்ற இராமன் தனக்குத் தகுதியிருந்தும் அரசுரிமையைத் துறந்து, "மன்னவன் பணியன்றாகின் நும்பணி மறுப்பனோ? – என் பின்னவன் பெற்ற செல்வம் அடியனேன் பெற்றது அன்றோ?"என்று கூறி வனம் ஏகுவானேயானால், அவன் போர் மேகங்கள் சூழக்கூடிய ஒரு அரசியல் சூழலில் போரை ஒடுக்க வேண்டியே அவன் அவ்வாறு செயல்படுகிறான் என்பது தெளிவு. மேலும் இச்செய்தி வெளிப்பட்டு வேறு எவரேனும் தீச்செயல் புரிய, அது தன்னால் தூண்டப்பட்டதாக ஆகிவிடக் கூடாது என்ற முன்னெச்சரிக்கை உணர்வோடு அன்னையிடம், "கானகம் செல்ல இப்பொழுதே விடை பெற்றுக் கொண்டேன்" என்று கூறுகிறான். அவ்வாறே செயல்படுகிறான்.

எனவே இராமன் நினைத்திருந்தால் துவாபர யுகத்தில் நிகழ்ந்த மகாபாரதப் போருக்கு முன்னால் திரேதா யுகத்திலேயே ஒரு அரசுரிமைப் போரைத் தன் உடன்பிறப்புக்களிடையே உருவாக்கியிருக்க முடியும். ஆனால் அத்தகைய சூழலைத் தவிர்ப்பதோடு வனவாழ்வு தனக்குற்ற பெரும் செல்வம் என்றும் கூறுகிறான். இராமன் இடர் சூழ்ந்த வன வாழ்க்கைக்கு எவ்வாறு ஈடு கொடுப்பான் என்று அஞ்சும் கோசலையிடம்,

*" 'சித்தம் நீ திகைக்கின்றது என்? தேவரும்*
*ஒத்த மா தவம் செய்து உயர்ந்தார் அன்றே?*
*எத்தனைக்கு உள ஆண்டுகள்? ஈண்டு அவை*
*பத்தும் நாலும் பகல் அலவோ? என்றான்' "*

*(அயோத்தியா - நகர் நீங்கு - 21)*

*"மா தவர்க்கு வழிபாடு இழைத்து, அரும்*
*போதம் முற்றி, பொரு அரு விஞ்சைகள்*
*ஏதம் அற்றன தாங்கி, இமையவர்*
*காதல் பெற்று இந் நகர் (யான்) வரக் காண்டியால்"*

*(அயோத்தியா - நகர் நீங்கு - 23)*

என்று கூறுகிறான். அதாவது "இப்பொழுது உள்ளதைவிட தவ வலிமையும், ஞானமும் தேவர்களுடைய அன்பும் பெற்று மிக்க புகழுடன் அயோத்தி மீள்வேன்" என்று கூறித் துன்பத்தையும் இன்பமான நிலையாக்கிப் பிறர்க்குக் கூறுகிறான்.

அனைத்து வகையிலும், தனக்குச் சாதகமாகவே அயோத்தியில் அரசியல் சூழ்நிலை இருந்தாலும் இராமன் அறத்தின் மூர்த்தியாகவே முடிவுகளை எடுக்கிறான் என்பதை அறியும் பொழுதுதான் அவனுடைய செப்பருங்குணத்து மேன்மைகளை நாம் உணர முடியும்.

⌘ ⌘ ⌘

# நியாயத்தின் நிலயம் இராமன்

தான் வனமேகும் காரணத்தால் தன் தந்தைக்கும், தாய் நாட்டுக்கும், அரசுக்கும் எவ்விதமான ஆபத்தும் ஏற்பட்டு விடக் கூடாதென்று ஒவ்வொரு செயலையும் சிந்தித்துச் செயல் ஆக்குகிறான் இராமன். தான் வனம் சென்ற பிறகும் போர்ச் சூழல் எதுவும் உருவாகி விடக்கூடாதென்றும் நினைந்து செயலாற்றுகிறான். அதே சமயத்தில், தான் பதினான்காண்டுகள் வனவாசம் செய்வதன் மூலமாக மட்டுமே தனக்குற்ற பழியைத் தீர்த்துக் கொள்வதோடு தன் தந்தைக்கு ஏற்பட்ட துயரத்தையும் தீர்க்க முடியும் என்று மனதார நம்புகிறான் இராமன். இராமனின் இத்தகைய எண்ணத்துக்குச் சான்றாகக் கம்பன் யுத்த காண்டத்தில் ஒரு காட்சி அமைக்கிறான்.

...... உலகமெலாம் தொழுதேத்த நிற்கும் இராமனே தான் இதுகாறும் கட்டிக் காத்த அரசுக்கு உரிமையுடையவனாக வேண்டும் என்பது தயரதனுடைய தணியாத விருப்பம். அவனுடைய அந்த விருப்பம் நிறைவேறத் தகுதியான சூழ்நிலையை இராமன் பதினான்காண்டுகளுக்குப் பிறகு ஏற்படுத்திக் கொடுக்கிறான். இராவண வதம் நிகழ்ந்து முடியும் பொழுது பதினான்காண்டு வனவாச காலமும் முடிந்து போகிறது. இராமன் தன் தந்தையின் விருப்பத்தின்படி அயோத்திக்குச் சென்று முடி புனைந்து அரசாளும் நாளும் வந்துவிட்டது. இவ்விடத்தில் விண்ணுலகில் அமரனாக வாழும் தயரதன் விண்ணிலிருந்து இறங்கி மண்ணுலகத்துக்கு வருவதாகக் காட்சி அமைக்கிறான் கம்பன். தயரதன் தன் காதல் திருமகனைக் கட்டித் தழுவிக் களிப்புற்ற பிறகு கூறுகிறான்.

*"அன்று கேகயன் மகள் கொண்ட வரம் எனும் அயில் வேல்*
*இன்றுகாறும் என் இதயத்தி னிடை நின்றது; என்னைக்*
*கொன்று நீங்கலது, இப்பொழுது அகன்றது, உன் குலப் பூண்*
*மன்றல் ஆகம் ஆம் காந்த மா மணி இன்று வாங்க"*

*(யுத்த – மீட்சி – 117)*

பொருள்: நீ அரசாள வேண்டும் என்ற என் விருப்பத்தை மறுத்து, ஒரு வரத்தின் மூலமாக உன்னைக் காடேக வைத்து அன்று ஒரு நாள் கேகயன் மகள் (என் மனைவி கைகேயி என்று கூறாததை நோக்குக) என் நெஞ்சில் இரும்பாலாகிய வேல் கொண்டு குத்தினாள். நான் இறந்தும் கூட அந்த வேல் என் நெஞ்சைவிட்டு நீங்கவில்லை. இன்று வெற்றி வாகை சூடிப் புகழ் என்னும் காந்த சக்தியால் நிறைந்துள்ள உன் (இராமனின்) மார்பைத் தழுவிய பொழுது, உன்னுடைய அந்த மனக் காந்தமானது இரும்பிலான வேலை ஈர்த்து வெளியில் எடுத்துவிட்டது!

அமரனாகிவிட்ட தயரதன் உடலும் உயிருமாய் மண்ணுலகம் போந்து இராமனிடம் உரையாடுவது போன்ற அறிவியலுக்கு ஒவ்வாத இத்தகைய காட்சிகள் அமைக்கலாமா? கவிஞனுக்குக் கற்பனைச் சுதந்திரம் உண்டு என்றாலும், அதற்கும் ஓர் எல்லை வேண்டாமா? இத்தகைய கேள்விகளைக் கேட்பவர்களும் உண்டு.

இந்தக் காட்சியில் சம்பந்தப்பட்டவர்கள் தயரதனும் இராமனும் மட்டுமே. **இருவருக்குமிடையேயான மானசீக உறவைத்தான் கம்பன் தன் கற்பனைக்கு வடிவமும் உயிரும் கொடுத்து இவ்வாறு சித்திரிக்கிறான் என்று கொள்ள வேண்டும்.**

இராமன் தன் மனதுக்குள் எடுத்துக் கொண்ட உறுதிப்படி, பதினான்காண்டு காலம் வனவாசம் செய்து முடிப்பதன் மூலமாகத்தான், தந்தைக்குப் பழியில்லாமல் செய்து, தயரதனின் தகுதியுடைய மகன் என்ற நிலையைத் தான் அடைய முடியும் என்று நினைக்கிறான். மேலும், 'அரசுரிமை பெறுக' என்று தயரதன் கூறியபொழுது, 'அரசன் ஆணையிடுகிறான்; அதை ஏற்று நிறைவேற்றுவது என் கடமை!' என்று நியாயத்தைப் புறந்தள்ளிவிட்டுத் தந்தையின் குற்றத்தில் பங்கு பெற்ற தன் தவற்றுக்கும் இப்பொழுது கழுவாய் தேடிக் கொண்டு விட்டான். இப்பொழுது இராமனின் தார்மீக பலம் கூடியுள்ளது. அத்துடன் இன்று ஒரு பகை முடித்து அயோத்தியை அரசாளும் தன் தகுதியை நிருபித்தும் புகழ் பெற்றுள்ளான். அதிலும் எத்தகையதொரு பகை முடித்தான்? **"முக்கோடி வாழ்நாளும் முயன்று உடைய பெருந்தவமும் எக்காலும் யாராலும் வெல்லப்படான் என்ற வரமும்"** பெற்ற, **இமையவர்களும் அஞ்சி நடுங்கி ஏவலுக்கு நின்ற மாவீரன் இராவணனைச் சில ஆயிரம் வானரங்களை வைத்துக் கொண்டு வெற்றி பெற்றான்.** இதன் மூலம், தான் அற வலிமையோடு மற வலிமையும் கொண்ட ஒரு மன்னன் என்பதையும் இராமன் உலகத்துக்கு நிரூபித்துவிட்டான். தகுதியுடைய பகைவனை வென்று தகுதியுடைய வேந்தனாக அயோத்திக்குத் தான் சென்று முறைப்படி முடிசூடப் போகிறான். மரபு

ரீதியாகத் தயரதனிடமிருந்து அரசுரிமை பெறுவதோடு, பல வழிகளிலும் தன்னுடைய தகுதியை நிருபித்துத் தன் தந்தையின் விருப்பத்தை நிறைவேற்றி வைக்கப்போகும் தன் நிலையைக் குறித்து மிகுந்த மன நிறைவு கொள்கிறான். அதாவது தயரதனின் விருப்பப்படி இனி தான் அயோத்தி அரசனாக முடிசூட்டிக் கொள்ளத் தடை எதுவும் இல்லை என்ற நிலையை உருவாக்கித் தன் தந்தையின் ஆன்மாவைச் சாந்தியடையச் செய்துவிட்டான் என்ற கருத்தை விளக்கவே கம்பன் கற்பனையாக இத்தகையதொரு காட்சியை அமைக்கிறான் என்று கற்போர் புரிந்து கொள்ளுதல் வேண்டும்.

மேலும் ஒரு நிகழ்ச்சியை விளக்குதல் நலம். இராமன் தன்னுடைய தந்தை, தன் பால் கொண்ட கரைகாணாக் காதலால் அறக்கடவுளுக்கு ஏற்படுத்திய ஊறு, தொடர்ந்து நின்று நிலைத்துவிடாதபடிக்குப் புகழுக்குரிய மற்றொரு செயலையும் செய்கிறான் இராமன். தந்தை தயரதன் தாய் கைகேயியின்பால் கொண்ட ஆற்றொணாச் சினத்தை ஆற்றுவிக்கிறான். **'கைகேயி தன் மனைவியல்லள்; பரதன் தன் மகனுமல்லன்' என்று கூறி உறவைத் துறந்து வானுலகடைந்த தயரதன், அவ்விருவரையும் தன் உறவினரே என்று ஏற்றுக் கொள்ளச் செய்கிறான்.** இக்கருத்தை விளக்குவதற்கு அயோத்தியா காண்டத்து நிகழ்ச்சி ஒன்றுக்கு நாம் பயணம் செய்ய வேண்டும்.

....... பதினான்காண்டுகளுக்கு முன்னர் கைகேயியின் உறவைத் துறந்துவிட்டே தயரதன் தன் மண்ணுலக வாழ்வை நீக்குகிறான்... சம்பாசுர யுத்தத்தின் போது தயரதன் கொடுத்த இரு வரங்களில் ஒன்றின் மூலம் பரதன் நாடாளும் வரத்தைப் பெறுகிறாள் கைகேயி. முதிர்ந்து முற்றிய வாக்குவாதத்திற்குப் பிறகு முதல் வரத்தைக் கைகேயியிக்குக் கொடுத்த பின் 'இராமன் காடேக வேண்டும் என்ற இரண்டாவது வரத்தைக் கேட்க வேண்டாம்' என்று மனைவியிடம் மன்றாடுகிறான் தயரதன். கைகேயி சற்றும் மனம் இரங்காமல் மீண்டும் மீண்டும் இரண்டாவது வரத்தைக் கேட்கிறாள். கணவனுடைய விருப்பத்திற்கு மாறாக நடக்கும் மனைவியாகவும், தன்னைக் கொல்ல வந்த கூற்றுவனாகவும் கைகேயி தயரதனுக்குக் காட்சியளிக்கிறாள். இராமனைப் பிரிந்தால் தன்னுயிர் உடலில் தங்காது என்றும், தன்னுயிருக்கு அபயம் தருமாறும் உயிர்ப் பிச்சையும் கேட்கிறான் தயரதன்!

*"நின் மகன் ஆள்வான்; நீ இனிது ஆள்வாய்; நிலம் எல்லாம்*
*உன் வயம் ஆமே ஆளுதி தந்தேன்; உரை குன்றேன்;*
*என் மகன், என் கண், என் உயிர், எல்லா உயிர்கட்கும்*
*நன் மகன், இந்த நாடு இறவாமை நய என்றான்"*

*(அயோத்தியா – கைகேயி சூழ் வினை – 36)*

*"மெய்யே ; என்றன் வேர் அற நூறும் வினை நோக்கி*
*நையா நின்றேன்; நாவும் உலர்ந்தேன்; நளினம்போல்*
*கையான், இன்று, என் கண் எதிர் நின்றும் கழிவானேல்*
*உய்யேன்; நங்காய்! உன் அபயம் என் உயிர் என்றான்"*

*(அயோத்தியா – கைகேயி சூழ் வினை 37)*

ஆனால் கைகேயி அவனுடைய இறைஞ்சுதலைப் புறந்தள்ளுகிறாள்.

*" 'சரம் தாழ் வில்லாய்! தந்த வரத்தை, "தவிர்க" என்றல்,*
*உரம்தான் அல்லால், நல் அறம் ஆமோ? உரை' "*

*(அயோத்தியா – கைகேயி சூழ்வினை – 38)*

என்கிறாள் கைகேயி.

சொற்கணை ஏவி, தன் ஆவியைத் துளைத்துப் புண்ணாக்கும் தன் மனைவியைத் தீயினும் மிக்க தீயாளாகக் காண்கிறான் தயரதன். விண்ணோரையும் வென்று புகழ் வாகை சூடிய தனக்குத் தன் மனையிலேயே வாழும் பெண்ணால் ஏற்பட்ட துன்பத்தைத் தவிர்க்கும் வகையறியாது தவிக்கிறான். எந்த வகையிலும் கைகேயியை மனமாற்றம் செய்ய இயலாது என்றுணரும் தயரதன் இறுதியாக அவள் கேட்கும் வரத்தை ஈந்தே விடுகிறான்.

*" 'ஈந்தேன்! ஈந்தேன்! இவ் வரம் ; என் சேய் வனம் ஆள,*
*மாய்ந்தே நான் போய் வான் உலகு ஆள்வென்; வசை வெள்ளம்*
*நீந்தாய், நீந்தாய், நின் மகனொடும் நெடிது! ...'*

*(அயோத்தியா – கைகேயி சூழ்வினை – 48)*

என்று கூறி, மயக்கமுற்று விழுகிறான் மன்னன், இரவு கழிகிறது. வைகறைப் பொழுதில் கைகேயி இராமனை அழைத்து,

*" 'ஆழி சூழ் உலகம் எல்லாம் பரதனே ஆள, நீ போய்*
*தாழ் இருஞ் சடைகள் தாங்கி, தாங்கு அருந் தவம் மேற்கொண்டு*
*பூழி வெங் கானம் நண்ணிப், புண்ணியத் துறைகள் ஆடி,*
*ஏழ்-இரண்டு ஆண்டின் வா' என்று இயம்பினன் அரசன் என்றாள்' "*

*(அயோத்தியா – கைகேயி சூழ் வினை – 111)*

கைகேயியின் இத்தகைய சொற்களைக் கேட்ட செப்பருங்குணத்து இராமன், "தந்தை ஏவ, அதனைத் தாய் உரை செய்ய, அதனை ஏற்றுச் செயலாற்றும் நற்பேறு அனைவருக்கும் வாய்க்கக்கூடிய ஒன்றா! என் பின்னவன் பரதன் பெறும் செல்வம் நானே பெறும் செல்வமாகும்" என்று கூறி உடனே வனம் செல்ல ஆயத்தமாகிறான். நடந்தது ஒன்றையும் அறியாத தயரதன், வசிட்டரை வரவழைத்துக் கைகேயியை எப்படியாவது அமைதிப்படுத்தி இராமனுக்கு மகுடம் புனைவிக்கும் முயற்சியில் முனிவன் ஈடுபட வேண்டும் என்று கூறுகிறான். தயரதனை தேற்றுவித்த வசிட்டர் "இராமனுக்கு அரசுரிமை ஈந்து தயரதனுக்கு உயிர்ப் பிச்சையும் அளிக்க வேண்டும்" என்று கைகேயியிடம் வேண்டுகிறார். ஆனால் கைகேயியோ, தன் கணவன் உயிர் பற்றிச் சற்றும் கவலைப்படாமல் "வரங்கள் மறுக்கப்பட்டால் நான் உயிர் விடுவேன்" என்கிறாள். இத்தகைய பதிலைச் செவியுறும் தயரதன், மனம் நைந்தவனாகியும், உணர்வுகள் நொந்தவனாகியும், 'கைகேயி இனி எனக்கு மனைவியுமல்லள், பரதன் எனக்கு மகனுமல்லன்' என்று கூறி, 'பரதன் தனக்கு ஈமம் செய்யும் உரிமையுடையவனுமல்லன்' என்று வசிட்டரைச் சாட்சியாக வைத்துக் கூறுகிறான்.

*"இன்னே பலவும் பகர்வாள், இரங்காதாளை நோக்கி,*
*'சொன்னேன் இன்றே ; இவள் என் தாரம் அல்லள் ; துறந்தேன்*
*மன்னே ஆவான் வரும் அப் பரதன்தனையும் மகன் என்று*
*உன்னேன்; முனிவா! அவனும் ஆகான் உரிமைக்கு' என்றான்".*
*(அயோத்தியா - நகர் நீங்கு - 49)*

தசரதனின் இந்தக் கூற்றை அறிந்தவர்கள் கைகேயியும் வசிட்டரும் மட்டுமே. இராமன் வனம் ஏகியதை அறிந்த அக்கணமே தயரதன் உயிர் நீத்து விடுகிறான். பரதனுக்குத் தூதுவர் மூலம் செய்தி அனுப்பப்படுகிறது. நடந்தது ஒன்றையும் அறியாதவனாகப் பரதன் கேகய நாட்டை நீங்கி அயோத்தி வருகிறான். இராமன் வனம் செல்ல, தந்தை வானகம் செல்ல – ஆகிய அனைத்துப் பாவங்களையும் தன் தாய் பழிக்கு அஞ்சாது செய்துவிட்டதை அறிந்து எல்லையில்லாத துயர்க்கடலில் வீழ்கிறான். பிறகு கோசலையின் ஏவலின்படி தந்தைக்கு ஈமம் செய்ய ஏற்பாடுகள் செய்கிறான். வசிட்டர் முதலான அந்தணர்கள், மந்திரிச் சுற்றம், சான்றோர், உற்றார், படை வீரர்கள், மன்னர் குழாம் அனைவரும் குழுமியிருக்கும் இச்சூழலில் பரதன் தந்தைக்கு ஈமக்கடன் செய்ய முனைகிறான். வசிட்ட மாமுனிவர் அவனைத் தடுத்து நிறுத்தி,

*"அன்னை தீமையால் அரசன் நின்னையும்*
*துன்னு துன்பத்தால், துறந்து போயினான்*
*முன்னரே .........................................."*
*(அயோத்தியா - பள்ளிப்படை - 130)*

என்று கூறி, பரதன் தந்தைக்கு ஈமம் ஆற்ற உரிமையுடையவன் அல்லன் என்று பலரறிய நடந்தவற்றை விளக்கிக் கூறுகிறார். இச்செய்தியை செவியுற்ற பரதன், "என்னை ஈன்ற என் அன்னை என்னை அழகு செய்த விதம் இதுவோ!" என்று துடித்து விம்மி வெந்துயர்க் கடலில் வீழ்கிறான். இறுதியில் சத்ருக்னனே தந்தைக்கு ஈமக் கடன் செய்கிறான். எனவே வசிட்டர் மட்டுமே அறிந்த செய்தியை உலகம் அறிந்து விடுகிறது.

அடுத்து, பரதன் இராமனை வனத்தில் சந்திக்கிறான். அப்பொழுது இந்தச் செய்தியை எவரும் இராமனுக்குக் கூறியதாகக் காப்பியத்தில் காட்சி எதுவும் கம்பன் அமைக்கவில்லை. ஆனால் உலகம் அறிந்த ஒரு உண்மையை இராமன் அறியாமல் போவதற்கு வாய்ப்பில்லை அல்லவா? இராமன் அறிந்திருக்கக்கூடிய வாய்ப்புக்கு ஏதுவாகக் கம்பன் ஒரு காட்சி அமைக்கிறான்.

இராமன் தந்தைக்கு வனத்தில் நீர்க்கடன் ஆற்றி முடிக்கும்பொழுது அந்திப் பொழுதாகி விடுகிறது. அந்த அந்திப் பொழுதில் அதுவரை சற்று தூரத்திலேயே தங்களை இருத்திக் கொண்டிருந்த சேனா வீரரும், மன்னர் குழாமும், மான மாந்தரும், மற்றையோர்களும் இராமனை அடைந்து உரையாடுகிறார்கள். அந்த உரையாடல் மூலம், தான் நகரை நீங்கிய பிறகு அயோத்தியில் நடந்த நிகழ்ச்சிகள் அனைத்தையும் அறியும் வாய்ப்பு அப்பொழுது இராமனுக்குக் கிட்டியிருக்கும் அல்லவா? அப்பொழுது வசிட்டர் உலகறிய கூறிய செய்தியை மக்கள் இராமனுக்கும் உரைத்திருப்பார்கள் அல்லவா? இச்செய்தியை இராமன் பதினான்காண்டுகள் மனத்தில் இருத்தியே வாழ்கிறான். அன்னை கைகேயியின் மேல் பழிக்கு மேல் பழி சேர்வதையும், நிறை குணத்துப் பரதன் தன் குற்றம் எதுவுமின்றியே பழி சுமக்கும் நிலையையும் எண்ணியெண்ணி அவனது அருள் நெஞ்சம் ஏங்கி இரங்கியிருக்க வேண்டும்! அப்பழியை நீக்கும் தருணத்தை எதிர்பார்த்திருக்கிறான் இராகவன்! பதினான்காண்டுகள் வனவாசம் செய்ததோடு பகை முடித்து வெற்றிப் புகழ் சூடி நிற்கும் இத்தருணத்தில் தனக்கு ஆசி கூற வரும் தந்தை தயரதனிடம் இரு வரங்கள் வேண்ட விரும்புகிறான்.

ஒன்று தயரதன் கைகேயியை மனைவியாக ஏற்க வேண்டும்.

இரண்டு பரதனை மகனாக ஏற்க வேண்டும்.

ஆனால் தயரதன் கைகேயியை மனைவி அல்லள் என்ற பிறகு அவளைத் தாய் என்றும் இராமன் குறிப்பிட முடியாது. தந்தையால் அறுக்கப்பட்ட உறவு தந்தையாலேயே பிணைக்கப்பட வேண்டும். கைகேயியையும், பரதனையும் முறையே

மனைவி, மகன் என்று தந்தை ஏற்றுக்கொண்டால் தான் தனக்கு அவர்கள் முறையே தாயும், தம்பியும் ஆக முடியும். எனவே அத்தகைய வரத்தையே கேட்கிறான். அவர்கள் முறையே தனக்குத் தாயும், தம்பியும் ஆகும் வரத்தைத் தயரதன் நல்க வேண்டும் என்று கேட்கும் அறத்தின் மூர்த்தியாகிய இராமன், அவ்விடத்தில் கைகேயியைத் தன் தெய்வம் என்று குறிக்கிறான்.

*"தீயள் என்று நீ துறந்த என் தெய்வமும் மகனும்*
*தாயும் தம்பியும் ஆம் வரம் தருக"*
*(யுத்த - மீட்சி - 128)*

என்பது காப்பிய வரிகள். அதைக் கேட்டு,

*"வாய் திறந்து எழுந்து ஆர்த்தன, உயிர் எலாம், வழுத்தி"*
*(யுத்த - மீட்சி - 128)*

என்கிறான் கம்பன்.

தனக்கு அரசுரிமை மறுத்து வனவாசம் அளித்த சிற்றன்னையைத் 'தன் தெய்வம்' என்று குறிப்பிடுவதன் மூலம் இராமன் கைகேயியின் மேல் கொண்டிருந்த மாறாத பக்தியையும், அன்பையும் வெளிப்படுத்துகிறான். இராகவனின் இத்தகைய அருள் மொழிகளைக் கேட்ட உலகத்து உயிர்கள் எல்லாம் எழுந்து நின்று அவனுக்கு வணக்கம் செலுத்தி வாய் திறந்து ஆர்த்து வாழ்த்தின என்கிறான் கம்பன். **இவ்விடத்தில் உலகத்துக் காப்பியம் எதிலும் காணக் கிடைக்காத ஓர் அற்புத மான காட்சியாக இந்நிகழ்ச்சி வடிவம் கொண்டு விடுகிறது.** இந்நிகழ்ச்சியைக் கற்பனை என்று ஒதுக்கித் தள்ள இயலாது. இராமனுடைய அருள் மன நிலையை நாம் அறிந்து கொள்வதற்கு வாய்த்த தக்க தருணம் இது. இராமனுடைய மனநிலை இப்பொழுது என்ன? தயரதன் விருப்பப்படி தான் அயோத்தியை ஆளும் வாய்ப்பு இப்பொழுது கிட்டி விட்டது. இந்த வாய்ப்பை அருளியவன் பரதனே. பரதன் தற்பொழுது நடந்து கொண்டது போலன்றி வேறு விதமாக நடந்து கொண்டிருந்திருக்கலாம். தாய் தனக்குப் பெற்றுத் தந்த அரசாட்சியை ஏற்று அயோத்தியை ஆண்டிருக்கலாம். இல்லற வாழ்க்கையை வாழ்ந்து மக்களை ஈன்றிருக்கலாம். அவனுடைய மக்கள் அயோத்தியின் வாரிசுகளாக ஆக்கப்பட்டிருக்கலாம். இராமன் அயோத்தி மீண்டும் செல்லாத நிலைமைக்குப் பரதன் பகைமை பாராட்டியிருக்கலாம். கைகேயியும் கேகயனுடைய உதவியால் இராமன் அயோத்திக்கு மீள முடியாதபடிக்கு வினைகள் ஆற்றியிருக்கலாம். இத்தகைய பகை உணர்வு பெருகும் வாய்ப்புள்ள மனச்சூழலை சம்பந்தப்பட்ட அனைவருமே தவிர்த்துவிட்டனர். பரதனுடைய மனப்போக்கை

அறிந்தபிறகு கைகேயி காப்பியம் முழுதும் மௌனமே சாதிக்கிறாள். பரதனாலேயே பழிக்கப்பட்ட பிறகு அவளுடைய கதி என்ன? கணவனாலும், மகனாலும் துறக்கப்பட்டவளாகிப் பழியேற்று வாழ்கிறாள். பரதனோ தவத் திருக்கோலத்தில் துஞ்சலும் மறந்து பதினான்காண்டுகள் நாட்டில் வாழ்கிறான். தயரதன் விருப்பம்போல் இராமன் அயோத்தி அரசனாக இப்பொழுது முறையாக முடி சூடிக் கொள்ள இயலும். இத்தகையதொரு சாதகமான சூழலைப் பரதன் தன்னுடைய மன உறுதியாலும், பரதனுடைய மனக்கருத்தை அறிய வந்தபிறகு, தாய் கைகேயி, தன்னுடைய மௌனத்தாலும், உருவாக்கிக் கொடுத்துவிட்டிருக்கிறார்கள். இத்தகைய நிலையில் தந்தையின் ஆன்மா அமைதியடைந்து மகிழ்வுறும் சூழல் உருவாகி உள்ளது. அதாவது இராமன் அரசுரிமை அடையவில்லையாயினும், காடேக வேண்டாம் என்று கைகேயியைக் கேட்டான் தயரதன். ஆனால் இப்பொழுதோ இராமன் அயோத்திக்கும் செல்ல முடியும். அத்துடன் அரசுரிமையும் பெற இயலும். எனவே தந்தையின் ஆன்மா அமைதி பெற்ற பின்னரும், பரதனும், கைகேயியும் தொடர்ந்து பழி சுமப்பதில் நியாயம் ஏதும் உள்ளதா? இல்லை. அவர்களுக்கு உரிய நீதியைத் தற்பொழுது அயோத்தி மன்னன் என்ற நிலையில் தான் மட்டுமே அவர்களுக்கு வழங்க முடியும் என்று நினைக்கிறான் அறத்தின் மூர்த்தியாகிய இராமன். எனவே கைகேயியையும், பரதனையும் பொறுத்து அவர்களுடைய உறவு முறையையும் தயரதன் ஏற்க வேண்டுமென்று இராமன் மானசீகமாக வேண்டுவதாகவும், தயரதனும் அவ்வேண்டுதலை நிறைவேற்றுவதாகவும் இக்காட்சியைக் கற்பனையை விரித்து அமைத்துள்ளான் கம்பன் என்பதைக் கற்போர் உணர வேண்டும்.

..... நிகழ்ச்சியை விட்ட இடத்திலிருந்து தொடர்வோம். தந்தையிடம் இராமன் இரு வேண்டுதலை வைக்கிறானல்லவா? தயரதன் உடனே அவற்றை அருளவில்லை. "குற்றமற்ற பரதன் என் மகனே ஆகுக. ஆனால் உன்னை விரத வேடம் பூண வைத்த பாவி கைகேயியின் குற்றம் பொறுக்க இயலேன்" என்று கூறுகிறான் தயரதன்.

காப்பிய வரிகள்;

*" 'வரத கேள்! எனத் தயரதன் உரை செய்வான்; 'மறு இல்*
*பரதன் அன்னது பெறுக! தான் முடியினைப் பறித்து, இவ்*
*விரத வேடம் மற்று உதவிய பாவிமேல் விளிவு*
*சரதம் நீங்கலதாம்' என்றான், தழீஇய கை தளர"*

*(யுத்த - மீட்சி - 129)*

அப்பொழுதுதான் இராமன் முதன் முதலாகத் தந்தையை மறுத்துப் பேசுகிறான்! அதாவது, தயரதன் தவறு ஏதும் செய்யவில்லை எனவும், தானே (இராமனே) தவறு செய்ததாகவும் கூறித் 'தாய் கைகேயி குற்றமற்றவள்' என்கிறான் இராமன்!

*" 'ஊன் பிழைக்கிலா உயிர் நெடிது அளிக்கும் நீள் அரசை*
*வான் பிழைக்கு இது முதல் எனாது ஆள்வுற மதித்து,*
*யான் பிழைத்தது அல்லால், என்னை ஈன்ற எம் பிராட்டி–*
*தான் பிழைத்தது உண்டோ?' ......."*

*(யுத்த – மீட்சி – 130)*

என்கிறான் இராமன். அதாவது நியாயமற்ற வகையில் அரசுரிமை பெற்று ஆளவிருந்த என்னைத் தடுத்துப் பழியைப் போக்கியருளிய அன்னை கைகேயி தெய்வம் ஆவாள். நடந்துவிட்ட நிகழ்ச்சிகளில் அவளுடைய குற்றம் என்று எதுவுமே இல்லை. என் குற்றம்தான் உள்ளது. (அதற்குரிய கழுவாயை நான் வனவாசம் செய்து தேடிக் கொண்டேன்) இப்பொழுது எல்லோரிடத்தும் அறச் சார்பு நிலையே உள்ளது. எனவே தாயைப் பொறுத்தருள வேண்டும் என்கிறான். தயரதனும் சினம் தணிந்து இராமனுடைய நியாய வாதத்தை ஏற்றுக் கொண்டவனாக

*"தெவ் வரம்பு அறு கானிடைச் செலுத்தினாட்கு ஈந்த*
*அவ் வரங்களும் இரண்டு ; அவை ஆற்றினார்க்கு ஈந்த*
*இவ் வரங்களும் இரண்டு"*

*(யுத்த – மீட்சிப் – 130)*

என்று கூறிப் பரதனை மகனாகவும், கைகேயியைத் தன் மனைவியாகவும் ஏற்கும் இரு வரங்களை இராமனுக்குத் தந்து விடுகிறான்.

இக்கட்டுரையின் ஆரம்பத்தில் இராமன் வனவாசத்தை மனமுவந்து ஏற்றுக் கொண்டதற்கான காரணமே "தன்னுடைய தவற்றுக்குரிய கழுவாய் என்பது அன்னையின் விருப்பப்படி தான் காடேகித் தண்டனை அனுபவிப்பதே" என்று எண்ணியதுதான். அது இறுதியில் இராமனுடைய வாய்ச் சொற்களாலேயே இப்பொழுது மீண்டும் கூறப்படுவதைக் கற்போர் உணர வேண்டும். தன்னுடைய குற்றங்களைக் களைந்து கொள்ளும் இயல்பு படைத்தவன் இராமன் என்பது இந்த இறுதி நிகழ்ச்சியின் மூலமும் உறுதியாகிறது. மேலும் பிறர் பழியையும் முயன்று நீக்கும்இயல்பினன் இராமன் என்பதும் தெளிவாகிறது. எனவே அரசுரிமையை நீத்தும் புகழ் பெற்றான். ஏற்றும் புகழ் பெற்றான். இரு நிலைகளிலும் தன்னுடைய தகுதிக்கேற்ற

வாழ்க்கைச் சூழல் அமைவதாகவே வருவதை ஏற்றுக் கொண்டான் இராமன். தண்டனையை அனுபவிக்கும் நிலையையும் ஏற்றான். பழி நீங்கிய பின் அரசுரிமை ஏற்கும் தகுதியையும் பெற்றான். உலகத்துக் காப்பியம் எதிலும் காணக் கிடைக்காத ஒப்புயர்வற்ற பாத்திரம் இராமன் என்பது மிகையில்லாத புகழ்க் கூற்று. குற்றங்களைக் களைந்து தன்னைத் தூய்மைப்படுத்திக் கொள்ளும் இயல்பு கொண்ட இராமனின் பண்பு நலத்தில் மனம் லயித்தே கம்பன் அவனைக் "காசில் கொற்றத்து இராமன்" என்றான்.

இராமனுடைய செப்பருங் குணங்களாகக் குறிப்பாக இரண்டு குணங்களை மேலே கண்டோம். ஒன்று, தன் தவறை உணர்ந்து, கழுவாய் தேடித் தன்னைத் திருத்திக் கொள்வது.

இரண்டு, பிறர்க்கு ஏற்படும் பழியை முனைந்து துடைப்பது.

அடுத்தடுத்து வரும் கட்டுரைகளில் இவ்விரண்டு பண்புகளும் (குணங்களும்) தெற்றென மிளிர்வதைக் காணலாம். 'வாலி வதம்' எனும் அத்தியாயத்தில் முதற்குணமும் 'திருமகள் தீக்குளிப்பு' எனும் அத்தியாயத்தில் இரண்டாவது குணமும் ஓங்கிப் பொலிய, இராமன் 'நியாயத்தின் நிலயம் இராமன்' என்ற அடைமொழிக்கு அவன் முற்றிலும் பொருத்தமானவன் ஆக இருப்பதைக் காணலாம்.

⌘ ⌘ ⌘

# II

# வாலி வதம்

## அடைக்கலம் அருளும் இராமன்

இராமாயணத்தில் வரும் 'வாலி வதம்' என்னும் நிகழ்ச்சி நிலவில் கறை போல, இராமனுடைய குணத்தில் குறையாகப் படிந்துவிட்ட களங்கம் என்று பலகாலம் பலராலும் கூறப்பட்டு வருகிறது. போர் நெறிக்குப் புறம்பாக, இராமன் வாலியை மறைந்திருந்து கொன்று, தன் வீரத்துக்கு இழுக்கு ஏற்படுத்திக் கொண்டுவிட்டான் என்று அவர்கள் கூறுகிறார்கள். தமிழறிஞர்களிடையே 'வாலி வதம்' நிகழ்ச்சி ஒரு விவாதத்திற்குரிய நிகழ்ச்சியாகவே காலங்காலமாகக் கருதப்பட்டு வருகிறது.

போர் நெறிக்குப் புறம்பாகச் செயல்பட்ட இராமனின் 'வாலி வதம்' நிகழ்ச்சிக்கென்று கம்பன் கிட்கிந்தா காண்டத்தில் தனியாக ஒரு படலம் ஒதுக்கியுள்ளான். அதற்கு முன் இராமனை வாலி வதத்துக்கு இட்டுச் செல்லும் முன்னோடி நிகழ்ச்சிகளையெல்லாம் விரிவாக விளக்குவதற்கு ஆறு படலங்களை எழுதியுள்ளான். கிட்கிந்தா காண்டத்தில் பம்பை வாவிப் படலம் முதற்கொண்டு தொடங்கும் அந்த ஆறு படலங்களின் நிகழ்ச்சிகளை நன்கு ஊன்றி ஆராய்ந்து கற்ற பின்னர்தான், வாலி வதம் இராமனுக்குப் பழி சேர்க்கும் நிகழ்ச்சிதானா இல்லையா என்பதைக் கற்போர் தெளிந்து உணர முடியும்.

காப்பியத்தில் கம்பன் "செப்பருங்குணத்து இராமன்" என்ற தொடரைக் கையாள்கிறான். அதாவது இராமனுடைய ஆளுமையில் பொதிந்து விளங்கும் சிறப்புக் குணங்களையெல்லாம் நாம் அறிவால் புரிந்துகொள்ளலாம் அல்லது மனத்தால் உணர்ந்து கொள்ளலாம். சொற்களைப் பயன்படுத்தி நாவால் எடுத்துரைப்பது என்பது இயலாத காரியம் என்கிறான். இராமனிடம் குடி கொண்டிருந்த அருங்குணங்கள்

எல்லாம் ஒன்றையொன்று விஞ்சுவனவாகவே உள்ளன. அதிகம் கூறுவானேன்? 'மானுட குலத்தில் உதித்த உயிர்களில் சிறந்தவர் யார்?' என்ற கேள்விக்கு வால்மீகி 'இராமன்' என்ற விடையை நாரதரிடம் பெற்றதால்தானே, அவனைக் காப்பியத் தலைவனாக்கி "இராமாவதாரம்" எழுதினார்!! அத்தகைய பெருங்குணங்களின் இறைமைத் தன்மையைக் கருதித்தானே கல்வியில் பெரிய கம்பனும் இராமனைத் தெய்வ அவதாரமாகவே கருதினான்!! எனவே இராமன் நற்பண்புகள் அனைத்துக்கும் உறைவிடமானவன் என்பதில் மாற்றுக் கருத்து இல்லை.

வாலி வத நிகழ்ச்சிக்குள் நுழையும் முன்பு இராமனின் அடிப்படையான பெருங்குணங்கள் என்னென்ன என்பதை ஓர்ந்து அறிய வேண்டும், அதன் பின்னரே வாலி வத நிகழ்ச்சிகளையும் அணுக வேண்டும்.

காப்பியத்தின் பாடு பொருள் "காசு இல் கொற்றத்து இராமனின் கதை" என்று கூறிய கம்பன், வாலி வத நிகழ்ச்சியை மறந்துவிட்டானா? அல்லது அவருடைய நோக்கில் அந்நிகழ்ச்சியில் இராமனுடைய அறம் திறம்பிய பங்களிப்பு எதுவும் இல்லையா? இக்கருத்தை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

இராமனிடம் குடி கொண்டிருந்த அரும் பெரும் பண்புகளுள் ஒன்றுதான் 'அபயம்' என்று தன்னை நாடி வந்தவர்களுக்கு உடனே 'அடைக்கலம்' கொடுப்பது. இவனுடைய இந்த இயல்பை விளக்குவதற்குக் குறிப்பாக மூன்று நிகழ்ச்சிகள் காப்பியத்தில் உண்டு.

அவை,

1. வனவாசத்தின் தொடக்கக் காலத்தில் 'அபயம்' வேண்டித் தன்னை அண்டிய அந்தணர்களைக் காக்கிறான்.

2. அபயம் வேண்டிய சுக்ரீவனுக்கு அடைக்கலம் அருளி நட்பு பாராட்டுகிறான்.

3. அபயம் வேண்டித் தன்னை அடைந்த இராவணனின் தம்பி வீடணனுக்கு அடைக்கலம் அருளி அவனை நண்பனாக ஏற்கிறான்.

முதலில் அந்தணருக்கு 'அபயம்' அருளி இராமன் அவர்களைக் காத்த தன்மையைக் காண்போம்.

தந்தையின் வாக்கைத் தலைமேற்கொண்டு தண்டகாரண்யத்தில் தங்க வரும் இராமனைக் கண்ட கானம் வாழ் அந்தணர்கள், புனல் வரக் கண்ட உலர் மரம்

போன்றும், தாய்ப்பசு கண்ட இளங்கன்று போன்றும், மரக்கலம் கண்ணுற்ற ஆழ்கடலினர் போன்றும் தம்மை உணர்ந்து, செய்தவம் பலித்துப் பிறவிப் பிணியறுத்த சிந்தையராக மறுக்கம் நீங்கி மகிழ்கின்றனர். காரணம் என்ன? அரக்கர்களின் கொடுமையிலிருந்து தம்மைக் காக்க ஓர் அரசன் வந்துற்றான் என்றெண்ணியே மறுக்கம் தீர்கின்றனர். எழுகின்ற காதலோடு எம்பிரானை நோக்கி, அரக்கரால் தமக்குற்ற குறை கூறி முறையிடுகின்றனர்.

*"இரக்கம் என்று ஒரு பொருள் இலாத நெஞ்சினர்,*
*அரக்கர் என்று உளர் சிலர், அறத்தின் நீங்கினார்,*
*நெருக்கவும் யாம் படர் நெறி அலா நெறி*
*துரக்கவும், அருள் தவத் துறையுள் நீங்கினேம்"*

*(ஆரணிய – அகத்திய – 12)*

மேலும் கூறுகின்றனர் "புலிக்கு அஞ்சி வாழும் புள்ளி மான்கள் போல அஞ்சி மறைந்து திரிந்து வாழ்கிறோம்; அறநெறித் துறைகளை ஒழுகவும் இயலாமல் மறுகுகின்றோம்; யாம் தேர்ந்தெடுத்த வாழ்க்கைநெறியில் செய்ய வேண்டிய மாதவம் ஆற்ற இயலோம்; வேதங்களை ஓதவும் இயலோம்; ஓதுவிக்கவும் இயலோம்; எரியும் வளர்க்கிலோம். ஆக, அந்தணர் முறைகள் ஒன்றையும் பின்பற்றாததால் வீடு பேறு பெறும் தகுதியையும் இழந்தோம். அந்தணர் என்று எம்மை இனி கூறிக் கொள்ளவும் இயலோம். யாம் யாரென்று அறியாது மயங்குகிறோம்" என்று கலங்கிக் கூறுகின்றனர்.

மேலும் "இந்திரனிடம் முறையிட்டோம். ஆனால் அவனோ அரக்கர் ஏவும் ஆணையைச் சிந்தையிலும் சென்னியிலும் ஏற்று நடந்து வலிமையற்றுப் போனான். எமக்கு எவரும் துணையில்லாத நிலையில் அல்லலுற்று ஆற்றாது அழுது குலைந்து கிடக்கும் இச்சமயத்தில் நீ வந்தாய் ஐயனே"

*"எந்தை! மற்று யார் உளர் இடுக்கண் நீக்குவார்?*
*வந்தனை, யாம் செய்த தவத்தின் மாட்சியால்"*

*(ஆரணிய – அகத்திய – 15)*

என்கின்றனர்.

மேலும்,

*" 'உருளுடை நேமியால் உலகை ஓம்பிய*
*பொருளுடை மன்னவன் புதல்வ! போக்கிலா*
*இருளுடை வைகலெம்; இரவி தோன்றினாய்;*
*அருளுடை வீர! நின் அபயம் யாம்' என்றார்"*

*(ஆரணிய - அகத்திய - 16)*

அருள்மனச் சிந்தையர் அந்தணர் கூறும் இவ்வுரைகள் கேட்ட இராமனின் அருள்மனம் அனலிடையிட்ட மெழுகென உருகுகின்றது. குடிமக்கள் நலம் பேணும் கொற்றவனுடைய இறைமாட்சி அவனுள் மண்டுகிறது.

அரசனுக்குரிய சான்றோர் சினப் பண்பும் வீரமும் பொங்குகின்றன. "அந்தணர் ஓம்புதல் எனும் அருங்கடன் ஆற்றவே நான் வந்தனென் போலும் வனத்திடை" என்று அக மகிழ்கிறான்.

"நான்மறை அந்தணர் மகிழவும், புகழவும், அரக்கர் தரும் துயரினின்றும் அந்தணரைக் காக்கவுமே நான் அருங்கணைத் தூணியும் வில்லும் அமைந்தனன் தோளிலே" என்று கூறி அந்தணர் குழாத்தை அமைதிப்படுத்துகிறான்.

*" 'வேந்தன் வீயவும், யாய் துயர் மேவவும்,*
*ஏந்தல் எம்பி வருந்தவும், என் நகர்*
*மாந்தர் வன் துயர் கூரவும், யான் வனம்*
*போந்தது, என்னுடைப் புண்ணியத்தால்' என்றான்"*

*(ஆரணிய - அகத்திய - 18)*

*"அறம் தவா நெறி அந்தணர் தன்மையை*
*மறந்த புல்லர் வலி தொலையேன் எனின்,*
*இறந்துபோகினும் நன்று; இது அல்லது,*
*பிறந்து யான் பெறும் பேறு என்பது யாவதோ?"*

*(ஆரணிய - அகத்திய - 19)*

*"நிவந்த வேதியர் நீவிரும், தீயவர்*
*கவந்த பந்தக் களிநடம் கண்டிட,*
*அமைந்த வில்லும் அருங் கணைத் தூணியும்*
*சுமந்த தோளும் பொறைத் துயர் தீருமால்"*

*(ஆரணிய - அகத்திய - 20)*

*“ ‘சூர் அறுத்தவனும், சுடர் நேமியும்*
*ஊர் அறுத்த ஒருவனும் ஓம்பினும்*
*ஆர் அறத்தினொரு அன்றி நின்றார். அவர்*
*வேர் அறுப்பென்; வெருவன் மின் நீர்’ என்றான்”*

*(ஆரணிய – அகத்திய – 22)*

அவ்வண்ணமே, அஞ்சன வண்ணனின் உடனுறைவால், முனிவர்களும் வஞ்சக அரக்கர்களுடைய கொடுமையினின்றும் தப்பி, மறை ஓதி, எரி ஓம்பி, மாதவங்கள் செய்து இனிதாகத் தவ வாழ்க்கை வாழ்ந்தனர். இராமனும் தன்னுடைய வனவாசம் பொருள் பொதிந்ததாக விளங்கும்வண்ணம் தன் வாழ்க்கைக்கு மேன்மையானதொரு இலக்கு கிட்டியது என்று அகமகிழ்ந்தான்.

இவ்விடத்தில் எழும் ஓர் ஐயத்துக்கு விளக்கம் வேண்டியுள்ளது.

பரதன் தன்னை நாடி வந்து அயோத்தியின் அரசுரிமையைக் கொடுத்த பிறகு, ஒரு கொற்றவனுக்குரிய வீரத்தோடு, தான் அரக்கரோடு போர்புரிந்து அந்தணரைக் காத்தல் என்பது இப்பொழுது தன்னுடைய தகைமைக்குரிய செயலே என்று இராகவன் எண்ணுகிறான். ஆயினும், தவவாழ்க்கையை ஏற்றுக் கொண்டு வனம் ஏக ஆயத்தப்படுத்திக் கொள்ளும் பொழுதே, ஒரு க்ஷத்திரியனைப் போல வில்லும் அம்பும் ஏந்திக் கொண்டு இராமன் வனம் ஏகியது சரியா? இதற்குப் பதில் என்ன? சரிதான் என்பதே. காரணம், தவம் செய்யும் அந்தணரும், காட்டில் தம்மை விலங்குகளிடமிருந்தும், அரக்கர்களிடமிருந்தும் காத்துக் கொள்வதற்காகப் படைக் கலன்கள் வைத்துக் கொள்ளும் பழக்கத்தைக் கைக்கொண்டிருந்தனர். ஆனால் அவற்றை அரக்கர்களுக்கு எதிராகப் பயன்படுத்த இயலாமல் தவித்தனர். அந்தணர்கள் தவம்புரியும் காலத்தைத் தேர்ந்தெடுத்து அப்பொழுதுதான் வந்து அரக்கர்கள் இடையூறு செய்தனர். யாக குண்டங்களில் நீரைச் சொரிந்தனர். யாக சாலையில் கற்களை எறிந்தனர். மரங்களை அடியோடு பிடுங்கி வீசினர். தவக்கோலத்தில் அமர்ந்து யோகநிட்டையில் இருப்பவர்களை அடித்துக் கொன்று தின்றனர். அப்பொழுது யோகியரும், முனிவரும் படைக்கலன்கள் தம் பால் இருந்தாலும் பயன்படுத்த இயலாமல் துன்புற்றனர். உதாரணமாக, பால காண்டத்திலே, தவசியான விசுவாமித்திர முனிவர் தன்னிடமிருக்கும் படைக்கலன்களில் சிலவற்றை இராமனுக்குத் தருகிறார்.

*"ஆறிய அறிவன் கூறி அளித்தலும், அண்ணல்தன்பால்,*
*ஊறிய உவகையோடும், உம்பர்தம் படைகள் எல்லாம்,*
*தேறிய மனத்தான் செய்த நல்வினைப் பயன்கள் எல்லாம்,*
*மாறிய பிறப்பில் தேடி வருவபோல், வந்த அன்றே"*
*(பால - வேள்வி - 2)*

இதைப் போலவே, தண்டகாரண்யத்தில் அகத்திய முனிவரைக் காணும் பேற்றின் பொழுது, அகத்திய முனிவர் இராமனுக்கு வில், கணை, புட்டில் ஆகியவற்றை வழங்குகிறார்.

*" 'விழுமியது சொற்றனை; இவ் வில் இது இவண், மேல்நாள்*
*முழுமுதல்வன் வைத்துளது; மூஉலகும், யானும்,*
*வழிபட இருப்பது; இதுதன்னை வடி வாளிக்*
*குழு, வழு இல் புட்டிலொடு கோடி' என, நல்கி,"*
*(ஆரணிய - அகத்திய - 55)*

*"இப் புவனம் முற்றும் ஒரு தட்டினிடை இட்டால்*
*ஒப்பு வரவிற்று என உரைப்ப அரிய வாளும்,*
*வெப்பு உருவு பெற்ற அரன் மேரு வரை வில்லாய்*
*முப்புரம் எரித்த தனி மொய்க் கணையும் நல்கா"*
*(ஆரணிய - அகத்திய - 56)*

என்பது காப்பிய வரிகள். படைக்கலன்கள் சிலவற்றை இராமனுக்கு அருளிய அகத்திய மாமுனி, இராமனின் வரவால் தவத்தோருக்கும் தேவர்களுக்கும் ஏற்பட்ட நன்மைகளையும் கூறுகிறார்.

*" 'உய்ந்தனர் இமைப்பிலர்; உயிர்த்தனர் தவத்தோர்;*
*அந்தணர் அறத்தின் நெறி நின்றனர்கள் ஆனா*
*வெந் திறல் அரக்கர் விட வேர் முதல் அறுப்பான்*
*வந்தனன் மருத்துவன்' என, தனி வலிப்பான்"*
*(ஆரணிய - அகத்திய - 44)*

மேலும் இராமனை "அருட்கு அரசே!" என்று விளிக்கிறார். என்ன அருள் செய்தனன் இராமன்? அரக்கர்களின் கொடுமையிலிருந்து காப்பாற்றி 'அபயம்' அளித்து அந்தணர்கள் அருந்தவம் இயற்றுவதற்கு உதவிய இராமனது செயலைத்தான் அருட்செயல் என்று போற்றுகிறார் அகத்தியர்.

எனவே, தவ வாழ்க்கையிலும் கூட வில்லும் அம்பும் மற்ற படைக்கலன்களும் தவசியர்க்கு வேண்டியதாகவே இருந்தன. எனவே இராமன் வனம் ஏகத் தன்னை ஆயத்தப்படுத்திக் கொண்டபொழுது வில்லும் அம்பும் தனக்குத் துணையாக இருக்குமாறு ஆவன செய்து கொண்டான். ஆனால் அப்பொழுது போர் வாழ்க்கையைச் சிந்திக்கவில்லை. மாறாக தவ வாழ்க்கையைத்தான் சிந்தித்தான். முந்தைய அத்தியாயத்தில் கூறியுள்ளபடி கோசலையிடம் தவம் செய்து மேன்மையடைந்து, உயர்ந்த ஆன்ம பலத்தோடு, தான் பதினான்காண்டுகளுக்குப் பிறகு அயோத்தி மீள்வதாகக் கூறுகிறான். அத்துடன் சித்திரக் கூடத்தில் இளையவன் இலைக் குடில் அமைக்க அதனைப் பாராட்டிய இராமன், தவ வாழ்க்கையின் சிறப்பை இலக்குவனுக்கு எடுத்துக் கூறுகிறான். "பொருள் செல்வத்துக்கு வரம்புண்டு. ஆனால் தவ வாழ்க்கையின் பயனாய் வரும் இன்பச் செல்வத்துக்கு எல்லையே இல்லை. எனவே இந்த நோன்பு வாழ்க்கை நாம் பெற்ற பேறு" என்கிறான்.

*"பின்னும் தம்பியை நோக்கி, பெரியவன்,*
*'மன்னும் செல்வத்திற்கு உண்டு வரம்பு; இதற்கு*
*என்ன கேடு உண்டு? இவ்வெல்லை இல் இன்பத்தை*
*உன்னு மேல் வரும் ஊதியத்தோடு' என்றான்."*

*(அயோத்தியா – சித்திரகாண்டம் – 55)*

*'தேற்றித் தம்பியை, தேவரும் கைதொழ,*
*நோற்று இருந்தனன், நோன் சிலையோன்'*

*(அயோத்தியா – சித்திரகாண்டம் – 56)*

எனவே வனவாசத்தின் தொடக்கத்தில் இராமன் தவ வாழ்க்கையில்தான் மனத்தைச் செலுத்தினான். அத்தகைய இராமனை வனத்தில் சந்தித்து அரசுரிமையை அளித்துப் பரதன் அயோத்தி வேந்தனாக ஆக்கிவிட்டான். தான் அரசன் என்ற எண்ணத்தால் க்ஷத்திரியனுக்குரிய வீரபராக்கிரம உணர்வு மேவ வீங்கிய தோளனாய், ஓங்கிய உரனுடையவனாய் அந்தணரைக் காத்தல் அரச தர்மம் என்ற சிந்தையனாய் **(இது அரசனுக்குரிய முதற்கடமை என்று வசிட்டரால் இராமனுக்குப் போதிக்கப் படுகிறது அயோத்தியா காண்டத்தில்)** தன் புயமேந்திய கணைப்புட்டிலில் பொதிந்து கிடந்த சுடர் அம்புகளின் முனையில் அரக்கர்களை அழிக்கும் கூற்றுவனைப் பொருத்தி விற்றிறம் காட்ட உடன் விழைகிறான் இராமன். எனவே தந்தையின் வாக்கைக் காப்பதற்காக வனவாழ்க்கை நடத்தும் இராமன் அறம் தலைநிறுத்துவதை வாழ்க்கை இலட்சியமாகக் கொள்கிறான்.

*'கரிய மாலினும், கண்ணுதலானினும்*
*உரிய தாமரைமேல் உறைவானினும்*
*விரியும் பூதம் ஓர் ஐந்தினும் மெய்யினினும்*
*பெரியர் அந்தணர்; பேணுதி உள்ளத்தால்'*

*(அயோத்தி – மந்தரை சூழ்ச்சி – 15)*

என்று வசிட்ட மாமுனி இராமனின் உள்ளத்தில் அந்தணரைக் காத்தலே அரசனின் முதற்கடன் என்று வித்திட்டிருந்தார். எனவே பரதன் விருப்பப்படி தற்போது அயோத்தி அரசன் என்ற நிலையில், வனத்தில் துயருறும் மாதவ முனிவர்கள் தன்னிடம் அபயம் என்றவுடன் அவர்களை அடைக்கலமாக ஏற்றுவிடுகிறான் இராமன்.

*" 'புகல் புகுந்திலரேல்; புறத்து அண்டத்தின்*
*அகல்வரேனும், என் அம்பொடு வீழ்வரால்,*
*தகவு இல் துன்பம் தவிருதிர் நீர்' எனா,*
*பகலவன் குல மைந்தன் பணிக்கின்றான்"*

*(ஆரணிய – அகத்திய – 17)*

அடைக்கலம் அளித்த இராமனிடம் முனிவர்கள் " ………………….. ஏயின ஆண்டு எலாம் இன்னல் காத்து இங்கு இனிது உறைவாய்" என்கின்றனர். இவ்விடத்தில் கம்பன் கூறுகிறான். அவ்வாறு,

*"சொன்ன மா தவர் பாதம் தொழுது, உயர்*
*மன்னர் மன்னவன் மைந்தனும் வைகினான்"*

*(ஆரணிய – அகத்திய – 25)*

என்று. அதாவது 'தயரதனுக்குப்பின் நாட்டையாளும் உரிமையும் தகுதியும் கொண்டு இங்கு காட்டிடை வாழும் மன்னர் மன்னன் மைந்தன்' என்று இராகவனுடைய அரச அடையாளத்தைப் பொருத்தியே கம்பன் இராமனைக் குறிக்கிறான். எனவேதான், அடுத்த அத்தியாயத்திலேயே 'விராதன் வதை' தொடங்கி விடுகின்றது. வனத்தில் நோன்பு நோற்று வாழ்ந்த பொழுதும் இராமன் அரசனேயாதலால், அந்த அரச தர்மத்திற்குட்பட்ட 'அந்தணர் காத்தல்' எனும் அறத்தை உடனே ஆற்றத் தொடங்கி விடுகிறான். தன் வில் தொழிலைப் போர்த் தொழிலோடு பொருத்துகிறான். 'அடைக்கலம் அளித்துக் காத்தல்' இராமனுடைய அரச தர்மமாகிறது என்பதை உணர்தல் வேண்டும்.

இவ்வாறே இராவணன் தம்பி வீடணனுக்கும் அடைக்கலம் அளிக்கிறான். அந்நிகழ்ச்சியைக் காண்போம்.

சேற்றிலே மலர்ந்த செந்தாமரையென, இராவணன் முதலானோர் தோன்றிய அரக்கர் குலத்தில், அருமறை ஓதி அறம் சார்ந்த வாழ்வை விரும்பும் வீடணன் பிறக்கிறான்! இராவணனின் அகங்காரம் நிறைந்த இயல்பை வெறுக்கிறான். பிறன் மனை நயந்த பெருங்குற்றத்தைப் புரிந்த இராவணனுக்கு ஆயிரம் நீதிகள் எடுத்துரைத்தும் அவை புல்லர் செவியில் புகன்ற சொற்களெனப் புறம் போவதை அறிந்து மனம் வெதும்புகின்றான். மெய்ப்பொருளைச் சிந்தை செய்தும், அறத்தின் மேல் பற்று கொண்டும் வாழும் வீடணனுக்கு, உடலின்பத்தை மட்டுமே மையமாகக் கொண்டு வாழும் அரக்கரினத்தோடு தொடர்ந்து இணக்கமாக வாழ இயலாமல் போகிறது. இடித்துரைப்பவரையெல்லாம் ஏசியும் கூசியும் ஒதுக்கும் இராவணன், வீடணனின் அறப் போதனைகளைப் பொறுக்கமாட்டாதவனாய் அவனை இலங்கையை விட்டே விரட்டி விடுகிறான். அறச்சார்புடைய வீடணன் இயல்பாக அறத்தின் மூர்த்தியாகிய இராமனிடம் அடைக்கலம் தேடுகிறான்.

வீடணன், பகைவனாகிய இராவணனின் தம்பியாதலால், சுக்ரீவன் முதலான வானரச் சேனையினர் அவனுடைய வருகையை விரும்பாமல் எதிர்க்கின்றனர். 'அவனை ஏற்றுக் கொள்ளக்கூடாது' என்று இராமனிடம் கூறுகின்றனர். ஆனால் இராமன் 'அபயம்' என்று வந்தவர்க்கு அடைக்கலம் தர வேண்டிய அருங்கடமை அரசர்களுக்கும் தலைவர்களுக்கும் உண்டு என்பதை விளக்குகிறான்.

"வீடணனுடைய உடனிருப்பால் இலங்கைப் போரில் வெற்றி பெறுவதோ, தோல்வி அடைவதோ, எதுவாயினும் ஆகுக. ஆனால் என்னிடம் அடைக்கலம் தேடும் வீடணனை நான் கைவிடுதல் இயலாது" என்று தன் நிலைப்பாட்டைக் கூறிவிட்டு, அடைக்கலம் ஏற்பதன் பெருமையைப் பற்றி விரிவாக விளக்குகின்றான் இராமன். "முன்னர், பாற்கடலைக் கடைந்தபொழுது எழுந்த நஞ்சையுண்டு, தன்னை அண்டியவர்க்கு 'அபயம்' அளித்த சிவபெருமான், வேடனுக்கு அடைக்கலம் தந்து பசி போக்கிய புறா, ஆதிமூலமே என்றழைத்த யானைக்கு அபயம் அளித்த நாராயணன், கூற்றுவனை எற்றி மார்க்கண்டேயனுக்கு அபயம் அளித்த மழுவாளன், சானகிக்கு அபயம் அளித்துத் தன்னுயிர் நீத்த சடாயு ஆகியோருடைய அருள் நிறைந்த செயல்களைப் பற்றிப் புகழ்ந்து, அவற்றின் மூலம் அடைக்கலம் அளித்துப் பிறரைப் புரத்தலின் உயர்ச்சியைப் பற்றிக் கூறுகிறான். மேலும் "அபயம் என்று அண்டியவர்க்கு அருளாத நாள் ஒன்றில் ஒருவன் வாழ்ந்திருந்தாலும், அவன் இறந்தவனாகவே கருதப்படுவான். உள்ளம் உடைந்தவர்க்கு உதவாதவன், உள்ளது ஒன்று ஈயாதவன்,

அபயம் வேண்டி அடைந்தவர்க்கு அருளாதவன் இருக்கும் இடத்தில் அறம் ஏது? அவனுக்கு ஆண்மைதான் ஏது? அபயம் அளிக்கும் அருள் மனம் வேதத்தைவிட விழுமியது அன்றோ? மேலும் ஏமமுறத் தன்னை ஓம்பிய அருட்பெருஞ்செல்வர் களுக்கு சேமமுற வீடு பேறு அளிக்கும் மேன்மையினும் மேன்மையான பண்பு அடைக்கலம் அளிக்கும் பண்பன்றோ?" என்று மென்மேலும் அப்பண்பைப் புகழ்ந்துரைத்துக் கொண்டே செல்கிறான். தன்னைப் பற்றி நிற்பவனைப் பற்றி அருள் புரிதல் தன் கடன் என்றும் கூறி வீடணனிடம் அனைவரும் நட்பு பாராட்டும்படியான சூழலை உருவாக்கி விடுகிறான் இராமன்.

இராமனுடைய, இத்தகைய, ''அண்டியவர்க்கு அபயம் அளிக்கும்'' அருட்பண்பின் அடிப்படையிலேயே வாலி வதத்தை நாம் அணுக வேண்டும். ஏனெனில் சுக்ரீவனுக்கு அபயம் அளித்துவிட்ட காரணத்தினாலேயே வாலியைக் கொல்கிறான் இராமன். எனவே இராமனின் அடைக்கலம் காக்கும் பண்பு நலன், வாலி வத நிகழ்ச்சியில் மிகுந்த முக்கியத்துவம் பெறுகிறது. அந்தணர், வீடணன் ஆகியோருக்கு அடைக்கலம் தரும்பொழுது எழாத பல சோதனைகள், சுக்ரீவனுக்கு அபயம் அளிக்கும் காலகட்டத்தில் இராமனுக்கு நேர்ந்து, பழியோடு கூடிய வாலி வதத்திற்கு அவனை இட்டுச் சென்று விடுகிறது! உலகத்தின் நோக்கில் பழியான வாலி வதம் உண்மையில் அத்தகையதுதானா? பழியெனில் இராமன் அதை ஏன் செய்தான்? அப்பழிக்குக் கழுவாய் தேடுவதற்கு வினைகள் ஆற்றி, இராமன் அவனளவில் ஆத்ம சுத்தி செய்து கொண்டானா? அதை உலகம் அறியுமா? இவற்றுக்கெல்லாம் விடை கண்டுபிடித்து, அந்த விடைகளினூடே வாலி வத நிகழ்ச்சியில் இராமன் குற்றம் புரிந்தவனா, இல்லையா என்பதை நாம் தேர்ந்து தெளிய வேண்டும்.

முதலில் எத்தகைய சூழலில் இராமனுக்கும் சுக்ரீவனுக்கும் நட்பு ஏற்படுகிறது என்பதை அறிந்துகொள்ள வேண்டியது அவசியம். விரிவஞ்சி நிகழ்ச்சிகளின் சுருக்கம் மட்டுமே கூறப்படுகிறது.



## நட்பினை நயக்கும் இராமன்

அயோத்தியின் அரசனாகிய இராமன் தவ வேடம் தலைக் கொண்டு வனத்தில் வாழ்ந்தாலும், அந்தணரையும் தன்னை அண்டினோரையும் தன் வில் திறத்தால் காத்துத் தன் வீரப்பண்புகளை நிலைநிறுத்தியவனாகவே வாழ்கிறான். அத்தகைய தன் முயற்சியில் அறச் சார்புடைய வினைகளை அவனுடைய அறமனம் இயல்பாக நாடுகிறது. அவ்வியல்பைப் பின்வருமாறு உலகம் ஏத்துகிறது.

*"அறம் தலைநிறுத்தி, வேதம் அருள் சுரந்து அறைந்த நீதித்*
*திறம் தெரிந்து, உலகம் பூணச் செந் நெறி செலுத்தி, தீயோர்*
*இறந்து உக நூறி, தக்கோர் இடர் துடைத்து, ஏக, ஈண்டுப்*
*பிறந்தனன் - தன் பொன்பாதம் ஏத்துவார் பிறப்பு அறுப்பான்"*
*(சுந்தர - பிணி வீட்டு - 81)*

அறம் எனப்படுவது யாது? மறை நூல்கள் விதித்தவற்றைச் செய்வதும், விலக்கியவற்றைத் தவிர்ப்பதுமேயாகும். அந்நெறியில் நின்று தனக்கு விதிக்கப்பட்ட அரச தர்மத்துக்குட்பட்டுத் தீயவர்களை அழித்து 'தக்கோர் இடர் துடைத்து', அறம் தலை நிறுத்துகிறான் இராமன்.

இவ்வாறு வனத்தில் பத்தாண்டு காலம் முடித்துவிட்ட நிலையில், அகத்திய முனிவரைக் கண்டபின் எஞ்சிய காலங்களைக் கழிப்பதற்காகப் பஞ்சவடி தீரத்துக்கு வருகிறான் இராமன். உயர்ந்து வளர்ந்த மரங்கள் ஓங்கி, அமைந்து நிலைத்த மலையும் ஓங்கிப் பூங்குலை குலாவும் குளிர் சோலை புடை விம்மி, தூங்கு திரை ஆறு சூழ உள்ள பாங்கரு உறையுளான பஞ்சவடி,

*"கன்னி இள வாழை கனி ஈவ; கதிர் வாலின்*
*செந்நெல் உள; தேன் ஒழுகு போதும் உள; தெய்வப்*
*பொன்னி எனல் ஆய புனல் ஆறும் உள; போதா,*
*அன்னம் உள, ................"*

*(ஆரணிய - அகத்திய - 58)*

என்னுமாறு வளம் கொழிக்கும் வனமாகக் காட்சியளிக்கிறது. இராமனும் சீதையும் அவ்வனத்தின் இயற்கைக் காட்சிகளின் அழகில் இதுவரை தாம் கண்டிராத உள்ளத்து உவகையையும், உணர்வின் இன்பத்தையும் கண்டு, இன்புற்று, அன்புடன் இனிது விளையாடி உரையாடி வாழ்ந்தனர். இத்தகைய காலத்தில்தான் ஒரு நாள், இலங்கை வேந்தன் இராவணனின் தங்கை சூர்ப்பணகை, இராமபிரான் மீது மோகம் கொண்டு, அவனை நெருங்க, சினமுற்ற இலக்குவன் அவளை அங்க பங்கம் செய்ய, பழி கொண்ட உள்ளத்துடன் சூர்ப்பணகை இராவணனை அடைந்து, மானிடர் இருவர் தனக்குச் செய்த குற்றத்தினைக் கூறி அழுது அரற்றுகிறாள். இத்தகைய கொடுமையை அவர்கள் அவளுக்கு இழைக்கச் சூர்ப்பணகை இழைத்த குற்றம் என்ன என்று கேட்கிறான் இராவணன். இராவணனுக்கு உள்ள பெண் மோகம் பற்றி நன்றாக அறிந்து வைத்துள்ள சூர்ப்பணகை, பேரெழிலாள் சீதை - இராமனின் மனைவி - அவளை இராவணனக்குரியவளாக்குவதற்குத் தான் எடுத்த முயற்சியின் விளைவாகவே தான் அலங்கோலம் அடைந்ததாகக் கூறுகிறாள். சீதையின் பேரெழிலைப் பெரிதாக வருணிக்கிறாள். அவ்வருணனையைக் கேட்ட கணம் முதல், சீதையின்பால் காமப் பித்தேறிய இராவணன், அவளை வஞ்சகமாக அடையும் நோக்கத்துடன், தன் மாமன் மாரீசனை மாய மானாக வேடம் புனையச் செய்து பஞ்சவடியிலுள்ள இராமனின் பன்னசாலைக்கு எதிரில் திரியச் செய்கிறான். பொன்னாலும் மாணிக்கத்தாலும் ஆகிய அவ்வழகிய மானின் எழிலில் மனம் பறி கொடுக்கும் சீதை, இராமனிடம் அம் மானைப் பிடித்துத் தனக்கு விளையாடத் தருமாறு வேண்டுகிறாள். இலக்குவன் எவ்வளவோ தடுத்தும் கேளாமல் சீதையின் ஆசையை நிறைவேற்றுவதற்காக இராமன் மாயமானைத் துரத்திச் செல்கிறான். அம்பெய்கிறான். மான் வடிவ மாரீசனோ இறக்கும் தறுவாயில் தன் குரலை இராமன் குரல் போலவே மாற்றி இளையோனை அழைத்துவிட்டுப் பின் மடிகிறான். இராமனின் அபயக் குரல் கேட்ட சீதை, வயிறு அலைந்து மயங்கிப் பின் இலக்குவனை வலிந்து தூற்றியும் ஏசியும் பேசியும் இராமனைக் காப்பதற்குக் காட்டிற்குள் அனுப்புகிறாள். இராம இலக்குவர் இருவரும் உடனில்லாத சூழலில் துறவிபோல் வேடம் பூண்ட இராவணன், தூயவள் சானகியைச் சிறையெடுத்து இலங்கைக்கு எடுத்துச் சென்று அசோக வனத்தில் சிறை வைக்கிறான்....

...... அரக்கன் சூழ்ச்சியை சடாயு மூலம் அறிந்த இராம இலக்குவர் சீதையைத் தேடி மென்மேலும் காடுகளைக் கடந்து நடந்து, வாலி அரசு புரியும் நாடான கிட்கிந்தை மலை வளநாட்டிற்கு வரும் வழியில் இராமனுக்குக் கவந்தன் என்ற அசுரனை அழிக்க வேண்டிய சூழ்நிலை ஏற்படுகிறது. கவந்தனோ இராம பாணத்தால் சாப விமோசனம் பெற்று 'தனு' என்ற கந்தர்வ வடிவம் பெறுகிறான். முன்னொரு காலத்துச் சாபத்தினால் கவந்த வடிவம் பெற்றிருந்த தான், இராமனின் மலர்க்கை தீண்ட தன்னுடைய சுயவடிவம் மீண்டமைக்காக மகிழ்ந்து இராமனை வாழ்த்துகிறான். இதற்குப்பின் நடக்கும் நிகழ்ச்சி வாலி வதத்தில் முக்கியத்துவம் பெறுகிறது. இராமனுக்குற்ற துன்பத்தை முழுதும் அறிந்தவன் ஆகிய இக்கந்தர்வன், தனக்குச் சாப விமோசனம் அளித்து உதவிய இராமனுக்குத் தான் உதவும் எண்ணத்துடன் சீதையைச் சிறை மீட்கும் வழி ஒன்றைக் கூறுகிறான்.

அவனுடைய உரை பின் வருமாறு:

"இராம! தக்க துணையில்லாமல் நீ இராவணனை வென்று சீதையை சிறை மீட்க இயலாது. ஆற்றைக் கடப்பதற்குப் புணை ஒன்று தேவையன்றோ? அழித்தல் தொழிலை ஆற்றுகின்ற சிவபெருமானுக்கும் பூத கணங்களின் உதவி தேவைப்படுகின்றதல்லவா? எனவே நீயும் தக்க துணை ஒன்றைக் கைக்கொள்ள வேண்டும். இதில் சிந்தித்துச் செயல்பட வேண்டியது அவசியம். தீயவர் சேர்க்கையைத் தவிர்த்து, செவ்வியோர் நட்பை நீ நாட வேண்டும். உன்னுடைய பக்தையான சவரியைக் கண்டு, அவள் மூலம் வழி கேட்டுக் கொண்டு, இரலையின் குன்றம் எனும் மலையகத்தை அடைந்து, அங்கு வாழும் சூரியனின் புதல்வனாகிய சுக்ரீவனைச் சந்தித்து, அவனோடு மனம் ஒன்றிய நெருங்கிய நட்பை ஏற்படுத்திக் கொண்டு உன் எண்ணத்தை ஈடேற்றிக் கொள்" இவ்வாறு இராமனுக்குச் சீதையைச் சிறை மீட்பதற்கான உபாயம் ஒன்றைக் கூறிவிட்டு வான் வழி ஏகுகிறான் கந்தர்வன் ஆகிய தனு.

கந்தர்வனுடைய வழிகாட்டுதல் காப்பியத்தில் காணப்படும் வகையில் ஈண்டு தரப்படுகிறது.

*"ஆயது செய்கை என்பது, அறத் துறை நெறியின் எண்ணி,*
*தீயவர்ச் சேர்க்கிலாது, செவ்வியோர்ச் சேர்த்து, செய்தல்;*
*தாயினும் உயிர்க்கு நல்கும் சவரியைத் தலைப்பட்டு, அன்னாள்*
*ஏயது ஓர் நெறி எய்தி, இரலையின் குன்றம் ஏறி"*

*(ஆரணிய – கவந்தன் – 54)*

*“ ‘கதிரவன் சிறுவன் ஆன கனக வாள் நிறத்தினானை*
*எதிர் எதிர் தழுவி நட்பின் இனிது அமர்ந்து, அவனின் ஈண்ட,*
*வெதிர் பொரும் தோளினானை நாடுதல் விழுமிது’ என்றான்,*
*அதிர் கழல் வீரர்தாமும், அன்னதே அமைவது ஆனார்”*
*(ஆரணிய – கவந்தன் – 55)*

இவ்விடத்தில் இராமனது உள்ளத்தை நாம் அனைவரும் பெற்றவராக வேண்டியது அவசியம். இராமன் விதியின் சதியால் அரசுரிமை இழந்து, நாடு துறந்து காடேகினான். அரக்கர் குல அரசன் இராவணனது வஞ்சனையால் தன் ஆருயிர் மனைவியையும் தொலைத்துவிட்டான். அரசுரிமை, குடியுரிமை இழப்பு ஆகியவற்றை எல்லாம் விட இராமனை நிலை குலைய வைத்த இழப்பு சீதையின் இழப்புதான். தன்னை அண்டியவர்க்கெல்லாம் அபயம் அளித்துக் காத்தவன் இராமன். “நின் பிரிவினும் சுடுமோ பெருங்காடு” என்று கேட்டு அவனையே அடைக்கலமாக நம்பி அவனோடு வந்தவள் சீதை. இப்பொழுது அந்நிய அரசன் ஒருவனிடம் அவளைப் பறிகொடுத்துவிட்டான். இந்த நிலையை அவன் எவ்வாறு பொறுப்பான்? சரி. மனைவியைப் பறிகொடுத்த தன் நிலையை ஒருவாறு சகித்துக் கொண்டு நாட்களைக் கடத்துகிறான் இராமன் என்றே வைத்துக் கொள்வோம். தொடர்ந்து காட்டில் தவசியாக வாழ்ந்து தன் சரிதத்தை முடித்துவிட்டுப் போகக்கூடிய சூழலில் இருக்கிறானா இராமன்? இல்லை. பதினான்காண்டுகள் கழித்து அயோத்திக்குச் சென்று முடிசூட்டி அரசாள வேண்டிய பொறுப்பும் அவனுக்குள்ளது. அதில் சிறிது காலதாமதம் செய்தாலும் பரதன் எரி மூழ்கி உயிரை விட்டுவிடக் கூடிய ஆபத்து வேறு காத்துக் கொண்டிருக்கிறது. சீதையைச் சிறை மீட்பது, அயோத்திக்குச் சென்று பரதனுடைய உயிரைக் காப்பது, ஆகிய இரு அறங்களில் – கடமைகளில் – இராமன் எதை அவசியமானது என்று தேர்ந்தெடுப்பான்? வனவாசம் பூர்த்தியாவதற்குப் பத்து மாதங்கள் இருக்கும் பொழுது சீதை சிறைப்படுகிறாள். அந்தப் பத்து மாதக் காலகட்டத்துக்குள் சீதையைச் சிறை மீட்க இயலுமா? இராமன் காரணமாக பரதனுக்கு ஏற்பட்ட பழி ஒரு புறம் இருக்க, அவன் உயிரை விடுவதற்கும் இராமன் ஒருபோதும் காரணமாகிவிடக்கூடாது. சீதையை மீட்க இயலுமா என்ற ஐயம் ஒருபுறமிருக்க, சீதை உயிருடன் இருக்கிறாளா என்றும் தெரியாத நிலை மற்றொரு புறம் அவனை வாட்டுகிறது. உயிருடன் இருந்தால் அவள் எத்தகைய நிலையில் இருக்கிறாள்? எதிர்பாராமல் ஏற்பட்ட பிரிவும் துன்பமும் அந்த மெல்லியளாளை மனஅதிர்ச்சிக்குள்ளாக்கிச் சித்தம் குலைந்தவளாக்கி இருந்தால் என்ன செய்வது?....... மாமன்னன் சனகனின் குலவிளக்கை – மன்னர் மன்னன் தயரதனின் மருகியை – கருத்தொருமித்துக் காதலித்துக் கரம் பிடித்த தன் மனைவியைச் சித்தம் குலைந்தவளாக மீண்டும் அயோத்திக்கு அழைத்துச் செல்வது

பெருமைக்குரிய செயலாக இருக்க முடியுமா?..... கேள்விகளின் ஊடே சீதையைச் சனகன் தன் கரங்களில் ஒப்படைத்த காட்சி மனத்தில் சித்திரமாய் விரிய,

> *"நெய் அடை, தீ எதிர் நிறுவி, 'நிற்கு இவள்,*
> *கையடை' என்ற அச் சனகன் கட்டுரை*
> *"பொய் அடை ஆக்கிய பொறி இலேனோடு*
> *மெய் அடையாது; இனி, விளிதல் நன்று அரோ" "*
>
> *(கிட்கிந்தா - கார்கால - 92)*

என்று புலம்பி விரக்தியடைகிறான் இராமன். சீதையை மீட்க இயலாமல் போய்விட்டால் தன் நிலை என்ன? நாடு திரும்புவதா? வேண்டாமா? சீதையின் கதி என்னாயிற்று என்று அறியும் வரை தான் நாடு திரும்ப இயலாதே! சீதைக்காக வனத்தில் நாட்களைக் கடத்தினால் பரதனுடைய உயிருக்கு ஆபத்தல்லவா? சீதை இல்லாமல் தன்னால் நாடு திரும்ப இயலுமா? அப்படிச் செய்தால் அது தனக்கு எத்தகையதொரு இழுக்கு! சீதை தன்னுடைய மனைவி என்பது ஓர் புறமிருக்க, தன்னுடைய குடிமகளும் ஆகிறாள். தன்னிடம் அடைக்கலப்பட்ட ஓர் உயிரும் அல்லவா சீதை! அவளைச் சிறை மீட்காமல் அயோத்திக்குச் சென்று தான் முடிசூட்டிக் கொள்ள இயலுமா? தன் மனைவியையே காப்பதற்கு வழியறியாதவன் அவனி புரக்கும் காவலன் ஆவது எங்ஙனம் சாத்தியம்? உலகம் சிரிக்காதா? எந்தக் கோணத்தில் பார்த்தாலும் சீதையை உயிருடனோ அன்றி உயிரற்றவளாகவோ சிறை மீட்க வேண்டியது மிக அவசியமல்லவா? எப்படிச் செயல்படுவது? இலங்கையைக் காலதாமதமின்றி அடைவது எப்படிச் சாத்தியமாகும்? அவளிருப்பிடத்தைக் காண்பது எப்பொழுது? இராவணன் ஒரு பெரும் பேரரசுக்குரிய மாமன்னன், படைபலம் மிக்கவன். அவனுடைய வாள் வலி, தோள் வலி, படை வலிமை, அதன் பெருக்கம், இராவணனுக்கு உதவக்கூடிய மன்னர் கூட்டம் இவை பற்றியெல்லாம் அறிவது எப்படி? அப்படியே அறிந்தாலும் அவனோடு போரிடுவது எங்ஙனம் சாத்தியம்? தனக்குக் குடி படைகள் இல்லை. உதவுவதற்கு மன்னர் குழாம் இல்லை. ஒற்றன் இல்லை. தூதுவன் இல்லை. மந்திரிச் சுற்றம் இல்லை. இவை எதுவும் இல்லாமல் பேரரசன் ஒருவனோடு போர் புரிவது எவ்வாறு உசிதமாகும்? தனக்குரிய துணை தன்னுடைய கோதண்டமும் தன்னை நிழல் போல் தொடரும் இலக்குவனுமே. இருவருடைய வில் திறமும் ஈடு இணையற்றதுதான். அவற்றின் துணையால் ஜனஸ்தானத்துத் தலைவர்களான கரதூடணர்களைப் பூண்டோடு அழித்துவிட்டதும் உண்மைதான் என்றாலும் இலங்கை வேந்தன் பேரரசனாயிற்றே! நடைமுறைக்கு ஒத்தவாறு சிந்திக்காமல் வெற்று வீரம் பேசுவதிலும், அதீத தன்னம்பிக்கை கொள்வதிலும் கால விரயம் செய்து கொண்டிருப்பது அறிவீனம் அல்லவா?....

..................... இப்படி ஆயிரமாயிரம் எண்ணங்கள் சிந்தனையில் மாறி மாறி அலைபுரளச் சித்தம் தடுமாறி நிற்கிறான் இராகவன். இத்தகைய் சிந்தனைகளுக்கிடையே அவனை வாட்டி வதைத்து நீராக நெக்குருக வைப்பது சீதையின் பிரிவும், அவளது நிலை பற்றிய அவனுடைய அறியாமையும்தான்.

சீதையைக் காணாமல் இராமன் பட்ட பாட்டைக் கம்பன் விவரிக்கும் விதத்தைக் காண்போம். ................ பொய் மானை வீழ்த்திய பின், இதில் அரக்கர்களுடைய வஞ்சனை ஏதோ உள்ளது என்றறிந்த இராமன், தன்னைத் தேடி எதிர்வரும் இலக்குவனைக் கண்டு திகைத்துப் பின் சீதை இருந்த குடிலை நோக்கி அம்பிலிருந்து விடுபட்ட கணை போல் வேகமாக ஓடி வருகிறான். பன்னசாலையை அடைகிறான். அங்கே பூஞ்சுரி குழலாளைக் காணாமல், உயிரைத் தேடி வந்த வெற்றுக் கூட்டுடல் அதனைக் காணாமல் திகைப்பது போல் திகைக்கிறான். தான் தொடர்ந்து இவ்வுலகில் உயிர் வாழ்வதற்கு ஒரு பொருளும் தனக்கு இனி இல்லாமல் வாழ்க்கை நிதியைத் தொலைத்தவனாக உணருகிறான். மண்ணும் விண்ணும் சுழல மனநிலை திரியக் கடையூழிக் காலமோவென அண்டமெலாம் நிலை தடுமாறி ஆழி சூழ் உலகமே மேலது கீழாகவும், கீழது மேலாகவும் உருண்டு புரள்வதாக உணர்கிறான்.

*"மண் சுழன்றது; மால் வரை சுழன்றது; மதியோர்*
*எண் சுழன்றது; சுழன்ற, அவ் எறி கடல் ஏழும்;*
*விண் சுழன்றது; வேதமும் சுழன்றது; விரிஞ்சன்*
*கண் சுழன்றது; சுழன்றது, கதிரொடு மதியும்"*

*(ஆரணிய - சடாயு உயிர் நீத்த - 73)*

*"நீலமேனி அந் நெடியவன் மன நிலை திரிய,*
*மூல காரணத்தவனொடும் உலகெலாம் முற்றும்*
*காலம் ஆம் என, கடையிடு கணிக்க அரும் பொருள்கள்*
*மேல கீழுற, கீழன மேலுறும் வேலை"*

*(ஆரணிய - சடாயு உயிர்நீத்த - 75)*

மனைவியைத் தொலைத்தவன் அவ்விழப்பு தன் ஆண்மைக்கு இழுக்கு என்றே எண்ணுவான். இராமன் சீதையின் கணவன் மட்டுமின்றி அவளுக்கு அரசனுமா தலால், அரசன் எனும் தன் தகைமைக்கும் இழுக்கு என்று எண்ணி, கணவன், அரசன் என்று இரு வகைகளிலும் மனம் நொந்து வெந்துயர்க் கடலில் வீழ்ந்து மாய்கிறான்.

தாங்கரு துயரம் வந்த பொழுதெல்லாம் அதனைத் தாங்கிய உத்தமன் – மனச் சீர்மை கெடாமல் பிறருக்கு அறம் போதித்த அருளாளன் – தன் இன்னுயிர்த் தேவியை இழந்து மனம் தடுமாறினான் என்கிறான் கம்பன். தெய்வ அவதாரம் என்று உலகமே தொழுது ஏற்றினாலும், ஒரு கணவன் எனும் நிலையில் இராமன் உணர்வு பூர்வமாக நொய்ம்மை எய்தி மனம் மறுகுவது இயல்பானதும், தவிர்க்க இயலாததுமே ஆகும். இத்தகைய உணர்வுக் குழப்பமும் மனச் சிதறலும் கணவன் என்ற நிலையில் இராமனுக்கு பெருமை சேர்ப்பனவே ஆகும். அன்றி, மனைவியை மாற்றான் ஒருவன் சிறைபிடித்துச் சென்ற பின்னரும், மனச்சீர்மையோடு ஒருவன் இருப்பானேயானால் அவன் மனிதனே அல்லன். "வேறுள குழுவையெல்லாம் மானுடம் வென்றதம்மா!" என்று கம்பன் இராமனை முன்னிருத்தியே பாடுவதற்கு ஏற்ற வகையில், இராமனும் ஒரு சிறந்த மனிதனாக மனைவியின் இழப்பில் மனம் தடுமாறி நிற்கிறான்.

'இழைக்கின்ற விதி முன் செல்ல, தருமம் பின் இரங்கி ஏக' – வன வாழ்க்கைக்கு வந்தவன் அல்லவா இராமன்! அந்த விதி இராமனுக்கான அடுத்தடுத்த வாழ்க்கை வினைகளை இழைத்துக் கோலமிட்டுக் கொண்டே செல்கிறது என்பது இவ்விடத்தில் முற்றும் உண்மையாகிறது. இராவணவதத்தை இலக்காகக் கொண்டு பிறப்பெடுத்த இராமன், அதற்கு முன்னர் 'வாலி வதம்' ஒன்று புரிய வேண்டியவனாகிறான். அத்தகைய நிகழ்ச்சிக்கு 'விதி' கவந்தனுடைய அறிவுரை மூலமாக இராமனை இட்டுச் செல்கிறது. சங்கிலித் தொடர் போல் நீண்டு நிகழும் அத்தகைய நிகழ்ச்சிகளை இனி காண்போம்........

தன் கற்பனை விரிக்கும் அளவெல்லாம் மனத்தால் பயணம் செய்து சீதையின் துயர்நிலை பற்றி எண்ணியெண்ணி ஏக்கமுற்று, துயர் மிகக் கொண்டு கண்கள் குளமாக, நெஞ்சம் கனலாகத் தேவியைத் தேடி வரும் இத்தகைய நிலையில்தான் கந்தர்வனாகிய தனு – இராமனால் சாபவிமோசனம் பெற்றவன் – இராமன் தன் மனைவியைச் சிறை மீட்பதற்குச் சுக்ரீவனின் துணையை நாடச் சொல்கிறான். அலைகடலில் தத்தளிப்பவனுக்குச் சிறு துரும்பும் பெரும் துணையல்லவா? எனவே கரை தெரியாது தவிக்கும் மீகாமன் ஒருவன் கலங்கரை விளக்கம் கண்டு துயர் நீங்கியது போல, ஒருதுணையுமில்லாத வனவாழ்க்கையிலே நிலை தடுமாறி நின்ற இராகவன், கந்தர்வன் கூறும் சொற்களைச் 'சிக்'கெனப் பற்றிக் கொண்டு விடுகிறான்.

இப்படி இராமன் பற்றிக் கொண்டு விட்டதில் தவறுமில்லை. அத்தகைய மனவுணர்வில் நாம் ஆச்சரியப்படுவதற்கும் எதுவுமில்லை. உயிர் போய்க் கொண்டிருப்பவனுக்கு உயிரை மீட்கக் கிடைத்த தண்ணீர் போல கவந்தனின் சொற்களை இராமன் உணர்கிறான் என்பதைவிட, தனக்குற்ற துன்பம் அனைத்தும்

நீங்குவதற்குக் கிடைத்த 'தேவருலக அமிழ்தம்' என்றே அவற்றைக் கொள்கிறான் என்பதே சரியாக இருக்கும். அப்போதைய மனநிலையில் சுக்ரீவனின் நட்பைப் பெற விழைந்ததுபோல வாழ்க்கையில் இராமன் வேறெதையும் விழைந்திருக்க முடியாது. ஒருவரைக் கண்டு பேசிப் பழகிய பின் ஏற்படுத்திக் கொள்ளும் நட்பு அல்ல அது! விதி முந்துறுத்த, காணாமலேயே சுக்ரீவன்பால் இராமன் கொள்ளும் நட்பு அது! எல்லோருடைய துயரத்தையும், தான் தீர்க்க இருக்க, தன்னுடைய துயரத்தைத் தீர்ப்பதற்குள்ளவன் ஒருவன் இருக்கிறான் என்றால், அவன்பால் இராமன் போன்ற அன்பும் அருளுமே ஆளுமையாகக் கொண்ட ஒருவன் எப்படிப்பட்ட நட்புணர்வைப் பூணுவான் என்பதை உணர்வுகளால் உணர்ந்து கொள்ள வேண்டும். எனவே எத்தகைய இடையூறு வந்தாலும் அதனைத் தாண்டி சுக்ரீவனின் நட்பைப் பெறுவதில் உறுதியாக இருப்பதோடு, அதையே இலக்காகக் கொண்டுதான் இராமன் மேலும் தன் காட்டுப் பயணத்தைத் தொடர்கிறான்.

இங்கு இராமன் மனத்தில் உள்வாங்கிக் கொண்ட ஒரு கருத்தை நாமும் மனத்தில் கொள்ள வேண்டியது நலம். கவந்தன் இராமனிடத்தில் "தீயவர் சேர்க்கை விடுத்து, செவ்வியோருடைய துணையை நாடுக" என்று கூறிப் பிறகுதான் சுக்ரீவனுடைய பெயரைக் கூறுகிறான். சுக்ரீவனின் அண்ணனாகிய வாலிதான் கிட்கிந்தை நாட்டின் அரசன். அவனுடைய பெயரைக் கவந்தன் கூறவில்லை. அவனுடைய நட்பையும் பரிந்துரைக்கவில்லை. சுக்ரீவன், அண்ணன் வாலியின் அளவற்ற ஆற்றலுக்கு ஆற்றாமல், அவனுக்கு அஞ்சி நடுங்கித் தன்னுயிரை உடலில் தக்க வைத்துக் கொள்வதற்காகவே, ஒரு சாபத்தின் காரணமாக, வாலி காலடி எடுத்து வைக்கவும் கூடாத இரலையின் குன்றத்தில் வந்து தங்கியிருக்கிறான் என்ற செய்தியைக் கவந்தன் அறிந்திருக்கவே வேண்டும். ஆயினும் நிறை ஆளுமையுடைய வாலியை விடுத்து, அவனுக்கு அஞ்சி வாழும், குறை வலிமையுடைய சுக்ரீவனுடைய நட்பையே இராமனுக்குப் பரிந்துரைக்கிறான் தனு. வாலியின் நட்பை இராமன் நாடிவிடக் கூடாதென்பதற்காகவே அவன் 'தீயோரை விடுத்து' என்ற சொற்களைப் பயன்படுத்திப் பின், சுக்ரீவனைக் குறித்தே, 'செவ்வியோர்த் துணையை நாடுக' என்று கூறுகிறான் என்பது தெளிவு. எனவே கந்தர்வனின் கணிப்பில் வாலி தீயவன், சுக்ரீவன் நல்லவன். ஆனால், வாலி – சுக்ரீவன் பகை பற்றிய விவரமான செய்திகள் எவற்றையும் கூறாமல், இராமனுக்கு வழி மட்டும் காட்டி விடுகிறான். மேலும் சுக்ரீவனின் துணையைப் பெறுவதில் இராமன் உறுதியுடனிருக்க வேண்டும் என்பதை வலியுறுத்தி, "இராமன் சுக்ரீவனை எதிர் எதிர் தழுவி இனிய நட்பை வளர்த்துக் கொள்ள வேண்டும்" என்றும் அறிவுறுத்துகிறான். இச்செய்தியை வேதமென்றே மனம் கொள்கிறான் இராமன். அடுத்து சவரியைச் சந்திக்கிறான். அவள் வாலிக்கும் சுக்ரீவனுக்கும் உள்ள

பகைமையைப் பற்றிக் கூறியிருக்க வாய்ப்புண்டு என்பதைச் சுக்ரீவனைச் சந்திக்கும் இராமன் பின்னாளில் கூறும் சொற்களிலிருந்து உய்த்துணருகிறோம்.

> *" 'மைஅறு தவத்தின் வந்த சவரி, இம்மலையில் நீ வந்து*
> *எய்தினை இருந்த தன்மை, இயம்பினள்;'.........."*
>
> *(கிட்கிந்தா – நட்புக் கோட் – 24)*

என்று இராமன் சுக்ரீவனைச் சந்தித்தபின் அவனிடம் கூறுகிறான். இராமனுடைய இக்கூற்றிலிருந்து சவரி, வாலி சுக்ரீவரைப் பற்றிய விரிவான செய்திகளைக் கூறவில்லை என்று தெரிகிறது.

வாலியிடம் ஏற்பட்ட பகையினால், இரலையின் குன்றத்தில் தனியரசு புரிகிறான் சுக்ரீவன் என்று மட்டும்தான் கூறியிருக்க வேண்டும் என நாம் ஊகிக்க வேண்டியுள்ளது. எனவே சுக்ரீவன் – வாலி பகையின் ஆழ அகலம் தெரியாத நிலையில், பகைமைக்கான காரணங்களும் தெரியாமல் சுக்ரீவனுடைய துணையை மட்டுமே விரும்பி உணர்வுபூர்வமாக நட்பு பூண்டு விடுகிறான் இராமன் என்பது தெளிவு. எந்த வகையிலாவது சுக்ரீவனின் நட்பைப் பெற்று விட வேண்டும் என்ற உணர்ச்சியை இராமன் பெறும் வண்ணம் சுக்ரீவனைப் பற்றிய நல்ல அபிப்பிராயத்தை ஏற்படுத்தும் பங்களிப்பைக் கந்தர்வன் முதலில் செய்துவிடுகிறான். அடுத்து அத்தகைய பங்களிப்பை அனுமனும் செய்கிறான்..... சுக்ரீவனுடைய இருப்பிடத்தைத் தேடி வரும் வழியில்தான் அவனுடைய அமைச்சனான அனுமனை முதன் முதலில் காண்கிறான் இராமன். அனுமன் தன்னை அறிமுகப்படுத்திக் கொள்ளும் விதமும், ஆளுகின்ற சொற்களின் வலிமையும் இராமனை வெகுவாக ஈர்க்கின்றன.

> *" 'ஆற்றலும், நிறைவும், கல்வி அமைதியும், அறிவும், என்னும்*
> *வேற்றுமை இவனோடு இல்லையாம்'........."*
>
> *(கிட்கிந்தா – அனும – 17)*

என்று அனுமனின் ஆற்றலைப் போற்றுகிறான் இராமன். அத்துடன் அனு... ...த உரையைக் கேட்ட பின்,

> *" 'இல்லாத உலகத்து எங்கும், இங்கு இவன் இசைகள் கூறக்*
> *கல்லாத கலையும். வேதக் கடலுமே' என்னும் காட்சி*
> *சொல்லாலே தோன்றிற்று அன்றே! யார் கொல் இச் சொல்லின் செல்வ..."*
>
> *(கிட்கிந்தா – அனும – 18)*

என்று அவனது சொல் மாட்சியையும் புகழ்கிறான். அனுமன் தன்னை "இரலையின் மலையில் இருந்து வாழும் சுக்ரீவன் என்னும் எரிகதிர்ப் பரிதிச் செல்வச் செம்மலுக்கு ஏவல் செய்பவன் நான்" என்று அறிமுகம் செய்து கொள்கிறான். ஆரம்பத்திலேயே அனுமனைப் பற்றிய நல்லெண்ணம் கொள்ளும் இராகவனுக்கு அனுமன் இப்பொழுது மேலும் இனியவனாகிறான். அடுத்து, அனுமன் சுருக்கமாகச் சுக்ரீவனின் நிலையைக் கூறுகிறான். அப்பொழுதுதான் இராமன், வாலி சுக்ரீவன் தொடர்பான பகைமைக்கான காரணத்தை அறிய வருகிறான். அனுமனின் கூற்று பின்வருமாறு அமைகிறது:

"இந்திரனின் புதல்வனாகிய வாலி, இரவிதன் புதல்வனாகிய சுக்ரீவனை உயிர்ப்பயம் கொள்ள வைத்து இரக்கமற்ற முறையில் அடித்து வதைத்துத் துவைத்து விரட்டியதனால், துன்பமே துணையாக எம்மோடு எம் தலைவன் சுக்ரீவன் இம்மலையில் வாழ்கிறான். அவனைப் பெருஞ்செல்வம் அண்டியது போல இப்பொழுது இங்கு நீவிர் வந்தீர். கொல்ல வந்த கூற்றைக் கண்டு அஞ்சி நடுங்கிக் கிடப்போர்க்கு அபயம் அளிக்கும் மும்மை ஏழ் உலகும் காக்கும் முதல்வர் போல் நீவிர் வந்தீர். எம் குலத்துக்கு இதைவிட உறுதி வேறுண்டோ?".

அனுமனுடைய கூற்றைச் செவி மடுக்கிறான் இராமன். ஆனால் தான் உதவி பெற எண்ணி வந்த இடத்தில் சுக்ரீவனுக்கு உதவி செய்யத் தான் வந்ததாகக் கூறும் அனுமனின் கூற்றைக் கேட்டு இராமன் எத்தகைய உணர்வுக்கு ஆளானான் என்று காப்பியம் கூறவில்லை. ஒருக்கால் அந்தணன் உருவில் இருக்கும் அனுமன் முகமன் கூறும் முகத்தான் அத்தகைய புகழ்ச்சியுரைகளைக் கூறுவதாக எடுத்துக் கொண்டான் போலும்! அல்லது வாலி சுக்ரீவன் பகை தொடர்பாகத் தான் எதுவும் கருத்துக் கூறாதிருப்பதே உத்தமம் என்றும் எண்ணியிருக்கலாம். அன்றியும், ஆரம்பத்தில் கவந்தனின் கூற்றால் சுக்ரீவனைப் பற்றித் தான் கொண்டிருந்த நன்மதிப்பு ஆழ்மனத்தில் பதிந்துவிட்டதால், அனுமனுடைய விளக்கத்தைச் செவி மடுத்தாலும், இருவருடைய பகைக்கான காரணத்தை விரிவாகக் கேட்டு அறியாமல் சுக்ரீவனுடன் நட்பு கொள்வது மட்டுமே தன் நோக்கமெனக் கொண்டிருந்தான் இராமன் என்றும் கொள்ளலாம். எனவேதான், விரிவாக வேறு எதுவும் பேசாமல், சுக்ரீவனைக் குறித்து, அனுமனிடம், "செவ்வழி உள்ளத்தோனைக் காட்டுக! அவனைக் காணும் விழைவாலேயே இங்கு வந்தோம்" என்கிறான். அனுமனிடம் ஆரம்பத்தில் தான் கொண்ட நன்மதிப்பு மனநிலையிலேயே இராமன் தொடர்ந்து இருப்பதால், இப்பொழுது சுக்ரீவனைக் காணும் பேறு வாய்க்கப் பெற்ற அக்கணங்களைப் போற்றுகிறான்.

*" 'நல்லன நிமித்தம் பெற்றேன்; நம்பியைப் பெற்றேன்; நம்பால்*
*இல்லையே, துன்பம் ஆனது; இன்பமும் எய்திற்று' ........"*
*(கிட்கிந்தா - அனும - 34)*

என்று மனத் துயர் தீர்ந்து இன்பமும் எய்துகிறான். மேலும் அனுமனின் பெரும் வானர உருவத்தைக் கண்ட பின்னர்

*" 'நாட் படா மறைகளாலும், நவை படா ஞானத்தாலும்*
*கோட் படாப் பதமே, ஐய! குரக்கு உருக் கொண்டது' ......"*
*(கிட்கிந்தா - அனும - 33)*

என்று அவனை மென்மேலும் புகழ்கிறான். அத்துடன்,

*" ' ................ இவனைப் போலாம் கவிக்குலக் குரிசில் வீரன்*
*சொல்லினால் ஏவல் செய்வான்; அவன் நிலை சொல்லற்பாற்றோ?' "*
*(கிட்கிந்தா - அனும - 34)*

என்று சுக்ரீவனைக் கண்களால் காணாமலேயே அவனைப் புகழ்கிறான். அதாவது 'இத்தகைய வீரன் (அனுமன்) ஏவல் செய்ய விளங்கும் சுக்ரீவனுடைய ஆற்றலையும் அறிவையும் வீரத்தையும் பற்றி மேலும் நாம் கணிக்க என்ன இருக்கிறது?' என்கிறான். உளவியல் கண் கொண்டு நோக்கினால், இங்கு, அனுமனைக் கொண்டு சுக்ரீவனை எடை போடுகிறான் இராமன். அதாவது தான் மனத்தினால் ஏற்கனவே நட்பு பூண்டு விட்ட சுக்ரீவன் தன் மனத்தைக் கவர்ந்துவிட்ட அனுமனின் தலைவன் என்பதனால் தன் நட்புக்குத் தகைமையுடையவனே என்றும், அவன் மூலம் சீதையை மீட்டு விடலாம் என்றும் நம்பிக்கை கொள்கிறான். எனவே அயோத்தி அரசனாகிய இராமன், தன் வாழ் நாளில் முதன் முதலில் ஒரு அரசனுடன் ஏற்படும் நட்பைப் பெரிதும் விழைந்ததை இவ்விடத்தில் இராமனுடைய மனநிலையில் இருந்து உணர வேண்டும். சுக்ரீவனைக் காணாத நிலையிலேயே ஏற்பட்டுவிட்ட நட்பால் குடிபடைகளோடு வாழும் அரசன் ஒருவனுடைய உதவி தனக்குக் கிட்டி விட்டது என்றும், சீதையை மீட்பது இனி நடக்கக்கூடியதே என்றும் எண்ணி மனத்துயர் நீங்குகிறான் இராமன்....

தொடர்ந்து காப்பிய நிகழ்ச்சிக்கு வருவோம். இத்தகைய மனநிலையை இராமனுக்கு ஏற்படுத்திய அனுமன் அடுத்து சுக்ரீவனைக் கண்டு இராமனுடனான அவனுடைய நட்புக்கு ஏற்பாடு செய்கிறான். சுக்ரீவனை அடைந்த அனுமன்,

"யானும், என் குலமும், இவ்வுலகும் உய்ந்தனம், வாலி எனும் அளவிலா வலிமையுடையவனுடைய உயிர் தொலைக்கும் காலன் வந்துவிட்டான். நாம் இடர்க் கடல் கடந்தனம்" என்று கூறி "இராமன் வரவு சுக்ரீவனுக்கு நல் வரவாகும்" என்று முதலில் அவனுக்கு ஒரு நற்செய்தியைத் தெரிவிக்கின்றான். அடுத்து இராமனுடைய சரிதம் முழுவதையும் - அவனுடைய் தாடகை வதம் முதல் மிதிலையில் சிவதனுசு இறுத்தது, பரதனுக்கு அரசுரிமை அளித்தது, விராதன் வதம், கரதூடணர் வதம், கவந்தன் வதம் ஈறாக அனைத்தையும் பற்றி ஒன்றுவிடாமல் கூறி, 'இந்திரன் புதல்வனான வாலிக்கு இறுதி தரும் இராமன், உன் நல் வினையால், உன் உறவைத் தேடித் தன் துன்பம் தீர இங்கு வந்துள்ளான். அவனது நட்பை நாடிப் பெறுதலே நாம் உய்யும் வழி' என்றும் கூறுகிறான்.

இராமன், சுக்ரீவனைக் கண்களால் காணாத நிலையிலேயே, கவந்தன் எவ்வாறு இராமன் மனத்தில் சுக்ரீவன் பால் நட்புக்கான விதையை விதைக்கிறானோ, அவ்வண்ணமே இராமனைக் கண்களால் காணமலேயே, இராமன் வாலியைக் கொன்று தன்னை உய்விக்க வந்த தெய்வம் என்ற உணர்வைச் சுக்ரீவன் பெறுமாறு செய்து விடுகிறான் அனுமன். இதனைத் தொடர்ந்து இராம சுக்ரீவர் சந்திப்பு நிகழ்கிறது. வாலி வதத்தில் இந்த நிகழ்ச்சி அடுத்த முக்கியத்துவம் வாய்ந்த நிகழ்ச்சியாகும். ஒருவரையொருவர் கண்களால் காணாமலேயே மனத்தால் நட்பு பூண்ட இருவர், தங்களுக்குற்ற துன்பத்தைப் போக்கிக் கொள்ள ஒருவருக்கொருவர் உதவியை நாடிப் பெறும் நோக்கத்தோடு சந்திக்கின்றனர். இருவருமே மிகுந்த விழைவோடு ஒருவரையொருவர் நோக்குகின்றனர். அவரவர் மனநிலை உந்துகின்ற நெறியில் நின்று சொற்களைப் பயன்படுத்திக் கொண்டு அறிமுகம் செய்து கொள்கின்றனர். இராமன், தான் சுக்ரீவனைத் தேடி வந்த நோக்கத்தைச் சொல்ல அரம்பிக்கின்றான்.

*" '............................ யாங்கள் உற்ற*
*கைஅறு துயரம், நின்னால் கடப்பது கருதி வந்தேம்;*
*ஐய! நின் - தீரும்'.................................."*
*(கிட்கிந்தா - நட்புக்கோள் - 24)*

இராமன் இப்படிச் சொல்லி முடிக்குமுன்பாகவே சுக்ரீவன் மிகுந்த பதற்றத்துடன்,

*" 'முரணுடைத் தடக் கை ஓச்சி, முன்னவன், பின் வந்தேனை,*
*இருள்நிலைப் புறத்தின் காறும், உலகு எங்கும், தொடர இக் குன்று*
*அரண் உடைத்து ஆகி உய்ந்தேன்; ஆர் உயிர் துறக்கலாற்றேன்;*
*சரண் உனைப் புகுந்தேன்; என்னைத் தாங்குதல் தருமம்' என்றான்"*
*(கிட்கிந்தை – நட்புக்கோள் – 25)*

சுக்ரீவன் "என்னைத் தாங்குதல் உன் தருமம்" என்று தொழுது நின்றபொழுது இராமனின் மன உணர்வு எப்படியிருந்தது? தான் உதவி கேட்க எண்ணி வந்த இடத்தில், தன்னைச் சரணடைந்து சுக்ரீவன் அடைக்கலம் கேட்கிறானே என்று இராமன் ஒரு கணம் திகைத்தே இருக்க வேண்டும். ஆயினும் திகைப்பினின்றும் மீண்டு சுக்ரீவனின் வேண்டுதலைக் கேட்டு இராமன் மகிழ்ச்சியே அடைந்தான்.

*"கெட்டாலும் மேன்மக்கள் மேன் மக்களே – சங்கு*
*சுட்டாலும் வெண்மை தரும்" – (நாலடியார்)*

என்பது சான்றோர் மொழியல்லவா? உலகத்தை ஆளப் பிறந்த இரவிகுலத் திலகன், அயோத்தியின் வேந்தன், பிறரிடம் உதவி பெற்றுக் கடன்படும் நிலை ஏற்படாமல், பரஸ்பரம் ஒருவருக்கொருவர் உதவி செய்து கொள்ளக்கூடிய சூழல் உள்ளதே என்று அப்பெருமான் ஒரு வகையில் உவகையே அடைந்திருக்க வேண்டும். 'அபயம்' கேட்பவருக்கு அருளிச் செய்தல் என்பது இராமனுக்கு வாய்த்த இயல்பான அருங்குணம் அல்லவா? எனவே மிக்க மகிழ்ச்சியோடு சுக்ரீவனுடைய நட்பை விரும்பி ஏற்றுக் கொண்டு விடுவதோடு, சுக்ரீவன் தன்னிடம் யாசிக்கும் அபயத்தையும் அருளும் விதமாகச் சொற்களைப் பயன்படுத்துகிறான். அந்தச் செய்கையினூடே நட்பையும் பின்வரும் வகையில் உறுதி செய்கிறான்.

*" 'மற்று, இனி உரைப்பது என்னே? வானிடை, மண்ணில், நின்னைச்*
*செற்றவர் என்னைச் செற்றார்; தீயரே எனினும், உன்னோடு*
*உற்றவர் எனக்கும் உற்றார்; உன் கிளை எனது; என் காதல்*
*சுற்றம், உன் சுற்றம்; நீ என் இன் உயிர்த் துணைவன்' என்றான்."*
*(கிட்கிந்தை – நட்புகோள் – 27)*

'வாலி வத' நிகழ்ச்சியில் இராமனுடைய இந்தக் கூற்று மிக முக்கியமானது.

இக்கூற்றின் பொருள் என்ன?

"மண்ணில், வானில், எங்கும் உனக்குப் பகைவர் என்றால் எனக்கும் பகைவரே. தீயவரே என்றாலும் உனக்கு நண்பர் என்றால் எனக்கும் நண்பரே. உன்

உறவினர் என்னுடையவர். என் சுற்றம் உனக்கும் சுற்றம். நீ என் இன்னுயிர்த் துணைவன்"...........

**நாம் இதுகாறும் காப்பியத்தில் காணாத ஒரு இராமனை - உணர்ச்சிகள் பொங்கிப் பீறிடச் சொற்களைக் கொட்டும் இராமனை - இவ்விடத்தில் பார்க்கிறோம்.** சுக்ரீவனை நண்பனாக மட்டுமின்றி, உறவினனாகவே ஏற்றுக் கொள்கிறான் இராமன். என்ன காரணம்? தான் உணர்ச்சி பூர்வமான உறவு கொண்டுள்ள தன் மனைவியை மீட்பதற்கு உதவக் கூடியவன் சுக்ரீவன் என்ற அடி மனத்து உணர்வுதான் காரணம். தன்னை நம்பித் தன்னுடன் வனமேகிய சீதையின் பால் அவனுக்கிருந்த உணர்ச்சிமிக்க காதல், அவளை மீண்டும் பெறுவதற்குத் தனக்கு உதவக்கூடிய சுக்ரீவன் பால் உணர்ச்சியைத் தூண்டி, அவனை உறவினனாகவும், இன்னுயிர்த் துணைவனாகவும் ஏற்க வைத்தது. உளவியல் ரீதியான உண்மை இது. இராமனின் இத்தகைய உணர்ச்சி பூர்வமான நடத்தையை அவன் சடாயுவைச் சந்திக்கும் நிகழ்ச்சியிலும் காண்கிறோம். தான் பெரிதும் அன்பு பாராட்டுகின்ற தந்தையின் நண்பனான சடாயுவைத் தன் தந்தையாகவே ஏற்றுக் கொள்கிறான் இராமன்............

.................. வனத்தில் இராமன் சடாயுவைக் காண்கிறான். அப்பொழுது, சடாயு தன் தந்தையின்பால் கொண்டுள்ள நட்பின் ஆழத்தைப் பற்றி அறிகிறான். அறிந்தபின், தன் தந்தையே சடாயுவின் உருவில் மீண்டு வந்தனன் என்று உவக்கிறான்.

*"பூண்ட பெரும் புகழ் நிறுவி; நம் பொருட்டால்*
*பொன்னுலகம் புக்க தாதை,*
*மீண்டனன் வந்தான் அவனைக் கண்டனரே*
*ஒத்தனர் – அவ் விலங்கல் தோளாா"*
*(ஆரணிய – சடாயு காண் – 26)*

மேலும், சடாயுவைக் கண்டதால், பிரிவுத் துயர் நீங்கப் பெற்றோம் என்கிறான்.

*" 'தாயின், நீங்க அருந் தந்தையின், தண் நகர்*
*வாயின், நீங்கி, வனம் புகுந்து, எய்திய*
*நோயின் நீங்கினெம் நுன்னின்'........"*
*(ஆரணிய – சடாயு காண் – 29)*

என்பவை காப்பிய வரிகள்.

அடுத்து, சீதையின் பொருட்டு இராவணனிடம் போரிட்டுச் சடாயு உயிர்விடும் பொழுது, சடாயுவின் மரணத்துக்குக் காரணமான இராவணன் பால் இராமனுக்குச் சினம் பொங்குகிறது. சடாயுவிடம் இராமன் கொண்டிருந்த அன்பு எந்த அளவுக்கு உணர்வு பூர்வமானது என்றால், சீதையைக் கவர்ந்தவன் இராவணன் என்பதற்காக அல்ல, சடாயுவைக் கொன்றவன் என்பதற்காகவே இராவணனுடைய உயிர் தொலைக்க வேண்டும் என்று எண்ணுகிறான். இவ்வாறு "உன் தந்தையைக் கொன்றவனை நான் கொன்று, அவனுயிரை உண்ணுவதற்குரிய ஊற்றம் இல்லாத சிந்தையனாகிவிட்ட என் செய்கையைப் பற்றி என்ன சொல்வது?" என்று தன் கையறு நிலையைப் பற்றி இலக்குவனிடம் கூறித் தன்பால் கழிவிரக்கம் கொள்கிறான்.

*"............................................... 'ஏழைச்*
*சந்தவார் குழலினாளைத் துறந்தனை தணி தியேனும்,*
*உந்தையை உயிர்க் கொண்டானை உயிருண்ணும் ஊற்றம் இல்லாச்*
*சிந்தையை ஆகி நின்று, செய்வது என் செய்கை?' என்றான்"*
*(ஆரணிய - சடாயு உயிர்நீத்த - 132)*

இங்கு, சடாயு தன் தந்தை தயரதனின் நண்பன் என்பதோடு, தன் மனைவியைக் காக்கும் முயற்சியில் உயிர் துறந்தவனுமாகையால் உணர்வின் வழி நின்று மனம் இரங்குகிறான். எனவே அடிப்படையில், சீதை தொடர்பான நிகழ்ச்சிகள் சுக்ரீவனின் துணையோடு நடக்கவிருப்பதால் சுக்ரீவனுக்காக உணர்ச்சி மேலிட்டுப் பேசுகிறான் இராமன் என்பது உண்மையே. ஆயினும், சுக்ரீவன் வாய் திறந்து "அபயம்" என்று கேட்டபிறகு, இராமன், தன்னுடைய சுயநல நோக்கத்தைப் பின்னுக்குத் தள்ளிவிட்டு, சுக்ரீவனைக் காக்கும் கடமையைத் தன் முதற்கடமையாக்கிக் கொள்கிறான் என்பதுதான் உண்மை. காரணம், தன்னிடம் அபயம் கேட்டுச் சரணடைந்தோரைக் காப்பதை இராமன் கொள்கையாகவே வைத்திருக்கிறான் என்பதை முன்னமேயே கண்டோம்.

ஆயினும், இத்தகைய உணர்ச்சி முந்துறும் மன நிலைச் சூழலிலும், அறிவு சான்ற இராமன், தன் அறிவின் ஆட்சி மேம்பட, நட்புறுதியை இறுதி செய்வதற்கு முன் ஒரு கருத்தைச் சொல்லத்தான் செய்கிறான். அஃதென்னவென்று காண்போம். 'என்னைத் தாங்குதல் தருமம்' என்று சுக்ரீவன் இராமனிடம் அபயம் கேட்டவுடன் இராமன், **"கடந்த காலங்களில் உனக்குற்ற இன்ப துன்பங்கள் எல்லாம் கிடக்கட்டும். அவற்றை நாம் மனம் கொள்ள வேண்டியதில்லை. இனிமேல் – எதிர்காலத்தில் – உனக்கு ஏற்படும் துன்பங்கள் யாவையும் நான் தீர்ப்பேன். அவ்வாறே எனக்குறும் துன்பங்களை நீயும் தீர்ப்பாய்" என்கிறான்.**

காப்பிய வரிகள்,

*"........................................ அக்குரக்கு வேந்தை, இராமனும் இரங்கி நோக்கி*
*'உன் தனக்கு உரிய இன்ப துன்பங்கள் உள்ள, முன்னாள்*
*சென்றன போக, மேல் வந்து உறுவன தீர்ப்பல்; அன்ன*
*நின்றன, எனக்கும் நிற்கும் நேர்' என மொழியும் நேரா"*
*(கிட்கிந்தா - நட்புக் கோள் - 26)*

மேற்காணும் பாடலில், சீதையைச் சிறை மீட்கும் பணியில், சுக்ரீவனுடைய பங்களிப்பைத் தவற விட்டு விடக் கூடாதென்ற விழிப்புணர்வோடும், அதே சமயத்தில் வாலி - சுக்ரீவர் சகோதரச் சண்டையில் தான் அதீத ஈடுபாடு காட்ட வேண்டிய அவசியம் இல்லையெனும்படிக்கும், இராமன் ஆளும் நட்புப் பிரதிக்ஞைச் சொற்கள் மிகுந்த பாராட்டுக்குரியவை! மேலும் வாலி - சுக்ரீவன் பகையைப் பொருத்தவரை இராமன் தன்னுடைய அணுகுமுறை எவ்வாறு இருக்க வேண்டும் என்பதை முன்னரே தீர்மானித்துவிட்டதாகவும் தோன்றுகிறது. இராமனுடைய மனநிலை பின்வருமாறு இருக்கலாம் என்று கற்போர் ஊகிக்கலாம். (வாலியைப் பற்றிய முழுமையான உண்மைகள் தெரியாத பின்னணியில் என்பதை நினைவில் கொள்க).

வாலி - சுக்ரீவன் பகை என்பது அண்ணன் தம்பிக்குள் ஏற்பட்டிருக்கும் பகை. அதற்கு ஒருவாறு தீர்வு ஏற்பட்டுவிட்டது. அதாவது, வாலி கிட்கிந்தையை ஆள்கிறான். சுக்ரீவன் இரலையின் குன்றத்தை ஆள்கிறான். வாலி இரலையின் குன்றத்துக்கு வரமாட்டான் என்பது உறுதி. (வந்தால் சாபம் காரணமாக இறப்பான்.... முன்னொரு காலத்தில் துந்துபி என்பவனைக் கொன்று அவனுடைய உடலை வாலி வீசி எறிந்தபொழுது, உயிரற்ற அந்த உடல் இரலையின் குன்றத்தில் வாழ்ந்து வந்த மதங்க மாமுனிவரின் காலடியில் விழுந்து அவருடைய தவத்தைக் கலைத்தது. அப்பொழுது மதங்கமுனி சினம் கொண்டு "வாலி இம்மலைக்குள் அடி வைத்தாலே இறந்து படுவனாக!" என்றொரு சாபம் அளித்தார்). சுக்ரீவன் வாலிக்கு ஈடுகொடுக்கக் கூடிய வலியனே என்றாலும், இதுகாறும் வாலி தன்னைப் படுத்திய பாட்டில் அவனை நினைத்தாலே மன நடுக்கம் கொள்பவனாக ஆகிவிட்டான். அண்ணனைப் பகைவனாகவே சுக்ரீவன் கருதுகிறான், அவனுடைய பரிவாரமும் வீரர்களும் அவ்வாறே கருதுகின்றனர்.

இராமனோ, அண்ணன் தம்பியின் உரசலைப் பகை என்றே கருதவில்லை. மாறாக, அந்தப் பகை தீர வழியுண்டு என்றே கருதுகிறான். அப்படியே பகைமை உணர்வு இருந்தாலும் வாலியைத் தேடி கிட்கிந்தைக்குச் சுக்ரீவன் செல்லப்

போவதில்லை. சுக்ரீவனைத் தேடி வாலி இங்கு வரப் போவதில்லை. அவரவரிடத்திலே அவரவர் அரசர் என்று வாழும் நிலை இருவருக்குமே இருக்கிறது. நடந்து முடிந்துவிட்ட நிகழ்ச்சிகளில் தலையிட்டு மாற்றம் கொண்டு வரும் வகைக்கு இனி தன் பங்களிப்பு இருக்கப்போவதில்லை என்று நம்புகிறான் இராமன். எனவே அண்ணன் தம்பியர் பிரச்சினையில் தான் தலையிட விரும்பவில்லல என்பதைப் பிறர் புரிந்து கொள்ளும் வண்ணம் விழிப்புணர்ச்சியோடு சொற்களை ஆலோசித்துப் பயன்படுத்தி வாலி பற்றிய பேச்சைத் தவிர்த்து, சுக்ரீவனுடன் நட்பை மட்டும் உறுதி செய்கிறான் இராமன்.

(இதுதான் இராமனுடைய ஆரம்பகால மனநிலை. இராமனுடைய இந்த மனநிலையைப் பற்றி வாலி, தெள்ளத் தெளிவாகப் புரிந்து கொள்வதாகக் காப்பியம் காட்டுவது, கற்போர்க்கு வியப்பை அளிக்கிறது. அண்ணன் தம்பியரிடையில் இராமன் தலையிடமாட்டான் என்று வாலியே தன் மனைவி தாரையிடம் கூறுவதாகக் காப்பியத்தில் ஒரு நிகழ்ச்சி நடக்கிறது. அந்த நிகழ்ச்சியைச் சற்று விரிவாகப் பார்ப்பது ஈண்டு பயனுள்ளதாக இருக்கும்).

................. இராமன் "வாலியைக் கொல்வேன்" என்று கூறிய வாக்குறுதியின் பலத்தை நம்பி, சுக்ரீவன், இரலையின் குன்றத்தினின்றும் வெளிப்போந்து, வாலியை அறை கூவிப் போருக்கு அழைக்கிறான். அந்த அழைப்பைக் கேட்டு வெகுண்டெழுந்து போருக்கு ஆயத்தமாகிறான் வாலி. அப்பொழுது, வாலியின் மனைவி தாரை இடை மறித்து, தயரதன் மைந்தனாகிய இராமன் வாலிக்கு எதிராகவும், சுக்ரீவனுக்குத் துணையாகவும் செயல்படும் சூழல் உருவாகியுள்ளதைத் தான் ஒற்றர்கள் மூலம் அறிந்ததாகக் கூறுகிறாள். இதைக் கேட்டு வாலி அவளிடத்தில் கடுஞ்சினம் கொள்கிறான். "அறத்தின் நாயகனாகிய இராமன், சகோதரர் இருவர் பொருதும் போரில் இடையில் குறுக்கிட்டு அம்பு தொடுக்க மாட்டான்" என்று உறுதிபடக் கூறுகிறான்.

காப்பிய வரிகள்:

*" 'எம்பியும் யானும் உற்று எதிர்ந்த போரினில்*
*அம்பு இடை தொடுக்குமோ, அருளின் ஆழியான்?'"*

*(கிட்கிந்தா – வாலி வதை – 35)*

வாலியின் இந்தக் கணிப்புக்குப் பொருந்தும் மனநிலையில்தான் இராமன் ஆரம்பத்தில் இருக்கிறான். அதனால்தான், இராமன், வலிந்து, வாலி சுக்ரீவன் பகைமை பற்றிய விளக்கத்தை எவரிடமும் பெற விழையவில்லை. ஆயினும் சுக்ரீவனுடனான நட்பை உறுதி செய்த பிறகு, எதிர்காலத்தில் வாலி, சுக்ரீவனுக்குத்

துன்பம் விளைவித்தால், அப்பொழுது சுக்ரீவனுக்கு உதவ முடிவெடுப்பது இராமனின் கடமையே ஆகிறது. எனவேதான், "இனி உனக்கு வரும் துன்பங்களைத் தீர்ப்பேன்" என்று அபயம் அளித்து, தான் அளிக்கும் அந்த அபய வாக்கு நூற்றுக்கு நூறு விழுக்காடு சத்தியமாகும் என்பதை உறுதிப்படுத்தவே 'உன் பகைவர் எனக்கும் பகைவர்' என்கிறான். (வாலியைக் கொன்று கிட்கிந்தை அரசை மீட்டுச் சுக்ரீவனிடம் தருவதற்கு அடுத்து வரும் சில நாட்களில் தானே முனையக் கூடும் என்று இராமன் அப்பொழுது எண்ணவில்லை). ஆனால், இராமனுடைய வாக்குறுதியில், "நான் வாலிக்கு எக்காலத்திலும் நண்பனாகி விடமாட்டேன். அவன் உனக்குப் பகைவனாக இருக்கும் காலம் வரையில் எனக்கும் பகைவனே" என்ற பொருள் தொக்கி நிற்கும் வண்ணமே அவன் சொற்களைப் பயன்படுத்துகிறான். எனவே, சுக்ரீவன் பொருட்டு வாலியிடம் பகைமை பாராட்ட வேண்டியது இராமனுக்கு அவசியமாகிறது. உடுக்கை இழந்தவன் கைப்போல், நண்பன் இடுக்கண் களையும் மனச்சூழலுக்குத் தன்னை இராமன் ஆயத்தப்படுத்திக்கொள்வதன் மூலம் நட்புக்கு இலக்கணம் படைக்கிறான். ஆக, சீதையைச் சிறை மீட்கும் பணிக்கு முன்னர், இராமனுக்குச் சுக்ரீவனைக் காக்கும் பொறுப்பு ஏற்பட்டு விடுகிறது. சுக்ரீவனின் துணையில்லாமல் சீதையைச் சிறை மீட்க முடியாது என்ற காரணம் மட்டுமல்லாமல், தன்னிடம் அடைக்கலப்பட்டு விட்ட சுக்ரீவனின் துயரத்தைத் தீர்ப்பது என்பது இராமனுக்குத் தவிர்க்க முடியாத கடமையும் ஆகிறது. அடைக்கலப்பட்ட ஒருயிரைக் காப்பதற்கு இராமன் எந்த விலையும் கொடுக்கத் தயாராகிவிடுகிறான். அதுவே பேரறம் என்று நினைப்பதோடு, தன்னுடைய முதல் கடமை என்றும் கருதுகிறான்.

இவ்விடத்தில் ஒரு கருத்தை மனம் கொள்ள வேண்டும். இராமனுடைய வாழ்க்கை நிகழ்ச்சிகளை வலிமையாக நகர்த்திக் கொண்டு போகும் விதிதான் இங்கு இராம - சுக்ரீவனின் நட்பையும் உண்டாக்குகிறது. ஒருவருடன் நட்பு பூணுவதற்கு முன், காரண காரியங்கள், சூழல், பிறருடைய இயல்பு ஆகியவற்றைக் கணித்துத்தான் செயல்பட வேண்டும் என்று அறியாதவனல்லன் இராமன். ஆனால் சுக்ரீவனுடனான நட்பு இராமனால் தீர்மானிக்கப்படுவதல்ல. அது தெய்வ வடிவு பெற்றுவிட்ட கந்தர்வன் தனுவால் தீர்மானிக்கப்படுகிறது. பின்னர் அதற்குரிய களம் அனுமனால் உருவாக்கப்படுகிறது. பின்னர் சம்பந்தப்பட்ட இருவராலும் நட்பு உணர்வு பூர்வமாக உணரப்படுகிறது. இறுதியில் இராமனால் உறுதி செய்யப்படுகிறது. இராமனின் அபயம் அளிக்கும் பெருங்குணம் சுக்ரீவனுடைய நோக்கத்துக்கு உதவியாக அமைந்து விடுகிறது. எனவே விதியின் போக்கில் நிகழ்ச்சிகள் நடக்கின்றன.

விதியின் வலையில் சிக்கிவிடாதிருக்கும் வகையில், இராமனும், வாலி சுக்ரீவர் விஷயத்தில் அதீத ஆர்வம் காட்டாத - வாலி பற்றிய விவரங்கள் எதுவும் அதிகமாகத்

தெரிந்துகொள்ள விழையாத – ஒரு அரசியல் சாணக்கிய முறையைக் கையாளத் தான் செய்கிறான். ஆயினும் வேறு முயற்சிகள் சூழினும் தான் முந்துறுத்த நிற்கும் விதி வலியது அல்லவா? எதைத் தவிர்க்க வேண்டுமென்று இராமன், பாராமுகத்துடன் இருப்பவன் போல் பாவனை செய்து இதுகாறும் நடந்து கொள்கிறானோ, அந்த வாலி வதத்தை "நான் நிகழ்த்தியே தீருவேன்" என்று இராமனையே தன் வாயால் சொல்ல வைத்து விடுகிறது அந்த வலிய விதி! அப்படிச் சொல்லும் மனநிலைக்கு இராமன் எப்படித் தள்ளப்படுகிறான்? அந்தச் சூழல் எவ்வாறு உருவாகிறது? அதை இனி காண்போம்.

'அபயம்' வேண்டிய சுக்ரீவனுக்கு அருளி, அவனைத் தன் இன்னுயிர்த் துணைவன் என்றும் இராமன் நட்பு பாராட்டிய பிறகு, சுக்ரீவன் இராமனுக்கு விருந்தோம்பல் செய்கிறான். விருந்துண்ணும்பொழுது, மனைக் கடமைகளில் ஒன்றான விருந்தோம்பலில் சுக்ரீவனுடைய மனைவி பங்கு பெறாததைக் கவனத்தில் கொள்கிறான் இராமன். காரணம் இன்னதென்று ஊகிக்க முடியவில்லையாயினும், தன்னைப் போலவே சுக்ரீவனும் தன் மனைவியைப் பிரிந்திருக்கிறான் என்பதை மட்டும் உள்ளுணர்வால் உணர்கிறான். (சுக்ரீவன் மனைவியை இழந்து துயர் உறும் வகைக்கு வாலி உருமையை அபகரித்துவிட்டதைப் பற்றி இராமன் இதுகாறும் ஒன்றும் அறியவில்லை.) எனவே காரணத்தை அறியும் நோக்கத்துடன்,

" '*பொருந்து நன்மனைக்குரிய பூவையை*
*பிரிந்துளாய் கொலோ நீயும் பின்?' ..........*"

*(கிட்கிந்தா – நட்புக் கோள் – 35)*

என்று கேட்கிறான்.

இவ்விடத்தில் இராமனுடைய கேள்விக்குச் சுக்ரீவன் பதில் கூறும் முன்னர், அனுமன் முந்திக் கொண்டு பேசத் தொடங்குகிறான். அப் பேச்சின் மூலம் அனுமன், இராமனின் வாலி வதத்துக்கான தன் பங்களிப்பை ஆற்றி விடுகிறான். அதன் விளக்கத்தைக் காண்போம்.

ஆரம்பத்திலிருந்தே இராம சுக்ரீவர் நட்பை உறுதிப்படுத்துவதில் குறியாகச் செயல்படும் அனுமன் – தன் தலைவன் சுக்ரீவனுடைய நலத்தையே என்றும் நாடும் அனுமன் – வாலியைக் கொன்று அரசாட்சியைச் சுக்ரீவனுக்கு நல்குவதையே நோக்கமாகக் கொண்டுள்ள அனுமன் – வாலி குணங்களை விட குற்றங்களே அதிகம் உள்ளவன் என்பதை மிகச் சரியாகக் கணிக்கும் ஆற்றலுள்ள அனுமன் – பிரிந்த மனைவியைக் கண்டடைவது என்பதே இராமனின் இலட்சியம் என்பதை நன்குணர்ந்து

கொண்ட அறிவாற்றலுடைய அனுமன் - ஒவ்வொரு சொல்லின் தன்மையையும் அறிந்து சொல்லாடக் கூடிய அனுமன் - பொருத்தமான கருத்தைப் பொருத்தமான இடத்தில் பொருத்தமான சொற்றொடர்களால் கூறும் கூர்த்த மதியையுடைய அனுமன் – இங்கே சுக்ரீவன் வாய் திறந்து இராமனுக்குப் பதில் உரைக்கும் முன்னர் இடை புகுந்து தான் பேசத் தொடங்குகிறான். இராமன் கேட்ட கேள்வி சுக்ரீவனின் மனைவியைப் பற்றியது. ஆனால் அனுமன் அதற்கான விடையை உடனே கூறாமல், வாலிக்கும் சுக்ரீவனுக்கும் பகைமை ஏற்பட்டதற்கான பின்னணியை விரிவாக விவரிக்க ஆரம்பிக்கிறான். அனுமனிடம் அளவில்லாத பற்றும், அவனுடைய பன்முகப் பரிமாண ஆற்றலின் பால் நன் மதிப்பும் கொண்டுவிட்ட இராமன் அனுமனின் கருத்துகளைக் கூர்ந்து செவி மடுக்கிறான்.

அனுமன் முதலில் வாலியைப் பற்றிக் கூற ஆரம்பிக்கிறான்.

முதலில், வாலி நான்மறை அறிவு பெற்று வேதத்திற்கு வேலியானவன் என்றும், சிறந்த சிவ பக்தன் என்றும் கூறுகிறான்.

*" 'நாலு வேதம் ஆம் நவை இல் ஆர் கலி*
*வேலி அன்னவன், மலையின் மேல் உளான்,*
*சூலிதன் அருள் துறையின் முற்றினான்,*
*வாலி என்று உளான், வரம்பு இல் ஆற்றலான்;' "*

*(கிட்கிந்தை - நட்புக் கோள் - 37)*

நான்மறை அறிவும், சிவ பக்தியும் இருந்தும் வாழ்க்கை நடைமுறையில் அவற்றை வாலி செயலாக்கவில்லை என்ற காரணத்தினாலோ என்னவோ அதைப்பற்றி மேலும் விவரிக்காமல், வரம்பில்லாத உடல் பலத்தினால் மட்டுமே வாலியின் ஆளுமை உலகத்தால் அங்கீகரிக்கப்படுகிறது என்ற உண்மையை இராமன் நன்குணர்ந்து தெளிய வேண்டும் என்பதற்காகவே 12 பாடல்கள் மூலம் அனுமன், வாலியின் எல்லையற்ற உடல் வலிமையைப் பற்றி விரிவாக விவரிக்கிறான்.

வாலியின் எல்லையற்ற உடல் வலிமையே அவனுடைய ஈரமற்ற இதயத்திற்கும், கருணையற்ற வாழ்க்கை முறைக்கும் அடிப்படையான காரணி என்பதால், எத்தகைய அளப்பரிய உடல் ஆற்றலை வாலி கொண்டிருந்தான் என்பதைக் கம்பன் விவரிக்கும் காப்பியப் பாடல்கள் மூலமாகவே நாம் அறிவது மிக்க அவசியமாகும். அவையனைத்தையும் காண்போம்.

*" 'கழறு தேவரோடு, அவுணர் கண்ணின் நின்று,*
*உழலும் மந்தரத்து உருவு தேய, முன்,*
*அழலும் கோள் அரா அகடு தீ விட,*
*சுழலும் வேலையைக் கடையும் தோளினான்' "*

*(கிட்கிந்தை – நட்புக் கோள் – 38)*

*" 'நிலனும், நீரும், மாய் நெருப்பும், காற்றும், என்று*
*உலைவு இல் பூதம் நான்கு உடைய ஆற்றலான்;*
*அலையின் வேலை சூழ் கிடந்த ஆழி மா*
*மலையின் நின்றும் இம்மலையின் வாவுவான்;' "*

*(கிட்கிந்தை – நட்புக் கோள் – 39)*

*" 'கிட்டுவார் பொரக் கிடைக்கின், அன்னவர்*
*பட்டநல் வலம் பாகம் எய்துவான்;*
*எட்டு மாதிரத்து இறுதி, நாளும் உற்று,*
*அட்ட மூர்த்தி தாள் பணியும் ஆற்றலான்' "*

*(கிட்கிந்தை – நட்புக் கோள் – 40)*

*" 'கால் செலாது அவன் முன்னர்; கந்தவேள்*
*வேல் செலாது அவன் மார்பில்; வென்றியான்*
*வால் செலாத வாய் அலது, இராவணன்*
*கோல் செலாது; அவன் குடை செலாது அரோ' "*

*(கிட்கிந்தை – நட்புக் கோள் – 41)*

*" 'மேருவே முதல் கிரிகள் வேரொடும்*
*பேருமே, அவன் பேருமேல்; நெடுங்*
*காரும், வானமும், கதிரும், நாகமும்*
*தூருமே, அவன் பெரிய தோள்களால்' "*

*(கிட்கிந்தை – நட்புக் கோள் – 42)*

*" 'பார் இடந்த வெம் பன்றி, பண்டை நாள்*
*நீர் கடைந்த பேர் ஆமை, நேர் உளான் ;*
*மார்பு இடந்த மா எனினும், மற்றவன்*
*தார் கிடந்த தோள் தகைய வல்லதோ!' "*

*(கிட்கிந்தா – நட்புக்கோட் – 43)*

*" 'படர்ந்த நீள் நெடுந் தலை பரப்பி, மீது,*
*அடர்ந்து பாரம் வந்து உற, அனந்தனும்*
*கிடந்து தாங்கும் இக்கிரியை மேயினான்*
*நடந்து தாங்கும், இப்புவனம், நாள் எலாம்' "*

*(கிட்கிந்தா – நட்புக் கோள் – 44)*

*" 'கடல் உளைப்பதும், கால் சலிப்பதும்,*
*மிடல் அருக்கர் தேர் மீது செல்வதும்,*
*தொடர மற்றவன் சுளியும் என்று அலால், –*
*அடலின் வெற்றியாய்! – அயலின் ஆவவோ?' "*

*(கிட்கிந்தை – நட்புக் கோள் – 45)*

*" 'வெள்ளம் ஏழு பத்து உள்ள, மேருவைத்*
*தள்ளல் ஆன தோள் அரியின் தானையான் ;*
*உள்ளம் ஒன்றி எவ்வுயிரும் வாழுமால், –*
*வள்ளலே! – அவன் வலியின் வன்மையால்' "*

*(கிட்கிந்தை – நட்புக் கோள் – 46)*

*" 'மழை இடிப்பு உறா; வய வெஞ் சீய மா*
*முழை இடிப்பு உறா; முரண் வெங் காலும் மென்*
*தழை துடிப்புறச் சார்வு உறாது; – அவன்*
*விழைவிடத்தின் மேல், விளிவை அஞ்சலால்' "*

*(கிட்கிந்தை – நட்புக் கோள் – 47)*

*" 'மெய்க் கொள் வாலினால், மிடல் இராவணன்*
*தொக்க தோள் உறத் தொடர்ப்படுத்த நாள்,*
*புக்கிலாதவும், பொழி அரத்த நீர்*
*உக்கிலாத வேறு உலகம் யாவதோ?' "*

*(கிட்கிந்தை – நட்புக் கோள் – 48)*

செவி கூர்ந்து கேட்டுக் கொண்டிருக்கும் இராமன், இந்த வருணனையின் ஒட்டு மொத்த விளக்கமாக இரு உண்மைகளை உணர்கிறான்.

ஒன்று, வாலி வரம்பற்ற உடல் ஆற்றல் உடையவன் என்பது.

இரண்டு, வாலி தன்னுடைய இப்போதைய பகைவனாகிய இராவணனை வெற்றி கொண்டு அவனைத் தன் (உடல் பலத்தால் அல்ல) வால் பலத்தால் மட்டுமே கட்டி இழுத்து வந்தவன் எனபது.

மேலும், மூன்றாவதாக ஒரு கருத்தையும் மனம் கொள்கிறான் இராமன். அது, வாலியின் எதிரில் நின்று போர் புரிபவர் எவராக இருந்தாலும், எதிரியின் உடல் பலத்தில் பாதியைத் தான் பெற்றுவிடும் வரம் பெற்றவன் வாலி என்பதே ஆகும்.

ஆரம்பத்தில், வாலியோடு தன்னை எந்த விதத்திலும் தொடர்புபடுத்திக் கொண்டுவிடாமல் தவிர்த்து வந்தாலும், அனுமன், வாலியின் எல்லையற்ற பராக்கிரமத்தைப் பற்றி விவரித்து வருணிக்கும் விதத்திலேயே அறிவுக்கூர்மையுடைய இராமன், வரம்பற்ற ஆற்றல் கொண்ட வாலியை வெல்லும் பொருட்டே சுக்ரீவன் தன் நட்பை நாடியிருக்கிறான் என்பதைப் புரிந்து கொண்டுவிட்டான் என்பது தெளிவு. அனுமனின் வருணனைப் போக்கின் முடிவில், தான் இதுகாறும் தவிர்த்து வந்த வாலியுடனான போர் எனும் நிகழ்ச்சி உண்மையாகும் சூழல் உருவாவதை உள்ளுணர்வால் உணர்ந்து கொண்டே வருகிறான் என்பதும் தெளிவு. அனுமனின் பேச்சில், எந்த இடையீடுமின்றி, அவன் உரையைக் கேட்டிருக்கும் இராமன், வாலியுடன் சமர் புரியும் நிலைக்குத் தன்னை மனத்தளவில் ஆயத்தப்படுத்திக் கொண்டே வருகிறான் என்பதிலும் ஐயமில்லை. ஆனால், இராவணனை வெற்றி கொண்டவன் வாலி என்ற செய்தியை அனுமன் வாயிலாக அறிய வரும்பொழுது, இராமன் வாலியுடனான ஒரு போரை விரும்பியே இருந்திருக்க வேண்டும். காப்பியத்தைக் கற்போர் இத்தகையதொரு ஊகம் செய்தால் அதில் தவறில்லை. இவ்விடத்தில் சுக்ரீவனுக்காக மட்டுமன்றி, தன்னுடைய நோக்கத்துக்காகவும் கூட, இராமன் வாலியுடன் போரை விரும்பியிருக்கலாம். காரணம், "வாலியின் வாலில் கட்டப்பட்டு இழுபட்டவன் இராவணன் என்ற நிகழ்ச்சிப் பின்னணியில், வாலியைத் தான் வெல்லக் கூடிய (கொல்லக் கூடிய அல்ல) நிகழ்ச்சி ஒன்று நடக்குமானால், அது சீதையின் சிறை மீட்புக்குச் சாதகமாகவே அமையும் என்று இராமன் எண்ணியிருக்கலாம். காரணம், வால் பலத்தால் இராவணனை வென்ற வாலியை, இராமன் தன் வில் பலத்தால் வென்றான் எனும் செய்தி இலங்கைக்குப் பரவும் சாத்தியம் உண்டு அல்லவா? தன்னையும் இளையோனையும் பொய்மான் நாடகத்தால் அப்புறப்படுத்தி, வேடம் புனைந்து சீதையைக் களவு செய்த இராவணனை கோழை என்றுதானே இராமன் கணித்திருப்பான்! இப்பொழுது 'வாலியிடம் தோற்றவன் இராவணன்' என்ற செய்தியை அனுமன் மூலம் அறிய வந்த பிறகு அவனுடைய வீரத்தை மேலும் குறைத்துத்தான் மதிப்பிட்டிருப்பான்! இத்தகைய சூழலில், இராவணனை வென்ற வாலியை இராமன் வெல்லும் நிகழ்ச்சி ஒன்று நடக்குமானால் அது, இராவணனுக்கு ஓர் எச்சரிக்கைச் செய்தியாக அமையவும் வாய்ப்புள்ளது. இராமனின் கணிப்பில் கோழையான இராவணன், செய்தியைக் கேள்விப்பட்டவுடன், தன்னை வென்ற வாலியை வென்று விட்ட இராமனுக்கு அஞ்சிச் சீதையை சிறை விடுவிக்கவும் கூட எண்ணலாம் அல்லவா? இதனால் இரவணனுடனான போர்ச் சூழலையே இராமன் தவிர்த்தும்

விடலாம் அல்லவா?" மேற்கூறப்பட்ட காரணங்களுக்காக, வாலியுடனான ஒரு போரை நிகழ்துவதற்கான சூழல் உருவானால், அதைத் தவிர்க்க வேண்டிய அவசிய மில்லையென்று இராமன் எண்ணியிருந்தால் அதில் வியப்பு ஒன்றுமில்லை.

.......... எனவே அடுத்து, அனுமன் வாலிக்கும் சுக்ரீவனுககும இடையே ஏற்பட்ட பகைமைக்கான காரணத்தை விளக்க முற்படும்பொழுது மனம் ஒன்றி அதனைச் செவி மடுக்கிறான் இராமன்....

அனுமன் தன் உரையைத் தொடர்கிறான்: 'வாலி கிட்கிந்தையின் அரசனாகவும், சுக்ரீவன் இளவரசனாகவும் வாழ்ந்து வந்த காலத்தில், குரங்குக் குலத்தின் பகைவனாகிய மாயாவி என்பவன் வாலியுடன் பொருத வந்தான்..... ஆனால் வாலியின் உடல் வன்மைக்கு ஈடு கொடுக்க இயலாமல் ஓடிய மாயாவி ஆங்கொரு பிலத்தினுள் சென்று ஒளிந்தான். வாலி அவனைத் துரத்திச் சென்றான். உடன் சுக்ரீவனும் சென்றான். சுக்ரீவனைப் பிலத்துக்கு வெளியே காவலுக்கு இருத்திவிட்டுச் சிறிது பொழுதில் திரும்புவதாகக் கூறிப் பிலத்தினுள் புகுந்தான் வாலி. ஆனால் உள்ளே சென்ற வாலி பதினான்காண்டுகள் முடிந்தும் வெளியே வரவில்லை. அண்ணனின் கதி யாதாயிற்றென்றறியாமல் சோகம் எய்திய சுக்ரீவன் அழுத கண்ணனாயினான். குரங்கினத்தின் மூத்த தலைவர்கள் அவனை ஆற்றுவித்து, 'அரசு செய்க' என்று சுக்ரீவனை வேண்டினர். அவ்வேண்டுதலை மறுத்து, சுக்ரீவன், தானும் பிலம் புகுந்து அண்ணனைத் தேடவும், ஒருக்கால் அண்ணனை மாயாவி கொன்றிருந்தால் தான் அவனைக் கொன்றுவிடவுடம் முடிவெடுத்துப் போருக்குப் புறப்பட்டான். அவனை நானும், மற்றையோரும் தடுத்து, "வாலிக்குப் பிறகு இளவரசனான நீயே நாட்டின் அடுத்த காவலுக்குரியவன். எனவே நீயே முடி சூடி ஆள்க" என்று அறிவுறுத்திச் சுக்ரீவனை எம் முடிவுக்கு இணங்க வைத்தோம். அடுத்து, மாயாவி பிலத்தினின்றும் வெளிப் போந்து இடர் தரா வண்ணம் பிலத்துவாரத்தையும் பாறைகளைக் கொண்டு நாங்கள் மூடிவிட்டோம். இவனும் அரசாள ஆரம்பித்துவிட்டான். அதன் பிறகு நாங்கள் எவரும் எதிர்பாராத வகையில் மாயாவியைக் கொன்று பாறைகளையும் தள்ளிவிட்டுப் பிலத்திலிருந்து வெளிப் போந்துவிட்டான் வாலி.....

.......தம்பி சுக்ரீவன் தானில்லாத சமயத்தைப் பயன்படுத்திப் பிலத்துவாரத்தை அடைத்துவிட்டுத் தான் முடிசூடிக் கொண்டுவிட்டான் என்று தவறாக எண்ணிக் கொண்டுவிட்டான் வாலி. அவனுக்கு அச்சமயம் விளைந்த கோபத்தினால் ஏற்பட்ட காலசைவிலே பெரும் பெரும் மலைகளெல்லாம் பறந்து சென்று விண்ணை முட்டின; கடலுக்குள் புகுந்தன; அண்ட சராசரங்களும் நடுங்கும் வண்ணம் சீறிச் சினந்து

கனன்றான் வாலி. மூத்தோர் எத்தனையோ எடுத்துக் கூறியும், சுக்ரீவன் அடி பணிந்து அபயம் கேட்டும் அவன் சினம் தணிந்தானில்லை. சுக்ரீவனுடைய உடலைத் தன் கடல் கடைந்த கரங்களால் கடைந்து அவன் குடல் கலக்கினான். சுக்ரீவன் ஓடி ஒளிந்த இடங்களையெல்லாம் தேடிக்கண்டுபிடித்துத் தம்பியைக் கொன்றுவிடும் நோக்கத்தோடு போர் புரிந்தான். அத்தகைய தருணம் ஒன்றில், வாலி, சுக்ரீவனைத் தன் முரண் வலிக் கரங்களால் முறுக வாங்கி எற்றுவதற்கு எடுத்து எழும்பொழுது, அவனுக்குச் சற்றே ஏற்பட்ட தடுமாற்றத்தைப் பயன்படுத்திக் கொண்டு தப்பிய சுக்ரீவன், முன்னொரு சமயம் வாலி பெற்ற சாபத்தால் அவன் காலடி படக் கூடாத இடமாகவுள்ள இந்த இரலையின் குன்றத்துக்கு வந்து உயிர் பிழைத்து வாழ்கிறான்.

................ இவ்வாறு வெஞ்சினத்தாலும், உடல் பலத்தாலும் தன் உடன் பிறந்தவனின் உயிர் குடிக்க விழைந்த வாலியின் நடத்தை பற்றிக் கூறிவிட்டு, கூர்த்த மதி படைத்த அனுமன் இறுதியாக ஒரு செய்தியைச் சொல்லித் தன் நீண்ட உரையை முடிக்கிறான். அந்தச் செய்தி, இராமன் ஆரம்பத்தில் கேட்ட கேள்விக்குரிய பதிலுமாகும். இவ்விடத்தில் காலத்தைச் சற்று நிறுத்தி வைத்துவிட்டு, காப்பிய ஓட்டத்தைப் பின்னுக்குத் தள்ளி, சுக்ரீவன் இராமனுக்கு விருந்தோம்பல் செய்யும் நிகழ்ச்சிக்கு மீண்டும் வருவோம். விருந்துண்ணும் இராமன் விருந்தோம்பல் கடமையுடைய சுக்ரீவனின் மனைவி அங்கில்லாததை உணர்ந்து அவனுடைய மனைவியைப் பற்றி அறிய விழைந்து, "என்னைப் போலவே நீயும் மனைவியைப் பிரிந்துள்ளாயோ?" என்று ஒரு கேள்வியைக் கேட்கிறான். அதற்குரிய பதிலைச் சுக்ரீவன் கூறுவதற்கு முன், அனுமன் இடைமறித்து, இராமனுடைய கேள்விக்கான பதிலை உடனடியாகக் கூறாமல், வாலி சுக்ரீவன் பகைமைக்கான அரசியல் காரணங்களை விரிவாக விளக்கிவிட்டு, இறுதியாக, "சுக்ரீவன் மனைவியான உருமையை வாலி; விரும்பி ஏற்றுக் கொண்டுவிட்டான். எனவே சுக்ரீவன் அரசையும் இழந்ததோடு தன் மனைவியையும் இழந்தான்" என்று கூறித் தன் உரைக்கு முத்தாய்ப்பு வைத்தான்.

காப்பிய வரிகள் பின் வருமாறு:

*"உருமை என்று இவற்கு உரிய தாரம் ஆம்*<br>
*அரு மருந்தையும், அவன் விரும்பினான்;*<br>
*இருமையும் துறந்து, இவன் இருந்தனன்*<br>
*கருமம் இங்கு இது; எம் கடவுள்! என்றான்".*

*(கிட்கிந்தா – நட்புக் கோள் – 67)*

ஒருவரைப் பற்றிய சரியான மதிப்பீடு செய்யத்தக்க கூர்த்த மதியும் சொல் வன்மையும் மிக்க அனுமன், இராமன் வாலியைப் பற்றிய எந்தவொரு கருத்தையும் ஆரம்பத்திலிருந்தே கூறாமல் இருப்பதைக் கவனித்தே வந்துள்ளான். இதுகாறும் இராமன், வாலி – சுக்ரீவன் இடையேயுள்ள பகையை அண்ணன் தம்பியரிடையே முகிழ்த்துள்ள பகைதானே என்றும், இதில் தான் தலையிடுதல் முறையாக இருக்காது என்றும் எண்ணியிருந்தால், அவ்வெண்ணத்தை மாற்றிவிட வேண்டும் என்று முடிவெடுக்கிறான் அனுமன். தம்பி சுக்ரீவனின் உயிர் குடித்து அவனை அழித்தேவிட எண்ணியவன் வாலியாதலால், அவன் சுக்ரீவனுக்கு எஞ்ஞான்றும் பகைவனே என்பதை இராமன் தன் மனத்துள் உள் வாங்கிக் கொண்டாலொழிய இராமனுடைய உதவி தன் தலைவனுக்குக் கிட்டாது என்பதையும் அனுமன் சரியாகக் கணித்துவிட்டான். உரிமையுடைய அரசைத் தம்பி பரதனுக்கு அளித்து விட்டு வந்திருக்கும் இராமனின் பாசமுள்ள இதயம், வாலி, தன் உடன்பிறந்த தம்பியிடம் ஈரமற்ற இதயத்தோடு நடந்து கொண்டதை அவனுடைய அறிவும் மனமும் நன்றாக உணரும்படிச் செய்து, அவனுடைய மனத்தில் சுக்ரீவன் பால் இரக்கத்தைத் தூண்டி விடவேண்டுமென்பதே அனுமனுடைய நோக்கம். எனவே சுக்ரீவனுக்கும் வாலிக்கும் பகைமை ஏற்பட்டதன் வரலாற்றைச் சொல்லிக் கொண்டே வருபவன் 'இதுகாறும் சுக்ரீவனின் சார்பாக இராமன் வாலியின்பால் பகை உணர்ச்சி கொள்ளாதிருந்தாலும், உறுதியாக இராமன் வாலியைப் பகைவனாகக் கருதக்கூடிய கடைசியான பிரம்மாஸ்திரக் கருத்தாக, 'சுக்ரீவனின் மனைவியை வாலி விரும்பித் தன்னோடு வைத்துக் கொண்டான்' என்பதைக் கூறுகிறான். தன் உடன் பிறந்த தம்பி என்றும் பாராது, சுக்ரீவன் உயிர்ப் பயம் கொள்ளுமாறு அவனை அலங்கோலமாகத் துரத்தித் துரத்தி, இறுதியில் அவனைக் கொல்லவும் முயன்றவன் வாலி என்ற எண்ணத்தால் இராமபிரானுக்கு வாலியின் பால் வெறுப்பு வலுப்பட்டுக் கொண்டு வரும் சரியான தருணத்தில், 'சுக்ரீவனின் தாரத்தையும் கவர்ந்து தம்பியை வஞ்சித்தவன் வாலி' என்று முத்தாய்ப்பாகக் கூறி முடிக்கிறான், அறிவு சான்ற அனுமன். அனுமன் வாலி பற்றிக் கூறியவை அனைத்தும் மிகையில்லாத உண்மைகள் என்பதைக் கற்பவர் உணர்வதற்காக வேண்டி கம்பன் இவ்விடத்தில் அனுமனைப் பற்றிக் குறிப்பிடும்பொழுது "பொய் இல்லாதவன் வரன் முறை இம்மொழி புகல" என்கிறான்.

அறப்பிறழ்வோடு நடந்து கொண்டவன் வாலி என்பதை இராமனுடைய அறச்சார்பு மனம் உள்வாங்கி உணர்ந்தாலொழிய வாலியின் பால் இராமனுக்குத் தார்மீகச் சினம் தோன்றாது. இதை நன்குணர்ந்த அனுமன் தன் மனைவியின் இழப்பால் அகவுணர்வுகள் கூர்மை பெற்று அவளது உடனில்லாமையை உணர்ந்து, நொந்து வெந்துயர்க் கடலில் வீழ்ந்து நைந்துருகும் இராகவனது மனநிலையைச் சரியாகக் கணித்துச் சரியான தருணத்தில் செய்தியைப் பொருத்தமான முறையில்

கூறிவிட்டான். இராவணனைப் பற்றிய செய்தியையும் முன்பே கூறியிருக்கிறான். இத்தகைய கலவையான காரணங்களால் அனுமனது எண்ணம் உடனே ஈடேறுகிறது. இராமன் எந்த இரண்டு செய்திகளை உள்வாங்கிக் கொள்ள வேண்டும் என்று அனுமன் விரும்பினானோ, அந்த இரண்டு கருத்துக்களும் இராகவன் மனத்தில் தைத்துப் பொருந்தி நின்றன.

ஒன்று, உடன் பிறந்த தம்பியின் பால் பரிவும், அருளும் இல்லாமல் தம்பியை உயிர்ப்பயம் கொள்ள வைத்துக் கொல்ல முயன்று அவனுடைய அரசைப் பறித்துக் கொண்ட கொடியவன் வாலி.

இரண்டு, உடன் பிறந்த தம்பியின் மனைவியை விரும்பும் - பிறன் மனை நயக்கும் - அறமில்லாத செயலைச் செய்த தீயவன் வாலி.

இவ்விரண்டு கருத்துக்களும், இராகவனின் மனத்தில் நின்று, வாலியின் பால் அவனால் பொறுத்துக் கொள்ள இயலாத அளவுக்குச் சினத்தை மூட்டி விட்டன என்கிறான் கம்பன்.

*" 'ஈரம் நீங்கிய சிற்றவை சொற்றனள் என்ன,*
*ஆரம் வீங்கு தோள் தம்பிக்குத் தன் அரசு உரிமைப்*
*பாரம் ஈந்தவன், 'பரிவு இலன், ஒருவன் தன் இளையோன்*
*தாரம் வெளவினன்' என்ற சொல் தரிக்குமாறு உளதோ?' "*

*(கிட்கிந்தா– நட்புக் கோள் – 69)*

என்பது காப்பியப் பாடல்

எனவே வாலியை இராமன் கொன்றமைக்கு இரு காரணங்கள் உண்டு. ஒன்று, தம்பி சுக்ரீவனை வாலி கொல்ல நினைத்தது, இரண்டு, சுக்ரீவனின் மனைவியைப் பறித்துக் கொண்டது. மேலும், துந்துபி என்ற அரசனைப் புரட்டிப் புரட்டி அடித்துக் கொன்று தன் காற்பெருவிரலால் எற்றி எற்றி அடித்தான் வாலி. பகைவனைப் பழி தீர்த்தான் என்று இச்செய்கையைக் கொள்ளலாம். மாயாவி என்னும் அரக்கனையும் துரத்தி துரத்திச் சென்று அடித்துப் பிலத்துள் அவன் புகுந்த பின்னும், விடாது தொடர்ந்து சென்று, பதினான்காண்டு காலம் பழியுணர்ச்சியை இடையறாது வைத்திருந்து மாயாவியின் குருதி குடித்து வஞ்சம் தீர்த்தான் வாலி. சரி. மாயாவி எனும் பகைவனைப் பகை முடித்தான் என்று அமைதி கொள்ளலாம். ஆனால் சுக்ரீவன் உடன் பிறந்த தம்பியல்லவா? அவன் நாட்டை ஆண்டால்தான் என்ன என்று விட்டுக் கொடுத்திருக்க

வேண்டும் வாலி! அத்தகைய எதிர்பார்ப்பு மிக அதிகம் என்றாலும் கூட, பகைவர்களைத் துரத்தித் துரத்தி அடித்து உயிர்ப் பயம் கொள்ள வைத்ததுபோல், உடன் பிறந்த தம்பியிடமும் வலிமை காட்டுவதா வீரம்? இந்தச் செய்தியையே மனம் ஏற்றுக் கொள்ளாத நிலையில் இருந்த அருளாளன் இராமன், வாலி, தன் இளையவனுடைய மனைவியையும் பறித்துவிட்ட கொடுமையைச் செய்தவன் என்பதைத் தன்னால் கேட்கவும்கூட இயலாத, சகிக்கவும் ஒண்ணாத செய்தியாகக் கருதுகிறான். ................ மாற்றான் ஒருவன் தன் மனைவியை வலிந்து பற்றிக் கொண்டு செல்வது மனுதர்மப்படி அறமற்ற செயல் என்பது ஒருபுறமிருக்க, மனைவியைப் பிறிதொருவனிடம் பறிகொடுத்துவிட்டால் ஓர் ஆண் மகன் எத்தகைய மதிக் குழப்பத்தையும், உணர்வுக் கலக்கத்தையும், ஆளுமைச் சோர்வையும் அடைவான் என்பதை அனுபவ பூர்வமாக அறிந்தவனல்லவா இராமன்! **ஆயிரம் ஏடுகள் ஆய்ந்தாய்ந்து கற்றாலும் அனுபவம் போல் அறிவு தரும் கல்வி வேறு ஏது?** இராமனின் அனுபவ அறிவு இப்பொழுது அவனுக்கு வழி காட்டுகிறது. அந்த வழிகாட்டுதலில் தன்னைப் போலவே அரசுரிமையையும், தாரத்தையும் இழந்து நிற்கும் சுக்ரீவன்பால் கழிவிரக்கம் தோன்றுகிறது. இழப்புணர்ச்சி மென்மேலும் கிளர்ந்து உள்ளத்தைப் பற்ற, இராகவன் உணர்ச்சிக் களமாகிறான்.......... இன்ப துன்பங்களைச் சமமாகப் பார்க்கத் தெரிந்தவன் இராமன். தந்தை அரசுரிமையைஅளித்தபொழுதும், அதனை மறுத்த பொழுதும், சித்திரத்தில் அலர்ந்த செந்தாமரை போன்று ஒளி முகத்தையே பெற்றிருந்த இராமன் - மனச்சீர்மையை எக்காலத்தும் இயல்பாகக் கொண்ட இராமன் - சுக்ரீவனின் துயரம் நிரம்பிய கதையைக் கேட்டு உடல் ரீதியாகவே உணர்ச்சியின் வெளிப்பாட்டைக் காட்டுகிறான். "சுக்ரீவனின் தாரம் வெளவினன் வாலி" என்ற சொற்களைக் கேட்ட மாத்திரத்தில்

*"வையம் நுங்கிய வாய் இதழ் துடித்தது ; மலர்க் கண் -*
*செய்ய தாமரை, ஆம்பல் அம் போது எனச் சிவந்தது"*
*(கிட்கிந்தா - நட்புக் கோள் - 68)*

என்று சொல்லோவியம் தீட்டுகிறான் கம்பன். வாலியின் செய்கைகளை எந்த அளவுக்கு அறத்துக்குப் புறம்பான செயலாக இராமன் எண்ணினான் என்பதற்கு இந்த அவனுடைய உடல் ரீதியாக உணர்ச்சி வெளிப்பாடே சான்றாகும். அநீதியைக் கண்டு கொதித்து மனச்சீர்மை கெடும் இத்தகைய பண்பைச் சான்றோர் சினப் பண்பு என்று இலக்கியங்கள் பேசும். ('இரந்தும் உயிர் வாழ்தல் வேண்டின் பரந்து கெடுக உலகு இயற்றியான்' என்று சினப் பண்பு மேவ வள்ளுவர் இறைவனைச் சபித்தலை ஓர்க) வாலியின் இரண்டு குற்றங்களும் தன் மனத்தில் நன்றாகப் பதிந்து விட்ட அக் கணத்தில், மூண்டெழும் சான்றோன் சினப் பண்பு கனன்றவனாய் "ஈரேழு பதினான்கு

உலகங்கள் வாலியின் உயிர்க்கு உதவ வந்தாலும் என் வில்லிடை வாளியைப் பொருத்தி, அவ்வுதவிகளையெல்லாம் விலக்கி, வாலியைக் கொன்று, அரசுத் தலைமையும் தாரமும் உனக்கு இன்றே தருவேன். அவன் உறைவிடம் காட்டுக" என்று தார்மீகச் சினம் வெளிப்படச் சுக்ரீவனுக்கு ஆணையிடுகிறான் இராமன். இத்தகைய தார்மீகச் சினத்தை இராமனுக்கு ஏற்படுத்த வேண்டும் என்ற அனுமனின் எண்ணம் ஈடேறியது. அத்துடன் சுக்ரீவனுடைய குறையைத் தீர்ப்பதுதான் தன் முதற்கடன் என்று இராமனும் முடிவெடுத்து விடுகிறான்.

சுக்ரீவனின் நட்பை இராமன் விழைந்ததே சீதையைச் சிறை மீட்பதற்காகத்தான். அந்த ஒரே நோக்கத்தில்தான், இரு அரசர்கள் தமக்குள் ஏற்படுத்திக் கொள்ளும் போர் ஒப்பந்தம் போல நட்பின் ஒப்பந்தம் ஒன்றை இராமன் சுக்ரீவனிடம் ஏற்படுத்திக் கொள்ள முனைந்தான். ஆனால் அதற்குள் சுக்ரீவன் தன்னிடம் அபயம் கேட்டுவிட்டான். அத்துடன் சுக்ரீவனுடைய துயர் சூழ்ந்த வாழ்க்கை நிலையைப் பற்றி முழுதும் அறிய வந்த பிறகு, இராமன் சுக்ரீவன் பால் எல்லையற்ற இரக்கம் கொள்கிறான். சுக்ரீவனே, "வாலியைக் கொன்று அரசைக் கைப்பற்றுவது என்பது சிறு குறைதான். ஆனால் சீதையைச் சிறை மீட்பது என்பது உன்னுடைய துயரத்தையும் பழியையும் தீர்க்கக்கூடிய பெரிய செயல். எனவே அதை முதலில் செய்யலாம்" என்று கூறும் பொழுது இராமன், அதனை மறுத்து, "உன் குறை தீர்ப்பதே என் முதற்கடன்" என்கிறான். காப்பிய வரிகளில் இவர்களுடைய கருத்துகளைக் காணலாம். சுக்ரீவன் இராமனிடம்,

*" 'என்னுடைய சிறு குறை முடித்தல் ஈண்டு ஓர் இப்*
*பின்னுடைத்து ஆயினும் ஆக! பேதுறும்*
*பின் இடைச் சானகியை மீட்டு, மீள்துமால் -*
*பொன்னுடைச் சிலையினாய்! - விரைந்து போய்' என்றான்"*
*(கிட்கிந்தா - கலன் காண் - 18)*

அதற்கு இராமன் மறுமொழி பகர்கிறான்.

*" 'ஐய! நீ ஆற்றலின் ஆற்றினேன் அலது,*
*உய்வெனோ? எனக்கு இதின் உறுதி வேறு உண்டோ?*
*வையகத்து இப்பழி தீர மாய்வது*
*செய்வன்; நின் குறை முடித்து அன்றிச் செய்கலேன்' "*
*(கிட்கிந்தா - கலன் காண் - 27)*

பொருள்: "அயலானிடம் மனைவியைப் பறிகொடுத்து நிற்கும்படி எனக்கேற்பட்ட பழியை நான் உறுதியாக நீக்கிக் கொள்வேன். ஆனால் உனக்கு உரிய குறையைப் போக்கி விடுவது என் முதல் கடமை என்பதிலும் நான் உறுதியாக இருக்கிறேன். உனக்குற்ற துயரத்ததைப் போக்குவதைக் காட்டிலும் மிகச் சிறந்த செயல் எனக்கு இப்போது வேறு ஒன்றும் இல்லை. இன்றேல் நான் உயிர் தாங்கி வாழ்வதும் எனக்கு இயலாத காரியம் ஆகும்".

எனவே இராமன் சுக்ரீவனுடைய குறையை முடிப்பதைத் தன் முதற்கடன் என்று ஏற்றுக் கொண்டு விடுகிறான். வாலியுடனான போருக்கு இராமனுடைய மனம் முழுவதும் சித்தமாகி விடுகிறது.

⌘ ⌘ ⌘

# விலங்கை வீழ்த்தும் இராமன்

அனுமன் வாலியினுடைய எல்லையற்ற உடல் பலத்தையும், பகைமை உணர்ச்சியையும் பற்றிக் கூற, தான் அதனைக் கேட்டிருந்த ஆரம்ப கட்டத்தில், இராமன், அவசியமென்றால் வாலியோடு போர் புரிந்து அவனை வென்று (கொன்று அல்ல) இரக்கம் காட்டி உயிர்ப் பிச்சை அளித்துவிடலாம் என்றுதான் எண்ணியிருக்கக் கூடும் என்ற கருத்து முன்பே கூறப்பட்டது. ஆனால் அவனைப் பற்றிய எல்லா உண்மைகளையும் அறிந்த பிறகு, சான்றோர் சினப் பண்பு மேவியவனாக இராமன் வாலியைக் கொன்றே விடுவது என்று முடிவெடுத்து விடுகிறான். இவையெல்லாம் இராமனின் முடிவுகள் என்று ஊகமாகக் கற்பவரே கணிக்க வேண்டிய அவசியமில்லை, வாலியைக் கொல்வதற்கான தன் முடிவில் உள்ள நியாயங்கள் என்னென்னவென்பதை இராமன் கூற்றாகவே காப்பியத்தின் ஏடுகளைப் புரட்டிப் பார்த்து அறியலாம். ஆனால் அத்தகைய அறிதலுக்காக நாம் வாலி வதை நிகழ்ச்சிக்குப் பிறகு இராமனுக்கும், வாலிக்கும் இடையே நடக்கும் உரையாடலைப் பற்றி அறிந்து கொள்ள வேண்டியுள்ளது. இதற்கு நாம் சிறிது முன்னோக்கிப் பயணம் செய்து, வாலி வதைப் படலத்திற்கு இப்பொழுதே பயணப்பட வேண்டியுள்ளது.

.......................................... இராமன் வாலியின் மார்பைத் தன் அம்பால் துளைத்துவிட்டான்,

*"மும்மை சால் உலகுக்கெல்லாம் மூல மந்திரத்தை முற்றும்*
*தம்மையே தமர்க்கு நல்கும் தனிப்பெரும் பதத்தை, தானே*
*இம்மையே, எழுமை நோய்க்கும் மருந்தினை இராமன் என்னும்*
*செம்மை சேர் நாமம் தன்னை............."*

*(கிட்கிந்தா - வாலி வதை - 79)*

தாங்கிய இராமனின் புனித வாளி, தன் மார்பைத் துளைத்து விட்டதைக் கண்ட வாலி, தன் எதிரில் நிற்கும் இராமனிடம் தன்னைக் கொல்வதற்கான காரணம் என்ன என்று கேட்கிறான். இராமன் சற்றும் தயக்கமின்றியும், குற்றவுணர்ச்சியின்றியும் பதிலுரைக்கின்றான். காரணம், இராமனுடைய கணிப்பில் வாலி அறம்பிறழ்ந்த தீயவன். வாலியைப் பற்றிய நல்ல மதிப்பீடுகள் கவந்தன், சவரி ஆகியோராலும் செய்யப்படவில்லை என்பதையும் இங்கு நாம் நினைவு கூர வேண்டும். மேலும் வாலிக்கிருந்த மற்றொரு தீய பண்பாகிய கட்டுக்கடங்காத சினப் பண்பு – சுயநலத்தின் பாற்பட்ட சினப் பண்பு பற்றியும் நாம் அறியவேண்டியது அவசியமாகிறது. வாலி பற்றி அனுமன் கூறும் கூற்றிலிருந்தே நாம் அந்தக் குணத்தை அறிய முடிகிறது. இராமனும் அறிகிறான். வாலி பற்றிய இக்கணிப்பு சரியானதே என்பதற்குக் காப்பியச் சான்று உள்ளது. சேர்ந்தவரைக் கொல்லும் சினப் பண்பைப் பெற்ற வாலியின் இயல்பினால், அவன் மனைவி தாரை பட்ட பாட்டை இவண் அறிவது நலம்.

*****

. .................... சுக்ரீவனிடம் போர் புரிவதற்குப் புறப்படும் வாலியைப் பற்றி 9 பாடல்களில் கம்பன் வருணிக்கிறான். சினம் என்னும் பண்புக்கு உருவமே இவ்வுலகில் வாலி ஒருவன்தான் என்பதாக நாம் உணரும்வண்ணம் அந்த வருணனை அமைந்துள்ளது....

. ................. சுக்ரீவன் அறைகூவி வாலியைப் போருக்கு அழைக்கிறான். சுக்ரீவனின் அறைகூவலைக் கேட்டு, தான் பள்ளி கொண்டிருந்த சேக்கையினின்றும் பொருக்கென எழுந்து, விழிகளை உருட்டி உறுத்து நோக்கினான் வாலி. இறுதி ஊழியில் விரைந்து கிளர்ந்தெழும் ஆழியனைய தோற்றம் கொண்டான். தோள்கள் புடைத்து எழுந்தபோது வீசிய காற்றில் கிட்கிந்தை மலைகளெல்லாம் அழுந்தின; வீழ்ந்தன.

*"போய்ப் பொடித்தன மயிர்ப் புறத்த, வெம் பொறி;*
*காய்ப்பொடு உற்று எழ வட கனலும் கண் கெட,*
*தீப்பொடித்தன, விழி; தேவர் நாட்டிலும்*
*மீப் பொடித்தன புகை, உயிர்ப்பு வீங்கவே"*

*(கிட்கிந்தா – வாலி வதை – 16)*

கைத்தலங்கள் புடைப்ப, அவற்றை ஒன்றோடொன்று உரசித் தட்டிய தட்டலில் திக்கயங்கள் மத நீர்ச் சிந்தின. "வந்தேன்! வந்தேன்" என்ற அவனது வாசகத்தின் ஒலி எண் திசைகளையும் எட்டியது. சந்திரன் முதல் தாரகைக் கூட்டமெல்லாம் வானத்தினின்றும் சிந்தின. அவனது சினத் தோற்றத்தைக் கண்டு அண்ட சராசரங்களும் நடுங்கின.

*"ஞாலமும், நால் திசைப் புனலும், நாகரும்,*
*மூலமும், முற்றிட முடிவில் தீக்கும் அக்*
*காலமும் ஒத்தனன்; கடலின் தான் கடை*
*ஆலமும் ஒத்தனன், எவரும் அஞ்சவே"*

*(கிட்கிந்தா - வாலி வதை - 21)*

காலனுடைய தோற்றம் கொண்டு போருக்குப் புறப்படும் கணவன் வாலியை, மனைவி தாரை தடுக்கிறாள். ஆனால் அம்முயற்சியில், தீயெழ விழித்துத் திக்கயங்களை வெருட்டி, வாயில் புகை வர சினக்கும் வாலியின் வெஞ்சினத் தீயால் தன் கூந்தல் கருகுகின்றாள்.

காப்பிய வரிகள்,

*"ஆயிடை, தாரை என்று அமிழ்தின் தோன்றிய*
*வேயிடைத் தோளினாள், இடை விலக்கினாள்;*
***வாயிடைப் புகை வர, வாலி கண் வரும்***
***தீயிடை, தன் நெடுங் கூந்தல் தீகின்றாள்"***

*(கிட்கிந்தா - வாலி வதை - 22)*

*****

எனவே வாலி பற்றிய அனுமனின் வருணனையிலிருந்து, தம்பியின் உயிர்த்தலங்கள் தோறும் அடித்துப் புடைத்து அவனுடைய உயிர் குடிக்க விழைந்தான் வாலி என்ற செய்தியைப் பெறுகின்ற இராமன், அடங்காத சினம் கொண்டு பிறர் உயிர் குடிக்கும் தீய பண்பினன் வாலி என்று சரியாகக் கணிக்கிறான். அபயம் வேண்டி இறைஞ்சிய பொழுதும் சுக்ரீவனுக்கு அருளாத வாலியின் செயலை அறம் பிறழ்ந்த செயல் என்றும் இராமன் கருதுகிறான். எனவே வாலியைக் கொல்ல முடிவு செய்கிறான்.

இராமன் தன்மேல் அம்பு எய்த காரணம் என்னவென்று வாலி கேட்கும்பொழுது இராமன் தன் பக்கத்து நியாயம் என்று அக்கருத்தையே காரணமாகக் கூறுகின்றான்.

*" 'கொல்லல் உற்றனை, உம்பியை; கோது அவற்கு*
*இல்லை என்பது உணர்ந்தும், இரங்கலை;*
*"அல்லல் செய்யல்; உனக்கு அபயம்; பிழை*
*புல்லல்" என்னவும், புல்லலை, பொங்கினாய்' "*

*(கிட்கிந்தா - வாலி வதை - 104)*

என்கிறான்.

இங்கு இராமன் "பொங்கினாய்" என்ற சொல்லைச் சரியாகப் பயன்படுத்துகிறான். சினம் மேலும் மேலும் பொங்கும் பண்பினன் வாலி என்பதே கருத்து. தக்கவர், தகாதவர் என்று சிந்தித்துச் செயல்படும் தன்மை இன்றி, சினத்தைத் தணித்துக் கொள்ளும் நற்சிந்தனையில் ஈடுபடாமல், மென்மேலும் சினம் பொங்கி வர நிற்பவன் வாலி என்பது பொருள். பொங்குதல் என்றாலே எல்லை மீறுதல் என்ற பொருளைத்தான் தரும். வரம்பு மீறிச் சினத்தல் கொடிய பண்பாதலால், நிறைந்து பொங்கி வழிகின்ற சினப் பண்பை வெறுத்துப் பேசுகிறான் இராமன்.

எனவே அடங்காத சினம் என்னும் குற்றம் உடையவன் வாலி. இப்பண்பு குணக்கேடு என்பதைவிட தீர்க்கவியலாத நோய் என்றே சான்றோரால் இகழத் தகும். எனவே சான்றோனான இராமன் வாலியின் இத்தகைய பண்பை இகழ்கிறான்.

அவனுடைய தகுதியற்ற சினப் பண்புக்காக - நியாய வரம்புகளை மீறிய அச் சினப் பண்பினால் அவன் ஈடுபடும் அறமற்ற செயலுக்காக - வாலியைத் தான் கொல்ல முடிவு செய்ததற்கான பின்னணியைப் பின்வருமாறு கூறுகிறான் ;

"வாலி! சுக்ரீவன் எத்தகைய சூழலில் கிட்கிந்தை அரசுரிமையை ஏற்றான் என்பதைச் சற்றேனும் சிந்தித்துப் பார்த்தாயா? நீ பிலத்துள் புகுந்து பல்லாண்டு காலம் சென்ற பின்னர், அப்பல்லாண்டுகள் வரை பிலத்தின் வெளியில் நின்று வெயிலிலும் மழையிலும் காவல் காத்து உன் வரவுக்காகத் தவம் கிடந்தவன் உன் தம்பி சுக்ரீவன்! பிலத்துவாரம் வழியே குருதியைக் கண்ட பின்னர் சுக்ரீவன் என்னென்ன சிந்தனைகளுக்கு ஆளாகியிருப்பான் என்று நினைத்தாயா? அதற்குப் பிறகும் பல காலம் நொய்ம்மை கொண்ட மனத்தோடு உன் வரவை எதிர்பார்த்திருந்தான் என்பதை அறிந்தாயா? மூத்தோர் பலருடைய வற்புறுத்தலுக்கு இணங்கியும், 'அரசனில்லாத உன் நாடு பாழ்பட்டுப் போகும்' என்ற எண்ணத்திலும்தான் உன் தம்பி மகுடம் புனைந்து

கொள்ள இசைந்தானே அன்றி, உன்னுடைய அரசை வஞ்சனையாலும் சூழ்ச்சியினாலும் கவர்ந்தானா? இல்லையே! அன்றியும் முதியோர், மந்திரச் சுற்றம் ஆகியோர் வேண்டுதலுக்கு உடனே உடன்பட்டானா? அதுவும் இல்லையே! 'என் அண்ணனைக் கொன்ற மாயாவியைக் கொன்று பழி தீர்த்துப் பின் நானும் இறப்பேன்' என்று வஞ்சினம் சாற்றிப் பிலத்துள் இறங்கியவன் அல்லவா உன் தம்பி! அந்த அவனது ஊனமில்லாத உரையை நீ அறிந்தாயா? அதன் பின்னர் பலப்பல முறை பலரும் வேண்டிய பின், நீ இறந்து விட்டாய் என்ற எண்ணத்தில்தானே வேறு வழியின்றி சுக்ரீவன் முடி புனைந்து கொண்டான்! ஆனால் இந்த உண்மைகளையெல்லாம் எத்தனையோ முறை சுக்ரீவனும் பிறரும் எடுத்துச் சொல்லியும் நீ செவி மடுக்கவில்லையே! கோது இலாத உன் தம்பி எத்தனையோ முறை அபயம் வேண்டி உன் அருளை இரந்து உயிர்ப்பிச்சை வேண்டியும், அவனைக் கூற்றுவனுக்கு இரையாக்க நினைத்து உன் உடல் வலிமையால் அவனைக் கடைந்தாய். அவன் தன் உயிரைக் காப்பாற்றிக் கொள்ள இந்த நாட்டை விட்டே ஓடினான். அப்பொழுதாவது அவனை விட்டாயா? இல்லை! உலகின் எட்டுத் திசையிலும், அவனைத் துரத்தித் துரத்திச் சென்றாய்! அவனைக் கொன்று விடுவது ஒன்றே உன் திட்டமாக இருந்தது. இறுதியில் சுக்ரீவன் இன்று உயிர் வாழ்வது உன்னுடைய கருணையினால் அல்ல. உன் உயிருக்கு இறுதி பயக்கும் சாபம் ஒன்றால், நீ, அவன் வாழும் இரலையின் குன்றம் செல்லாமல் உன்னைத் தடுத்துக் கொண்டதால், அவன் உயிர் தப்பினான். உன் உயிரை இத்தனை அளவு மதிக்கும் நீ, தம்பியின் உயிரைக் குடிக்க நினைத்தது தர்மம் ஆகுமா? விலங்கின் வலிமை போன்ற உன் எல்லையற்ற உடல் பலத்தைப் பகைவனிடம் காட்டலாம்! உடன் பிறந்த தம்பியிடம் காட்டி உயிர் குடிக்க நினைத்த நீ எவ்வாறு அறவான் ஆவாய்? அன்றியும், அதையும் விடக் கொடும் பாதகம் ஒன்றையும் செய்தாய். அவனுக்குரிமையுள்ள அவன் மனைவியை அவனிடமிருந்து பறித்துக் கொண்டாய். உனக்கு உரிமையுடைய அரசைச் சுக்ரீவன் பறித்தது தகாத செயல் என்றால், அவனுக்குரிமையான அவன் தாரத்தை நீ பறித்தது தக்க செயலோ? ("அறநெறி முதற்றே அரசின் கொற்றம்" என்பதை அறியாத நீ எப்படி ஒரு நாட்டுக்கு மன்னனாக இருக்கும் தகுதி படைத்தவனாவாய்? 'மன்னன் எவ்வழி மக்கள் அவ்வழி!' என்பது சமுதாய நீதியல்லவா! மக்களை வழி நடத்த வேண்டிய மன்னனாகிய நீயே அறம் திறம்பினால், நாட்டில் அறத்தை நிலை நிறுத்தும் கடமையை ஆற்ற வல்லவர் வேறு எவர்?) உன்னை வலியவன் என்று உலகத்துக்கெல்லாம் பறைசாற்ற விழைகிறாயே! அருமை மகளிரின் கற்புத்திறம் திறம்பும் வகைக்கு அவர்களைப் பற்றி வலிந்து முனைந்து அவர்களோடு வாழ்தல்தான் ஒரு வலிமையுடைய அரசன் செய்ய வேண்டிய அறச் செயலோ? தருமம் இன்னது என்று அறியாது, இருமைச் செல்வம் இவை என்றும் எண்ணாது, அருமைத் தம்பியின் ஆருயிர்த்தேவியை

பெருமையழியப் பற்றி வாழ்தல் ஓர் அரசனுக்கு மாட்சிமையுடைய செயலாகுமா என்பதைச் சற்றும் சிந்தியாத நீ, நாடு புரக்கும் காவலன் ஆவது எவ்வாறு? நீ ஓர் உண்மையை அறிந்து கொள். நீ கொன்று உவகை கொள்ள நினைத்த சுக்ரீவன் இன்று என் காதலுக்குரிய துணைவன்; எளியவன்; என்னிடம் அபயம் வேண்டி அடைக்கலமாக வந்தவர்களைக் காப்பதே எஞ்ஞான்றும் என் முதற்கடன்.

*"ஏதிலாரும் எளியர் என்றால் - அவர்*
*தீது தீர்ப்பது என் சிந்தைக் கருத்து அரோ"*

*(கிட்கிந்தா - வாலி வதம் - 110)*

அறச் சார்பில்லாத - மக்களுக்கு அறம் என்றால் என்னவென்று போதிக்க இயலாத - அறம் திறம்பிய - அறப் பகைவனான உன்னை, அறத்தைக் காப்பதற்கே உயிர் வாழும் நான் கொன்றேன். கொன்று என்னைச் சரணடைந்த சுக்ரீவனைக் காத்தேன்."

எனவே, "நீ ஏன் என்னைக் கொன்றாய்?" என்ற வாலியின் கேள்விக்குப் பதிலாக இராமன் "அடைக்கலப் பொருளாகிய சுக்ரீவனைக் காப்பதற்காக அவனுக்குத் தீங்கிழைத்த உன்னைக் கொன்றேன்" என்ற உண்மையான காரணத்தைத் தெளிவாகக் கூறுகிறான்.

இராமனுடைய கணிப்பில் ஓர் அரசன் வல்லவனாக இல்லாதிருந்தாலும் கூடத் தாழ்வில்லை. அரசன் நல்லவனாக இருக்க வேண்டும் என்பது அவன் வாழ்ந்த அயோத்தியின் பண்பாடும் மரபும் ஆகும். அதனால்தான் வசிட்ட முனிவர், இராமன் அயோத்தியின் மன்னனாவதற்குரிய தகுதிகளைப் பற்றிப் பேசும் பொழுது,

*" 'கண்ணினும் நல்லன்; கற்றவர், கற்றிலாதவரும்*
*உண்ணும் நீரினும், உயிரினும், அவனையே உவப்பார்"*

*(அயோத்தி - மந்திரப் - 39)*

என்று இராமன் நல்லவன் என்பதால் மக்கள் அவனைத் தம் உயிரினும் மேலாக மதிக்கின்றனர் என்கிறார். எனவே மன்னன் அறச் சார்புடைய நல்லவனாக இருத்தல் மிக அவசியம் என்பது இராமனின் துணிபு............... ('நன்னடை நல்கல் வேந்தர்க்குக் கடனே' என்பது புறநானூற்றுக் கூற்று) எனவே வாலி வதத்துக்கான இராமனுடைய நியாயங்கள் இராமனின் கூற்றாகவே இதுவரை எடுத்துக் காட்டப்பட்டன.

ஓர் அரசன் செங்கோன்மை வழியில் தன் மக்களைக் கட்டுப்படுத்த வேண்டுமே ஒழிய தன் உடல் பலத்தால் குடிமக்களைத் தெருட்டுவது நீதியாகாது. அத்தகைய அரசன் கொடுங்கோலன் ஆவான். உடல் பலத்தினால் அந்தணரை வெருட்டிய அரக்கர் குலத்தை அழித்து அவர்களைக் காத்தவன் இராமன். உடல் பலத்தினாலேயே அறமற்ற முறையில், நியாயமற்ற காரணங்களுக்காகத் தன் தம்பியைக் கொல்ல நிற்கின்ற வாலியை – அதே உடல் பலத்தைக் காட்டி வெருட்டியே தம்பியின் மனைவியைத் தன் தாரமாக்கிக் கொண்ட வாலியை – கொல்ல முடிவெடுக்கும் இராமனுடைய செயலை அறச்செயல் என்று ஏற்றுக் கொள்வதில் என்ன தடையிருக்க முடியும்? அறம் தலை நிறுத்த அவதாரம் புரிந்தவன் அதைத் தானே செய்ய இயலும்! மேலும், தானே முனைந்து இராமன் வாலியிடம் பகை கொள்ளவில்லை. வாலியால் உயிர்ப் பயத்துக்கு ஆளான சுக்ரீவன் அபயம் கேட்கிறான். நியாயமான காரணங்களைக் கேட்டறிந்த பிறகு இராமன் வாலியைக் கொல்ல முடிவெடுக்கிறான். இது அறத்துக்குட்பட்ட செயலேயாகும். அரக்கர்களைக் கொன்று அந்தணர்களுக்கு அபயம் அளித்ததுபோல் இங்கு வாலியைக் கொன்று சுக்ரீவனைக் காக்க முடிவெடுக்கிறான். எனவே இராமன் வாலியிடம் பகைமை பாராட்ட வேண்டிய அவசியம் ஏற்படுகிறது.....

வாலி வதத்துக்கான இராமனின் நியாயங்களை வாலி வதைப் படலத்தில் இராமனுடைய சொற்களாலேயே கேட்டபிறகு, இராமன் வாலியைக் கொல்லும் திட்டத்தைத் தீட்டி, அதை அவன் எவ்வாறு செயல்படுத்துகிறான் என்பதை அறிய, நாம் காப்பியத்தில் பின்னோக்கிப் பயணம் செய்து நட்புக்கோட் படலத்திற்கே வருவோம்.

வாலியைக் கொல்லும் முடிவை இராமன் எடுத்த பிறகு, அதை வாய்விட்டும் சுக்ரீவனிடம் கூறுகிறான்.

*"உலகம் ஏழினொடு ஏழும் வந்து அவன் உயிர்க்கு உதவி*
*விலகும் என்னினும், வில்லிடை வாளியின் வீட்டி,*
*தலைமையோடு, நின் தாரமும், உனக்கு இன்று தருவென்"*
*(கிட்கிந்தா – நட்புக் கோள் – 70)*

என்று வாக்குறுதி கொடுக்கிறான் இராமன்.

அதன்பிறகு "வாலியின் இருப்பிடத்தைக் காட்டுக" என்று சுக்ரீவனிடம் ஆணையிடுகிறான். ஆனால் இராமனுடைய இந்த ஆணைக்குச் சுக்ரீவன் உடனே இணங்கத் தயங்குகிறான். காரணம், வாலியின் வரம்பிலாத ஆற்றலை அனுபவபூர்வமாக அறிந்தவன் அவன் ஒருவனே அல்லவா? எனவே வாலியைக்

கொல்லும் ஆற்றல் இராமனுடைய வில்லுக்கு இருக்குமா என்று சுக்ரீவன் ஐயுறுகிறான். இராமனின் வில்லாற்றல் பற்றிச் சுக்ரீவன் கேள்விப்பட்டிருக்கிறானே அன்றி நேரில் இதுவரை கண்டதில்லை. வாலியின் உடல் வலிமையும் கல் போன்ற திண்ணிய உடலின் தன்மையும் பற்றி மிக நன்றாக அறிந்தவனாதலால், இராமனுடைய அம்புக்கு வாலியின் திண்ணிய உடலைத் துளைக்கும் வேகமும் வலிமையும் இருக்கக்கூடுமா என்று ஐயுறுகிறான். எனவே அமைச்சர்களைக் கூட்டி ஆலோசிக்கிறான். அப்பொழுது அனுமன் இராமனுடைய தெய்வாம்சம் பற்றியும் ஆற்றல் பொருந்திய அவனுடைய வில் திறம் பற்றியும் புகழ்ந்து பேசுகிறான்.

*"சங்கு சக்கர குறி உள, தடக் கையில், தாளில்;*
*எங்கும் இத்தனை இலக்கணம் யாவர்க்கும் இல்லை;*
*செங் கண் விற் கரத்து இராமன், அத் திரு நெடு மாலே;*
*இங்கு உதித்தனன், ஈண்டு அறம் நிறுத்துதற்கு இன்னும்"*
*(கிட்கிந்தை – நட்புக் கோள் – 74)*

*"செறுக்கும் வன் திறல் திரிபுரம் தீ எழச் சினவிக்*
*கறுக்கும் வெஞ் சினக் காலன்தன் காலமும் காலால்*
*அறுக்கும் புங்கவன் ஆண்ட பேர் ஆடகத் தனி வில்*
*இறுக்கும் தன்மை, அம் மாயவற்கு அன்றியும் எளிதோ?"*
*(கிட்கிந்தா – நட்புக் கோள் – 75)*

என்று இராமனுடைய வில்லாற்றலைப் பற்றி விதந்தோதுகிறான் அனுமன். ஆயினும் சுக்ரீவனுக்கு ஐயம் அகலவில்லை. அதன் பேரில் வனத்திடை வரிசையாக நிற்கும் ஏழு மராமரங்களில் ஒன்றையேனும் ஊடுருவிச் செல்லும் ஆற்றல் இராமனுடைய அம்புக்கு இருக்குமானால், தான் இராமனின் வில்லாற்றல் பற்றிய ஐயம் தீர்ந்தவனாக ஆகலாம் என்ற அனுமனுடைய ஆலோசனையின் பேரில், சுக்ரீவன், அவ்வாறே முடிவெடுக்கிறான். சுக்ரீவன் விரும்பும் வண்ணமே தன் வில்லாற்றலை நிரூபிக்க முனைகிறான் இராமன்.

இராமன், வனத்தில் ஏழு மராமரங்கள் வரிசையாக நிற்கும் இடத்துக்கு வந்து நின்று, வில்லினின்றும் ஒரு நாண் ஒலி எழுப்பினான். திட்பமான அவ்வொலியால் வானமும் எண் திசைகளும் செவிடுபட்டன. திக்கயங்கள் மயங்கின; திசைகள் திகைத் தன. அடுத்து, வில்லின் நாணினை முறையுற வாங்கித் தன் வெய்ய வாளியை இழுத்து, மராமரத்தை நோக்கி அதனை விட்டான் இராமன். ஒரு மரம் அல்ல; வரிசையாக நின்ற ஏழு மராமரங்களையும் ஊடுருவிச் சென்றது உலகம் உய்யப் பிறப்பெடுத்த

ஜயனின் புனித வாளி! அது மட்டுமல்ல "ஏழு என்ற இலக்கத்தை இலக்காக வைத்ததோ இராமனின் கணை?" என்னும்படிக்கு, ஏழ் கடல், ஏழுலகம், ஏழ் குன்றம், ஏழு இருடிகள், ஏழு புரவிகள், ஏழு மங்கையர் என்று உலகில் 'ஏழு' என்னும் இலக்கச் சிறப்புப் பெற்ற அனைத்தும் இராமனின் ஒரு கணையால் அதிர்ந்து புரண்டு எழுந்து நடுங்கின.

*"ஏழு மா மரம் உருவி, கீழ் உலகம் என்று இசைக்கும்*
*ஏழும் ஊடு புக்கு உருவி, பின் உடன் அடுத்து இயன்ற*
*ஏழ் இலாமையான் மீண்டது, அவ் இராகவன் பகழி ;*
*ஏழு கண்டபின், உருவுமால் ; ஒழிவது அன்று, இன்னும்"*
*(கிட்கிந்தா – மராமரம் – 16)*

*"ஏழு வேலையும், உலகம் மேல் உயர்ந்தன ஏழும்*
*ஏழு குன்றமும், இருடிகள் எழுவரும், புரவி*
*ஏழும், மங்கையர் எழுவரும், நடுங்கினர் என்ப –*
*'ஏழு பெற்றதோ இக் கணைக்கு இலக்கம்?' " என்று எண்ணி*
*(கிட்கிந்தா – மராமரம் – 17)*

என்று இராமபிரானின் வில்லாற்றலின் வித்தகத்தைச் சித்திரமாய்த் தீட்டுகிறான் கம்பன். இவ்வாறு, சுக்ரீவன் வைத்த சோதனையில் வெற்றிகரமாகத் தேறி விடுகிறான் இராமன். வாலியின் உயிர் குடிக்கும் வல்லமை இராமனின் பகழிக்கு உண்டு என்று தேர்ந்து தெளியும் சுக்ரீவன், இராமனைத் தன்னிடம் அனுப்பிய விதியை வாழ்த்துகிறான். 'மன்னவர்க்கெல்லாம் மன்னவா!' என்று இராமனை விளிக்கிறான். தன்னை 'அடியார்க்கு அடிய எளியேன்' என்கிறான். இராமனைத் தெய்வம் எனப் போற்றிப் பரவுகிறான்.

*"வையம் நீ! வானும் நீ! மற்றும் நீ! மலரின்மேல்*
*ஐயன் நீ! ஆழிமேல் ஆழி வாழ் கையன் நீ!*
*செய்ய தீ அனைய அத் தேவும் நீ! நாயினேன்,*
*உய்ய வந்து உதவினாய், உலகம் முந்து உதவினாய்!"*
*(கிட்கிந்தா – மராமரம் – 19)*

என்று கூறி இராமனைப் பணிகிறான் சுக்ரீவன். வானரக் கூட்டமும், இதுகாறும் தம் வாடிய தோள்கள் வீங்கி வளர்ந்து உயர "நேடினேம் வாலி காலனை" என்று இராமனை நெடிது வாழ்த்தியது.

எனவே வாலியை இராமன் கொல்வது என்பது முடிவாகிவிட்டது.

அடுத்து, வாலியைக் கொல்வதற்கான போர்முறைத் திட்டம் ஒன்றை வகுக்க வேண்டிய அவசியம் உருவாகிறது. ஆனால் இத்திட்டம் வகுப்பதில் இராமனுக்குச் சில சிக்கல்கள் ஏற்படுகின்றன. அச்சிக்கல்களைக் கணக்கில் கொண்டே இராமன் போர் முறையைத் தேர்ந்தெடுக்க வேண்டியுள்ளது.

அச் சிக்கல்களைப் பின் வருமாறு பட்டியலிடலாம்.

1. வாலியைக் கொன்றுதான் இராமன் சுக்ரீவனுக்கு வாழ்வளிக்க முடியும்.
2. வாலிக்கும் இராமனுக்கும் நேரடியான பகை இல்லை.
3. சுக்ரீவனுக்காக வாலியுடன் இராமன் நேரடிப் போரில் ஈடுபடும் பட்சத்தில், வாலி, இராமனின் நட்பை நாடிவிட்டாலோ, அன்றி, அபயம் கேட்டு விட்டாலோ இராமன் சுக்ரீவனுக்குக் கொடுத்த வாக்கைக் காக்க இயலாமல் போய்விடும்.
4. எனவே அத்தகைய சூழலைத் தவிர்க்க வேண்டும்.
5. வாலியின் போர் உணர்ச்சியைத் தூண்டி அவனைக் கிட்கிந்தைக் கோட்டையிலிருந்து வெளிக் கொணர வேண்டும்.
6. வாலிக்குப் பகைவன் சுக்ரீவனே ஆதலால் சுக்ரீவன்தான் அச்செயலைச் செய்ய முடியும்.
7. எனவே சுக்ரீவன் வாலியைப் போருக்கு அறைகூவி அழைக்க வேண்டும்.
8. எதிரியின் பலத்தில் பாதியைப் பெற்றுக்கொள்ளும் வரபலம் உள்ளவன் வாலி.
9. வாலி–சுக்ரீவன் இருவரும் போர் புரியும் இடத்தினின்றும் இராமன் தள்ளி நின்று (அதாவது, வாலி தன்னைக் கண்டு நட்பு பாராட்டிவிட முடியாத அளவுக்கு அயலில் நின்று) அம்பெய்தி வாலியைக் கொல்ல வேண்டுவதோடு, தன்னுடைய பலத்தில் பாதியை வாலி பெற்றுவிட முடியாத வகைக்கு இராமன் தன்னைத் தற்காத்துக்கொள்ள வேண்டும்.

இடம், பொருள், ஏவல் கருதியும், போரில் ஈடுபடுவோர் இயல்பு கருதியும், போர்ச்சூழலே அசாதாரணமான முறையில் உருவாக்கப்படும் நிலை கருதியும், ஆழ்ந்து யோசித்த பிறகு, போர் புரியும் முறையும் அசாதாரணமாகத்தான் இருக்க வேண்டும் என்றெண்ணி இராமனே அமைக்கும் போர்த்திட்டம் இது. காப்பியத்தில் இராமன் கூற்றாகவே இது பின்வரும் வகையில் அமைக்கப்பட்டுள்ளது.

........................... வாலி அரசு புரியும் கிட்கிந்தை நாட்டின் புறத்தே அமைந்துள்ள வனத்தில் தான் இருந்துகொண்டு, சுக்ரீவன் வாலியைப் போருக்கு அறைகூவி அழைத்து, இராமன் இருக்கும் இடத்துக்கருகில் வாலியைக் கொண்டுவந்து, அவனுடன் போரிட வேண்டும். அப்பொழுது மறைவிடத்திலிருந்து அம்பெய்தி வாலியைத் தான் கொன்றுவிட முடியும் என்று தன்னுடைய போர்த்திட்டத்தை இராமன் சுக்ரீவனிடம் கூறுகிறான்.

காப்பிய வரிகள்,

*"அவ் இடத்து, இராமன், 'நீ அழைத்து, வாலி ஆனது ஓர்*
*வெவ் விடத்தின் வந்து போர் வினைக்கும் ஏல்வை, வேறு நின்று*
*எவ்விடத் துணிந்து அமைந்தது; என் கருத்து இது' என்றனன்"*
*(கிட்கிந்தா – வாலி வதை – 10)*

தான் வாலியை நேருக்கு நேர் எதிர்கொள்ளப் போவதில்லை என்பதைத் தெளிவாகக் கூறுகிறான் இராமன். 'வேறு ஒரு இடத்தில் இருந்து வாலி மீது அம்புவிட முடிவு செய்துள்ளேன்' என்றும், 'இத்திட்டத்தினால் ஏற்படும் பழிக்கும் பாவத்துக்குமோ, புகழுக்கும் போற்றுதலுக்குமோ நானே முழு பொறுப்பையும் ஏற்கிறேன்' என்ற பொருள்பட 'என் கருத்து இது' என்கிறான்.

வாலியோடு நேருக்கு நேர் பொருதாமல் சுக்ரீவனும் வாலியும் பொருதும் பொழுது தான் இடையில் அம்பு தொடுத்து வாலியைக் கொல்வது அறக்குறைவான செயல் என்பதை அறியாதவனா இராமன்? அறிந்தவனே ஆயினும், அயல் நின்று அம்பு விடும் அறக் குறைவுபட்ட போர் முறையைத் தெரிந்தே தேர்ந்தெடுக்கிறான். காரணம் என்ன? நிறைவான அறச் செயல் ஒன்றை ஆற்று வதற்கே குறைவான அறச்செயல் ஒன்றைச் செய்யத் துணிகிறான் இராமன். அஃதென்ன நிறைவான அறச் செயல்? அடைக்கலம் வேண்டிய சுக்ரீவனைக் காப்பதே முதலும் நிறைவுமான அறச் செயல் இராமனுக்கு. சுக்ரீவனுக்குத் தான் அளித்த வாக்கைக் காப்பாற்றி அவனை வாழ வைப்பது ஒன்றே இராமன் தேர்ந்தெடுத்துள்ள முதல் அறம். அந்த முதல் அறத்தைக் காப்பதற்குத் தான் தேர்ந்தெடுக்கும் முறையில் அறக்குறைவு இருந்தாலும், அதனால் தனக்குப் பழி வந்துற்றாலும் அச்செயல், தான் தேர்ந்தெடுத்த முதல் அறத்தை நிலைநிறுத்தப் பயன்படுமாயின், பிறருக்கு அது நன்மை பயக்குமாயின் அதுவே நல் அறம் என்ற நிலைப்பாடே இராமனுடையது என்பதை இங்கு இராமன் உணர்ந்ததுபோல் நாமும் உணர்தல் வேண்டும். உதாரணமாக இராமனுக்கு

வேண்டியது இதயமா? விழியா? என்றால் எதைத் தேர்ந்தெடுப்பான்? இதயத்தைத்தான். அபயம் வேண்டியவனைக் காப்பது இராமனுக்கு இதயம். தான் பழிக்குள்ளாகாமல் தப்புவது என்பது விழி. இராமன் இதயத்தைத் தேர்ந்தெடுக்கிறான்.

இது ஒன்றுதான் வழியா? வேறு வழிகளே இல்லையா? சுக்ரீவன் சார்பாக இராமன் வாலிக்குத் தூது அனுப்பியிருக்கக்கூடாதா? அனுப்பியிருக்கலாம். ஆனால் அத்தகைய நடவடிக்கையைத் தெரிந்தே தவிர்க்கிறான் இராமன். ஏன்? போர் புரிய முடிவெடுக்கும் மன்னர்கள் மூன்று கருத்துகளை மனத்தில் கொண்டே போர் தொடங்குவர்.

ஒன்று, போர் நடந்து கொண்டிருக்கும்பொழுதே சரணடைந்துவிட்டால் போரை நிறுத்துவது.

இரண்டு, சரணடையாமல் போர் செய்தால் போரில் பகைவனை வெல்வது; அன்றேல் கொல்வது.

இவ்விரண்டுமல்லாத மூன்றாவது நிலையும் உண்டு. அது, பகைவனைக் கொல்வது என்ற முடிவுடனே போர்க்களம் புகுவது. இந்த நிலையைத்தான் இராமன் எடுக்கிறான். வாலியைக் கொல்வது என்ற முடிவெடுத்தபின் தூது எதற்கு? கொல்லப்பட வேண்டியவன் வாலி மட்டுமே எனும்பொழுது, பெரும் போர் எதற்கு? அப் பெரும் போரின் விளைவாக ஏற்படும் பலருடைய வீணான மரணம் எதற்கு? .... இவ்வாறு இராமன் எண்ணியிருக்க வாய்ப்புண்டு. காரணம், பலருடைய மரணத்துக்குக் காரணமாகும் போரை ஒடுக்குவது புகழுக்குரிய செயல் என்பது வசிட்ட குருவிடம் இராமன் கற்ற பாடமாகும்.

இராமன் சுக்ரீவனுக்குத் துணையாக வந்துள்ளதை வாலி ஒற்றர்கள் மூலமாக இதற்குள் அறிந்திருக்கவும் கூடும். உண்மையில் வாலி அல்ல, வாலியின் மனைவி தாரையே இராமனின் வரவு பற்றியும், சுக்ரீவனோடு அவன் கொண்டுள்ள நட்பு பற்றியும் ஒற்றர்கள் மூலம் அறிந்து கொண்டு அச்செய்தியை வாலிக்குச் சொல்கிறாள் என்பது காப்பியம் காட்டும் நிகழ்ச்சி. காப்பிய வரிகள் இவ்வுண்மைக்குச் சான்று பகர்கின்றன.

சுக்ரீவனுடைய அறைகூவலைக் கேட்டுப் போருக்குப் புறப்படும் வாலியை இடைமறிக்கும் தாரை

*“........................... ‘அரச! ஆயவற்கு*
*இன் உயிர் நட்பு அமைந்து இராமன் என்பவன்,*
*உன் உயிர் கோடலுக்கு உடன் வந்தான்” என,*
*துன்னிய அன்பினர் சொல்லினார்!” என்றாள்.*

*(கிட்கிந்தா – வாலி வதை – 30)*

சுக்ரீவன்னைப் பகைவனாக எண்ணும் வாலி அவனுடைய நடவடிக்கைகளைத் தொடர்ந்து கண்காணிப்பவனாகவே இருக்க வேண்டும் என்றும், தன்னுடைய வரவும் நட்பும் பற்றி அவன் பால் அக்கறையுள்ளவர்கள் கூற (ஒற்றர்களும் கூற) வாலி இரலையின் குன்றத்து நடப்புக்களை அறிய வந்திருப்பான் என்றும் இராமன் கணித்திருந்தால், அதில் தவறில்லை. வாலியின் தோளாற்றலைத் தான் அறிந்தது போல தன்னுடைய வில்லாற்றலைப் பற்றி வாலியும் அறிந்தே வைத்திருப்பான் என்றும் இராமன் கணித்திருந்தாலும் அதிலும் தவறில்லை. இத்தகைய சூழலில் இராமன் சுக்ரீவன் சார்பாகத் தூது அனுப்பும் பட்சத்தில், வாலி ஏதாவதொரு காரணத்தின் அடிப்படையில் தன்னோடு நட்பு பூணவும், சுக்ரீவனோடு உறவு பாராட்டவும் முற்பட்டுவிட்டால், இராமன் சுக்ரீவனுக்குக் கொடுத்த வாக்கைக் காப்பாற்ற இயலாத தரும சங்கட நிலையல்லவா ஏற்படும்! இராமனுடைய நட்பை வாலி விரும்பும்பட்சத்தில் – போரைத் தவிர்த்து அமைதியை நிலைநாட்ட வேண்டி – ஒரு வேளை இராமனைச் சரணடைந்துவிட்டால், இராமனால் அந்தச் சரணாகதியைத் தவிர்க்க இயலாதல்லவா? அதே சமயத்தில் அபயம் அருளி அவனிடம் நட்பு பூணவும் இயலாதே! ஏன் இயலாது? காரணம் என்ன? காரணங்களை வாசகர்களுக்கு நினைவு படுத்த வேண்டியது இங்கு அவசியம். இராமன் வாலியிடம் நட்பு பூண இயலாமைக்கு இரு காரணங்கள் உண்டு.

1. வாலியைக் கொன்று கிட்கிந்தை அரசைச் சுக்ரீவனுக்குத் தருவதாக இராமன் சுக்ரீவனுக்கு வாக்களித்துவிட்டான். அந்த வாக்கை இராமன் காப்பாற்றியாக வேண்டும்.

2. சுக்ரீவனின் தாரத்தை நயந்து வாழ்பவன் வாலி. தன் மனைவியை நயந்து சிறையெடுத்த இராவணனைப் பகையெனக் கருதும் இராமன், அதே அறமற்ற செயலைச் செய்துள்ள வாலியிடம் நட்பு பூணுவது எவ்விதத்தில் சாத்தியமாகும்? அதுவும் அறமற்ற செயலேயாகும்.

எனவே, வாலி இராமனிடம் அபயமோ, நட்போ எதை வேண்டினாலும் அதை அருளக்கூடிய மனநிலையோ, சூழ்நிலையோ இராமனுக்கு இல்லை. எனவே

அத்தகைய சூழல் உருவாவதைத் தடுப்பதுதான் அறிவுடைய செயலாகுமேயன்றிச் சூழ்நிலையை ஏற்படுத்திக் கொள்வது உசிதமான செயலாகாது. ஆகவே இராமன் வாலிக்குத் தூது அனுப்பவில்லை. மேலும், வாலி போர்க்களத்தில் இராமனைக் கண்ட பின்னும் கூட நட்புறவுக்கு விழையலாம். எனவே வாலியின் முன்னர் தான் தோன்றுவதைத் தவிர்ப்பதே நலம் என்று முடிவெடுக்கிறான் இராமன். வாலியைக் கொல்வதே இலக்கு என்று முடிவெடுத்த பிறகு, பகையுணர்வுச் சூழலைத் தக்க வைத்துக் கொள்வதுதானே முறை! எனவே வாலி தன்னிடம் நட்பு வேண்டி விடாத வகைக்கான சூழ்நிலையை உருவாக்கியும், வாலி தன்னைக் காணவியலாத இடத்தில் நின்று கொண்டு சுக்ரீவனை வாலியிடம் சண்டையிட வைத்துத் தருணம் பார்த்து வாலியின் மருமத்தில் அம்பு பாய்ச்சி விடவும் முடிவெடுக்கிறான் இராமன். இதுதான் இராமன் மறைந்திருந்து அம்பெய்ய அடிப்படையான காரணம். இக்கருத்தைக் கம்பன் காப்பியத்தில் இலக்குவன் வாயிலாகக் கூறுகிறான்.

வாலியின் நட்பைத் தவிர்க்கும் காரணத்துக்காகவே இராமன், வாலி காணாதவாறு மறைந்து நின்றான் எனும் கருத்தை வாலி வதைப் படலத்தில் பின்வரும் நிகழ்ச்சியின் மூலம் இலக்குவன் தெரிவிக்கிறான்.

............ இராமனின் பாணம் பட்டு வாலி நிலத்தில் விழுகிறான். தன் மருமத்தின் உள்ளே நுழைந்து புறம்பெயரத் துடிக்கும் இராமனின் அம்பைக் கைகளில் பற்றியவாறு "ஆயிரம் அறங்கள் அறிந்த அறவாழிச் செல்வனாகிய நீ மறைந்திருந்து என்னை வீழ்த்தியதன் காரணமென்ன?" என்று வாலி கேட்கிறான் இராமனைப் பார்த்து. அதற்கு இராமன் உடனே பதில் கூறாமல் சிறிது காலம் தாழ்த்தி நிற்க, இலக்குவன் பின்வருமாறு பதில் கூறுகிறான்....

*" ' முன்பு நின் தம்பி வந்து சரண் புக, "முறை இலோயைத்*
*தென் புலத்து உய்ப்பென்", என்று செப்பினன் ; செருவில், நீயும்*
*அன்பினை உயிருக்கு ஆகி, "அடைக்கலம் யானும்" என்றி*
*என்பது கருதி, அண்ணல், மறைந்து நின்று எய்தது' என்றான்*
*(கிட்கிந்தை - வாலி வதை - 125)*

இந்தக் கருத்தை இராமன் இலக்குவனிடம் முன்பே வெளியிட்டிருக்க வேண்டும். அதை இலக்குவனும் ஆமோதித்திருக்க வேண்டும். அதனால்தான் இலக்குவன், வாலியைப் பார்த்து "உன்னை(வாலியை) கொல்வேன்" என்று தன்னைச் சரணடந்த சுக்ரீவனிடம் இராமன் முன்பே வாக்களித்து விட்டான். உன் எதிர் வந்து இராமன் நின்று, நீயும் அவன்பால் அன்புடையவனாகிவிட்டால் பிறகு சுக்ரீவனுக்கு அளித்த வாக்கைக்

காப்பது எப்படிச் சாத்தியமாகும்? எனவே மறைந்திருந்து அண்ணல் அம்பெய்தினான்" என்றான்.

இராமன் வாலியின் வீரத்துக்கு அஞ்சி, மறைந்து நின்று அம்பெய்ய முடிவெடுக்கவில்லை. சுக்ரீவனுக்குக் கொடுத்த வாக்கைக் காப்பாற்றுவதற்காக வேண்டியே வாலியைத் தான் நேருக்குநேர் சந்தித்துவிடக்கூடிய வாய்ப்பைத் தவிர்க்க எண்ணினான். (இக்காலத்தில், கல்லூரி முதல்வர்கள், சட்டமன்ற உறுப்பினர்கள், அமைச்சர் போன்றோர் என்ன செய்கிறார்கள்? தங்கள் பிள்ளைகளுக்குச் சலுகை வேண்டியும், பரிந்துரை வேண்டியும், தம்மை அணுகும் பெற்றோர்களைத் தவிர்ப்ப தற்காக, அமைச்சர் முதலானோர் இருக்குமிடம் தெரியாமல் மறைந்திருந்து, பிரச்சினை ஓய்ந்த காலக்கட்டத்தில் வெளிப்படும் உத்தியைக் கையாள்வதை நினைவு கூர்க). சுக்ரீவனுக்குக் கொடுத்த வாக்கைக் காப்பாற்றுதற்காகவே (வாலியுடனான நட்பைத் தவிப்பதற்காகவே) இராமன் மறைந்திருந்து வாலியுடன் போர்புரிய முடிவெடுத்தான் என்பதே கவிச்சக்ரவர்த்தி கம்பனின் கருத்து. இத்தகைய முடிவுக்கு நாம் வருவதற்குக் காப்பிய வரிகள் கைகொடுக்கின்றன.

வாலி தன் மார்பில் அம்பெய்தியவன் இராமன் என்று அறிய வந்த பின்னர், "முறை திறம்பிய செய்கை செய்தனனே இராமன்!" என்று எண்ணுகிறான். அவ்வாறு எண்ணுபவன் முன்னர் இராமன் வந்து நிற்கிறான். அப்பொழுது இராமனின் அருங்குணம் ஒன்றை வலியுறுத்தி அவனை வருணிக்கிறான் கம்பன்.

*"மறை திறம்பாத வாய்மை மன்னர்க்கு முன்னர் சொல்லும்*
*துறை திறம்பாமல் காக்கத் தோன்றினான், (இராமன்) வந்து தோன்ற"*
*(கிட்கிந்தை – வாலி வதை – 82)*

இவ்விடத்தில், கொடுத்த வாக்கைக் காப்பாற்றும் பண்புடைய இராமன் வாலியின் முன் தோன்றினான் என்கிறான் கம்பன். இப்பண்பை ஆதியிலிருந்து இராமனிடம் காண்பதால், கம்பன், இத்தகைய பண்பு இவனிடம் வெளிப்பட்ட ஆரம்ப காலத்து நிகழ்ச்சிகளையும் இங்கு இணைத்துப் பேசுகிறான். மேற்காணும் காப்பிய வரிகளின் பொருள் என்ன? அது பின் வருமாறு:

"மனுநீதி முறை வழுவாமல் அரசு புரிந்த தந்தை தயரதன், தன் மனைவிக்குக் கொடுத்த வாக்கு பொய்த்துவிடக் கூடாது என்பதற்காக, முன்பு அவனுடைய வாக்கைக் காக்கத் தோன்றிய இராமன், அதே மனுநீதி முறை இப்போதும் பொய்த்துவிடக் கூடாது என்ற நோக்கில் வாலி முன் தோன்றினான்"

இராமனும் கைகேயியிடம் வாக்கு கொடுக்கிறான். அது என்ன வாக்கு? தாய் கைகேயி 'பரதன் நாடாள இராமன் வனம் செல்ல வேண்டும் என்பது மன்னவன் ஆணை' என்கிறாள். அதற்கு மாற்றம் உரைக்கும் முகத்தான் இராமன் இரண்டு வாக்குகளைக் கொடுக்கிறான்.

ஒன்று 'என் தம்பி பரதன் ஆள்கையில் அரசுரிமையை நானே பெற்றதாக எண்ணுகிறேன்'.

இரண்டு 'வனவாழ்க்கையை இக்கணம் முதல் மேற்கொண்டு விட்டேன். உம்மிடம் இன்றே விடையும் பெற்றேன்.'

காப்பியப் பாடல்,

*" 'மன்னவன் பணி அன்றாகின், நும் பணி மறுப்பெனோ? என்*
*பின்னவன் பெற்ற செல்வம் அடியனேன் பெற்றது அன்றோ?*
*என் இனி உறுதி அப்பால்? இப் பணி தலை மேல் கொண்டேன்;*
*மின் ஒளிர் கானம் இன்றே போகின்றேன்; விடையும் கொண்டேன்' "*

*(அயோத்தி – கைகேயி சூழ்வினை – 114)*

பரதன் வனத்துக்கு வந்து, அரசுரிமையை ஏற்கும்படி இராமனிடம் மன்றாடும்பொழுது அதனை மறுத்துவிட்டுப் பிறகு தவிர்க்க இயலாத சூழலில் முதல் வரத்தில் ஒரு சமரசத் தீர்வைக் காண்கிறான் இராமன். ஆயினும் பதினான்காண்டு வனவாசம் என்பதில் இராமன் சமரசம் செய்து கொள்ளவில்லை என்பது முன்னரே கூறப்பட்டது. எனவே இங்கு கைகேயிக்குக் கொடுத்த வாக்கைக் காக்கும் பண்புள்ளவன் இராமன் என்ற கருத்தையும் பெற்றுக் கவியின்பம் நுகரலாம்.

வாலி வதை நிகழ்ச்சியில், சுக்ரீவனுக்கு இராமன் கொடுத்த வாக்கை அறிவோம். வாலியைக் கொன்று அரசுரிமையையும், சுக்ரீவனின் மனைவியையும் மீட்டுச் சுக்ரீவனிடம் அளிப்பது என்பது இராமன் சுக்ரீவனுக்கு அளித்த வாக்கு. மேலும் சுக்ரீவனுடைய பகைவன் தனக்கும் பகைவனே என்றும் கூறியுள்ளான் இராமன். அதைக் காக்கவே, வாலி அபயம் வேண்டியோ அன்றி நட்பு நாடியோ தன்னிடம் வரும் சூழலைத் தவிர்த்தான் இராமன். இராமனுடை வாக்கைக் காப்பாற்றும் பண்பைப் போற்றும் கம்பன், வாலியின் முன் இராமன் தோன்றும்பொழுது – இராமனின் அப்பண்பு குறித்துப் புகழ்ச்சியுரையைக் கூறி, சுக்ரீவனுக்குக் கொடுத்த வாக்கைக் காப்பாற்றிவிட்ட இராமன் இப்பொழுது வாலியின் முன் தோன்றினான் என்கிறான்.

வாலி உயிர்தாங்கி நிற்கையில் அவன் முன் தான் தோன்றுவதை இராமன் முதலில் தவிர்த்தான் என்பதை வலியுறுத்தவே, வாலி வீழ்ந்து விட்ட பின் அவன் முன் தோன்றினான் என்கிறான் கம்பன். மேலும் இதில் வீரத்துக்குக் குறைபாடு எதுவும் இல்லை என்ற தன் கருத்து வெளிப்பட இவ்விடத்தில் இராமனை வீரன் என்றே குறிப்பிடுகிறான் கம்பன். இராமனை அண்ணல், வள்ளல், அறவோன் என்றெல்லாம் புகழ்வதுதான் கம்பனுடைய மனதுக்குகந்த செயல் என்பதைக் காப்பியம் முழுவதும் காண்கிறோம். ஆனால் வாலி 'இராமனுடைய செயல் வீரச் செயல் அன்று' என்று வாதம் புரியும்பொழுது இராமன் அதற்குப் பதிலுரைக்குமாறு நிகழ்ச்சியை அமைத்துள்ள கம்பன் அவ்விடங்களில் இராமனைச் சிறப்பாக – குறிப்பாக – "வீரன்" என்ற சொல்லால் குறிப்பிடுகிறான். காப்பியச் சான்றுகள் பின்வருவன.

அன்று அவ் வாலி, அனையன சொல்லினான்

*நின்ற வீரன், இனைய நிகழ்த்தினான்*
*(கிட்கிந்தா – வாலி வதை – 99)*

*"பிழைத்த தன்மை இது எனப் பேர் எழில்*
*தலைத்த வீரன் உரை செய ...................."*
*(கிட்கிந்தா – வாலி வதை – 11)*

'பொய்மையும் வாய்மையிடத்த – புரை தீர்ந்த
நன்மை பயக்கு மெனின்' *(குறள் – 292)*

என்பது வள்ளுவர் வாக்கு. அதாவது பொய் மெய்யாக கொள்ளப்படுவது, இடம் பொருள் ஏவல் பொருத்தே. அப்படியென்றால் அத்தகைய இடம் பொருள் ஏவலைக் கருத்தில் கொண்டே இங்கு, வாலியின் மேல் இராமன் மறைந்திருந்து அம்பு எய்த பின்னும் கம்பனால் அச்செயலுக்காக அவன் இகழப்படாததோடு, வீரன் என்றே மீண்டும் மீண்டும் குறிக்கப்பெறுகிறான்.

கம்பனுடைய நோக்கில், பொதுவான போர் நீதிக்குப் புறம்பாகப் போரில் ஈடுபடும் வாலியைப் பொதுவான போர் நீதிக்குப் புறம்பான முறையிலேயே வெற்றி கண்ட இராமன் வீரனே ஆவான். (இன்றும் சட்டத்திலுள்ள ஓட்டைகளைப் பயன்படுத்தி வழக்குகளிலிருந்து விடுபட்டும், சட்டத்தின் பிடியிலிருந்து தப்பித்தும் வாழும் குற்றவாளிகளைக் காவல்துறை தந்திரமாக வளைத்துப் பிடித்துக் கொன்று விடும் முறை உள்ளதை இங்கு நினைவு கூர்தல் நலம்). எனவே கண்களுக்குப் புலனாகாமல் மறைந்திருந்து வாலிக்குப் பலத்தைக் கொடுத்து அவனைக் காத்து வந்த அவனது வரபலத்தைக் குலைப்பதற்கு இராமனும் வாலியின் கண்களினின்றும் மறைந்து

நின்றே அவனைக் கொல்ல வேண்டி வந்தது. பேரிலக்குகளும், பேரறங்களும் அடையப்படுவதற்குச் சிற்றறங்கள் பலியிடப்படுவது என்பது போர்த் திட்டத்தில் தவிர்க்க இயலாததோடு, அவற்றுக்கெல்லாம் மனம் துணியும் உள்ளாற்றல் கொண்ட வீரனே இறுதியில் வெற்றிபெற முடியும் என்பதனால் இராமனின் செயலைக் கம்பன் வீரச்செயல் என்றே கணித்தான்.

"சுக்ரீவனைக் காக்க இராமன் உன்னைக் கொன்றான்" என்ற இலக்குவனுடைய கருத்தை இராமன் மறுக்கவில்லை. காரணம், இலக்குவனுடைய கூற்று, உண்மை என்பதால்தான். எனவே இலக்குவன் கூறிய கருத்தே இராமனுடைய கருத்தும் ஆகிறது. வாலியும், தான் இராமன் பால் கொண்டிருந்த அளவில்லாத நன்மதிப்பு காரணமாக, இராமனைத் தன் கண்களால் தரிசித்திருந்தால் இராமனுடைய நட்பைத் தான் நாடும் சூழல் உருவாகியிருக்கச் சாத்தியமுண்டு என்று நினைத்தே இலக்குவனுடைய பதில் சரியானதுதான் என்று மௌனமாக ஏற்றுக்கொண்டும் விடுகிறான். ஆயினும், நமக்கு ஓர் ஐயம்! ஒரு கேள்வி! இந்தப் பதிலை ஏன் இராமன் வாய் திறந்து கூறவில்லை? ஏன் இலக்குவன் கூறுகிறான்? இராமன் பதில் கூறத் தயங்குவது ஏன்? இராமனின் தயக்கத்தையும், சிறு கால தாமதத்தையும் உத்தேசித்தே இலக்குவன் பதில் கூறியிருக்க வேண்டும் என்று நம்மால் ஊகிக்க முடிகிறது. இலக்குவன் கூறுகின்ற பதில்தான் உண்மையான காரணம் என்பது சரியே, இதுவே இராமனின் கருத்து என்பது கம்பனின் கருத்தும் ஆகும். ஆனால் இராமன் ஏன் அக்கருத்தை உடனே வாய் திறந்து கூறவில்லை? அப்படியென்றால் இந்தக் காரணத்துக்கு மேலும் வேறு ஏதாவது காரணம் உள்ளதா? அக்காரணம் இராமன் மட்டுமே சிந்தித்து வைத்திருந்து, இலக்குவன் அறியாத ஒன்றா? ஒன்றுக்கும் மேற்பட்ட காரணங்கள் இருக்கும்பொழுது எதைச் சொல்வது என்று புரியாமல்தான் இராகவன் ஒரு கணம் தயங்கி நிற்கிறானா?! அல்லது குழம்பி நிற்கிறானா? ஒன்றுக்கும் மேற்பட்ட அக் காரணங்களைப் பற்றி ஆய்வு செய்ய காப்பியத்தில் இடம் உள்ளதா? வேறு ஏதேனும் மறைவான கருத்துகள் உள்ளனவா?

இத்தகைய கேள்விகளுக்குப் பதில் தேட வேண்டியது மிக மிக அவசியமாகும். அப்பொழுதுதான் வாலியின் எத்தகைய போர் முறையை முறியடிப்பதற்காக இராமன் அறக்குறைவான போர் முறையைத் தேர்ந்தெடுக்கும் அவசியத்துக்குத் தள்ளப்பட்டான் என்பதையும், போர்த் திட்டங்கள் போடுவதற்கு என்று பொதுவான விதிமுறைகள் இருந்தாலும், இடம்பொருள் ஏவல் கொண்டு சமயத்துக்குத் தக்கவாறு போர் முறையை மாற்றியமைத்தலும்கூட போர் முறை நீதியே என்பதையும் நாம் அறிந்து, இராமன் பொதுவான அறத்துக்குப் பிறழ்வான முறையைக் கைக்கொண்டிருந்தாலும் அதுவும் சரியே என்பதையும் நாம் உணர முடியும்.

வாலியை மறைந்திருந்து இராமன் அம்பெய்து கொன்றதற்கு இலக்குவன் கூறிய பதிலும் ஒரு காரணம்தான் என்பது முன்பே கூறப்பட்டது. இது இலக்குவனிடம் இராமனால் விவாதிக்கப்பட்ட கருத்தாகவே இருக்க வேண்டும். காரணம், இராமனுக்கு உடன்பாடில்லாத கருத்தை இலக்குவன் தன்னிச்சையாகக் கூறத் துணியமாட்டான். இஃதன்றி இலக்குவனிடம் விவாதிக்கப்படாத, இராமன் மட்டுமே சிந்தித்துத் தன் மன ஆழத்தில் வைத்திருந்த காரணங்கள் இரண்டு. ஒன்று பொதுவாகவே, எதிராளியின் போர் முறையின் அடிப்படையில் தன்னுடைய போர்த் திட்டத்தை வகுப்பது என்பது அரச நீதியும் போர் முறை நீதியும் ஆகும். உதாரணமாக எதிரி தந்திரமாகத் திட்டமிட்டால் தந்திரத்தாலேயே அதை வெல்வது; அறமற்ற போர் முறையைப் பின்பற்றினால் அறமற்ற போர் முறையினாலேயே அவனை எதிர்கொள்வது – ஆகிய இருமுறைகளும் போரில் தவிர்க்க இயலாத முறைகள் ஆகும். பொதுவாக எதிரியின் போர் முறைக்கேற்ப போர் முறைகளைப் பின்பற்றுவது ஏற்றுக்கொள்ளப்பட்ட அறமேயாகும். **இது முள்ளை முள்ளால் எடுப்பது போன்ற நடைமுறைக்கு ஒத்த முறையே ஆகும்.**

இரண்டாவதாக, **வாலி விலங்கினத்தவன் ஆதலால் விலங்கை மறைந்திருந்து கொல்வது சரியே** என்பது இராமனின் கருத்து ஆகும். இக்கருத்து மேலும் விளக்கப்பட வேண்டும்.

ஆரம்பத்தில் கவந்தனின் உரையினாலும், அனுமனின் ஆற்றலைக் கொண்டும், சுக்ரீவனைப் பற்றிய நன்மதிப்பு கொண்டிருந் தாலும், சிறிது காலப்பழக்கத்திற்குப் பிறகும், வாலி சுக்ரீவனின் குணங்கள் பற்றி அனுமன் உரையினால் அறிய வந்ததன்பிறகும், வாலி, சுக்ரீவன் ஆகியோர் அரசர்களேயாயினும், அவர்கள் அரசர்களுக்குரிய உயர் நெறிப் பண்புகளற்ற விலங்குகள் என்று இராமன் கணித்திருந்தான். விலங்கை மறைந்திருந்து கொல்வது ஏற்றுக்கொள்ளப்பட்ட நீதியாகும். மேற்கூறப்பட்ட காரணத்தின் அடிப்படையில்தான், இராமன் வாலியை மறைந்திருந்து கொல்வதில் தவறில்லை என்று தனக்குத்தானே நியாயம் கற்பித்திருந்தான். இடம் பொருள் ஏவல் பொருத்து, பொது நியாயமும், தனி நபர் நியாயமும் முரண்படக்கூடும். உதாரணமாக, இந்திரசித்தன் மறைவிடத்தில் நிகும்பலை யாகம் செய்து தேவ சக்திகள் பெற்று இராம இலக்குவர்களை அழிக்க நினைக்கிறான். இலக்குவனும் அம்மறைவிடத்தைக் கண்டுபிடித்து யாகத்தைச் சிதைக்கிறான். வேள்விகள் சிதைக்கப்படக்கூடாதவை என்ற பொது நீதி உண்டு. வேள்விகளைக் காக்கும் பணியை இராமனே ஏற்றுக் கொண்டவன். ஆயினும் நிகும்பலை யாகம் இராமனின் அனுமதியுடனே சிதைக்கப்படுகிறது. இது சரியா? தவறா? சரி என்பதுதானே பதில். அவ்வாறே, வாலியை மறைந்திருந்து கொல்வதும் அவனளவில் சரியான நியாயமே என்று இராமன் மனத்துக்குள் கருதியிருந்ததால் – அக்கருத்து இலக்குவன் அறியாதது ஆகையால் (இலக்குவன் வாலிக்குப் பதிலுரைக்கும் பொழுது) இராமன் மௌனம் காக்கிறான். மேற்கூறப்பட்ட கருத்தைப் பற்றி விரிவாகப் பார்ப்போம்.

வாலி விலங்கே என்று இராமன் கணிப்பதற்குக் காரணங்கள் என்ன?

ஒன்று – வாலி உடலளவில், உடல் பலத்தில் விலங்கே. வாலியின் உடல் பலம் எல்லையற்றது. நடைமுறை பேச்சு வழக்கில், நூறு யானை பலம், ஆயிரம் யானை பலம் என்பார்களே – அத்தகைய – விலங்கு பலம் பெற்ற பெரு வலிமையுடையது வாலியின் உடல். (இன்றளவும், விளையாட்டுப் போட்டிகளில் பங்கு பெறுவோர், ஆணாயினும், பெண்ணாயினும், தங்களுடைய பாலினத்துக்குத் தக்கவாறு தங்கள் உடலமைப்பு உள்ளதா என்ற பரிசோதனைக்குத் தங்களை அவர்கள் உட்படுத்திக்கொள்ளவேண்டும் என்பதை ஈண்டு நினைவு கூர்தல் நலம்) இத்தகைய அடிப்படையில் நோக்கினால் வாலி விலங்கே.

இரண்டு – வாலி உடலளவில் அன்றி குணத்திலும் விலங்கே. காரணம், தந்திரகுணம் கொண்டு பிறரை வெல்லும் விலங்குகள் போல, வாலியும் தந்திரம் நிறைந்த ஒரு வரம் பெற்றிருந்தான். அதன்படி வாலியோடு எவர் போர் புரிந்தாலும் அவர்களுடைய உடல் பலத்தில் பாதியை வாலி பெற்று விடுவான் என்பதே அந்த வரம்.

ஆக, இயல்பாகத் தனக்குற்ற எல்லையற்ற விலங்கின உடல் பலத்தோடு, உபரியாகக் கிட்டும் பிறருடைய பாதி உடல் பலமும் பெற்றே இதுவரை அவன் எதிராளிகளோடு போர் புரிந்து வெற்றி பெற்றிருக்கின்றான்.

வாலியின் இந்த வர பலத்தை இராமன் வீரமென்று கணிக்காமல் தந்திரம் என்று கணிக்கிறான். அத்தகைய வர பலம் இல்லாத பட்சத்தில் வாலியின் வீரம் மாற்றுக் குறைவுபட்டதே. காரணம், வாலி மனத்தளவில் தான் பெற்ற வரபலத்தின் மீது மிகுந்த பற்றும் நம்பிக்கையும் உடையவனாக விளங்குகிறான். அவனுடைய மனம் அந்த வரபலத்தை எப்பொழுதும் நாடுவதாகவே உள்ளது. இந்தக் கருத்துக்குக் காப்பியத்தில் சான்று உள்ளது.

சுக்ரீவன் தன்னைப் போருக்கு அறைகூவி அழைக்கும் பொழுது அவனை எதிர் கொள்ள ஆயத்தமாகும் வாலி, 'பகைவனின் உரத்தில் பாதியை வாங்கிக் கொள்ளும் வரம் உள்ள என்னை வெல்பவன் எவன்?' என்று செருக்கோடும், அகங்காரத்தோடும் கேட்கிறான். காப்பிய வரிகள் பின்வருமாறு;

*"பேதையர் எதிர்குவர் எனினும், பெற்றுடை ஊதிய வரங்களும், உரமும் உள்ளதில் பாதியும், என்னதால் ; பகைப்பது எங்ஙனம்? ...................."*

*(கிட்கிந்தா – வாலி வதை – 29)*

வர பலம் உள்ளதால் பகைவரை அலட்சியப்படுத்தும் அகங்காரம் தனக்குள்ளதை இங்கு வாலியே தன் வாய்மொழியால் வெளிப்படுத்துகிறான். இந்த வரபலம் உருவாக்கும் அகங்காரமும், ஆணவமுமே வாலியின் பெருங் குணக்குறைகளாகும். எதிரியோடு போரிட முற்படும் பொழுது தன்னைக் காக்கும் கவசம் என்று, தான் பெற்ற வர பலத்தைப் பற்றி நினைப்பவன் இராமனுடைய கணிப்பில் கோழையே ஆவான்.

இந்த வரபலத்தைப் பற்றிப் பிறர் குறிப்பிட்டால் கூட அது வீரம் என்றாகும். பிறருடைய பலத்தை வரத்தால் திருடும் தன் தந்திரத்தைப் பற்றிய பீடு பொங்க வாலியே பேசுவது அவனுக்குப் பெருமையைச் சேர்க்காது. ஆனால் தன்னுடைய தோள் வலியைப் பற்றிப் பேசும் பொழுதெல்லாம் வாலி மறவாமல் தன் வரத்தைப் பற்றி நினைவு கூர்கிறான் என்றால் **தன் தோள்வலிக்கு மறைவாக ஒரு உதவியை மனத்துக்குள் நாடுகிறான் என்றே பொருள். அப்படிப்பட்டவனோடு போர் புரிபவன் தனக்கும் மறைவாக ஒரு உதவியை நாடுவதில் தவறுண்டோ?** எனவே இவ்விஷயத்தில் இராமனுடைய நியாயம் பின்வருமாறு அமைகிறது. "சுக்ரீவன் வாலியை போரில் எதிர்கொள்ளும் உடல் பலம் கொண்டவன்தான். வாலியின் தோள்வலிக்கு எதிர்வலி காட்ட சுக்ரீவன் அஞ்ச வேண்டியதில்லை. ஆனால், வாலிக்குப் பின்னால் மறைந்திருந்து அவனைக் காக்கும் வரபலத்தை எதிர்கொள்வது எங்ஙனம் சாத்தியமாகும்? இந்தச் சங்கடத்திற்கு, இராமன், தீர்க்கமாகச் சிந்தித்து ஒரு தீர்வு காண்கிறான். **வாலிக்கு மறைவிலிருந்து உதவுவது வரபலம் என்றால், சுக்ரீவனுக்கு மறைவிலிருந்து உதவுவது தன்னுடைய சரபலமாக இருக்க வேண்டுமென்பதே அத்தீர்வு.** வாலியின் முன்னால் எவர் நின்று போர் புரிந்தாலும், அவரது பலத்தில் பாதியை வாலி பெறுவானென்றால், அவனை நேருக்கு நேர் நின்று போர் செய்து எக்காலத்திலும், எவராலும் வெல்ல முடியாது என்பதுதான் உண்மை. இது எப்படி நேர்மையான போர் முறையாகும்? வாலியைக் கொல்ல நினைப்பவன் அவனைப் பின்னாலிருந்து முதுகில்தான் தாக்க வேண்டும். எந்த வீரனும் பின்னாலிருந்து தாக்கமாட்டான். மார்பில் அடித்தாலே மீண்டு வந்து தாக்கும் வாலி, முதுகில் அடிப்பதால் இறந்துவிடப் போவதில்லை. வாலியின் பகைவன் வாலியை மார்பில் அடித்துத்தான் கொல்ல வேண்டும். அதே சமயத்தில் வரத்தை வலுவிழக்கச் செய்யவேண்டுமென்றால், பகைவன், அவன் கண் பார்வையில் படாமல் இருப்பதைத் தவிர வேறு வழியில்லை. இத்தகைய சூழலில்தான் வாலியைக் கொல்ல முடியுமென்றால், அவனுடைய கண் பார்வையில் படாதபடிக்கு வேறு ஓர் இடத்திலிருந்து அவன் மீது அம்பு செலுத்திக் கொல்லும் போர்த் திட்டம் ஒன்றுதான் சரியானதாக இருக்கும். **எனவே, வாலி, தன்னுடைய அறமற்ற வரத்தின் மூலமாகத் தன்னை வெல்லும் அறமற்ற போர்த் திட்ட முறையைப் பிறர் தீட்ட வாய்ப்பு**

கொடுத்தான் என்பதுதான் உண்மை. இத்தகைய சூழலில் இராமனுடைய போர் முறை, வீரத்தில் இழுக்குப்பட்டதில்லை என்பது கம்பனுடைய கருத்து. ஆகவே வாலி வதம் இராமனுடைய செப்பருங்குணநலனுக்கு ஊறு விளைவிக்கவில்லை என்பதனால் தான் – பாயிரத்தில், "காசில் கொற்றத்து இராமன்" என்று அண்ணலைக் குறிப்பிடுகின்றான் கம்பன். எதிரியை எதிர் கொள்ளும் களத்தில், சொல்லுக்குச்சொல், வில்லுக்கு வில், வாளுக்கு வாள், தோளுக்குத் தோள் என்பதுதான் முறையென்றால் தந்திரத்துக்குத் தந்திரமே என்பதும் முறையான போர்த்திட்டமே அல்லவா? இதுதான் நடைமுறைக்கு ஒத்த வினை என்பதோடு, இத்தகைய அணுகு முறை சரி என்பதைத் தர்க்க வாதத்தாலும் நிலை நாட்ட முடியும்.

................ நூல் கண்டில் விழும் சிக்கலை, அச்சிக்கல் விழுந்து முன்னேறி முன்னேறிச் சிக்கலாகிய விதத்திலேயே பிரித்துப் பின்னிறங்கினால்தான் சிக்கலை விடுவித்து நூலை நேராக்க முடியும். இந்த உபாயம் போர் முறையிலும் பின்பற்றக்கூடியதே. போரிடும் பொழுது வீரன் ஒருவன் எத்தகைய நிலைகளைக் கடந்து ஒரு வியூகத்துக்குள் நுழைகிறானோ, அத்தகைய நிலைகளினின்றும் பின் வாங்கியே வியூகத்தினின்றும் வெளி வரவும் வேண்டும்.

மருத்துவ சாத்திரத்திலே நஞ்சை, நஞ்சு கொண்டே முறிக்கும் வைத்தியமுறை ஒன்றுண்டு. பொதுவாக உடலில் நஞ்சைச் செலுத்துதல் எனும் செயல் உடலுக்குக் கேடு விளைவித்து உயிரைப் பறிக்கும் விளைவைத்தான் உண்டாக்கும். ஆனால் நஞ்சை நஞ்சால் முறிக்கும் மருத்துவ முறையைக் கையாளும் மருத்துவனைக் காணும் ஒருவன், அந்த முறையின் பின்னணியை அறியாது மருத்துவரே நோயாளிக்கு விடம் கொடுத்துக் கொல்கிறார் என்று கூக்குரலிட்டு இடையூறு செய்தல் சரியா? தவறா? உண்மையறியாதவர் மருத்துவரைத் தூற்றுவர். உண்மையறிந்தவர்கள் மருத்துவரைப் போற்றவே செய்வர். "வாளால் அறுத்துச் சுடினும் மருத்துவன் மேல் மாளாத காதல் கொள்ளும் பிணியாளன்" என்ற அறிவுடையோர் பொன்மொழிகளை நோக்குக. வைரத்தை வைரத்தால் அறுத்தல்தான் நடைமுறை வழக்கம் . முள்ளை முள்ளால் அகற்றுவதுதான் நடைமுறை சாத்தியமும்கூட. ............ இவ்வுலக வாழ்க்கையை வாழ விதிக்கப்பட்ட மக்கள் அனைவருமே, பிறர் செய்யும் தவறுகளைத் திருத்தப் புறப்பட்டுச் செயல்படும்பொழுது, அதே தவற்றைத் தாமும் செய்தே பிறருடைய தவறுகளைத் திருத்துவதோ அல்லது சங்கடங்களைத் தீர்ப்பதுவோ ஆகிய நல்ல விளைவுகளை ஏற்படுத்த முடியும் என்பதை நடைமுறை வாழ்க்கை அனுபவத்தில் உணர்வார்கள். இத்தகைய அணுகுமுறைகள் இயற்கைத் தருமம் என்று ஏற்றுக்கொள்ளப்பட வேண்டியதேயன்றித் தவறு என்று முத்திரை குத்தப்படத் தகுந்தவை அல்ல.

உதாரணமாக, அரசன் ஒருவனின் அந்தப்புரத்துக்குள் நுழைய உரிமை பெற்ற ஒரே ஆண் மகன் அரசன் என்பதே பொது விதி. வாயில் காப்போன் ஓர் ஆண். அரசனைத் தவிர வேறு எவரும் அந்தப்புரத்துக்குள் நுழையாதபடி கண்காணித்து அந்தப் பொது விதியை நிலைநிறுத்துவதே அவன் கடமை. அவனுக்கே உள்ளே நுழைய உரிமையில்லை. அவனுடைய உரிமை வாயில் வரைதான்.

வாயில் காப்போனுடைய காவலையும் மீறி வாயில் வழியாகவோ அன்றி வேறு எப்படியோ கையில் கத்தியோடு அந்தப்புரத்துக்குள் ஒருவன் நுழைவதை வாயில் காப்போன் கண்டுவிட்டான் என்று வைத்துக் கொள்வோம். கண்டு வாளா இருக்க முடியுமா? இருக்கலாமா? அரசனுக்கு ஊறு விளைவிக்கும் முன் அவனைப் பிடிக்க வேண்டியது அவனுடைய கடமையல்லவா? உள்ளே நுழைபவர்களை வாயிலில் தடுத்து நிறுத்துவது மட்டுமே தன் கடமை என்று அவன் வாளா இருப்பது சரியா? அன்றி அந்நிய ஆடவர் நுழையக்கூடாதென்ற பொது விதியைத் தானே மீறி அரசனின் படுக்கையறைவரை சென்றுவிட்ட பகைவனைக் கையில் கத்தியுடன் கையும் மெய்யுமாகப் பிடிப்பது சரியா? அந்தப்புரத்துக்குள் நுழைந்துவிட்ட குற்றத்தைப் புரிந்தவன் என்று வாயில்காப்போனைத் தண்டிப்பதா? அல்லது அரசனுடைய உயிரைக் காப்பாற்றியவன் என்று அவனைப் பாராட்டுவதா?

எச்சரிக்கைப் பலகையைப் பாராமல் ஆபத்து மிகுந்த பகுதிக்குள் சற்று தூரம் நடந்துவிட்ட ஒருவனைக் காப்பாற்ற விழைபவன், தானும் எச்சரிக்கைப் பலகையைத் தாண்டி ஆபத்து மிகுந்த பகுதிக்குச் சற்று தூரம் வரை நடக்க வேண்டியே இருக்கும். விதியைப் பின்பற்றாதவன் என்று இரண்டாமவனைத் தண்டிக்க முடியுமா? சட்டம் என்பது வேறு. இயற்கை நடைமுறை என்பது வேறு என்பதை உணர வேண்டும். அசாதாரணச் சூழ்நிலைகளில் பொதுச் சட்டம் கூட, விதிவிலக்கு பெறும் நடைமுறை உலகில் உண்டு என்பதையும் உணர வேண்டும். விஷத்தை விஷத்தால் முறிப்பது சரியென்றால், வைரத்தை வைரத்தால் அறுப்பதே அறிவுடைமை என்றால், அபாயகரமான பகுதிக்குச் செல்பவனைத் தடுத்து நிறுத்துபவனும் அந்த அபாயகரப் பகுதிக்குள் நுழைந்து செயல்படுவதே இயற்கை நடைமுறையென்றால், **வாலியோடு நேர் நின்று போர் செய்பவன் தன்னுடைய பலத்தில் பாதியை வாலிக்குத் தானம் செய்ய வேண்டியிருக்கும் என்ற நிலையில், மறைந்திருந்து அவனைக் கொல்லும் போர் முறையைத் தேர்ந்தெடுத்த இராமனின் போர் நெறியும் சரியே ஆகும்.** இங்கு பொதுவான போர் நீதிக்கு இடமில்லை. இயற்கையின் நியதியான “வலியது வாழும்” என்ற சித்தாந்தத்தைப் பின்பற்றும் வாலியைக் கொல்ல இராமனும் இயற்கையின் நியாயம் மட்டுமே எடுபடும் போர் முறையைச் சிந்தித்துத்

தேர்ந்தெடுத்தே செயல்படுகிறான். இயற்கையின் நியாயம் மட்டுமே துலங்கித் தோன்றும் இடம் இது.

மேலும், இராமன் நேரில் நின்று வெற்றி பெற்றானென்றே வைத்துக் கொள்வோம். அதன்பிறகு தேவரும் மூவரும் தவத்தோர்க்கு அளிக்கும் வரத்துக்குத் தான் என்ன மதிப்பு? அறத்துக்குப் புறம்பான வரத்தைக் கேட்பவர்களுக்கும் வரமளிக்கக் கடமைப்பட்டதே தெய்வம் என்பது புராணங்கள் கூறும் செய்தி. எனவே தெய்வம் அளித்த வரத்துக்கு மதிப்பளிக்கும் வகையில் இராமன் தன் போர்த் திட்டத்தை வகுத்துக் கொண்டான் என்ற நோக்கிலும் இந்நிகழ்ச்சியைப் பார்க்க வேண்டும். மேலும் வரமளித்த பரம்பொருளே இராமன்தானே! அவனுடைய வாக்கை மீறி அவனே நடக்க இயலாதல்லவா? இதுவும் கம்பன் கருத்தே ஆகும். இந்தக் கருத்துக்கு காப்பியத்தில் சான்று உண்டா? உண்டு!

இராமன் மட்டுமல்ல. வேறு எந்த அவதாரமும் கூட வாலியோடு தோளுக்குத் தோள் எதிர் நின்று போர் புரிந்திருக்க இயலாது என்ற கருத்தைப் பின்வரும் காப்பியப் பாடல் மூலம் கம்பன் நமக்கு உணர்த்துகிறான்.

வாலியின் வரம்பிகந்த ஆற்றலைப் பற்றி அனுமன் இராமனுக்கு எடுத்தியம்பும் பொழுது பின்வரும் கருத்தைக் கூறுகிறான்.

"பார் கிடந்த வெம்பன்றி, பண்டை நாள்
நீர் கடைந்த பேர் ஆமை, நேர் உளான்;
மார்பு இடந்த மா எனினும், மற்றவன்
தார் கிடந்த தோள் தகைய வல்லதோ!"

*(கிட்கிந்தா – பம்பை வாவி –43)*

பொருள்: பூமியைத் தன் கொம்பில் தாங்கிய வராகம், அமிழ்தம் கடையப் பெற்ற பாற்கடலில் மந்தார மலையெனும் மத்தைத் தாங்கிப் பிடித்த ஆமை, இரணியனின் மார்பைப் பிளந்த நரசிம்மம் ஆகிய பேராற்றல் கொண்ட அவதாரங்கள்கூட, வாலியின் மாலையணிந்த தோளைப் பற்றி எற்ற வல்லன அல்ல (அதாவது, பரம்பொருளின் அம்சமாகிய தாம் கொடுத்த வரத்துக்குப் புறம்பாகத் தாமே நடக்க வல்லன அல்ல).

அடுத்து வாலியின் வரபலம் தொடர்பாக இராவணனுக்கு எத்தகைய கருத்துக்கள் இருந்தன என்பதையும் காப்பியம் கூறுகிறது.

''வாலிக்குள்ள வரபலம் பற்றி அறியாமல் போர் புரிந்து என் வலிமையை இழந்து அவனிடம் தோற்றேன்'' என்று இராவணன் வீடணனிடம் கூறுகிறான்.

காப்பியப் பாடல்:

''அரங்கில் ஆடுவார்க்கு அன்பு பூண்டு உடை வரம் அறியேன்
இரங்கி யான் நிற்ப என் வலி அவன் வயின் எய்த
வரங் கொள் வாலிபால் தோற்றனென்; ..........''

*(யுத்த – கடல் காண் – 107)*

மேலும் வரங்கொடுத்த சிவனும், மற்றும் திருமாலும் கூட, வாலியோடு நேர் நின்று போர் செய்யும் பட்சத்தில், தம் வலிமையை அவனுக்கு ஈந்து விடவே வேண்டும். (அதாவது அவசியமென்றால் அவர்களும் மறைந்து நின்று போர் புரிந்தே தாம் கொடுத்த வரத்தைக் காப்பாற்றி இருப்பர்.) இந்த வரபலச் செய்தியை அறியாததனால் தான் இராமன், மறைந்திருந்து அம்பு எய்தி வாலியைக் கொன்றான் என்றும் கூறுகிறான்.

காப்பியப் பாடல்:

''நீல கண்டனும் நேமியும் நேர் நின்று நேரின்
ஏலும் அன்னவர் உடைவலி அவன் வயின் எய்தும்;
சாலும் நல்வரம் நினைந்து அவன் எதிர் செலல் தவிர்ந்து
வாலி தன்னை அம் மனிதனும் மறைந்து நின்று எய்தான்''

*(யுத்த – கடல் காண் – 108)*

மேற்கூறிய கருத்துக்களில், இராவணன் முதல் பாடலில், வாலியின் வரம் பற்றித் தான் அறியாததால், தான் எதிர் நின்று போர் செய்து தோற்றதாகவும், இராமன் அறிந்ததால், மறைந்திருந்து அம்பெய்தி வாலியை வென்றதாகவும் கூறுவதால், இராவணனும் கூட, வரபலம் பற்றித் தெரிந்திருந்தால் மறைந்திருந்தே போர் செய்திருப்பான் என்னும் கருத்து விளங்குகிறது.

வாலி வத நிகழ்ச்சிக்கு இன்னும் அதிகமான விளக்கங்களும் தேவைப்படுகின்றன. வாழ்க்கையில் எல்லோருக்குமே தம் வாழ்வின் ஏதோ ஒரு காலகட்டத்தில் தாம் பின்பற்றும் நெறிமுறைகளில் முரண்பாடுகளும் குழப்பமும் ஏற்படுவதுண்டு. இரு நெறி முறைகளில் முரண்பாடு என்னும்போது இருப்பதில்

மனதுக்குகந்த நெறியைத் தேர்ந்தெடுப்பதே மனித இயல்பாகும். கட்டுரையில் கூறப்பட்ட வாயில் காப்போன், தவறேயாயினும் அந்தப்புரத்துக்குள் நுழைந்து அரசனுடைய உயிரைக் காப்பதே, தான் அப்போதைக்குக் கைக்கொள்ள வேண்டிய அறம் என்பதால் அந்தப்புரத்துக்குள் நுழைந்து பொது விதியை மீறுவதாகக் கண்டோமல்லவா? அப்படிப்பட்ட சூழல் மனித வாழ்க்கையில் எல்லோருக்குமே ஏற்படுவதுண்டு. அவ்வாறே இராமனும் தான் பின்பற்ற வேண்டிய அறநெறிகளுக்குள் முரண்பாடு ஏற்படும்பொழுதெல்லாம் குறைவான அறப்பிறழ்வுள்ள நெறிகளைப் பின்பற்றுகிறான். இத்தகைய ஒரு நிலை அவனுக்குச் சிறுவனாக இருக்கும்பொழுதே ஏற்படுகிறது.

.................. பால காண்டத்தில் நடக்கும் நிகழ்ச்சி இது. முனிவர் விசுவாமித்திரர் வனத்தில் தான் இயற்றும் வேள்விக்கு ஊறு விளைவிக்கும் அரக்கர் கூட்டத்தை அழிக்க இராம இலக்குவரைத் தன்னுடன் கானகத்துக்கு அழைத்துச் செல்கிறார். இடையில் பாலை நிலம் ஒன்று குறுக்கிடுகிறது. விசுவாமித்திரர் கூறுகிறார், "முன்னொரு காலத்தில் இந்த நிலம் செழுமையாயிருந்தது. இதைப் பாலை நிலமாக்கியவள் தாடகை என்பாள்" என்று கூறி, அந்த அரக்கியின் பண்புகளைப் பற்றி வருணிக்கிறார்.

"தாடகை கூற்றினும் கொடியவள்; வலிமையிலோ ஆயிரம் யானைகளுக்குச் சமமானவள்; அவளது தோற்றமோ, இரு மலைகளைப் போன்ற முலைகளும், நஞ்சனைய கண்களும், ஊழித் தீயனைய தலை முடியும், பிறை போன்ற இரு கோரைப் பற்களும் உடைய தோற்றம். அந்தணர் வளர்க்கும் வேள்வியை அழிக்கும் மாண்பினள்; மன்னுயிரெல்லாம் தனக்கென்றே படைக்கப்பட்ட உணவு என்று உண்ணும் தன்மையள்; வளமான காடுகளையும், காடுறைச் செல்வங்களையும் அழித்தே விளைநிலத்தைப் பாலைநிலமாக்கியவள்" என்று விசுவாமித்திரர் அவளைப் பற்றிக் கூறிக் கொண்டிருக்கும்பொழுதே, சிலம்புகள் சிலம்பிட, செறித்த கழலோடு, நிலத்தை மிதித்து, நிலத்தில் ஒரு கடலே புகும் வண்ணம் குழி ஏற்படக் குதித்து, துடித்த புருவத்துடனும், மடித்த வாயுடனும், வடவைக் கனல் போன்ற எரிதழல் இணைக் கண்களுடனும், நெருப்பு என விழித்து நோக்கி, தாடகை என்னும் அரக்கி,

*'இடங்களும், நெடுந்திசையும், ஏழ் உலகும், யாவும்,*
*அடங்கலும் நடுங்க, உரும் அஞ்ச, நனி ஆர்த்தாள்'*

*(பால - தாடகை வதை - 32)*

ஆர்த்து மகிழ்ந்து, 'சுவையான உணவு எனக்கு வசமாகும் பொருட்டு, விதி பிடர் பிடித்து உந்த என் வாழ்விடம் வந்தீர்' என்று இடிமுழக்கம் போன்ற குரலில் ஆர்ப்பரிக்கிறாள். அந்தணரான விசுவாமித்திரரின் ஆணையை நிறைவேற்றுவதே இராமனின் கடமை. ஆனால் அவனை அறைகூவிப் போருக்கு அழைக்கும் எதிரி அரக்கியே ஆயினும் பெண் அல்லவா? 'பெண்ணைக் கொல்வது வீரம்' அன்று என்பதோடு சுத்த வீரனுக்கு இழுக்குமாகும் என்று இராமன் தயங்கி நிற்கிறான்.

*"அண்ணல் முனிவற்கு அது கருத்து எனினும், ஆவி*
*உண் என, வடிக் கணை தொடுக்கிலன்; உயிர்க்கே*
*துண்ணெனும் வினைத் தொழில் தொடங்கியுள்ளேனும்*
*'பெண்' என மனத்திடை பெருந்தகை நினைந்தான்"*

*(பால – தாடகை வதை – 36)*

இராமனின் மனவோட்டத்தையும், தயக்கத்துக்கான காரணத்தையும் கணப் பொழுதில் புரிந்து கொண்ட நான்மறை அந்தணன்,

"இராம! இவ்வுலகிலுள்ள தீய செயல் அனைத்தையும் செய்பவள் இவள். இதுகாறும் என் போன்ற முனிவர்களை இவள் உண்ணாமல் விட்டதற்குக் காரணம், நாங்கள் ஊன் பொதியற்றவர்கள் என்பதனால்தான். இவள் மாது என்று நினையாதே! மன்னுயிர்களையெல்லாம் வாரி வாரி உண்ணும் இவள் பெண் உருவில் காணும் பேய், தோற்றம்தான் பெண். உடற்கூற்றின்படி இவள் ஆண் தன்மை மிகுந்தவள். இவளைத் தாழ்குழல் பேதை என்று நீ எண்ணி வாளாயிருப்பதுதான் பேதைமை" என்று கூறி இராமனைச் செயல்படத் தூண்டுகிறார். (இத்தகைய அணுகுமுறையின் அடிப்படையில்தான் வாலி உடல் கூற்றின்படி விலங்கினத்தைச் சேர்ந்தவன் என்று முடிவெடுக்கிறான் இராமன்.) அதன் பின்னும் தயக்கம் காட்டும் இராமனின் முகக் குறிப்பு கண்டு விசுவாமித்திர முனிவர் மேலும் கூறுகிறார்.

"இராம! அரக்கரினத்தின் மேல் சீற்றங்கொண்டதனால் நான் இவளை வெறுப்பதாக எண்ணாதே. அறத்தின்பால் சிந்தையைச் செலுத்தித் தீர சிந்தித்துத்தான் கூறுகிறேன். இவளை அழிப்பதே அறம் ஆகும்; அழிக்க மறுப்பது அறத்துக்கு முரணான நிலை. அறத்தின் வழி நிற்க விழையும் நீ இவளைக் கொன்று அழிப்பதே அறச் செயல் ஆகும்" என்று கூறுகிறார். பாடல் பின்வருமாறு:

*“ ‘ஈறு இல் நல் அறம் பார்த்து இசைத்தேன்; இவள்*
*சீறி நின்று இது செப்புகின்றேன் அலேன்;*
*ஆறி நின்றது அறன் அன்று; அரக்கியைக்*
*கோறி' என்று எதிர் அந்தணன் கூறினான்”*
*(பால - தாடகை வதை - 44)*

விருப்பு வெறுப்பில்லாத நிலையில் விசுவாமித்திரர் அறம் சார்ந்து எடுத்த முடிவு இது எனத் தெளிந்தவுடன் இராமனின் மன நெருக்கடியும் தீர்ந்தது. இராமனின் எண்ண ஓட்டம் பின்வருமாறு அமைந்தது. ''வசிட்டரோ 'அந்தணர் பேணுதலும், அவர் சொல் வழி நிற்றலும் முதல் கடன் ஆகும்' என்றார். வசிட்டரே போற்றும் விசுவாமித்திரரோ 'அறம் இது' என்று ஒரு செயலைக் காட்டுகிறார். 'அறனல்ல இது' என்று நானே நினைத்தாலும், அந்தணன் சொல் வேதம் எனக் கொண்டு அது செய்து முடிப்பேன். அதுவே இப்போதைக்கு நான் பின்பற்ற வேண்டிய அறம்'' என்று நினைந்து தாடகையைக் கொல்ல முடிவெடுக்கிறான் இராமன். பாடல் பின்வருமாறு:

*“ஐயன் அங்கு அது கேட்டு, ‘அறன் அல்லவும்*
*எய்தினால், “அது செய்க” என்று ஏவினால்,*
*மெய்ய! நின் உரை வேதம் எனக் கொடு*
*செய்கை அன்றோ! அறம் செயும் ஆறு' என்றான்.*
*(பால்காண் - தாடகை - 45)*

எனவே விசுவாமித்திரர் எனும் அந்தணன் சொல் பேணுவதா, பெண்ணைக் கொல்வதா என்ற இரு அறங்கள் முரண்பட்டபொழுது இராமன் அந்தணர் பேணி உலகம் காக்கும் அறத்துக்காக, அறக் குறைவான செயலான பெண்ணைக் கொல்லுதல் என்ற செயலைத் தேர்ந்தெடுத்தான். தன்னுடைய கன்னிப் போரில் பெண்ணைக் கொன்றான் என்ற பழி வந்தாலும் அதைப் புறந்தள்ளுகிறான்.

தாடகையைக் கொல்வதால் தனக்குத்தான் பழி. ஆனால் கொல்லாது விட்டாலோ தவத்தின் சிறப்பால் உலகை உய்விக்கும் அந்தணர்களுடைய தவத்துக்குக் கேடு. எனவே பிறர் நலம் பேணும் பேரறத்துக்காக, பெண்ணைக் கொல்லக் கூடாது என்ற பொதுவான போர் அறத்தைக் கைவிடுகிறான் இராமன். அதனால் பழியென்றால் அதைத் தானே சுமக்கிறான்.

இவ்வாறே கிட்கிந்தை நிகழ்ச்சிகளிலும், வாலியை மறைந்திருந்து கொன்றால் அறத்தைக் கைவிட்டவன் என்ற பழி தனக்கு மட்டுமே வந்து சேரும். வாலியைக் கொல்லாது விட்டாலோ சுக்ரீவனுக்குக் கொடுத்த அபய வாக்குத் தவறுதலோடு துன்பம் சுக்ரீவனுக்கும் அவனை அண்டியிருப்போருக்குமே ஏற்படும்.

*"அறத்திற்கே அன்பு சாரர்பென்ப – அறியார்*
*மறத்திற்கும் அஃதே துணை" (குறள் – 76)*

என்ற வள்ளுவன் வாய்மொழிக்கேற்ப, சுக்ரீவன்பால் கொண்ட அன்பு காரணமாக, இராமன், வாலியைத் தண்டிக்க மறப்போர் புரியவே துணிந்திருந்தாலும், அது, தமிழ் வேதமாகிய குறள் மொழிக்கு இயைந்த செயலே ஆகும். "அன்புடையார் என்பும் உரியர் பிறர்க்கு" என்றார் வள்ளுவர். அன்புள்ளம் கொண்டவர்கள் பிறருக்காகத் தன் எலும்பையும் உவந்து தியாகம் செய்வர் என்றால், அன்புருவான இராமன் தன் நண்பனுக்காகப் புகழைத் தியாகம் செய்ய முன்வந்திருந்தால் கூட அதில் வியப்பு என்ன உள்ளது? எனவே சுக்ரீவனைக் காப்பதற்காகப் போர் அறத்தைக் கைவிட்டுப் பழியைத் தானே ஏற்கிறான் இராமன்! இவ்வாறு மானுட வாழ்க்கையில் நடைமுறைக்கு ஒத்தவாறு முடிவுகள் எடுக்கும்போது ஒரு அறத்தைவிட்டுப் பிறிதொரு அறத்தை மட்டுமே பின்பற்ற வேண்டிய சூழல் ஏற்படும் பொழுது, மனிதன் எத்தகைய நோக்கத்துக்காக அப்படிச் செயல்படுகிறான் என்பதைத்தான் கருத்தில் கொள்ள வேண்டும். மெய்யறிவு பெற வேண்டும் என்ற பெரும் இலட்சியத்திற்காக சித்தார்த்தன் என்ற இளவரசன் இல்லறக் கடமைகளை விட்டொழித்துத் தன்னை நம்பி வாழ்ந்த மனைவியையும், மகனையும் துறந்து காடேகியதைத் தவ்று என்று சொல்பவர் எவரேனும் உண்டோ? ஒரு அறத்தைவிடுத்துப் பிறிதொன்றைத் தேர்ந்தெடுத்த பொழுது முந்தையதைவிடச் சிறப்பான மேன்மையான அறத்தைத் தேர்ந்தான் என்று உலகம் சித்தார்த்தனைப் போற்றவே செய்கிறது. மேலும் தன்னைக் கண்ணின் கருமணி போல் காத்து வளர்த்த தந்தைக்கும் கூறாமல், இருளில் தன் அரண்மனையை விட்டுக் கள்ளனைப் போல் வெளிப் போந்தான் என்று சித்தார்த்தனைக் குற்றம் கூற முடியுமா? தந்தையிடம் விடைபெற்றால் அரண்மனை வாழ்வை விட்டு வெளியேற முடியாத சூழலில், தந்தையிடம் விடைபெறாமல் மறைவாகத்தானே சித்தார்த்தன் செயல்பட வேண்டியிருந்தது? அதில் அறக் குற்றம் காண்போர் உண்டோ?

தன்னைப் பின்பற்றி அயோத்தி மக்கள் வனம் புகக் கிளம்பிய பின் அவர்களைத் தன்னுடன் அழைத்தே செல்பவன் போல போக்கு காட்டிப் பிறகு அனைவரும் உறங்கும் வேளையில் தேர்ச் சுவட்டை அயோத்தி நகர் பால் திருப்பிவிட்டு

மக்களை ஏமாற்றிவிட்டு இராமன் காடு சென்றுவிட்டான் என்று இராமன் பேரில் குற்றம் சுமத்துவோர் எவரேனும் உளரா? வனம் செல்லும் இடத்துக்கு அயோத்தி நகரமே பெயர்ந்து வந்துவிட்டால் பின் வனத்திலேயே ஒரு அரசை நிறுவி இராமன் ஆளவேண்டியதுதான்! வனவாசம் செய்யும் வாய்ப்பு என்னாவது? தாய்க்குக் கொடுத்த வாக்கு என்னாவது? மறைவாகக் காரியங்கள் செய்து மக்களை ஏமாற்ற வேண்டுமென்றால், அதைச் செய்தே தன்னுடைய பெரும் இலக்குகளை அடைவதற்கு இராமன் முற்படுகிறான். அவ்வாறே மறைந்திருந்து அம்பு எய்தால்தான் வாலி மரணம் அடைவான் என்றால், வர பலத்தாலும் விலங்கின் பலத்தாலும் பிறரைத் துன்புறுத்தும் இயல்பு கொண்ட அத்தகையவனைக் கொல்வதற்கு மறைவான போர்முறையைப் பின்பற்றி வாலியைக் கவனச் சிதறல் செய்து கொல்லும் இராமனின் போர்த் திட்டமானது இராமனைப் பொருத்த அளவில் முறையான போர்த் திட்டமேயாகும். அது பழியாக இருக்கும்பட்சத்தில் அப்பழியைத் தானே ஏற்கவும் சித்தப்படும் இராமனின் நேர்மையையும் ஆத்ம பலத்தையும் பாராட்டவே வேண்டும்.

இராமனுக்கு ஏற்பட்ட இத்தகைய சங்கடம் மனித வாழ்வில் எல்லோரும் எதிர்கொள்கின்ற ஒன்றே. வாழ்க்கையை உற்று நோக்கினால் மனிதன் ஒரே நாளிலே கூட இத்தகைய சங்கடத்தைப் பல முறை எதிர்கொள்வதைக் காணலாம். இக்கருத்துகளில் இரு முடிவுகளும், இரு கருத்துக்களில் – இரு முடிவுகளில் – இரு நிகழ்ச்சிகளில்– இரு தீர்ப்புக்களில் – எவற்றைத் தேர்ந்தெடுப்பது என்ற குழப்பம் எல்லா மனிதர்களுக்குமே ஏற்படுவதுண்டு. மகாபாரதத்திலே கர்ணனைத் தன் முதல் மகன் என்று இனங்கண்டு கொண்டு குந்திதேவி அவன் தன்னுடைய சகோதரர்களாகிய பஞ்ச பாண்டவர்கள் பக்கம் வந்து சேர்ந்துவிட வேண்டுமென்று கூறுகிறாள். கர்ணன் இது நாள் வரை தன் தாய் யாரென்று அறியாமல் பலரால் இகழ்ச்சிக்குள்ளாக்கப் பட்டிருந்தான். இப்பொழுது குந்திதேவி தன் தாய் என்று அறிந்துகொண்டபின், அதை உலகுக்கும் பறைசாற்றினால் அவனுடைய மதிப்பு பன் மடங்கு உயரும். அத்துடன் தருமத்தின் பக்கம் தன் பங்களிப்பைச் செலுத்தும் வாய்ப்பும் கிட்டியிருக்கும். ஆனால் அதற்காக அவன் துரியோதனனுடைய நட்பைத் துறக்க வேண்டியிருக்கும். தன் பிறப்பின் மூலமறியாமல் அவமானப்பட்ட காலத்தில் துரியோதனனே அவனுக்கு முன் வந்து உதவி அங்க நாட்டையும் அவனுக்குக் கொடுத்து மன்னனாக ஆக்கியுள்ளான். இன்று கண்ட உறவைக் கண்டு துரியோதனின் நட்பை விடுவது நன்றி கொன்ற செயலும் ஆகும். எனவே, 'உடன்பிறந்தோரா? துரியோதனனா? தர்மமா? அதர்மமா?' என்ற பிரச்சனை எழுந்தபொழுது அதர்மத்தின் பக்கத்தைத்தான் கர்ணன் தேர்ந்தெடுத்தான். அதற்கு அவனுடைய பக்கத்து நியாயம் என்று ஒன்று இருந்தது. அதை உலகமும் ஏற்றுக் கொண்டது.

(இராமாயணக் காப்பியத்திலேயே) பொய்மான் நிகழ்ச்சியை எடுத்துக் கொள்வோம். தன்னுடைய கணவனுடைய விதியோடு தன் விதியைப் பிணைத்துக் கொண்ட சீதை – எந்த ஒரு பொருளையும் விரும்பித் தன் கணவனிடம் இதுகாறும் கேட்டறியாத சீதை – அழகிய மானொன்றைத் தான் விளையாடக் கேட்கிறாள். அந்த மான் மாணிக்க மயத்ததாக தகத்தகாயமாய் மின்னிப் பொலிந்து கண்ணைப் பறிக்கிறது. "இதை வனவாச காலத்து நினைவுச் சின்னமாக அயோத்திக்கு மீண்டு செல்லும்பொழுது அழைத்துப் போய் அங்கே மாளிகையில் நான் விளையாடுவதற்கு வைத்துக் கொள்வேன். நாயக! அதை நீ எனக்குப் பற்றித் தருக" என்கிறாள் சீதை. காப்பியப் பாடல்,

*"அற்று அவன் பகரா முன்னம், அழகனை, அழகியாளும்*
*'கொற்றவன் மைந்த! மற்றைக் குழைவுடை உழையை, வல்லை*
*பற்றினை தருதி ஆயின், பதியிடை அவதி எய்தப்*
*பெற்றுழி, இனிது உண்டாடப் பெறற்கு அருந்தகைமைத்து' என்றாள்."*

*(ஆரணிய – மாரீசன் வதை – 61)*

இராமனாதியரை வனத்துக்கு வழியனுப்பும் சுமந்திரன் சீதையிடம் "அயோத்தி மாளிகைக்கு நீவிர் சொல்லும் செய்தி யாது?" என்று கேட்டபொழுது, "அரசர்க்கு, அத்தையர்க்கு என்னுடைய வணக்கத்தைக் கூறுங்கள். என் தங்கையர் மூவரிடமும் நான் வளர்த்த பூவையையும், கிளியையும் பேணிப் பாதுகாக்கச் சொல்லுங்கள்" என்கிறாள். காப்பியப் பாடல்:

*"அன்னவள் கூறுவாள் , 'அரசர்க்கு, அத்தையர்க்கு,*
*என்னுடை வணக்கம், முன் இயம்பி, யானுடைப்*
*பொன் நிறப் பூவையும், கிளியும், போற்றுக என்று*
*உன்னும் என் தங்கையர்க்கு உணர்த்துவாய்' என்றாள்."*

*(அயோத்தியா – தைலமாட்டு – 39)*

இப்படி விளையாட்டுத்தனம் விலகாத பேதையாக இருக்கும் சீதை, விளையாட்டுப் பொருளாக வைத்துக் கொள்ள மானொன்றை – உண்மையில் காண்பவர் எவருமே விரும்பத்தக்க அழகிய மானொன்றைத்தான் – கேட்கிறாள்.

இது ஒரு சாதாரண நிகழ்ச்சிதான். இராமனும் அதைக் கண்டு அதிசயிக்கத் தான் செய்கிறான். "பொன்னின் ஒளி பொருந்திய ஏழு அன்னங்களின் பிறப்பு பற்றிப் புராணங்கள் கூறுதலால் இல்லாத பொருள் என்று ஒன்று உலகில் இருக்க முடியாது.

முதலும் முடிவும் இல்லாத அண்டத்தில் நிறைந்து கிடக்கும் அதிசயங்களுக்கு அளவே கிடையாது. மான் ஏன் அத்தகைய உலக அதிசயமாக இருக்க முடியாது?" என்று அம்மானைப் பற்றி ஐயுறும் இளவலிடம் இராமன் தர்க்கம் பேசுகிறான். இப்பொழுது இராமனுக்கு உள்ள பிரச்சினை என்ன? மானைப் பின் தொடர்ந்து சென்று சீதையை மகிழ்விப்பதா? அன்றி, இளவலின் தர்க்க நியாயங்களைப் பற்றித் தீவிரமாக ஆய்வு செய்து மானைத் தவற விடுவதா? இரண்டில் ஒன்றைத்தான் இராமன் தேர்வு செய்ய முடியும். இவன் ஆலோசிப்பதற்குள் மான் திசை மாறிப் போய் விடக்கூடும் அபாயம் உள்ளது. அதன் பிறகு இளவலின் பேச்சைக் கேட்டுச் சீதை தன் குமுதவாய் திறந்து கேட்ட ஒரு பொருளை - தன்னால் பெற்றுத் தர இயன்ற ஒரு பொருளை - தந்து மனைவியை மகிழ்விக்கத் தவறிவிட்டோமே என்ற வருத்தம் இராமனுக்கு வாழ்நாள் முழுதும் இருந்து கொண்டே இருக்கும். அத்துடன் சீதைக்கும் அவ்வருத்தம் இருக்கும். இதைத் தவிர்க்க வேண்டியே கணவனாகிய இராமன், "மானின் பின் செல்கிறேன். நல்லது என்றால் சீதைக்கு மான் விளையாட்டுப் பொருளாகட்டும். தீயது என்றால் அதனைக் கொன்று விடுகிறேன்" என்று கூறி மான் பின் செல்கிறான்.... ஒரு குறிப்பிட்ட கணத்தில் சில முடிவுகளைச் சட்டென்று எடுத்தே தீர வேண்டும். இரண்டில் ஒன்று எது குறைவான ஆபத்துள்ள முறையோ அதைத் தேர்வு செய்தே தீரவேண்டும்.

இன்னுமொரு நிகழ்ச்சி. தயரதன் அயோத்தி மன்னனாக இருந்த காலத்தில், தான் பிள்ளைப் பேறின்றி அனுபவிக்கும் வருத்தத்திலிருந்து மனத்தை மாற்ற வேண்டி காட்டுக்கு வேட்டையாடச் செல்கிறான். அங்கே தவறுதலாக கண்ணில்லாத தன் பெற்றோருக்காக நீர் முகந்து செல்ல வந்த சிராவணன் எனும் இளம் பிள்ளையைத் தன் அம்பால் வீழ்த்தி விடுகிறான். அச் செய்தியை அவனே அப்பிள்ளையின் பெற்றோரிடமும் எடுத்துச் சொல்கிறான். செய்தி கேட்ட கண்ணிழந்த அக்குருட்டுப் பெற்றோர் மனம் வருந்தி தயரதனைச் சபிக்கின்றனர். என்னவென்று? 'மகனை இழந்து நாங்கள் உறும் எங்கள் எல்லையற்ற துயரத்தை நீயும் உன் மகனை இழந்து உற்று உயிர்துறப்பாயாக!' என்று சாபமிட்டுத் தாமும் உயிர் துறக்கின்றனர்.

காப்பியப் பாடல்,

*"ஏவா மகவைப் பிரிந்து, இன்று எம் போல் இடர் உற்றனை நீ*
*போவாய், அகல் வான் என்னா, பொன் நாட்டிடை போயினரால்"*
*(அயோத்தியா - நகர் நீங்கு - 86)*

ஆனால் தயரதன் இச்சாபத்தைக் கேட்டு மனம் வருந்துவதற்குப் பதில் மனம் மகிழ்ந்தானாம்! காரணம் என்ன? "இவர்களுடைய சாபம் உறுதியாகப் பலிக்கும்.

அப்படியென்றால் எனக்கு இன்சொல் அமிழ்தே அனைய மைந்தன் பிறப்பது உறுதியே" என்பதே அவனுடைய மகிழ்ச்சிக்குக் காரணம். காப்பியப் பாடல்,

*"சிந்தை தளர்வுற்று அயர்தல் சிறிதும் இலெனாய், "இன் சொல்*
*மைந்தன் உளன்' என்றதனால், மகிழ்வொடு இவண் வந்தனெனால்"*
*(அயோத்தி – நகர் நீங்கு – 87)*

மனித மனத்தின் விசித்திரம்தான் என்னே! தயரதன் 'தன் உயிரா? தன் மகனா?' என்ற இரு விஷயங்களில் தன் மகனையே உடைமையாகத் தேர்ந்தெடுத்துத் தன் உயிரைத் துச்சமென மதித்தான். அதனால்தான் புத்திர காமேஷ்டி யாகம் புரிந்து இராமனைப் பெறுகிறான். அவன் மேல் உயிரையே வைத்துள்ளான். 'அவனால்தான் தன் உயிர் பிரியப் போகும் சாபம் ஒன்றுள்ளது' என்று அறிந்த பின்பும் கூட, தனக்கு மரணம் நேரிடும் வழி இதுதான் என்று அறிந்த பின்னர் கூட, உயிரைக் காத்துக் கொள்ள வேண்டி, மகப்பேற்றை விட்டொழித்தானா தயரதன்? இவ்வாறு இரண்டில் ஒன்றைத் தேர்ந்தெடுக்க வேண்டிய கட்டாயத்துக்கு உலக மாந்தர் அனைவருமே தள்ளப்படுவது நடைமுறை வாழ்க்கைச் சித்தாந்தம்தான்.

...................... இங்கு இராமனுக்கு அப்படித்தான் ஒரு சூழல் உருவாகிறது. நிகழ்ச்சியின் முக்கியத்துவம் அப்படி என்பதால் மட்டுமல்லாது, இராமனுடைய வாழ்க்கையில் இது நிகழ்வதால்தான் விவாதத்துக்குரிய நிகழ்ச்சியாக உருவெடுத்து விடுகிறது.

எனவே, இராமன், தன்னுடைய போர்த் திட்டத்தை இடம் பொருள் ஏவலுக்கேற்ப அமைக்க வேண்டியிருந்தது என்பது வைரத்தை வைரத்தால் அறுப்பது போன்ற நடைமுறைக்கு ஒத்த செயலே. ஆகையால் அது இயற்கை நீதியும் ஆகிறது. ஆக பேரறம் ஒன்றைக் காக்க வேண்டியே, அறப்பிறழ்வுக் கூறு கொண்டதுபோல் தோற்றமளிக்கும் போர் முறையான "மறைந்திருந்து அம்பெய்து வாலியைக் கொல்லும் முறையை" இராமன் தேர்ந்தெடுக்க வேண்டியிருந்தது. வாலிக்காக மட்டுமே – அறப்பிறழ்வு கொண்ட வர பலத்தைக் கைக்கொண்டு அறப்பிறழ்வுக் காரியங்கள் ஆற்றிய – வாலிக்காக மட்டுமே – பயன்படுத்திய (பிழையான என்பதல்ல) – விதிக்கு விலக்கான தனித்த தன்மையுள்ள போர் முறை என்றே இராமனுடைய செயலை ஏற்க வேண்டும். எனவே இராமன் இவ்வகையில் குற்றமற்றவனே ஆகிறான்.

மேலும், உடல் வலிமையால் வாலி விலங்கு என்பது ஒருபுறமிருக்க அகவாழ்க்கையைப் பொருத்தவரை ஒழுக்க நெறியின்றி உணர்வு செல்லும்

வழியெல்லாம் விலங்குபோல வாழ்ந்தான் வாலி என்பதாலும்கூட அவன் விலங்கு போலவே வீழ்த்தப்பட வேண்டியவன் என்று இராமன் முடிவெடுத்திருந்தான். விலங்கை மறைந்திருந்து கொல்வது ஏற்றுக்கொள்ளப்பட்ட செயலே அல்லவா!

இராமன், இரலையின் குன்றம் வந்த சில நாட்களுக்குள் வாலி, சுக்ரீவன் முதலானோரை நாடாளும் அரசர்களேயாயினும் விலங்குணர்ச்சி கொண்டவர்கள் என்று கணித்து விட்டான். அந்த முடிவுக்கு இராமன் எப்படி வந்தான் என்பதைக் காண்போம்.

..................... அனுமன் வாலியைப் பற்றிக் கூறியதையெல்லாம் கேட்டுக் கொண்டு வந்த இராமன், "தன் தம்பியாகிய சுக்ரீவன் பால் சற்றும் பரிவு இன்றி வாலி நடந்துகொண்டிருக்கிறானே. இவன் என்ன ஒரு அண்ணனா? அரசனா? அல்லது மிருகமா?" என்ற கேள்விகளை மனத்துள் கேட்டுக் கொண்டே தொடர்ந்து அனுமனின் சொற்களைச் செவி மடுக்கிறான். இறுதியாக தம்பியின் தாரத்தை விரும்பிக் கலந்தவன் என்ற செய்தியைக் கேட்டவுடன், வாலி உணர்ச்சியால் உந்தப்பட்டுச் செயல்புரியும் விலங்கேயன்றி, உயர் பண்புகளும், அறப்பாங்கும், அருள்மனமும் கொண்ட அரசனல்லன் என்ற முடிவுக்கு வருகிறான்.

இராமனைப் பொருத்தவரையில் ஒருவரது ஆளுமை என்பது அவர்களுடைய உள்ளத்தாலன்றி உருவத்தால் கணிக்கப்படக் கூடியது அல்ல. வெளித்தோற்றத்தைப் புறந்தள்ளி ஒருவருடைய மன இயல்பைத் துல்லியமாக கணிக்கக்கூடிய இயல்போடு அதற்கான அறிவாற்றலும் கொண்டவன் இராமன். உலக வாழ்க்கை அனுபவங்கள் ஏற்படாத சிறு வயதிலேயே, தன்னுடைய தாள் துகள் பட்டவுடன், கல்லுருவம் மாறி நல்லுருவம் பெறும் அகலிகையை, அவளுடைய கணவன் கௌதம முனிவரிடம் அடைக்கலப்படுத்தும்பொழுது, அகலிகையை, "நெஞ்சினால் பிழைப்பு இலாள்" என்று குறிப்பிடுகின்றான் இராமன். ஊனும் மீனும் கொண்டு வந்து தன்னை உண்ணச் சொல்லும் குகனின் "கரை காணாக் காதல்" உள்ளத்தையும் அறிந்தவன் இராமன்.

*" 'அரிய, தாம் உவப்ப, உள்ளத்து அன்பினால் அமைந்த காதல்*
*தெரிதரக் கொணர்ந்த என்றால், அமிழ்தினும் சீர்த்த அன்றே?' "*

*(அயோத்தியா - குக - 15)*

என்று அவற்றை அன்போடு ஏற்றுக் கொள்கிறான். அம்மட்டோ? குகனைத் தன் உடன் பிறந்தவனாகவே ஆக்கிக் கொள்கிறான்.

*" 'என் உயிர் அனையாய் நீ; இளவல் உன் இளையான்; இந்*
*நன்னுதலவள் நின் கேள்; நளிர் கடல் நிலம் எல்லாம்*
*உன்னுடையது; நான் உன் தொழில் உரிமையின் உள்ளேன்*
*(அயோத்தியா - குக - 42)*

மேலும்,

*" 'முன்பு உளெம், ஒரு நால்வேம்; முடிவு உளது என உன்னா*
*அன்பு உள, இனி, நாம் ஓர் ஐவர்கள் உளர் ஆனோம்;' "*
*(அயோத்தியா - குக - 43)*

என்று கூறுகிறான்.

கட்டிய சுரிகையும் கடித்த வாயும், வெட்டிய மொழியும் விழிக்கண் தீயும் கொண்டு விளங்கும் ஒரு வேடன் என்று குகனை நினைக்கவில்லை. அன்புளம் கொண்ட தன் உடன் பிறந்தோன் என்றே நினைந்தான் இராமன்.

பறவை இனத்து சடாயுவைத் தன் தந்தையாக ஏற்றுச் சடாயு இறந்த பின்னர் ஒரு மகன் தந்தைக்கு ஆற்ற வேண்டிய ஈமச் சடங்குகளைத் தவறாது ஆற்றுகிறான் இராமன். குரங்காகிய அனுமனை உருவத்தைக் கொண்டு ஒரு விலங்காக இராமன் நினைக்கவில்லை. "நாட்படா மறைகளாலும், நவைபடா ஞானத்தாலும், கோட்படா பதமே ஒரு குரக்குரு கொண்டது" என்று அனுமனுடைய அறிவையும் ஆற்றலையும் போற்றிப் புகழ்கிறான். வேட்டுவச் சபரி உண்டு வைத்த பழங்களை உண்டபொழுது அந்த பக்தையின் அன்புள்ளத்தைத்தான் மதித்துப் போற்றினான். இராவணனுடைய தம்பியேயானாலும், அரக்க வடிவினனேயானாலும், வீடணனைத் தன் தம்பியாக ஏற்று அடைக்கலம் அளித்தமைக்குக் காரணம், வீடணன் அறச் சார்பில் தோய்ந்து நின்ற மனம் கொண்டவன் என்பதே, ஆரம்பத்தில் அனுமனைக் கொண்டு சுக்ரீவனின் மனப் பண்புகளைக் கணித்த இராமன், பின்னாளில், வாலியும், சுக்ரீவனும் விலங்குணர்ச்சியினின்றும் விடுபடாத தன்மையினர் என்று மதிப்பீடு செய்கிறான். ஆகையால் அவர்களை விலங்குகள் என்றே மதிக்கிறான். இத்தகைய தன் கருத்தை – தன் மன ஆழத்தில் பதிந்துவிட்ட இக்கருத்தை – ஒருமுறை இலக்குவனிடம் வாய் விட்டும் கூறுகிறான். அந்தக் காட்சியைக் காண்போம்.

............. வாலியும், சுக்ரீவனும் நேருக்கு நேர் பொருத நிற்கிறார்கள். ஆரம்பத்திலிருந்தே சுக்ரீவனைப் பற்றிய நன் மதிப்பு இளையோனுக்கு இல்லை என்பது

உண்மை. அவனது அக் கருத்துத் தன் சொற்களிலில் வெளிப்படப் பேசுகிறான். சுக்ரீவனுக்காக வாலியை இராமன் கொல்ல முனைந்ததையும் இலக்குவன் விரும்பவில்லை. அதனால் அவன் இராமனிடம் கேட்கிறான். "தன் முன்னவன் வாலியைக் கொல்வதற்கு அந்நியனாகிய உன்னைக் கொண்டு வந்து கூற்றுவனாக நிறுத்தி இருக்கும் சுக்ரீவனது செயல் ஒரு தம்பிக்குத் தக்க செயலாகுமா? அத்தகையவனுக்குத் தஞ்சம் அளித்து நீயும் அவனுக்குத் துணை போகலாமா?" இதுதான் இலக்குவனுடைய கேள்வி. இராமன் இதற்குப் பதில் கூறுகிறான்.

*" 'பித்தாய விலங்கின் ஒழுக்கினைப் பேசல் ஆமோ?' "*

*(கிட்கிந்தா - வாலி வதை - 43)*

என்று "அதாவது பகுத்தறிவைப் பயன்படுத்தித் தக்கது இது, தகாதது இதுவென்று பிரித்தறியும் பண்பில்லாத இந்த விலங்குகளின் ஒழுக்கத்தைப் பற்றி நாம் பேசுவதற்கு என்ன இருக்கிறது?" என்கிறான் இராமன். இதற்கு முன் ஒரு கருத்தும் கூறுகிறான்

*" 'எத் தாயிர் வயிற்றிலும், பின் பிறந்தார்கள் எல்லாம்*
*ஒத்தால், பரதன் பெரிது உத்தமன் ஆதல் உண்டோ?' "*

*(கிட்கிந்தா - வாலி வதை - 43)*

"உடன் பிறந்தவர்கள் எல்லோரும் பரதனைப் போல, தன் முன்னவனைத் தந்தையாகவும், அவன் மனைவியைத் தாயாகவும் மதித்து, அரசுரிமையைத் துச்சமெனத் துறந்து தவசி போல் வாழ்வார்களா என்ன? அப்படிப்பட்ட மனநிலைக்கு நல்ல பண்புகளும் ஒழுக்கம் சார்ந்த வாழ்க்கை முறையும் எல்லையற்ற ஆத்ம பலமும் வேண்டும். என்ன இருந்தாலும் இவ்விருவரும் விலங்குகள்தாமே! இவர்களுக்கு உடல் பலம்தான் பெரிதே தவிர, ஆத்ம பலமும் உயர்ந்த உறவுகளும் ஒரு பொருட்டே அல்ல. இங்கே பார்! விலங்குகளைப் போல் அண்ணன் தம்பியர் உடல் பலத்தால் ஒருவரையொருவர் வீழ்த்த நிற்கிறார்கள்! விலங்குகளிலும் மெய்ம்மை உணர்வு பெற்றவர்கள் உண்டு. ஆனால் அந்த நிலை இவர்களுக்குப் பொருந்தாது" என்று கூறுகிறான். இவ்வாறு இராமன் கூறுவதற்குக் காரணம் வாலி, சுக்ரீவன் இவர்களுடைய விலங்குணர்ச்சிப் பண்புகளைப் பற்றி இராமன் அறிய வருவதுதான். முதலில் சுக்ரீவனுடைய விலங்குணர்ச்சியைப் பற்றிக் கணிக்கிறான். வாலி சுக்ரீவன் இருவருக்குமிடையே உள்ள பகைமை அரசுரிமை தொடர்பானது மட்டுமல்லவென்றும், சுக்ரீவனுடைய மனைவியை வாலி உடைமை கொண்ட சிக்கல் ஒன்று அதில் இருக்கிறது என்பதையும் இராமன் அனுமனுடைய கூற்றால் பின்னாளில் அறிய வருகிறான். ஆனால் சுக்ரீவன் தன் மனைவியை வாலி நயந்து வாழ்வதைப் பற்றிக்

கவலை கொண்டவனாகவே தெரியவில்லை. அவளை மீட்க வேண்டும் என்றும் கேட்கவில்லை. இராமனைக் கண்ட கணத்திலிருந்து தன் உயிருக்குத்தான் உறுதி கேட்டுச் சரணடைகிறான். இராமனே "உன் மனைவியை மீட்டுத் தருவேன்" என்ற போதும், "என் குறை சிறு குறைதான். முதலில் உன் தேவியை மீட்கலாம்" என்கிறான் சுக்ரீவன். இந்த வார்த்தையைச் சுக்ரீவன் இராமன்பால் கொண்ட அன்பு காரணமாக கூறியதாகவே எடுத்துக் கொண்டாலும், தன் மனைவியைத் தன் அண்ணன் புணர்ந்து வாழும் நிலையைப் பொறுத்துக் கொண்டு அது ஒரு பொருட்டே இல்லை என்பதுபோல் சுக்ரீவன் வாழ்வதைக் காண்கிறான் இராமன்! ஒருக்கால் இந்த குரங்கினத்துக்கு இது ஒரு பிரச்சனையே இல்லையோ? வாலி, தம்பியின் மனைவியோடு தாம்பத்யம் கொள்வது ஒரு பக்கத்து அநாகரிகமென்றால், தம்பி அச்செய்கையை ஏற்றுக் கொண்டு வாழ்வது இன்னொரு பக்கத்து அநாகரிகமாக உள்ளதே! மேலும், "நான் உன் மனைவியை மீட்டுத் தருவேன்" என்றதற்கு மாற்றம் ஒன்றும் சுக்ரீவன் உரைக்கவில்லை. அப்படியென்றால் தமையனைக் கலந்து வாழ்ந்த தன் மனைவியை இராமன் மீட்டுத் தந்தால் சுக்ரீவன் ஏற்றுக் கொண்டு வாழ்வானோ? இது இன்னொருவித அநாகரிகமாயிற்றே? எனவே அரசனேயாயினும் உயர்ந்த வாழ்க்கைப் பண்புகளற்ற, உணர்ச்சியால் உந்தப்பட்டு வாழும் ஒரு விலங்கே சுக்ரீவன் என்ற முடிவுக்கு வந்து விட்டான் இராமன்.

அடுத்து வாலியைப் பற்றி, இராமன், அனுமனிடமிருந்து, அறிந்த செய்திகளினின்றும் அவனுடைய விலங்குப் பண்புகள் பற்றிய சில கணிப்புகளைச் செய்திருந்தான். அனுமன் கூற்றுப்படி வாலி, நான்மறையை நன்கு ஓதி உணர்ந்தவன்; அறத்துக்கு வேலி போல்வான்! மேலும் வரம்பற்ற உடல் வலிமையுடையவன். ஆனால் இராமனுடைய நோக்கிலே ஒருவனுடைய தோள்வலிக்குச் சமமாக உள்ளத்தின் உள்வலியும் இருக்க வேண்டும். அறத்தின் வழி மலரும் உள்ளாற்றல் இல்லாத வாலியின் விலங்குப் பண்பைப் பின்வருமாறு கணிக்கிறான் இராமன். – ''நான்மறையை ஓதி உணர்ந்தவன் வாலி என்றால், அந்த மறை அறிவு அவனுக்கு மெய்யறிவையல்லவா கொடுத்திருக்க வேண்டும்! மெய்யறிவைப் பெறுவதற்கான எல்லாத் தகுதிகளும் இருந்தும், தன் எல்லையற்ற உடல் பலத்தில் தன் மெய்யறிவு நாட்டத்தைப் புதைத்துவிட்டு, உணர்ச்சிகளின் வழியே வாழ்க்கையை அணுகிப் புலனின்ப வாழ்க்கையை ஒரு விலங்கைப் போல் அனுபவிக்கிறான் வாலி. தனக்கு நிகரான உடல் வலிமையுடையவர் உலகில் வேறு எவரும் இல்லை என்ற மமதையினால் 'வலியது வாழும்' என்ற காட்டு நீதியை மட்டுமே பின்பற்றிக் கிட்கிந்தையை அரசு புரிகின்றான். தன்னோடு பொருதுபவருடைய உடல் பலத்தில் தான் பாதியைப் பெற வேண்டும் என்ற வரத்தை விழைந்திருப்பதே அவனுடைய விலங்கு

இயல்பைத்தான் காட்டுகிறது. தவவலிமையுடைய ஒருவன் உலகம் உய்வதற்காக அத் தவத்தின் பயனை வரமாகப் பெற்றால் அது போற்றப்படக்கூடியது. ஆனால் பிறரை உயிர்ப் பயத்தில் வைத்துத் தான் மட்டும் உடல் பலத்தால் உயர்ந்து நிற்பதற்குப் பெற்றுள்ள வரம் இகழ்ச்சிக்குரியதேயன்றிப் புகழ்ச்சிக்குரியதல்ல. வாலி தன் நல்லறிவு, நான்மறை அறிவு, உடல் பலம் இவை எவற்றையுமே பிறருடைய நல்வாழ்வுக்காக இதுநாள் வரை பயன்படுத்தவில்லை. ஒரு காட்டு விலங்கைப் போல், தன் சுற்றம், தன் நண்பர், நாட்டு மக்கள் அனைவரையும் அச்சுறுத்தியே வாழ்ந்திருக்கிறான். நான்மறைகள் கற்றிருந்தாலும் அவன் உணர்ச்சியில் விலங்கே.''

விலங்கை மறைந்திருந்து கொல்வதுதானே மரபு? மேலும் வாலி பெற்றுள்ள வரத்தை நோக்குங்கால், அவனைக் கொல்ல வேண்டுமென்றால், எவரும் வேடன் விலங்கை வீழ்த்துவது போல் மறைந்திருந்தே கொல்ல வேண்டும் என்ற பொருள் பொதிந்த வரத்தைத் தானே அவன் பெற்றிருக்கிறான்! அவனுடைய விலங்குணர்ச்சி முந்துறுத்த அவன் வேண்டிய வரம் இது. அவன் எப்படிக் கொல்லப்பட வேண்டும் என்பதற்கான முறையையும் அதில் பொதிந்து வைத்தே வரம் பெற்றிருக்கிறான். அத்தகைய முறையை அறிவு சான்ற இராமனைப் போன்ற வீரன் ஒருவன் வெற்றிகரமாகப் பின்பற்றுவதில் தவறு இல்லை. அறத்துக்கும் இயற்லஃகக்கும் மாறான கூறுகள் கொண்ட வரத்தை, தவமியற்றிவன் கேட்கும் பொழுது தெய்வம் அந்த வரத்தை அருளவே செய்யும். ஆனால் அந்த வரத்தில் கேட்கப்படாத கூறு ஒன்றைப் புகுத்தி, அதற்குரிய முறையைத் தேர்ந்தெடுத்து அத் தெய்வம் அந்த அறப்பிறழ்வான வரத்தைப் பயனிழக்கவும் செய்யும். இது தெய்வ நீதியும் இயற்கை நியதியும் ஆகும். தெய்வநீதி பற்றிய இராமனுடைய இத்தகைய கருத்துக்கு எடுத்துக்காட்டுகள் உண்டா? ஏராளமாக உண்டு. இங்கு நாம் இரணியன் பெற்ற வரத்தை எடுத்துக் காட்டாகக் கொள்வோம்.

இரணியன் எல்லையற்ற உடல் வலிமை கொண்டவன். தவவலிமையும் மிக்கவன். மரணமிலாப் பெரு வாழ்வு வேண்டும் என்ற பேராசை கொள்கிறான். என்னென்ன வகையில் எல்லாம் ஒருவனுக்கு மரணம் சம்பவிக்கக் கூடுமோ, அவற்றையெல்லாம் தவிர்த்து, மிகுந்த முன்னெச்சரிக்கையோடு இறைவனிடம் வரம் பெறுகிறான். அப்படி அவன் கேட்கும் வரம் என்ன?

“எனக்குப் பகலிலோ, இரவிலோ, உள்ளேயோ, வெளியேயோ, மனிதனாலோ மிருகத்தாலோ, தவ ஆற்றலாலோ அல்லது ஆயுதங்களாலோ உலகத்தில் இதுகாறும் வாழும் எந்த வகை உயிரினங்களாலோ மரணம் ஏற்படக் கூடாது” என்ற வரமே அது.

தன் அறிவுக்கு எட்டிய வரையில் மரணம் சம்பவிக்கக்கூடிய வழி வகைகளைத் தவிர்த்துவிட்டு இரணியன் கேட்கும் வரத்தைத் தெய்வம் அருளவே செய்தது. ஆனால் அவனுடைய வரத்தில் இடம்பெறாத கூறுகளைக் கொண்டு அவனுடைய மரணத்துக்கு புதிய வழியைத் தேர்ந்தெடுத்தது வரமளித்த தெய்வம்.

மனிதனுமல்லாத மிருகமுமல்லாத மனித மிருகமான 'நரசிம்ம அவதாரம்' தோன்றியது. பகலும் இரவுமல்லாத இரு காலமும் கூடுகின்ற அந்திப் பொழுதைத் தேர்ந்தெடுத்தது. உள்ளேயும் வெளியேயும் இல்லாத மனையின் நிலைப்படியில் அமர்ந்தது. மனிதன் இயற்றிய ஆயுதமல்லாத தன் கூரிய நகங்களால் அவனைக் குத்திக் கிழித்தது. இதுவரை உலகில் வாழும் உயிரினங்களல்லாத புதிய உயிரினமாக அது தோன்றியது. இரணியன் மாண்டான். ஆனால் அவனுடைய வரம் பிழைத்தது. ஆனால் இயற்கை நியதியே வென்றது. தெய்வ நீதியும் அதற்குத் துணை நின்றது.

**எனவே இயற்கைக்குப் புறம்பாக ஒருவன் வரம் பெற்றிருந்தால், அதற்குப் புறம்பான முறையினாலேயே அந்த வரம் செயலிழக்க வேண்டும். அவ்வாறே தன் நேர் நின்று ஒருவன் போர் செய்தால் அவன் பலமிழக்க வேண்டும் என்ற வரத்தைப் பெற்ற வாலி, தன் எதிராளி தன்னை மறைந்திருந்துதான் கொல்ல வேண்டும் என்ற பொருளை வைத்துத்தானே வரம் கேட்டிருக்கிறான். எனவே இரணியனை அழித்த நரசிம்மம் போல் விதிவிலக்கான முறையைத் தேர்ந்து இராமன் வாலியை வீழ்த்தினான்.**

இன்னொன்றையும் இராமன் சிந்தித்திருந்தான். வாலியின் நல்லறிவை மறைப்பதே அவனுக்கு வாய்த்துள்ள எல்லையற்ற உடல்பலம் தான். உடலின் உரம் குறைந்தால்தான் உள்ளத்துள் ஒளி மேவி நிற்கும். ("ஊனினைச் சுருக்கி உள்ளொளி பெருக்கி" எனும் பாடல் வரியை நினைவு கூர்க) உடல் ஓம்பப்பட வேண்டியது அவசியமே. வேதியரும், அந்தணரும் உடலை உணவு முறைகளால் ஓம்பவே செய்தனர். தம் தவச் செயல்களால் உலகை உய்வித்தனர். ஆனால் வாலி பிறரை அழிப்பதற்கும், தெருட்டுவதற்கும் உடலை ஓம்புகிறான். அது விலங்கின் செயலே அன்றி வேறல்ல. எனவே விலங்காகிய வாலியை, வேடன் மறைந்திருந்து அம்பெய்திக் கொல்வதுபோல் கொல்வது தவறில்லை என்பதே இராமனின் கணிப்பு. அதனால்தான் 'பித்தாய விலங்கின் ஒழுக்கு' என்ற கருத்தை இராமன் கூறுகிறான்.

இராமனின் கணிப்பு நூற்றுக்கு நூறு விழுக்காடு சரியானதே என்பதைக் காப்பியம் கற்போர் உணரும் வாய்ப்பு அடுத்து கிட்டுகிறது. வாலி இராமனின் அம்பால் அடிபட்டு வீழ்ந்த பின்பு இராமனிடம் அவன் சில விவாதங்கள் புரிகிறான். அப்பொழுது

நிகழ்த்தும் உரையாடல்கள் எல்லாம் அறிவார்ந்த கருத்துக்களைக் கொண்டவையாக இருக்கின்றன. இராமனுடைய செய்கையில் குற்றம் கண்டு அவன் இராமனை ஏசும் ஏச்சைக் கம்பன் 16 பாடல்களில் அமைக்கிறான். வாலியின் நீதி நூல் அறிவும், கல்வியின் ஆழமும், சொல்லின் வன்மையும், தர்க்க நியாயமும், அறச் சக்தியின் ஆற்றல் நிறை சொற்றொடர்களால் இராமனிடம் அவன் கேட்கும் கேள்விகளின் செறிவும் திண்மையும் கற்போரை வியப்பால் விழிகள் மலர வைக்கின்றன. அப் பதினாறு பாடல்களின் கருத்தைச் சுருக்கமாக அறிவோம்.

"இராமா! எத்தகையதொரு இழிவான செயலை நீ புரிந்துவிட்டாய்! வாய்மையும் மரபும் காத்த தசரதன் மைந்தனா நீ! அறச் செல்வன் பரதனுடைய முன்னவனும் நீதானோ? உயர்ந்த இடத்தில் உள்ளவர்கள் தீமை செய்தாலும் அது நன்மையென்றே பாராட்டுவதுதான் இவ்வுலகத்தின் இயல்பு போலும்! உலகம் தாங்கும் வள்ளல் என்று உன்னைப் போற்றுகின்றார்களே! உன் வண்மைச் செயல் இதுதானா? உன் ஆருயிர்த் தேவியை பிரிந்ததால் அறிவு குழம்பி இந்த ஈனச் செயல் செய்தாயோ? இராவணன் எனும் அரக்கன் உனக்குக் குற்றம் இழைத்தால் அதற்கு எதிர் வினையாகக் குரங்கினத்து மக்களை அழிக்க வேண்டும் என்று நீ படித்த மனுநீதி கூறியதா? என்பால் என்ன பிழை கண்டு இரக்கமின்றி என்னைக் கொன்றாய்? அரசுரிமையை உன் தம்பிக்குக் கொடுத்து நாட்டிலே ஒரு நற்கருமமும், இங்கு சுக்ரீவனுக்கு அரசுரிமையைக் கொடுத்து காட்டிலே ஒரு கருமமும் செய்தாய் போலும்! முறையற்ற முறையில் என்னைக் கொல்லும் நீ, முறையற்ற முறையில் இராவணன் உனக்குத் தீங்கிழைத்தான் என்று இனி சொல்லவும் கூடுமோ? இருவர் போர் புரியும் பொழுது, ஒருவர் மேல் மட்டும் கருணை காட்டி, வரி சிலை ஒளித்து வாங்கி மற்றொருவன் மருமத்தில் அம்பு எய்தல் தருமமோ இராமா! உன் செய்கையில் வீரமுமில்லை, ஈரமுமில்லை. அத்துடன், இரு பக்க நியாயத்தையும் கேட்டுப் பின் தன் பக்கம் குற்றம் வராதபடி செயல் புரிதல் அன்றோ சான்றோர்க்கு அழகு? ஆனால் நீ பழியையும் ஏந்தி விட்டாயே! உனக்குத் துணை வலி வேண்டுமென்றால் புயல் போன்ற என்னை விடுத்து முயல் போன்ற சுக்ரீவனைப் பற்றினாயே! நிலவில் களங்கம் போல, சூரியன் தொல் குல மரபுக்கு, ஆரியன் நீ ஆக்கிவிட்டாயே களங்கத்தை! நீ மனு நூல் நீதியைப் போற்றவில்லை. உன் முந்தையர் போன்று உன்னிடம் சீரும் இல்லை ; சிறப்பும் இல்லை! நீ வாலியை அழிக்கவில்லை! மன் அற வேலியை அழித்துவிட்டாய். இல்லறத்தை இழந்தாய்! இன்று வில்லறத்தையும் இழந்தாயே!"

அறங்கள் பேசுவதில் வாலிக்கு நிகரில்லை என்னும் வண்ணம் சொற்களைப் பெய்து வாதம் புரிகிறான் வாலி! இராகவனின் வாளியை மார்பில் தாங்கியபடியே

அவன் மதி மயக்கமின்றி அறிவில் தெளிவோடு பேசுவது கற்போருக்குப் பெருவியப்பை அளிக்கிறது! ஆனால் அறங்களைப் பட்டியலிட்டு, இராமனின் அறப்பிறழ்வைச் சுட்டிக் காட்டி நீண்ட உரையாற்றும் வாலி, தன் வாழ்வில் எந்த ஒரு அறத்தையாவது கடைப்பிடித்தானா? ஒளிர்ந்து சுடர்விடும் தன்னுடைய இத்தனை அறிவாற்றலையும், தன் குரங்கினம் உயர்வதற்குப் பயன்படுத்தினானா? உடல் வலிமையைக் காட்டி உலகை வெருட்டியதன்றி வேறு ஏதேனும் நற்செயல் புரிந்தானா? அவனிடம் உறைந்து கிடந்த நான்மறை அறிவு வாலியின் வாழ்நாள் முழுதும் வீணே விரயமாகியது. அவனுடைய உயர்வுக்கும் அது பயன்படவில்லை! பிறருடைய நன்மைக்கும் அது உதவவில்லை! புலனின்ப வாழ்க்கையை விலங்குபோல் நச்சி வாழ்ந்தான் என்பதுதான் உண்மை! அதை நியாயப்படுத்துவதில் தன் அறிவாற்றல் சொல்லாற்றல் அனைத்தையும் பயன்படுத்துகிறான். உண்மை இது என்பதால் இராமன் நான்மறை அறிவு பெற்றவனாக இருந்தாலும் வாலி விலங்கே என்று கணித்ததில் என்ன தவறு இருக்க முடியும்?

மேலும், "சுக்ரீவனின் மனைவியை நச்சி வாழ்ந்தனையே! அது அறமற்ற செயலன்றோ?" என்று இராமன் கேட்பதற்கு, "நாங்கள் குரங்கினத்தவர். எங்களுக்கு மணமுமில்லை; கற்பு நெறியுமில்லை; உணர்வு வழி வாழ்வதே எங்கள் வாழ்க்கை முறை" என்று வாலி பதில் கூறுகிறான். அப்படியென்றால் அவனுடைய கல்வியும் நான்மறை அறிவும் எதற்குத்தான் பயன்? ஆக, பிறரிடம் குற்றம் காண்பதற்குத் தன்னறிவையும், தர்க்கத் திறமையையும் பயன்படுத்தும் வாலி, தன்னுடைய குற்றத்தை மறைப்பதற்குத் தான் பிறந்த குலத்தைத் துணைக்கு அழைத்துக் கொள்கிறான்! உணர்வு வழி வாழ்தலே வாழ் நெறி என்றால், தன் அரசுரிமையைப் பறித்தான் என்று சுக்ரீவனிடம் குற்றம் கண்டு அவனை விரட்டியடித்தது ஏன்? குரங்கினத்தவனான சுக்ரீவனும் உணர்வு வழி நடந்தான் என்று வாலி ஏற்றுக் கொண்டிருக்கலாமே! தன் கூர்த்த அறிவைத் தன் குற்றத்தை மறைக்கவே பயன்படுத்தும் தந்திரத்தைக் கைக்கொள்பவன் வாலி என்பது இங்கு நிரூபணமாகிறது. எனவே வாலி தெரிந்தே தவறு செய்பவன். தன் ஈரமற்ற இதயத்தையும், புலனடக்கமில்லாத ஈன வாழ் நெறியையும் தன் குலப் பிறப்பை முகாந்திரமாக வைத்து நியாயப்படுத்தும் தந்திரமுடையவன் வாலி. பிறருக்கு முன்மாதிரியாக வாழ வேண்டியவன், தன் அரச கடமையிலிருந்து தவறி அறம் பிறழ்ந்து வாழ்ந்ததால், அறத்தின் நாயகனாகிய இராமன் தந்திர குணமுள்ள விலங்கொன்றைத் தந்திரமாக வீழ்த்துவதுபோல், அறமற்ற வரபலத்தின் மூலமாக உலகைத் தந்திரமாக அச்சுறுத்தி விலங்கு போல் வாழ்ந்த வாலியைத் தந்திரமான போர் முறையின் மூலமாகவே வீழ்த்தினான்; வென்றான்; கொன்றான்.

.........ஆனால் வாலி, 'என்னை நீ ஏன் மறைந்திருந்து கொன்றாய்?' என்ற கேள்வி கேட்கும்பொழுது இராமன் ஏன் மௌனமாக நிற்கிறான்? இத்தனை நியாயங்களையும் அவனுக்கு எடுத்துரைக்க இயலாமல் நிற்பது ஏன்? மேற்கூறப்பட்ட காரணங்களெல்லாம் இராமன் தன் செய்கையை நியாயப்படுத்திக்கொள்ள தனக்குத் தானே சிந்தித்து வைத்திருந்த கருத்துக்கள்தாம் என்று முன்னமேயே கூறப்பட்டது. இக்கருத்துக்களை எவரிடத்தும் விளக்கி உரைக்கவில்லை. இராமனுடைய நோக்கில் சுக்ரீவனுக்குத் தான் கொடுத்த அபய வாக்கே பேரறம் ஆதலாலும், விலங்கு வாலியை வீழ்த்தும் தந்திரமான போர் முறைக்குத் தக்க காரணங்களை இராமன் மனதுக்குள் கற்பித்துக் கொண்டுவிட்டதாலும், **இராமனைப் பொருத்தவரையில் வாலி தன் வாளியால் மார்பில் அடிபட்டு நிலத்தில் வீழும் வரை தன்னுடைய போர் முறை சரியானது என்று உறுதியாக நினைக்கிறான்.** ஆனால் அதை வாலியிடம் உடனடியாகக் கூற நாவெழாமல் மௌனம் சாதிப்பது ஏன்? காரணம் உண்டு. வாலி வீழ்ந்த பிறகு நடக்கும் நிகழ்ச்சிகளால் இராமனுக்கு ஏற்பட்ட சங்கடங்களும், அதன் பயனான திகைப்பும் தான் காரணம். ................. சங்கடங்கள் என்னென்ன? இராமன் வாலியைக் கொல்வதற்குத் தீட்டும் போர்த்திட்டத்தில் அவன் கணக்கில் எடுத்துக்கொள்ளாத அம்சங்கள் இரண்டு. முதல் சங்கடத்தை உடனே சரி செய்துவிடுகிறான். அதில் விதியை மதியால் வென்று விடுகிறான் இராமன். ஆனால் இன்னொரு சங்கடத்தில் விதியின் கைகளில் விளையாட்டுப் பொம்மையாகச் சிக்கிக் கொண்டு விடுகிறான். இந்தச் சங்கடத்தின் விளைவாகவும் தொடர்ச்சியாகவும் அடுத்தடுத்து எதிர்பாராத பல நிகழ்ச்சிகள் நடந்துவிடுகின்றன. 'மருந்து பலித்தது ; ஆனால் நோயாளி இறந்துவிட்டான்' என்பதாகிய நிலை ஏற்பட்டு இராமனுக்குப் பழி ஏற்படுகிறது. அவற்றின் விளக்கத்தை இனி காண்போம்.

இராமனுடைய திட்டப்படி வாலியைச் சுக்ரீவன் அறைகூவிப் போருக்கு அழைக்கிறான். வாலியும் வெளிப்போந்து சுக்ரீவனுடன் துவந்த யுத்தம் நிகழ்த்துகிறான். அப்படி யுத்தம் நடத்தும்பொழுதுதான் இராமன் இதுகாறும் தன் சிந்தனையில் பொறி தட்டாத ஒன்று தன் கண்முன் அரங்கேறுவதைக் காண்கிறான். அது என்ன? வாலி, சுக்ரீவன் இருவருடைய உருவ ஒற்றுமைதான் அது. இருவரும் உயரம், பருமன், தோற்றம் இவற்றால் இரட்டைப் பிறவிகள் போல் தோன்றுகிறார்கள் இராமனுக்கு! அவர்களை இனம் பிரித்துக் காண இயலாத குழப்பமும் ஏற்படுகிறது! காப்பியத்தின் துணை கொண்டு இந்தக் காட்சி விளக்கப்பட வேண்டும். வாலி, சுக்ரீவனுடைய உருவ ஒற்றுமையை, அவர்களுடைய உக்கிரமான, உலகம் வியக்கும் மற்போர் திறத்துடன் ஒருங்கிணைத்துக் கவிதையாக்கிக் கொடுத்துள்ள கவிச் சக்ரவர்த்தியின் ஆற்றலை எத்துணைப் பாராட்டினாலும் தகும்.

வாலி சுக்ரீவனுடைய உருவ ஒற்றுமை எப்படி இருந்தது? ............ குன்று போன்ற தோற்றத்தினர் என்றால் இருவரும் இரு குன்றுகளே! கடல் போன்ற வேகத்தினர் என்றால் இருவரும் இரு கடல்களே! மின் சுழற்சி ஆற்றலிலே கோள் போன்றவர் என்றால் இருவரும் இரு கோள்களே! இராமனின் கண்களுக்கு இருவரும் 'சுந்தோப சுந்தர்' என்ற இரட்டைப் பிறவியரின் உருவமாகவே தோன்றுகின்றனர். உருவத்தால் அணுவளவும் இனம் பிரித்துக் காணவியலாத இக்காட்சியைக் கம்பனின் கவிதை வரிகளில் காணலாம்.

*"குன்றோடு குன்று ஒத்தனர்; கோள் அரிக் கொற்ற வல் ஏறு*
*ஒன்றோடு சென்று, ஒன்று எதிர் உற்றனவேயும் ஒத்தார்;*
*நின்றார்; திரிந்தார் நெடுஞ்சாரி; நிலம் திரிந்த,*
*வன் தோள் குயவன் திரி மட்கலத்து ஆழி என்ன"*
*(கிட்கிந்தா – வாலி வதை – 46)*

*"தோளோடு தோள் தேய்த்தலின், தொல் நிலம் தாங்கல் ஆற்றாத்*
*தாளோடு தாள் தேய்த்தலின், தந்த தழல் பிறங்கல்,*
*வாளோடு மின் ஓடுவது போல், நெடு வானின் ஓடும் –*
*கோளோடு கோள் உற்றென ஒத்து அடர்ந்தார், கொதித்தார்"*
*(கிட்கிந்தா – வாலி வதை – 47)*

*"கடல் ஒன்றினொடு ஒன்று மலைக்கவும், காவல் மேருத்*
*திடல் ஒன்றினொடு ஒன்று அமர் செய்யவும், சீற்றம் என்பது*
*உடல் கொண்டு இரண்டு ஆகி உடற்றவும், கண்டிலாதேம்,*
*மிடல், இங்கு, இவர் வெந் தொழிற்கு ஒப்புரை வேறு காணேம்"*
*(கிட்கிந்தா – வாலி வதை – 49)*

*"தம் தோள் வலி மிக்கவர், தாம் ஒரு தாய் வயிற்றின்*
*வந்தோர், மடமங்கை பொருட்டு மலைக்கலுற்றார்;*
*சிந்து ஓடு அரி ஒண் கண் திலோத்தமை காதல் செற்ற*
*சுந்தோபசுந்தப் பெயர்த் தொல்லையினோரும் ஒத்தார்"*
*(கிட்கிந்தா – வாலி வதை – 48)*

மேலும் இருவரும் வேற்றுமை பிரித்தறியாதபடிக்கு ஒரே அளவிலான போர்த்திறமும் காட்டினர். இந்திரன் மகனும் (வாலி) இரவிதன் சேயும் (சுக்ரீவன்) சந்த வல் நெடுந்தடக் கைகளால் ஒருவரையொருவர் தாக்கிய பொழுது,

*"உரத்தினால் மடுத்து உந்துவர்; பாதம் இட்டு உதைப்பர்;*
*கரத்தினால் விசைத்து எற்றுவர்; கடிப்பர்; நின்று இடிப்பர்;*
*மரத்தினால் அடித்து உரப்புவர்; பொருப்பு இனம் வாங்கிச்*
*சிரத்தின் மேல் எறிந்து ஒறுக்குவர்; தெழிப்பர்; தீ விழிப்பர்"*
*(கிட்கிந்தை - வாலி வதை - 55)*

*"எடுப்பர் பற்றி; உற்று ஒருவரை ஒருவர் விட்டு எறிவர்;*
*கொடுப்பர், வந்து, உரம்; குத்துவர் கைத்தலம் குளிப்ப;*
*கடுப்பினில் பெருங் கறங்கு எனச் சாரிகை பிறங்கத்*
*தடுப்பர்; பின்றுவர்; ஒன்றுவர்; தழுவுவர்; விழுவர்."*
*(கிட்கிந்தை - வாலி வதை - 56)*

*"வாலினால் உரம் வரிந்தனர், நெரிந்து உக வலிப்பர்;*
*காலினால் நெடுங்கால் பிணித்து உடற்றுவர்; கழல்வர்;*
*வேலினால் அற எரிந்தென, விறல் வலி உகிரால்,*
*தோலினால், உடன் நெடு வரை முழை எனத் தொளைப்பர்"*
*(கிட்கிந்தை - வாலி வதை - 57)*

வாலி சுக்ரீவனின் உருவ ஒற்றுமையினால் திகைத்திருந்த இராமன், அவர்கள் புரியும் மற்போர்ச் சிறப்பில் மனம் லயித்தும் கிடந்திருந்தான் போலும்! போரின் ஒரு கட்டத்தில் வாலி, சுக்ரீவனைச் சிங்கம் ஒன்று யானையைத் தன் நகங்களாலும், கரங்களாலும் குலைப்பதுபோல் குத்திக் கொல்ல முயல்கிறான். ..... உருவ ஒற்றுமையினால் திகைத்துக் கிடக்கும் இராமன் இப்பொழுது யார் மேல் அம்பெய்வது? அடிப்பவன் வாலியா? சுக்ரீவனா? அடி வாங்குபவன் வாலியா? அன்றி சுக்ரீவனா? அடி வாங்குபவன் வாலியாயிருக்கும் பட்சத்தில் அம்பைச் சுக்ரீவன் மீது இராமன் எய்துவிடக் கூடுமல்லவா?அதைவிடப் பெரும் பழிச் செயல் வேறென்ன இராமனுக்கு வாய்க்கக் கூடும்!!! எனவே அம்பெய்தாமல் குழம்பி நிற்கிறான். (சிலர், இராமன் தன் போர்த் திட்டம் தவறானது என்ற குற்ற உணர்வினால் அம்பெய்யாமல் நின்றான் என்று கூறுவர். இதைவிட இராமனுடைய பண்பு நலனை கீழ்மையாக எவரும் எடைபோட இயலாது. தான் பழி பூண்டாலும் தக்கதே என்று கருதி, அபயம் அளித்த சுக்ரீவனைக் காப்பது என்று உறுதியுடன் நிற்கும் இராமனின் அருள் மனத்தைச் சிந்தை செய்யாதவர் கூறும் கூற்று இது. எத்தகைய தரும சங்கடமான நிலையில் விதியின் கைகளில் அறத்தின் நாயகன் உழன்று கொண்டிருக்கிறான் என்ற அருட்சிந்தையோடு இராமனின் செயல்களை நோக்க வேண்டும்).

போரின் உச்ச கட்டத்தில் வாலியின் ஆற்றலுக்கு ஆற்றாது குழம்பிய உள்ளத்தவனாய், உயிர்ப் பயத்துடன், இராமனை நோக்கிக் கும்பிட்டவனாக ஓடி வருகிறான் சுக்ரீவன். இராமனுக்கு இப்பொழுதுதான் தன்னை நோக்கி வருபவன் சுக்ரீவன் என்று அடையாளம் தெரிகிறது. இமைக்கும் நேரத்தில் இராமன் முடிவெடுக்கிறான்; சிக்கலுக்குத் தீர்வு காண்கிறான். "உள்ளம் குலைய வேண்டாம் சுக்ரீவா! உம்மிருவருக்கும் உள்ள உருவ ஒற்றுமையால் வேற்றுமை தெரியவில்லை எனக்கு! கொடிப் பூமாலை ஒன்றை நீ அணிந்து கொண்டு போய் மீண்டும் போரிடு" என்று கூறுகிறான். சுக்ரீவனும் அவ்வாறே செய்கிறான். போர் மீண்டும் துவங்குகிறது..... வாலியின் எல்லையற்ற ஆற்றலைக் கண்ணுறும் வாய்ப்பை இப்பொழுது சரியாகப் பெறுகிறான் இராகவன். வாலி, சுக்ரீவனை உயிர்ப்பயம் கொள்ளுமாறு செய்து புடைத்துப் பற்றி எற்றிக் குத்துகிறான். சுக்ரீவன் அயிர்த்த சிந்தையனாய், அலைந்து குலைந்து போகிறான். வாலியோ தன் வைரம் பாய்ந்த கைகளினாலும், கால்களினாலும் சுக்ரீவனின் உயிர்த்தலங்கள் தோறும் புடைத்து அடித்து உதைக்கிறான்...... சுக்ரீவன் மீண்டும் மீண்டும் உயிர்ப் பயத்தால் கத்துகிறான்; செவிகளினூடேயும், கண்களினூடேயும் உதிரம் ஒழுகுகிறது சுக்ரீவனுக்கு ......... இராமன் இருக்கும் திக்கை நோக்குகிறான்.... உயிர்ப் பிச்சைக்காக ஏங்கி இரங்கி நோக்குகிறான்...... இராமனுடைய உள்ளத்தில் அமர்ந்து இப்பொழுது நாம் அவனுடைய உணர்வுகளை அறிய வேண்டும்.

........... இராமனோ வாலியின் எதிரில் நிற்கவில்லை. குறிபார்த்து அம்பெய்வது என்பது மிக்க நுட்பத்தோடு ஆற்ற வேண்டிய செயல். இராமனுடைய வில் தொழிலுக்கு ஒரு சிறப்புண்டு. ஒருமுறைதான் அம்பெய்வான்; இலக்கை அடைந்துவிடுவான். குறி தவறி இலக்கை விட்டது என்னும் குற்றம் இதுகாறும் அண்ணலின் சிலைத் தொழிலுக்கு இல்லை... இந்தக் கொள்கையின்படி, குறி தவறாது, இராமன் வாலியின் மார்பில் எய்யும் ஒரே அம்பில் வாலியின் உயிர் போய்விடவேண்டும். அதுதான் இராமனின் இலக்கு ; ஆனால் வாலியின் மார்பு எனும் இலக்கு இராமனுக்குக் கிட்டவேண்டுமல்லவா? தொலைவில் நிற்கும் இராமனுக்கு வாலியின் மார்பு கை கூடப் பெறாத இலக்காக உள்ளது. மேலும் ஓர் அம்பால் வாலியை உடலின் எப்பாகத்திலும் அடிக்கலாம்; அது இராமனுக்கு இழுக்கு என்பதோடு, இதுகாறும் வாலியின் வலிமையைக் கண்களால் கண்ட இராமன். அப்படி ஒரு முடிவை எடுக்க முடியாது. உடலின் எப்பாகம் ஆனாலும் வாலி அம்பைப் பிடுங்கி எறிந்துவிட்டு வலிமையுடன்

நிற்கும் வல்லமை படைத்தவன்... மேலும் தன் மேல் அம்பு விட்டவன் யார் எனும் ஐயம் வாலிக்கு எழும்!.. மற்போர் நிகழ்ச்சியில் திசை திருப்பம் ஏற்படும்... போர்த்திட்டமே பாழாகிவிடும். ஒரே அம்பில் வாலியின் மார்பு எனும் இலக்கு இராமனுக்குக் கிட்ட வேண்டும்... அந்த வாய்ப்புக்காகத் தவம் கிடக்கிறான், தவமாம் தவம் செய்து தயரதன் ஈன்ற தவப்புதல்வனாம் இராமன், சுக்ரீவன் அனுபவிக்கும் உடல் உபாதை அனைத்தையும் அருள் மனம் கொண்ட இராமன் அக்கணத்தில் தன் உள்ளத்தால் அனுபவித்திருப்பான் என்பது உறுதி. சுக்ரீவனின் உயிர், வாலியின் கைகளில் அடைக்கலப்பட்டு விட்டதோ என்ற பதைப்புடனும், பதற்றத்துடனும் சுக்ரீவனுடைய உயிருக்கு அபயம் அருளிய இராமன் மனம் குலைந்திருப்பான் என்பதும் உறுதி. அத்துடன் இலக்கைத் தவறவிட்டுவிடக் கூடாது என்ற மனஉறுதியுடனும், கவனத்துடனும் செயல்பட வேண்டிய தருணம் வேறு அது! எத்தகைய இடர்ப்பாட்டில் நிற்கிறான் அறத்தின் நாயகன் என்பதைக் காப்பியத்தைக் கற்போர் ஓர்ந்து உணர்தல் வேண்டும்...

உயிர்ப் பயத்துடன் தன் திசை நோக்கிப் பார்க்கும் சுக்ரீவனை, நெருக்கிப் புடைத்துத் தன் தலைக்கு மேலே தூக்கிக் கீழே அடிப்பதற்கு வாலி முயல்வதைக் காண்கிறான் இராகவன். அத்தருணத்தில் வாலியின் மார்பு எனும் இலக்கு இராமனுக்கு வாய்ப்பாகக் கிட்டுகிறது. நல்ல வேளையாக, இராமன் நிற்கும் திசை நோக்கித் தன் மார்பைக் காட்டியவனாக வாலி நிற்கும் நிலை ஏற்படுகிறது. சற்று திசைமாறியிருந்தாலும் சுக்ரீவன் வாலி கையில் அன்று மரணத்தைச் சந்தித்திருக்க வேண்டியவனே! வாலியை நோக்கிக் கூற்றுவன் நெருங்கி வரும் நேரமாதலால், தன் உயிர்க்கு இறுதி ஈட்டும் கூற்றுவனாகிய இராமனுக்கு வாய்ப்பாகத் தன் மார்பைக் காட்டி சுக்ரீவனைத் தலைக்கு மேல் தூக்கி எற்றிப்போட விதிவசத்தால் நிற்கிறான் வாலி! இராகவன் சட்டென்று கோல் ஒன்று வாங்கித் தொடுத்து நாணொடு தோள் உறுத்து வாலியின் மேல் தோல் துரந்து அவனைச் செயலிழக்க வைக்கிறான். இனி செப்புவது என்ன? இராம பாணம் இலக்கு தப்புவதில்லையே! நீரும், நீர் தரு நெருப்பும், வன் காற்றும், கீழ்நிவந்த பாரும் அனைத்தும் சேர்ந்தவையோ என்று வலி படைத்த வாலியின் உரத்தை அழித்து அவன் மார்பில் பாய்ந்தது இராமனின் பகழி – என்னே விதியின் வலி! கம்பன் இந்நிகழ்ச்சியைப் பின்வருமாறு வருணிக்கிறான். ''தன் தோள்வலிச் சிறப்பால் தன் தம்பியின் தோள் வலியை அழித்துக் குலைத்து அவனை நிலத்திடை அடித்துக் கொல்லும் கூற்றுவன் தானே என்று எண்ணி இறுமாந்த வாலி,

சற்றும் தான் எதிர்பாராத வகையில், வல் வினைக் கூற்றுவனுக்கு இலக்காக்கித் தம்பியை நிலத்தில் கிடத்துவதற்குப் பதிலாகத் தானே கலங்கி, மயங்கித் தன் விசைக்கால் கிளர்ந்து எரிவுற, மேரு மலை வேர் பறிந்து வீழ்ந்தாலன்ன நிலத்தில் வீழ்ந்தான்.''

காப்பிய வரிகள்;

*"அலங்கு தோள் வலி அழிந்த அத் தம்பியை அருளான்,*
*வலம் கொள் பாரிடை ஏற்றுவான் உற்ற போர் வாலி,*
*கலங்கி, வல் விசைக் கால் கிளர்ந்து எறிவுற, கடைக்கால்,*
*விலங்கல் மேருவும் வேர் பறிந்தாலென, வீழ்ந்தான்"*

*(கிட்கிந்தா - வாலி வதைப் - 67)*

⌘ ⌘ ⌘

# பழியை ஏற்கும் இராமன்

............... இராமன் நினைத்ததை முடித்துவிட்டான்! வாலியின் மருமத்தில் அம்பெய்து சுக்ரீவனின் உயிர்க்கு உறுதி அளித்துவிட்டான்! அடைக்கலப் பொருளுக்கு அருளி விட்டான். தன் புகழை நிலைக்க வைத்துவிட்டான்... கதை இத்துடன் முடிந்திருந்தால் 'வாலி வதம்' ஒரு விவாதத்துக்குரிய நிகழ்ச்சியாகவே ஆகியிருக்காது. இராமனுக்கும் பழி ஏற்பட்டிருக்காது. அடைக்கலப் பொருளைக் காத்தான் இராமன் என்ற புகழே எஞ்சியிருக்கும். வாலியின் இறப்பு, சுக்ரீவனின் வெற்றி இரண்டும் ஒரு சேர நேர்ந்த களிப்பில் வானரக் குலம் களிக் கூத்தாடியிருக்கும்.

ஆனால் வாலி வதைப் படலம் இத்துடன் முடியவில்லை. இராமன் எதிர்பாராது சந்தித்த இரண்டாவது சங்கடம் என்று முன்பு இக்கட்டுரையில் குறிக்கப்பட்டதே, அது இப்பொழுது ஏற்படுகிறது இராமனுக்கு.

வாலி இராமனின் அம்பினால் உடனே மரணம் எய்தவில்லை. புல்லர்கள் செவியில் சொன்ன பொருள் புறம் போவது போல தாடகையின் மார்பைத் துளைத்துப் புறம் போகிய இராகவனின் வாளி – கணக்கிலடங்காத அரக்கர் கூட்டத்தையும், கர தூடணர்களையும் ஒரு முறை விட்ட பகழியால் எமனுலகத்துக்கு அனுப்பிய இலக்கு தவறாத இராமபாணம் – பிற்காலத்தில், இராவண யுத்தத்தில் கள்ளிருக்கும் மலர்க் கூந்தல் சானகியைக் கரந்த காதல், இராவணனுடைய உடலின் ஒவ்வொரு அணுவிலும் இருக்குமோ என்று தேடித் தேடித் துருவித் துளையிட்டு இராவணனின் உடலைச் சல்லடைக் கண்களாய்த் துளைத்துப் போட்ட இராமனின் புனித வாளி – வாலியின் உடலில் சென்று, மார்பைத் துளைத்துப் புறம்போக வல்லமையின்றி வாழைப் பழத்தில் ஊசி இறங்குவதுபோல் மெல்ல ஊர்ந்து சென்றது ; பின் நின்றது......... காப்பியப் பாடல் வரிகள்:

*"கார் உண சுவைக் கதலியின் கனியினைக் கழியச்*
*சேரும் ஊசியின் சென்றது – நின்றது ................"*

*(கிட்கிந்தா - வாலி வதை - 66)*

இது இராமன் தன் போர்த் திட்டத்தின்போது சிந்தனையில் கொள்ளாத ஒரு விஷயம். தன் ஒரு கணை துரத்தலால் வாலி, "தன் உயிர் நிலை முடிப்பன்" என்று போட்ட இராகவனின் கணக்கு தவறாகிவிடுகிறது....

அது மட்டுமல்ல..... வாலி முனைந்து முயன்று கால்களால் பற்றியும், கைகளால் பிடித்தும் பல்லினால் பறித்தும் தன் மார்பில் ஊடுருவிச் செல்லும் பகழியைப் பிடித்துப் பறித்து வெளியில் இழுக்கிறான். திண்ணியனின் வலிமைக்குச் சவால் விடும் இராமபாணம் வெளியில் வர மறுக்கிறது. 'இறுப்பென்', 'முறிப்பென்' என்றெல்லாம் கூறி முயல்கிறான். அப்படியும் முழுதும் பறிக்க இயலவில்லை. வெளியில் இழுத்தாலும் வராமல், தன் மருமத்தைக் கவ்வி உள்ளுக்குள் நிலைபெற்று நின்றிருக்கும் இத்தகைய முறையில் அம்புவிட வல்லவர் இவ்வுலகில் யார் என்பதை அறியும் ஆவலோடு, குருதி கொப்பளித்து உடலிலும் நிலத்திலும் படர, ஒருவாறாக இராமபாணத்தை இழுத்து, மார்பில் அது பதிந்துகிடக்கும் வண்ணத்திலேயே கையில் அதனை இறுகப் பற்றிக்கொண்டு அதில் பொறித்திருக்கும் நாமத்தைப் பார்க்கிறான். இம்மைக்கும், எழுமை நோய்க்கும் மருந்தும் ஆன இராமனின் செம்மை சேர் நாமம் தன்னைக் கண்கள் காட்டக் காண்கிறான்..... நம்ப முடியவில்லை அவனால்..... இல்லறம் துறந்த இராமன், இன்று வில்லறம் துறந்து, சொல் அறம் துறந்திலாத சூரியன் மரபுக்கான நல்லறம் துறந்துவிட்டானே என்று நகை வர நாணுகிறான்.... இதுவும் இராமன் எதிர்பாராத ஒன்று. 'இதுவும் ஓர் அறமோ?' என்று வெட்கி, மகுடம் சாய்த்து, வெடிப்படச் சிரித்து மீண்டும் துயர் உழந்து அழிந்து சோர்கிறான்... சோர்கிறானே தவிர வாலி இறக்கவில்லை. .......... இதுவும் இராமன் எதிர்பாராதது. இன்னொரு எதிர்பாராத சம்பவமும் நிகழ்கிறது. தன் முன்னவனைக் கூற்றுக்கு இரையாக்குவதற்காகவே இராமனின் துணையை நாடிய சுக்ரீவன் அண்ணன் குருதி கொப்பளிக்க நிலத்தில் வீழவும், உடன்பிறப்புப் பாசத்தால் உலைகிறான்; கண்கள் தாரை தாரையாய் நீர் சொரிய பதை பதைத்து நிலத்தில் வீழ்கிறான்.

*"வாசத் தாரவன் மார்பு எனும் மலை வழங்கு அருவி*
*ஓசைச் சோரியை நோக்கினன்; உடன் பிறப்பு என்னும்*
*பாசத்தால் பிணிப்புண்ட அத் தம்பியும், பசுங் கண்*
*நேசத் தாரைகள் சொரி தர, நெடுநிலம் சேர்ந்தான்"*

*(கிட்கிந்தா - வாலி வதை - 77)*

எந்தச் சுக்ரீவனுக்காக இராமன் வாலியிடம் நட்புறவாகும் வாய்ப்பையே ஏற்படுத்திக் கொள்ளாமல் வலிந்து பகைமை பூண்டானோ, அந்தச் சுக்ரீவனுக்கு இப்பொழுது வாலி பகைவனில்லை என்ற நிலையைச் சுக்ரீவனே இப்பொழுது உண்டாக்கி விடுகிறான். 'நினக்கு உற்றார் எனக்கு உற்றார்' என்ற வாக்கை நிறைவேற்ற வேண்டிய நிலைமைக்கும் இராமன் தள்ளப்படுகிறான். இத்தகைய எதிர்பாராத சங்கடங்களால் 'போர் முடிந்தது' என்று நிகழ்ச்சிகளுக்கு முற்றுப்புள்ளி வைத்துவிட்டு இரலையின் குன்றம் திரும்பிவிட இயலாத சூழ்நிலை ஏற்பட்டு விடுகின்றது இராமனுக்கு!

எனவேதான், "மறை திறம்பாத வாய்மை மன்னன் தசரதனின் சொல்லின் துறை திறம்பாது காக்கத் தோன்றிய அண்ணல் இராமனை, முறை திறம்பிய செயல் செய்து இழிந்து இறை திறம்பினான்" என்று வாலி ஏசுவதற்கு வாய்ப்பாக, இராமன், வாலியின் முன் வரி வில் ஏந்தி வந்து நிற்கிறான். அப்பொழுது வாலி இராமனைக் கேட்கும் கேள்விகள் இந்நூலில் 137ம் பக்கத்தில் முன்பே விவரிக்கப்பட்டுள்ளன.

தன் அம்பை மார்பில் ஏந்தியவண்ணம் அறிவின் தெளிவோடு வாலி கேள்விகள் கேட்கக் கூடும் என்று இராமன் எதிர்பார்க்கவில்லை ............. ஆயினும் வாலியைத் தான் கொல்வதற்கான காரணங்களை இராமனும் வாலிக்கு இணையாகப் பட்டியலிடுகின்றான். அந்தப் பட்டியலும், வாலிவதையின் தர்க்க நியாயத்தை இராமன் விளக்கப் புகுந்த இடத்தில், இந்நூலில் முன்பே இடம் பெற்று விட்டது. அவற்றையெல்லாம் வாலியும் ஏற்றுக் கொள்ளத்தான் செய்கிறான். ஆனால் இறுதியில் இராமன் செவியுறவே விரும்பாத – வாலி கேட்டுவிடக் கூடாது என்று இராமன் எண்ணியிருக்கக் கூடிய – அந்தக் கேள்வியை வாலி கேட்டே விடுகின்றான். "இராமா! நீ கூறுவதெல்லாம் சரிதான்! ஆனால் என்னை ஏன் மறைந்திருந்து கொன்றாய்?" என்ற கேள்விதான் அது.

அறத்துக்குக் குறைவுபட்டது என்றாலும் அவ்வழியைத் தேர்ந்தெடுக்க இராமனுக்கு இருந்த காரணங்களெல்லாம் முன்பே விளக்கப்பட்டன என்றாலும் அவை இராமனுடைய மனத்துக்கு மட்டுமே தெரிந்த காரணங்களே. **வாலியின் பகுத்தறிவுக் கூர்மையைப் பற்றி இராமன் அறியாதவரையில் அவை இராகவனுக்குச் சரியான காரணங்களே.** வாலி உடனே உயிர் துறந்திருந்தால் உலகத்துக்கும் இராமனின் போர்முறை சரியான முறையே. ஆனால் 'விலங்கு என்று தான் நினைத்தவன் இத்தனை அறிவாற்றல் கொண்டவனா?' என்று இராமன் திகைத்துத்தான் போய்விட்டான்! ஆனால் தன்னுடைய புலனின்ப வாழ்க்கையை வாலி நியாயப்படுத்தும் முறையின்படி நோக்கினால் அவன் விலங்காகவே தோன்றுகிறான். 'பேச்சும் செய்கையும் இணக்கமாக இல்லையே' என்ற குழப்பம் ஏற்படுகிறது

இராமனுக்கு. உண்மையில் வாலியின் பண்பு நலன் என்ன? அவன் உடலால் விலங்காயினும் பகுத்தறிவால், உள்ளத்தால் உயர்ந்தவனா? அறிவால் மேன்மையுற்று உடலால் கீழ்மையானவனா! வாலியைப் பற்றித் தான் எத்தகைய அபிப்பிராயத்தைக் கொள்வது? திகைத்து நிற்கிறான் இராமன். 'என்னை ஏன் மறைந்து நின்று கொன்றாய்?' என்ற வாலியின் கேள்விக்கு இராமன் உடன் விடையளிக்காமல் இருப்பதற்கு இதுவே காரணம்.

தான் வாலியை விலங்கு என்று கணித்து மறைந்திருந்து கொன்ற தன் போர் முறையை, வாலியின் இயல்பைச் சரியாகத் தானே கணிக்க இயலாது திகைக்கும் இக்கணத்தில் உறுதியாக நியாயப்படுத்திப் பேச முடியுமா? அம்முறையைச் சரியென்பதா? தவறென்பதா? தன்னுடைய அறிவுக்கும் மனத்துக்கும் தெளிவேற்படாத ஒரு நிலையை, அது தன் செயல் என்பதால் நியாயப்படுத்திப் பேசுவதற்கு இராமனுக்கு இங்கு நாவெழவில்லை என்பதுதான் உண்மை. இதுதான் உண்மையான காரணம்! விதியின் பிழையால், தான் அறப்பிழை ஆற்றும் கதிக்குத் தள்ளப்படும் பொழுதெல்லாம் இப்படி உரையாற்றாமலும் கருத்துச் சொல்லாமலும் நிற்பதுதான் இராமனின் பண்பு நலன்.

............ தாடகையைக் கொல்லச் சொல்லும் விசுவாமித்திர முனிவர் அதற்கான காரணங்களை இராமன் மனம் கொள்ளும் வண்ணம் அடுக்கிக் கொண்டே போனாலும் "பெண்ணைக் கொல்வது போர் அறமல்லவே" என்று தன் மனத்துள் நினைத்தானே அன்றி, அதைச் சொற்களால் கூறினானில்லை. அவ்வாறே தந்தை தயரதன் பரதனுக்கு உரிமையுள்ள அரசைத் தனக்களிக்கும் பொழுது, அதனைத் தான் ஏற்றால் அறப்பிழையாகும் என்பதை உணர்ந்தான்... ஆனால் அவ்வுணர்ச்சியைச் சொற்களால் வெளிப்படுத்தவில்லை. ஆழ் மனத்தில் தான் தவறு என்று உணர்வதை நியாயப்படுத்திப் பேசும் இயல்பு அற்றவன் இராமன். அதனால்தான் வாலி வதத்தில் தான் கைக்கொண்ட போர் முறைக்கு ஆயிரம் நியாயங்கள் அவன் மனத்தில் இருந்தாலும், அதை அறம் என்று கூறி உலகத்தைத் தவறான வழியில் நடத்த அவன் சித்தமாக இல்லை.... மாறாக, தன் போர் முறையைப் பிழையென்று உலகம் கருதினால் அப்பிழைக்கான பழியை ஏற்கச் சித்தமாக இருக்கிறான், உள்ளத்தால் பொய்யாது ஒழுகும் உத்தமனாகிய இராமன். அதே சமயத்தில் சுக்ரீவனுக்குக் கொடுத்த அடைக்கல வாக்கைக் காக்கவும், வாலியின் நட்பைத் தவிர்க்கவும் வேண்டி அயலில் நின்று அம்பெய்யும் நிர்ப்பந்தம் ஏற்பட்டது உண்மையே ஆதலால், இக்காரணத்தை இலக்குவன் வாலியிடம் கூறும்பொழுது அதனை மறுக்காமலும் இருக்கிறான்.

எனவே "தவறும் நியாயமே' என்ற மனப்பான்மையின்றி, குற்றவுணர்வோடு பழியை ஏற்கச் சித்தமாக இராமன் நிற்கும்பட்சத்தில் அப்பழியும் அவனுக்குப் புகழேயாகும். தன் தவற்றை நியாயப்படுத்திப் பேசாமல் மௌனமாக நிற்கும் இந்தவொரு காரணத்தினாலேயே, இராமன் பண்புகளால் உயர்ந்து நடையில் நின்றுயர் நாயகனாகிறான். காசில் கொற்றத்து இராமனும் ஆகிறான். ஆக, வாலியை விலங்கு என்று கருதியே அவனை மறைந்திருந்து கொல்லும் போர் முறையைக் குற்றவுணர்ச்சியற்ற மனத்துடன் தேர்ந்தடுத்தான். வாலியை தான் விலங்கு என்று கருதியதையும் இராமனே தன் நாவால் கூறுகிறான். அதாவது வாலியின் மேல் அம்பெய்து வீழ்த்திய பிறகே அவன் விலங்கு அல்ல என்று தான் உணர்ந்ததாக (மனித வாலியைக் கண்டதாக) இராமனே காப்பியத்தில் கூறுகிறான்.

பாடல் பின்வருமாறு:

*" 'நலம் கொள் தேவரின் தோன்றி, நவை அறக்*
*கலங்கலா அற நல் நெறி காண்டலின்,*
*விலங்கு அலாமை விளங்கியது; ஆதலால்*
*அலங்கலார்க்கு, ஈது அடுப்பது அன்று ஆம் அரோ' "*

*(கிட்கிந்தா – வாலி வதை – 115)*

வாலியின் விலங்கு அலாத தன்மை தனக்கு விளங்கியது என்கிறான் இராமன். விளங்கியது என்றால் – விளக்கமாக வெளிப்பட்டது என்றே பொருள் அல்லவா? விளக்கு இருக்கும் இடத்தில் இருளுக்கு வேலையில்லாதது போல், இப்பொழுது மனித வாலி வெளிப்பட்டு, விலங்கு வாலிக்கு வேலையில்லாமல் செய்துவிட்டான். எனவே இராமன் இதுகாறும் வாலியை விலங்கு என்று கணித்தே மறைந்திருந்து கொன்றான் என்பது இராமனுடைய இக்கூற்றால் தெற்றென வெளிப்படுகிறது.

எல்லையற்ற வாலியின் உடல் வலிமைதான் அவனுடைய நல்லறிவை இதுகாறும் மறைத்திருந்தது என்று உணர்கிறான் இராமன். அது இறுதியில் உண்மையே ஆகிறது. உடல் வலிமை மேவியிருந்த காலத்தில் நான் மறை அறிவு பெற்றிருந்தும், வாலி, 'தன் இனத்துக்குத் தக்கதே' என்று நியாயம் கற்பித்துக் கொண்டு புலனின்பத்தை நச்சியும், 'வலியது வாழும்' என்ற காட்டு நீதியை நிலைநிறுத்தியும் விலங்கு வாழ்க்கை வாழ்ந்தான். எனவே அவன் இராமபாணத்தை மார்பில் வாங்கும் வரை விலங்கு வாலியாகவே வாழ்கிறான். இந்தக் கருத்துக்கு அரண் செய்யும் மிகச் சிறந்த நிகழ்ச்சி ஒன்றைக் காப்பியத்தில் காண்கிறோம்.

……… சுக்ரீவன் இராமனின் திட்டப்படி, வாலியை அறைகூவிப் போருக்கு அழைக்கிறான். வாலி போருக்கு ஆயத்தமாகும் பொழுது, வாலியின் மனைவி தாரை அவனைத் தடுக்கிறாள். தடுத்து ஒரு கருத்தைக் கூறுகிறாள். "இதுநாள் வரை உன்னைக் கண்டு அஞ்சிக் கிடந்த சுக்ரீவன், இப்பொழுது இத்துணைத் துணிவோடு உன்னைப் போருக்கு அழைக்கிறான் என்றால், அவனுக்கு வலிய துணை ஏதாவது கிட்டியுள்ளதென்றே கொள்ள வேண்டும். நமக்கு இனியவர்கள் ஒரு செய்தி கொணர்ந்தனர். சுக்ரீவனுக்கு இராமன் என்பவனுடைய நட்பு கிடைத்திருப்பதாகவும், அவன், உன் உயிர் குடிக்கத் திட்டமிட்டிருப்பதாகவும் கூறுகின்றனர்" என்கிறாள். உடல் பலத்தின் மேன்மையால் ஆணவம் மேவி நிற்கும் வாலி, அவளது கூற்றை ஆய்ந்து உண்மையறிய நினைக்கவில்லை. மாறாக, தாரை தவறான செய்திகளைச் சொல்வதாக அவளைக் கடிகிறான். "இராமனை நீ யார் என்று நினைத்தாய்? சிற்றன்னை ஏவலைத் தலைமேற்கொண்டு தன் தம்பிக்கு அரசினை நல்கி வனம் வந்து வாழும் தருமத்தின் உருவம் இராமன்! அவனைப் போற்றுதல் அல்லவோ தகும் உனக்கு! அவனைப் பற்றிப் புன்மைச் சொற்கள் புகலலாமோ நீ!" என்கிறான்.

இவ்விடத்தில் அறிவும், மனமும் இரு வேறாகப் பிளவுபட்ட ஆளுமையுடைய வாலியை நாம் காண்கிறோம். இராமனுடைய தியாகத்தை வானளாவப் புகழும் வாலி, தன் தம்பிக்கு அரசுரிமையை விட்டுக் கொடுக்காதது மட்டுமல்ல; அவனை உயிர் வாழவே விடாமல் ஓட ஓடத் துரத்தினானே! ஏன்? தம்பியிடம் தான் மேற்கொள்ளும் அந்த அணுகுமுறை தவறு என்று சற்றேனும் அவன் சிந்தித்துப் பார்க்கவில்லையே ஏன்? மேலும் கூறுகிறான் "தம்பியர் அல்லாது தனக்கு வேறு உயிர் இவ்வுலகில் இல்லை என்று வாழும் அருளின் ஆழியானாகிய இராமன், நானும் என் தம்பியும் தொடுக்கும் போரில் இடையில் வருவானா என்ன?" என்கிறான். உடன் பிறந்தவரிடம் அன்பு பூண்டொழுகுதல் அருட்செயல் என்று தெரிந்து வைத்திருப்பவன், தன் உடன் பிறந்தவனின் உயிர் குடிக்க எண்ணியே இப்பொழுது போருக்குப் புறப்படுகிறானல்லவா! அது ஏன்? ஏன் என்றால் அவன் நா மட்டும்தான் அறம் பேசும். உடலோ விலங்குணர்ச்சியுடன்தான் செயல்படும். உள்ளமும் விலங்கு வாழ்க்கையையே விரும்பும். அறிவோ அதை நியாயப்படுத்தும். தான் பிறந்த இனத்தைத் தன்னுடைய கீழ்மையான வாழ்நெறிக்கு அரணாக அமைத்துக் கொண்டு வாழும் அறிவுசான்ற குற்றவாளி வாலி. அதனால்தான் மனுநீதி அறத்தையெல்லாம் இராமனுக்கு ஆக்கிவிட்டு, தான் சுக்ரீவனின் மனைவியை நச்சி வாழ்வது தன் குலத்துக்குத் தக்கதே என்று தர்க்கம் பேசுகிறான் வாலி!

ஆனால் விலங்குணர்ச்சியை அவன் உள்ளத்தில் மேவச் செய்திருந்த அவன் உடல் குருதி, உடலினின்றும் வெளிப்பட்டு நிலத்தில் விழ விழ, அவனுடைய

விலங்கியல்பு அவனை விட்டு மெல்ல மெல்ல நீங்குகிறது. 'ஊனினைச் சுருக்கி உள்ளொளி பெருக்கி' எனும் பாடல் வரியை ஈண்டு நினைவு கூரவேண்டும். சுக்ரீவன்பால் தான் கருணையற்று நடந்து கொண்ட முறையை இராமன் சுட்டிக் காட்டி அறிவு சான்ற முறையில் விளக்கும்பொழுது அவ்விளக்கத்தை ஏற்றுக் கொள்கிறான் வாலி. இராமனோடு உரையாடும் ஒவ்வொரு நிலையிலும் இராமனுடைய தீர்க்கமான அறிவாற்றலைச் சோதிப்பது போலவே தர்க்கம் புரிகிறான் வாலி. இராமனும் தக்க விடைகள் இறுக்கிறான். குறிப்பாக "கற்புநெறி குரங்கினத் திற்கில்லையென்றும், உணர்வின் வழி வாழ்வதே தன் குலத்துக்கு ஒத்தது" என்றும் கூறும் வாலிக்கு மறுப்புரை தரும் இராமன் பின்வரும் கருத்துகளைக் கூறுகிறான்:

"ஓர் உயிர் வாழும் வாழ்க்கை பொறிகளால் உந்தப்படுவது அல்ல. அறிவினால் வழிகாட்டப்படுவதே. உருவத்தில் விலங்காயினும், அற உள்ளத்தின் மேன்மையால் வீடு பேறு உற்ற விலங்குகளைப்பற்றி நீ அறிந்ததில்லையோ? பறவை இனத்தவனாயினும் சடாயு என்பவன் அறத்தின் வழி நின்றதால் வீடுபேறுற்றதையும் அறியாயோ நீ! அன்றி கஜேந்திரன் எனும் யானை முதலை வாய்ப்பட்டபோது 'ஆதிமூலத்தை' அழைத்த அறவழிப்பட்ட செய்கையால் வீடு பேறுற்றதையும் கூட அறியாயோ நீ! தக்கது தகாதது என்பதை அறிவினால் ஓர்ந்து, உள்ளத்தில் இருத்தி வாழவில்லையாயின் மக்களும் மாக்களே! இருத்தி வாழ்வாராயின் மாக்களும் மக்களே! எனவே குலமும் வடிவும் அல்ல. ஒருவரது வினையே அவரது மாட்சிக்கும், வீழ்ச்சிக்கும், மேன்மைக்கும் கீழ்மைக்கும் அடித்தளமாகும்; அளவுகோலுமாகும். மறை பயின்று நல்லறக் கருத்துகளையெல்லாம் அறிந்திருந்த நீயே, மனையின் மாட்சியை அழித்து அறத்துக்கு ஊறு செய்தாய். உன் புன் செயல் பொறுக்கக் கூடியதல்ல".

இவ்விடத்தில் தொல்காப்பியச் சூத்திரத்தைச் சான்று காட்டுதல் நலம்.

*"மாவும் மக்களும் ஐஅறிவினவே"*

*(பொருள் - மரபியல் - 25)*

பொருள்: விலங்கினங்கள் அனைத்தும், மனிதர்களில் விலங்குகளாய் இருப்போரும் ஐந்து அறிவுடையன.

(இராமன் ஆரம்பத்தில் வாலியை விலங்கு என்று கணித்தமைக்கு அரணாய் நிற்பது மேற் காணும் சூத்திரம்.)

அடுத்த தொல்காப்பியச் சூத்திரம்,

*"மக்கள் தாமே ஆறு அறிவுயிரே*
*பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே"*
*(தால் - மரபியல் - 26)*

இவற்றுக்குள்ள மரபியல் உரையில் பின்வருமாறு உணர்த்தப்பட்டுள்ளது.

"மாவும் மக்களும் ஐயறிவினவே" எனும் சூத்திரத்தின்கீழ் குரங்கை விலங்கினமென்று பொதுவாகக் கூறினர். ஆயினும் "மக்கள் தாமே ஆறறிவுயிரே" என்ற அடுத்த சூத்திரத்தின் கீழ் குரங்கு முதலிய விலங்கினுள் அறிவுடையன எனப்படும் மனவுணர்வுடையன உளவாயின் அவையும் ஈண்டு ஆறறிவுயிரில் அடங்கும்". (பிறகு அறிவின் மேன்மை பொலிய கருத்துக்களைக் கூறும் வாலியை இராமன் மனிதன் என்று கருதுவதற்கு அரணாக நிற்பது மேற்கூறப்பட்ட சூத்திரம்.)

எனவே பிறப்பால் மனிதர்களாயினும், பண்புகளால் கீழ்மையானோர் விலங்குகளே என்றும், பிறப்பால் விலங்குகளாயினும், பகுத்தறிவு கைவரப் பெற்றிருந்தால் அவை மனிதர்களே என்றும் இராமன் கூறும் கருத்துக்கு இலக்கண அரண் உள்ளது.

வாலி, விலங்கா அன்றி மானுடனா என்று கணிக்கயியலாமல் இராமன் மயங்கித் தடுமாறுவதுபோலவே, இராமன் குருவெனக் கொண்டாடிய விசுவாமித்திர முனிவரும், தாடகை ஆணா பெண்ணா என்று கணிக்க இயலாமல் மயங்குகிறார். இறுதியில் தாடகையை எத்தகைய உயிரினப் பிரிவில் சேர்த்தாலும், பெண் என்ற பிரிவில் மட்டும் சேர்க்கக்கூடாது என்ற முடிவுக்கு வருகிறார். தான் ஏற்கனவே சிந்தித்து எடுத்து வைத்திருந்த அந்த முடிவை இராமனிடத்தில் கூறுகிறார். பால காண்டத்தில் வரும் அந்நிகழ்ச்சி பின்வருமாறு:

விசுவாமித்திரருடைய வேள்வியைக் காப்பதற்காக இராம இலக்குவர் அவரோடு காடு நோக்கி நடக்கையில் நடுவில் ஒரு பாலை நிலத்தைக் காண்கின்றனர். ஒரு காலத்தில் சோலையாக இருந்து தாடகை எனும் அரக்கியால் (இராவணனின் பாட்டி) அழிக்கப்பட்டு பாலைவனமாக்கப்பட்டுள்ளது என்ற செய்தியை இராமனுக்குச் சொல்லும் விசுவாமித்திர முனிவர் தாடகையினுடைய குணாதிசயங்களைப் பற்றிக் கூறுகிறார். (வருணனை பார்க்க பக்கம் - 123) மேலும் கூறுகிறார்: "இராமா! ஒரு காலத்தில் பசுமை குலுங்கும் சோலையாக இருந்த இவ்விடத்தில் வாழ்ந்த அனைத்து உயிரினங்களையும் கருவறுத்துக் கொன்று, இந்நிலத்தைப் பாலைவனமாகவும்,

சுடுகாடாகவும் ஆக்கிய இவள், மானுடக் குலத்தினளா, விலங்கா, ஆணா, பெண்ணா என்று அறிய இயலாத மயக்கம் ஏற்படுவது உண்மைதான். ஆனால் ஒன்று மட்டும் உறுதி. தன் குருதியைப் பாலாக்கி அமுதூட்டிப் பிற உயிரினத்தைப் பேணி வளர்ப்பவளே பெண். இவளோ கண்களில் படும் உயிரினங்கள் அனைத்தையும் கருவறுத்துக் குருதி குடிப்பவள் ஆதலால், எந்தப் பிரிவில் இவளைச் சேர்த்தாலும் பெண் என்னும் பிரிவில் மட்டும் சேர்க்க இயலாது" என்கிறார். காப்பியப் பாடல் பின்வருமாறு:

*" 'தீதென்று உள்ளவை யாவையும் செய்த எமைக்*
*கோதென்று உண்டிலள்: இத்தனையே குறை;*
*யாதென்று எண் வது? இக்கொடியாளையும்*
*மாதென்று எண்ணுவதோ? - மணிப் பூணினாய்! "*
*(பால - தாடகை வதை - 38)*

*"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்*
*தெய்வத்துள் வைக்கப் படும்" - (குறள் - 50)*

என்கிறது வள்ளுவம். வாழ்வாங்கு வாழ்பவனை அறிவது எப்படி? பெருமைக்குரியவனாக வாழ்பவனே வாழ்வாங்கு வாழ்பவன். பெருமைக்குரியவன் என்பதற்கு அளவுகோல் என்ன? ஒருவனுடைய செயலே (கருமமே) அளவுகோல் என்கிறது வள்ளுவம்.

*"பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் - தத்தம்*
*கருமமே கட்டளைக் கல்" - (குறள் - 505)*

ஆக, புறத்தோற்றம் மட்டும் ஒருவருடைய இனத்தை அறிய உதவாது என்பது அறிஞர் உலகம் ஒப்புக் கொண்டுள்ள உண்மை.

இத்தகைய நோக்கில், வாலி மானுட அறிவோடு தர்க்கம் புரிந்தாலும், பண்பற்ற செயல்களால் அவன் விலங்கே ஆகிறான். ஆகவே இராமன் வில்லிறுத்து வீழ்த்தியது விலங்கு வாலியையே என்பதில் ஐயமில்லை.

எனவே வாலி விலங்கா அன்றி மனிதனா என்பது குறித்து இராமனுக்கு ஏற்பட்ட குழப்பமும் சரியானதுதான். அதற்கு அவன் தெளிவு கண்ட விதமும் சரியானதுதான்.

⌘ ⌘ ⌘

# தெய்வம் ஆகிய இராமன்

இதுகாறும் இராமனோடு சரிக்குச் சமானமாக வாதமும், எதிர்வாதமும் புரிந்த வாலி, இராமனுடைய இத்தகைய விளக்கத்தைக் கேட்டு ஆழ்ந்து சிந்தித்தான் என்கிறான் கம்பன். வாலியின் அந்த நிலையை 'அமையக் கேட்ட' என்ற சொல்லால் குறிக்கிறான் கம்பன். சிந்தித்து உண்மையை ஓர்தல் என்ற பொருளில் 'அமைய' என்ற சொல்லைப் பல இடங்களில் ஆள்கிறான் கம்பன்.

*"அவ்வுரை அமையக் கேட்ட அரிக்குலத்து அரசும்"*

*(கிட்கிந்தா – வாலி வதை – 124)*

என்பது பாடல் வரி.

அரிக்குலத்து அரசன் வாலி என்ன உண்மையை அறிந்தான்? தன்னிடம் பிளவுபட்ட ஆளுமை (அதாவது சொல் ஒன்று, செயல் ஒன்றாக வாழ்தல்; அறிவால் அறம் பேசி உடலால் விலங்கு போல் வாழ்தல்) உள்ளது என்ற உண்மையைத்தான் அறிந்தான். அந்த உண்மையை அப்பொழுதுதான் அறிந்தானா? இருக்க முடியாது. நான்மறைகளைக் கசடறக் கற்ற கூர்த்த மதியுடைய வாலி – இராமனிடம் ஆயிரம் நீதிகள் பேசும் அறிவுசான்ற வாலி – மரணத் தறுவாயிலும் தர்க்கம் புரிந்து இராமனைப் பேச்சிழக்க வைக்கும் வல்லமை கொண்ட வாலி – தன்னைப் பற்றி அறியாமலா இருந்தான்? நறவம் அருந்திவிட்டால் சுக்ரீவன் புத்தியை அடியோடு விட்டு விடுவான் என்று சரியாகக் கணிக்கும் வாலி – அனுமன் அறிவும் ஆற்றலும் உடைய நம்பிக்கைக்குரிய நண்பன் என்று சரியாகக் கணிக்கும் வாலி – வானரர் துணையின்றிச் சீதையைச் சிறை மீட்க இயலாது என்ற உண்மையை உணர்ந்து பேசும் வாலி – தன்னைப் பற்றியும் சுயவிமர்சனம் செய்திருக்கமாட்டானா? எல்லாம் அறிந்தவன்தான் வாலி. தன்னுடைய தோள் வலிமை, வரபலம், அரசன் என்ற ஆணவம், வரம்பில்லாத சீற்றப் பண்பு இவற்றால் மற்றவர்களை மருட்டியும் தெருட்டியும் தன்னுடைய சுயநல நோக்கங்களைப் பூர்த்தி செய்து கொள்ளும் தன் இயல்பு பற்றி அறிந்தவனே வாலி. நான்மறை காட்டிய அறவழிகளைப் பற்றி

அறிந்திருந்தும், அவற்றை ஏட்டுச் சுரைக்காய் என்று அலட்சியப்படுத்தி விட்டுப் புலனின்ப வாழ்க்கையை நச்சி வாழ்ந்தவன் வாலி.

இராமனிடம்

*" 'வாலியைப் படுத்தாய் அலை; மன் அற*
*வேலியைப் படுத்தாய்' ......................."*
*(கிட்கிந்தா - வாலி வதை - 97)*

என்று கூறும்பொழுது தன்னைத் தருமத்தின் காவலன் என்கிறான்.

ஆனால் சுக்ரீவனின் மனைவியை நச்சி வாழ்வது தன் குல ஒழுக்கம் என்கிறான்.

*" 'மணமும் இல்லை, மறை நெறி வந்தன;*
*குணமும் இல்லை, குல முதற்கு ஒத்தன; -*
*உணர்வு சென்றுழிச் செல்லும் ஒழுக்கு - "*
*(கிட்கிந்தா - வாலி வதை - 113 )*

ஆக, பிறர் தவற்றைச் சுட்டிக் காட்டுவதற்குப் பகுத்தறிவையும், தன் குற்றத்தை மறைப்பதற்குக் குலத்தையும் பயன்படுத்தும் வாலியின் இரு வேறுபட்ட மனநிலைகளைக் கற்போர் உணர்தல் வேண்டும்.

ஆழ்மனத்தில் இந்தக் குற்றத்தை வாலி உணர்ந்திருந்தாலும், மேலோட்டத்தில் ஆணவத்தோடு வாழ்கிறான். ஆனால் இராமன் காரண காரியங்களோடு தன் குற்றத்தை எடுத்துரைக்கும்பொழுது, தன்னை இராகவன் சரியாகவே கணித்து விட்டான் என்பதை வாலி ஏற்றுக் கொள்கிறான். அல்லது தன்னுடைய குணக்குறை என்னவென்று வாலிக்கு அப்பொழுது உறுதியாகப் புரிந்துவிட்டது என்று வேண்டுமானாலும் கொள்ளலாம். எனவே முன்னரே குறிப்பிட்டதுபோல அறிவுசான்ற குற்றவாளி வாலி. அடுத்து, இராமன், அபய வாக்கைக் காக்கும் பேரறத்துக்காக வேண்டி வில்லறம் துறக்கச் சித்தமானான் என்பதை இலக்குவன் கூறக் கேட்கும்பொழுது, இராமன் பால் வாலிக்கு எல்லையில்லாத மதிப்பு ஏற்பட்டுவிடுகிறது. சொல்லொன்றும், செயலொன்றுமாக வாழ்ந்த தான் எங்கே? சொல்லைக் காப்பாற்றுவதற்காகப் பழியும் பூணத் துணிந்த இராமன் எங்கே? என்று தன்னை இராமனோடு ஒப்பிட்டுப் பார்த்து நாணுகிறான்! மேலும் இடர் சூழ்ந்த வாழ்க்கை நிலையிலும் அறத்தைப் பற்றி நிற்கும் இராமனின் கொள்கைப் பிடிப்பு அவனை

ஈர்க்கிறது. ஆனால் அற வாழ்க்கையைத் தெரிந்தே புறந்தள்ளிய தன் மேல் அவனுக்கு வெறுப்பு ஏற்படுகிறது. உடனே அவனுடைய சினமும் மனமும் அடங்கிவிடுகின்றன. இதை உணர்த்தவே, கம்பன், இலக்குவன் கூறிய கட்டுரையைக் கருத்தில் ஏற்ற வாலியை **'அவியுறு மனத்தன்'** (கொந்தளிப்பு அடங்கிய மனத்தன்) என்று குறிக்கிறான்.

மேலும் இராமன் மறைந்திருந்து அம்பு எய்தியது தன்னுடைய நட்பைத் தவிர்க்கவே என்று கூறிய காரணத்தை எந்த எதிர்வாதமுமின்றி வாலி ஏற்றுக் கொண்டதிலிருந்தே, இராமனை நேரில் கண்டிருந்தால் வாலி நட்பு பாராட்டியிருப்பான் என்பது உண்மையாகிறது. எனவே இராமனுடைய கணிப்பும் சரியே என்றாகிறது. பேரரசனாகிய தன்னை விடுத்து, தன்னை அஞ்சி வாழும் சுக்ரீவனுடைய நட்பையே இராமன் பெரிதாக மதித்தது வாலியை நாணம் கொள்ளச் செய்கிறது. புலனின்ப வாழ்க்கையைத் துறந்த இராமனின் பெருமையும், அதை நச்சி வாழ்ந்த தன்னுடைய விலங்கு குணப் புன்மையும் வாலிக்குப் புரிகிறது. எனவே அடுத்தடுத்து தன்னை விலங்குகளோடு ஒப்பிட்டே வாலி பேசுகிறான்.

*"நாய் என நின்ற எம்பால் நவையற உணரலாமே?"*
*(கிட்கிந்தா - வாலி வதை - 127)*

*"குரங்கு எனக் கருதி, நாயேன் கூறிய மனத்துள் கொள்ளேல்;"*
*(கிட்கிந்தா - வாலி வதை - 128)*

*"சிற்றினக் குரங்கினோடும் தெரி உறச் செய்த செய்கை"*
*(கிட்கிந்தா - வாலி வதை - 133)*

*"............... குரக்கு இயல் தொழிலும் காட்டப்*
*பெற்றிலென்.................................."*
*(கிட்கிந்தா - வாலி வதை - 136)*

தன்னைப் பற்றிய சரியான உண்மையை அறிந்த அக்கணம் முதல் வாலி சிறியன சிந்தியாதவனானான் என்கிறான் கம்பன். சில கணங்களுக்கு முன்பு வரை வாழ்வில் சிறிய அளவே முக்கியத்துவம் பெறவேண்டிய அரசுரிமை, ஆணவம், அகங்காரம், புலனின்பத்தை மையமாகக் கொண்ட உணர்வு வழி வாழ்க்கை என்றெல்லாம் பேசிய வாலி, அத்தனையையும் ஓர் இமைப் பொழுதில் தன் சிந்தையினின்றும் நீக்கினான். மெய்யுணர்வு பெற்றவனாய், தான் செய்த தவறுகளையெல்லாம் பொறுத்தருள வேண்டுமென்று இராமனை இறைஞ்சுகிறான்.

தவற்றை ஒப்புக் கொண்டு பொறுத்தருள இறைஞ்சும் மனம் தெய்வ மனம். அம்மனத்தில் இனி சிறிய கருத்துக்களுக்கு இடமில்லை. எனவே வாலி சிறியன சிந்தியாத பெரியவனாகிவிட்டான்!

*" 'தாய் என உயிர்க்கு நல்கி, தருமமும், தகவும், சால்பும்,*
*நீ என நின்ற நம்பி! நெறியினின் நோக்கும் நேர்மை*
*நாய் என நின்ற, எம்பால், நவை அற உணரலாமே?*
*தீயன பொறுத்தி' என்றான் - சிறியன சிந்தியாதான்"*
*(கிட்கிந்தா - வாலி வதை - 127)*

உதாரணமாக, சில கணங்களுக்கு முன்பு வரை குறையொன்றுமில்லாத தன்னைக் கொன்று விட முடிவெடுத்த இராமனை இரக்கமில்லாதவன் என்று இகழ்கிறான்

*" 'இரக்கம் எங்கு உகுத்தாய்? என்பால் எப்பிழை கண்டாய்?' "*
*(கிட்கிந்தா - வாலி வதை - 87)*

*" 'ஈரம் இன்றி இது என் செய்தவாறு' "*
*(கிட்கிந்தா - வாலி வதை - 92)*

*" 'வரிசிலை குழைய வாங்கி, வாய் அம்பு மருமத்து எய்தல் தருமமோ?' "*
*(கிட்கிந்தா - வாலி வதை - 91)*

*" 'எண்ணுற்றாய்? என் செய்தாய்?' "*
*(கிட்கிந்தா - வாலி வதை - 83)*

...................... இவ்வாறெல்லாம் இராமனை இகழ்ச்சியுடன் கேள்விகள் கேட்கும் வாலி, தன்னுடைய பிழையை இராமன் சுட்டிக் காட்டிய பின் அதனை ஏற்றுக் கொண்டு,

"அறத்திறன் அழியச் செய்யான் புவியுடை அண்ணல்" (அதாவது சான்றோன்) என்று இராமனைப் போற்றுகிறான்.

எண்ணிலடங்காத தீமையை பிறர்க்குத் தான் செய்திருந்தும் அவற்றைப் பொறுத்து இராமன் தனக்கு அருளிச் செய்தான் என்ற பொருள்பட பின்வருமாறு கூறுகிறான்.

*'கைதவம் இயற்றி, யாண்டும் கழிப்ப அருங் கணக்கு இல் தீமை*
*வைகலும் புரிந்துளாரும், வான் உயர் நிலையை, வள்ளல்*
*எய்தவர் பெறுவர் ..........'*

*(கிட்கிந்தை – வாலிவதம் – 141)*

இராமனுடைய வில்லறம் பிழைத்தது என்று பின் வரும் வகையில் சில கணங்களுக்கு முன் பகடி செய்தான் வாலி.

*" '............... தன் கையில்*
*பார வெஞ்சிலை வீரம் பழுதுற*
*நேரும் அன்று, மறைந்து, நிராயுதன்*
*மார்பின் எய்யவோ, வில் இகல் வல்லதே?' "*

*(கிட்கிந்தா – வாலி வதை – 98)*

என்று இராமனின் வில் சரத்துக்குப் பழியைப் பூசும் வாலி, அறிவில் தெளிவு வந்தவுடன் அதே சரம் தனக்கு மெய்யறிவைத் தந்து விட்டதாகப் பேசுகிறான்.

*" 'புரம் எலாம் எரி செய்தோன் முதலினோர் பொரு இலா*
*வரம் எலாம் உருவி, என் வசை இலா வலிமை சால்*
*உரம் எலாம் உருவி, என் உயிர் எலாம் நுகரும் நின்*
*சரம் அலால், பிறிது வேறு உளது அரோ, தருமமே?' "*

*(கிட்கிந்தா – வாலி வதை – 130)*

என்று இப்பொழுது இராம பாணத்தின் புகழைப் பாடுகிறான்.

மேலும்,

*" 'அரந்தை வெம்பிறவி நோய்க்கும் அருமருந்து அனைய ஐயா!*
*வரந்தரும் வள்ளால்........................................................................"*

*(கிட்கிந்தா – வாலி வதை – 128)*

என்று விளிக்கிறான். தன் மெய்யுணர்வையும் நல்லறிவையும் இதுகாறும் மறைத்திருந்த தன் விலங்கின் இயல்பை ஒரு அம்பின் மூலம் மாற்றிவிட்ட அதிசயத்தைப் புரிந்தவன் இராமன் என்பதோடு, சாகும் தறுவாயில் தான் விலங்கியல்போடு சாகாமல் மெய்யறிவு பெற வைத்தும் அருள் புரிந்து விட்டான்

என்பதால் இராமனை 'வள்ளல்' என்று போற்றுகிறான்; பரம்பொருளின் அம்சமாகக் கண்டு பரவுகிறான்.

*" 'ஏவு கூர் வாளியால் எய்து, நாய் அடியனேன்*
*ஆவிபோம் வேலைவாய், அறிவு தந்து அருளினாய்,*
*மூவா நீ! முதல்வன் நீ! முற்றும் நீ! மற்றும் நீ!*
*பாவம் நீ! தருமம் நீ! பகையும் நீ! உறவும் நீ!' "*
*(கிட்கிந்தா – வாலி வதை – 129)*

*" 'யாவரும் எவையும் ஆய், இருதுவும் பயனும் ஆய்,*
*பூவும் நல் நெறியும் ஒத்து; ஒருவ அரும் பொதுமையாய்*
*ஆவ நீ ஆவது' என்று அறிவினார் அருளினார்;*
*தா அரும்பதம் எனக்கு அருமையோ? தனிமையோய்!'*
*(கிட்கிந்தா – வாலி வதை – 131)*

*" 'உண்டு எனும் தருமமே உருவமா உடைய நின்*
*கண்டு கொண்டேன்; இனிக் காண என் கடவெனோ?*
*பண்டொடு இன்று அளவுமே என்பெரும் பழவினைத்*
*தண்டமே; அடியனேற்கு உறு பதம் தருவதே!' "*
*(கிட்கிந்தா – வாலி வதை – 132)*

பரம்பொருளைக் கண்டு கொண்டதுடன் மட்டுமன்றி இராமனை நெகிழ்விக்கும் கருத்துகளையும் கூறுகிறான். தம்பி சுக்ரீவனைப் பகைவனாக நடத்தியதைக் கண்டித்தானல்லவா இராமன்! இப்பொழுது பகைவனுக்கும், அருளும் நன்னெஞ்சம் படைத்தவனாகத் தம்பி சுக்ரீவனைப் பாராட்டுகிறான்.

" 'மற்று இனி உதவி உண்டோ? – வானினும் உயர்ந்த மானக்
கொற்றவ! – நின்னை, என்னைக் கொல்லிய கொணர்ந்து, தொல்லைச்
சிற்றினக் குரங்கினோடும் தெரிவு உறச் செய்த செய்கை
வெற்று அரசு எய்தி, எம்பி, வீட்டு அரசு எனக்கு விட்டான்' "
(கிட்கிந்தா – வாலி வதை – 133)

பொருள்: "இராம! உன்னைக் கொண்டு வந்து என்னைக் கொல்ல வைத்துச் சிற்றினக் குரங்கனாய் வெற்றரசை விரும்பி வாழ்ந்த என்னிடமிருந்து வெற்றரசைத் தான் பெற்று, வீடு பேறு எனும், பேரரசை எனக்கு நல்கிய நல்லவன் என் தம்பி", என்கிறான் வாலி.

இதற்கடுத்து வாலி கூறும் சொற்களெல்லாம் அவனைத் தெய்வ நிலைக்கு உயர்த்துகின்றன. இராமனிடம் கூறுகிறான்,

"ஐயனே! என் தம்பி பூவியல் நறவம் மாந்தி விட்டால் புத்தி கெட்டுப் போய்விடுவான்! தீயவனாக நடந்து கொள்வான். அப்பொழுது, நீ, சினங்கொண்டு, என் மேல் ஏவியது போல் ஒரு பகழியை அவன் மேல் ஏவி அவனைக் கொன்றுவிடாதே! இன்னொரு விதத்திலும் நீ என் பொருட்டு என் தம்பியின்மேல் கருணை காட்ட வேண்டும். உன் மேல் உயிரையே வைத்து வாழும் உன் தம்பியர் எவரேனும் "தன் முன்னவனைக் கொல்வித்தான் சுக்ரீவன்" என்று இகழ்வரேல் (இலக்குவன் இவ்வாறு முன்னரே சுக்ரீவனை இகழ்ந்துவிட்டான்). அந்த நிகழ்ச்சியினின்றும் நீ இவனைக் காக்க வேண்டும். "இவன் குறை முடிப்பேன்" என்று வாக்கு கொடுத்தாயல்லவா? என்னைக் கொன்றதோடு அந்த வாக்கு முற்றுப்பெறவில்லை. இனியும் அந்த வாக்கு செயல்பட வேண்டும். இனி எந்நாளும் நீ அவனைக் காக்க வேண்டும். ஐய! வினையாற்றலில் அனுமன் உன் செங்கையின் கோதண்டமே போன்றவன். உற்றது செய்வதில் இவனை விட உற்ற துணைவன் வேறு ஒருவன் இல்லை. அவனைக் கைக்கொள். என் தம்பி இனி உன் தம்பியாவான். அவனுடைய இனிய துணையோடு உன் வனிதையைத் தேடி அடைந்துகொள்".

.......... வாலியின் ஆளுமையில் வெளிப்படும் இத்தகைய தெய்வாம்சம் இராமனைத் திகைப்பில் ஆழ்த்துகிறது.

அடுத்தடுத்து வாலி இராமனுக்குத் தரும் ஆச்சரியங்களுக்கு அளவே இல்லை என்றாகிறது. இன்னா செய்தார்க்கும் இனியவையே செய்பவனாய், தனக்குக் கூற்றுவனாக வந்த தம்பியை அழைத்துத் தழுவி, இராமனின் தெய்வாம்சத்தைச் சுக்ரீவனும் உணர்ந்து நடந்து கொள்ள வேண்டும் என்று அறிவுறுத்துகிறான் வாலி. அதனைக் கண்ணுற்று இராமன் மேலும் திகைப்புக்குள்ளாகிறான்.

*" 'மறைகளும், முனிவர் யாரும், மலர்மிசை அயனும், மற்றைத்*
*துறைகளின் முடிவும், சொல்லும் துணி பொருள், துணி வில் தூக்கி*
*அறை கழல் இராமன் ஆகி, அறநெறி நிறுத்த வந்தது;*
*இறை ஒரு சங்கை இன்றி எண்ணுதி ..................."*

*(கிட்கிந்தா – வாலி வதை – 139)*

*" 'நிற்கின்ற செல்வம் வேண்டி நெறி நின்ற பொருள்கள் எல்லாம்*
*கற்கின்றது இவன் தன் நாமம்; கருதுவது இவனைக் கண்டாய்?"*

*(கிட்கிந்தா – வாலி வதை – 140)*

*"திருமறு மார்பன் ஏவல் சென்னியில் சேர்த்தி சிந்தை*
*ஒருமையின் நிறுவி, மும்மை உலகினும் உயர்தி அன்றே"*
*(கிட்கிந்தா - வாலி வதை - 142)*

இவ்வாறு இராமனின் தெய்வ நிலையைப் போற்றிப் புகழ்கிறான் வாலி.

அடுத்து, சுக்ரீவனின் குணக் குறைகள் அனைத்தையும் அறிந்தவனாக, வாலி அவனுக்கு அறிவுரைகள் கூறுகின்றான். "செய்ந்நன்றி மறந்துவிடாதே. இராமன் பணித்த ஏவலைச் செய், சிறந்த மன்னர் குலத்துதித்த இராமன் குற்றம் பொறுப்பான் என்று எண்ணி உன் குரங்கினப் புத்தியால் தவறு செய்து விடாதே" என்றும் கூறுகிறான்.

*" 'மத இயல் குரங்குச் செய்கை மயர்வொடு மாற்றி, வள்ளல்*
*உதவியை உன்னி, ஆவி உற்றிடத்து உதவுகிற்றி,*
*பதவியை எவர்க்கும் நல்கும் பண்ணவன் பணித்த யாவும்*
*சிதைவு இல செய்து, நொய்தின் தீர்வு அரும் பிறவி தீர்தி "*
*(கிட்கிந்தா - வாலி வதை - 143)*

*" 'அரசியல் பாரம் பூரித்து அயர்ந்தனை இகழாது, ஐயன்*
*மரை மலர்ப் பாதம் நீங்கா வாழுதி; மன்னர் என்பார்*
*எரி எனற்கு உரியார் என்றே எண்ணுதி; எண்ணம் யாவும்*
*புரிதி! 'சிற்றடிமை குற்றம் பொறுப்பர்' என்று எண்ண வேண்டா' "*
*(கிட்கிந்தா - வாலி வதை - 144)*

(இத்தகைய அறிவுரைகள் சுக்ரீவனுக்கு அவசியமே. வாலி, சுக்ரீவன் எத்தகைய குற்றங்கள் செய்யக்கூடாது என்று அறிவுறுத்துகிறானோ அத்தனை குற்றங்களையும் பிற்காலத்தில் செய்து இராமனின் சீற்றத்துக்கு ஆளாகிறான் சுக்ரீவன். சுக்ரீவனின் குணக் குறைகளை அறிந்து அறிவுறுத்தும் வாலியின் அருள் மனம் போற்றுதற்குரியது).

அத்துடன் "சுக்ரீவனுக்கு நீ கொடுத்த அடைக்கலம் முடிந்துவிட்டதாக எண்ணிவிடாதே! இனியும் கூட சுக்ரீவன் உன்னுடைய அடைக்கலப் பொருளே" என்று கூறி மீண்டும் தன் தம்பியை இராமனிடம் அடைக்கலப் படுத்துகிறான்.

அடுத்து, தன் மகன் அங்கதனை அழைக்கிறான். சுக்ரீவனோடு அரசுரிமைப் போர் இனி வரலாகாது என்ற எண்ணத்துடனும், தன்னைக் கொன்ற இராமனிடம் அங்கதன் பகைமை பாராட்டிவிடக் கூடாது என்ற முன்னெச்சரிக்கை உணர்வுடனும்,

வாலி அங்கதனிடம் பேசுகிறான். தன்னைக் கண்டு புலம்பும் புதல்வனிடம், "நாயகன் இராமன் எனக்குச் செய்த நல்வினைப் பயன் இது! ஆதலால் நீ வருந்த வேண்டாம். என்னுடைய தவத்தால் இராமன் கையால் இறப்பை அடையும் பேறு பெற்றேன். தானே என்னைத் தேடி வந்து வீடு பேறளித்த பெரியவன் இராமன். 'மால் தரும் பிறவி நோய்க்கு மருந்து' என்றும், 'மேல் ஒரு பொருளும் இல்லா மெய்ப்பொருள் இவன்' என்றும் நீ இராமனை வணங்கி வாழ்க! என் உயிர்க்கு இறுதி செய்தான் என்று இராமனை எண்ணிவிடாதே! தருமம் நோக்கி மன்னுயிர்க்கு உறுதி செய்யும் மலரடிப் பெரியோன் இராமன்! அவனை வாழ்த்தி வணங்கி உன் உயிர்க்கும் உறுதி தேடிக் கொள்" என்று கூறுகிறான். பிறகு தன் மகனை இராமனிடத்துக் கையடையாகவும் கொடுக்கிறான்.

கற்போர் மனத்தை நெகிழ்வித்துக் கண்களில் கண்ணீரை வரவழைக்கும் வண்ணம் வாலி தன் மரணத் தறுவாயில் ஆற்றும் உரைகளெல்லாம் அமைந்துள்ளன. இத்தனை அருங்குணங்களையும், மெய்யுணர்வு நிலையையும் இதுகாறும் எங்கே மறைத்து வைத்திருந்தான் வாலி? இராமன் திகைக்கிறான்! இராமனோடு சேர்ந்து நாமும் திகைக்கிறோம்! உண்மையிலேயே வாலியின் ஆளுமை ஒரு புரியாத புதிராகவே தோன்றுகிறது. வாலி குரங்கா? அன்றி மனிதனா? அன்றி தெய்வமா? இந்தக் கேள்விகளுக்குப் பதில் அவன் அனைத்துமே என்பதுதான்! விலங்காக இருந்து, மனிதனாக மேம்பட்டுப் பின் தெய்வமாக உயர்கிறான் என்பதுதான் விடை!

**வாலி, அறநாட்டமில்லாத புலனுகர்ச்சி வாழ்க்கையில் விலங்காக இருந்தான். அறிவு சான்ற தர்க்க வாதத்தில் மனிதனாக இருந்தான். இன்னா செய்தார்க்கும் இனியன செய்யும் அருங்குணப் பண்பினாலும், மெய்யறிவு நாட்டத்தாலும் தெய்வமாக உயர்ந்தான். விலங்காக அவன் நடந்து கொள்ளும் பொழுது நாம் வெறுக்கிறோம்; மனிதனாகப் பகுத்தறிவு பேசும்போது அவனை வியக்கிறோம்; தெய்வாம்சப் பண்புகளைக் காணும்பொழுது அவனைப் போற்றுகிறோம். இராமனும் அதையே செய்தான். விலங்கை வீழ்த்தினான்; அறிவு சான்ற கேள்விகளுக்கு அறம் சான்ற பதில்களைத் தந்தான்; தெய்வீகப் பண்புகளைக் கண்டு மனம் நெக்குருகின்றான். இதில் இராமன் எவ்விடத்தில் தவறு செய்தான்? வாலி இராமனை,**

*"பொய் உடை உள்ளத்தார்க்குப் புலப்படாப் புலவ"*

*(கிட்கிந்தா - வாலி வதை - 158)*

என்று விளிக்கிறான். தன்னுடைய உள்ளத்தில் பொய் வாழ்க்கையில் விருப்பம் இருந்தவரையில் இராமனின் மேன்மை தனக்குப் புலப்படாமல் போயிற்றே என்ற கருத்தை உணர்ந்தவனாக அச்சொற்றொடரைப் பயன்படுத்துகிறான் வாலி. ஓராதார் உள்ளத்து ஒளிக்கும் ஒளியானே என்று பரம் பொருளைச் சுட்டுகிறார் மாணிக்கவாசகர். இப்படிப் பொய் இல்லா உள்ளத்தவனாகவும், பகைவர்க்கு அருளும் நெஞ்சத்த வனாகவும் உள்ள வாலியைக் கண்ட பிறகு இராமன் அவன் பால் அன்பும் அருளும் மேவியவனாகிறான். வாலியின் பால் தனக்கு ஏற்பட்டுவிட்ட மனமாற்றத்தை வெளிப் படுத்தும் முகத்தான், அண்ணலும், அங்கதனைக் கையடையாகப் பெற்றுத் தன் உடை வாளை அவன் கையில் கொடுத்த பிறகு, "நடந்துவிட்ட நிகழ்ச்சிகள் அனைத்தையும் நீ பொறுத்துக் கொள்ள வேண்டும்" என்று அங்கதனிடம் கூறுகிறான் இராமன். சில கணங்களுக்கு முன்னர் வாலி இராமனிடம், 'நான் செய்த தீயன பொறுத்தி' என்றான். இப்பொழுது இராமன் அதே சொற்களை அங்கதனிடம் கூறுகிறான். இதில் தவறு செய்தவர் யார் என்று அறியாமல் மயங்குகிறோம் நாம்! இந்த மயக்கம்தான் வாழ்க்கை! அந்த வாழ்க்கையோ விதியின் மாயம்! எல்லோரும் சூழ்நிலைகளின் கைதிகளே என்ற அறிவுத் தெளிவு பெறுகிறோம்!

இராமன் தன்னைத் தானே கணிப்புச் செய்து தன் நிறை குறைகளை நடுவு நின்று ஆய்ந்து செயலாற்றும் தன்மையவன். தாயின் ஆணைப்படி வனம் ஏகிய நிகழ்ச்சியைப் பற்றி முந்தைய அத்தியாயத்தில் அறிந்தோம். தன் தவற்றுக்குத் தானே கழுவாய் தேடிக் கொள்ளவே, பரதன் அளித்த அரசுரிமையை ஏற்ற பின்பும் அயோத்தி செல்லாமல் பதினான்காண்டுகள் வனத்தில் வாழும் வாழ்க்கையைத் தேர்ந்தெடுத்தான் என்று கண்டோம். வாலியின் "என்னை ஏன் மறைந்திருந்து கொன்றாய்?" என்ற கேள்வியில் நியாயம் இருப்பதை உணர்ந்த தருணத்தில் மௌனமே பதிலாகப் பழி தாங்கியவனாக நின்றான் இராமன்! இப்பொழுது தெய்வ வாலியைத் தரிசித்தவுடன், "உன் தந்தைக்கு இந்த நிலை ஏற்படுத்திவிட்ட என் தவறுகளைப் பொறுத்துக் கொள்ள வேண்டும்" என்று சிறியவன் என்றும் பாராமல் அங்கதனிடம் இரங்கிக் கூறும் இராமனின் சான்றாண்மைப் பண்பு மேன்மையினும் மேன்மையுடையது! அதனால் கம்பன் இவ்விடத்தில்,

*"பொன் உடை வாளை நீட்டி 'நீ இது பொறுத்தி என்றான்;*
*என்னலும் உலகம் ஏழும் ஏத்தின; ................"*

*(கிட்கிந்தா - வாலி வதை - 159)*

என்று கூறுகிறான். வாலியை மறைந்திருந்து வதைத்த இராமனிடம் குற்றம் எதுவும் காணாமல் ஏழுலகும் ஏத்திப் போற்றின என்று இங்கு கம்பன் கூறுவதைக் காண்க. காரணம் என்ன? வாலியின் உயிருக்குக் கூற்றுவனாக இருந்த தனக்கு இனி மெய்க்காப்பாளன் அங்கதனே என்ற கருத்தில்தான் தன் உடை வாளை அவனிடத்தில் தருகிறான். அங்கதன் விரும்பினால் இராமனுடைய உயிருக்கு உறுதி தருபவனாக இருக்கலாம். அன்றேல் இராமனுடைய உயிரைக் கூற்றுவனுக்கு இரையாக்கவும் செய்யலாம் என்பதே அதன் பொருள். உயிருக்கு உயிர்விலையென்றால் அதைக் கொடுக்கவும் தயங்காத அறச் செல்வனாக நடந்து கொள்ளும் இராமனின் அரும்பெரும் பண்பைக் கண்டுதான் உலகம் ஏழும் அவனை ஏத்தின என்கிறான் கம்பன்! மேலும் தான் வாலிக்குச் செய்த தீமையை நினைந்து அதற்குக் கழுவாய் தேடிக் கொள்ளவும் செய்கிறான் இராமன். பிற்காலத்தில் சுக்ரீவனுக்குக் கிட்கிந்தை அரசை உடைமையாக்கிய பின், அவனை அரசாளப் பணித்து விட்டு அவனிடம் கூறுகிறான்.

*"இல்லறம் துறந்திலாதோர் இயற்கையை இழந்தும், போரின்*
*வில்லறம் துறந்தும், வாழ்வேற்கு, இன்னன மேன்மை இல்லாச்*
*சில் அறம்; புரிந்து நின்ற தீமைகள் தீருமாறு,*
*நல் அறம் தொடர்ந்த நோன்பின், நவை அற நோற்பல் நாளும்"*

*(கிட்கிந்தா - அரசியல் - 23)*

இங்கு வில்லறம் துறந்தது என்பது வாலியை மறைந்திருந்து கொன்றதையே இராமன் குறிப்பிடுவதாகிறது. மேலும் வாலியின்பால் தான் பகைமை பாராட்டியதில் தனக்கு இருந்த சுயநல நோக்கையும் இராமன் மறக்கவில்லை. சுக்ரீவனுடைய நட்பைத் தக்க வைத்துக் கொண்டு சீதையை மீட்கவும், வாலியைக் கொன்று இராவணனைத் தெருட்டவும், வாலி வத நிகழ்ச்சியில், இவ்வாறாக தன் சுயநல நோக்கத்தையும் தான் கலந்துவிட்டதை இங்கே குறிப்பிடுகிறான் இராமன் என்றும் கொள்ளலாம். அதற்குக் கழுவாயாகத் தான் சில நோன்புகள் நோற்க வேண்டும் என்கிறான். மேலும் பிறிதொரு சமயத்தில் அங்கதனிடம் வாலியின் அரசாட்சியைப் பற்றிக் குறிப்பிடும்பொழுது,

*'நிரம்பினான் ஒருவன் காத்த நிறை அரசு'*

*(கிட்கிந்தா - அரசியல் - 29)*

என்கிறான். அதாவது, குறையில்லாத நிறை அரசு காத்தவன் வாலி என்று அவனைப் புகழ்கின்றான். ஆக, வாலியைக் கொன்ற பொழுது இராமனுக்கு அவன் மனதுக்கே தெரிந்த அவன் பக்கத்து நியாயங்கள் நிறைய இருந்தபோதும், வாலி தன் மரணத் தறுவாயில் வெளிப்படுத்திய அரும்பண்புகளால், வாலியின் பக்கத்து நியாயம் என்னவென்று அறியாமல் ஒரு பக்கச் சார்பாகத் தான் நடந்து கொண்டு விட்டோம் என்ற குற்றவுணர்வு இராமனுக்கு உள்ளது. அதைத் தன்னால் பாதிக்கப்பட்டவரிடமே வெளிப்படுத்தித் தன்னைப் பொறுக்குமாறு வேண்டுவது ஆன்மீக நோக்கில் தெய்வாம்சம் பொருந்திய மிகப்பெரிய பண்பு ஆதலால், குற்றம் இழைத்திருந்தாலும் இராமன் குற்றத்தை உணரும் பண்பு நலத்தால் களங்கமற்றவனே ஆகிறான். எனவேதான் 'காசில் கொற்றத்து இராமன்' என்ற தொடரைக் கம்பன் கையாளுகிறான்.

(ஒரு தராசின் இரண்டு தட்டுக்களிலும் இராமனும் வாலியும் ஒரே நிறையில் நிற்கின்றனர். பரஸ்பரம் ஒருவரையொருவர் தவறாக மதிப்பீடு செய்து விவாதம் புரிந்து, பின் சரியான மதிப்பீடு செய்து தவற்றுக்கு வருந்தி பரஸ்பரம் ஒருவரையொருவர் போற்றுகின்றனர். இதில் யாரைக் குறை சொல்வது?)

இன்னுமொரு விளக்கமும் இங்கே கொடுக்க வேண்டியுள்ளது. இராமனைப் பற்றிப் பரதன் அயோத்தியா காண்டத்தில் குறிப்பிடும்பொழுது பின்வருமாறு கூறுகிறான்;

*"தீயன இராமனே செய்யுமேல், அவை*
*தாய் செயல் அல்லவோ, தலத்துளோர்க்கு எலாம்?"*
*(அயோத்தியா - பள்ளிப்படை - 62)*

பொருள்: "இராமன் தீய செயல்களையே செய்தாலும், அது, தாய் தன் சேய்க்குச் செய்யும் அருட்செயலே அல்லவா இப்புவியில் உள்ளவர்க்கெல்லாம்?" என்கிறான் பரதன். உதாரணமாக, தாய் தன் குழந்தைக்குப் பிடிக்காத மருந்து புகட்டலாம். குற்றங்களைக் கடுமையாகத் தண்டிக்கலாம். ஆனால் அவை குழந்தையின் நன்மையைக் கருதியதாகத்தானே இருக்கும்! அப்படிப்பட்டதே இராமனுடைய தீய செயல்களும் என்கிறான் பரதன்.

அவனுடைய கூற்று நூற்றுக்கு நூறு விழுக்காடு பொருந்திப் போவது வாலி வதத்தில்தான்! இராமன் வாலியைக் கொன்று பிழை புரிந்ததாகவே இருக்கட்டும். ஆனால் அது நன்மையில் அல்லவா முடிந்தது? எத்தகைய நன்மை? வாலி மரணத் தறுவாயில் தெய்வாம்சத்துடன் விளங்கினானல்லவா? அதுதான் அவன் பெற்ற நன்மை. "விளைவு நன்மையாக இருக்குமானால் தொடக்கமும் நன்மையே" என்ற சொல்வழக்கு இங்கு உண்மையாகிறது.

*"யான் எனது என்னும் செருக்கு அறுப்பான் – வானோர்க்கு*
*உயர்ந்த உலகம் புகும்" (குறள் – 346)*

என்பது குறள் வாக்கு. தன்னுடைய அரசு, தன்னுடைய பேராற்றல், என்றெல்லாம் ஆணவம் கொண்டிருந்த வாலி, அத்தகைய அழுக்குகள் நீங்கப் பெற்றவனாகித் தெய்வாம்சமும் பெற்றான் இராமனின் ஒரு கணையால். சொற்களால் அறம் பேசி, செயல்களால் மறம் புரிந்த தன் தவறுகளையெல்லாம் இறக்கும் தருவாயில் வாலி உணர்கிறான். தனக்கு இந்த நல்லறிவு இராமனின் கணை ஒன்றினால் ஏற்பட்டது என்கிறான். மேலும் மெய்யுணர்வும் பெறுகிறான்.

*" 'உண்டு எனும் தருமமே உருவமா உடைய நிற்*
*கண்டு கொண்டேன்; இனிக் காண என் கடவெனோ?*
*பண்டொடு இன்று அளவுமே என் பொரும் பழ வினைத்*
*தண்டமே; அடியனேர்க்கு உறு பதம் தருவதே!' "*
*(கிட்கிந்தா – வாலி வதை – 132)*

என்று கூறி இராமனைப் பரம்பொருளாகவே காண்கிறான் வாலி.

அதாவது, அங்கெங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய் ஆனந்த பூர்த்தியாய் அறிவோடு செயல்படும் பரம்பொருள் இராமன் என்பதைக் கண்டுகொண்டான் வாலி. எங்கும் நிறைந்திருக்கும் பரம்பொருள் மறைந்திருந்து தன்னைக் கொன்றது என்று கருதுவது தன்னுடைய அறியாமையே என்பதையும் உணருகிறான்.

மேலும் தீவினையாளனான தன்னைக் கொன்று இராமன் தனக்கு நன்மையே செய்தான் என்கிறான்.

*" 'நாயகன், இராமன், செய்த நல்வினைப் பயன் இது' என்றான்"*
*(கிட்கிந்தா – வாலி வதை – 153)*

என்பது பாடல் வரி.

மேலும் தான் வீடுபேற்றை அடைந்திருப்பதாகவும் கூறுகிறான்.

*" '.............................................................. யார்க்கும்*
*சான்று என நின்ற வீரன் தான் வந்து, வீடு தந்தான்' "*
*(கிட்கிந்தா – வாலி வதை – 154)*

அதாவது, வினை விளைக் காலத்தில் துன்பம் தரும் தெய்வம், வினைகளிலிருந்தும், பிறவித் தளையிலிருந்தும் ஒருயிரை விடுவிக்க எண்ணும்பொழுது, தானே வந்து அருள் புரியும். அவ்வாறே இராமனும், தான் இருக்குமிடத்தைத் தேடி வந்து அவனுக்கு வீடுபேறளித்தான் என்கிறான் வாலி. இத்தகை மெய்யுணர்வு வாசகத்தால் தெய்வ நிலைக்கும் உயர்கிறான். (இவ்விடத்தில் வாலியே இராமனை வீரன் என்று குறிப்பதை நோக்குக) எனவே, பாதிக்கப்பபட்ட வாலியே இராமனின் போர் முறை, வீரத்துக்கு இழுக்குண்டாக்கக் கூடியதல்ல என்று ஏற்றுக்கொள்வதாகிறது.

வாலிக்குத் தெய்வாம்சம் திடீரென்று வந்ததா? இல்லை. அவன் பிறப்பு தெய்வாம்சம் பொருந்திய பிறப்புதான். ஆனால் அவன் உலக வாழ்க்கை மாயையிலே உழன்று தன் தெய்வாம்சத்தை மறந்தான். அதைச் சீர்ப்படுத்திப் போர் செய்து மரணத்தின்பொழுது அந்த தெய்வாம்சத்தை வாலிக்கு உரிமையாக்கிக் கொடுத்தவன் இராமனே. இதற்குக் காப்பியத்தில் சான்று உண்டா? உண்டு.

மேலை நாளில், இராவணனால் துயர் உழந்த தேவர்கள் திருமாலை நண்ணி, தங்கள் துயர் தீர்க்க வேண்டுகின்றனர். அவ்வேண்டுதலை ஏற்ற திருமால், "தயரதன் மைந்தன் இராமனாக நான் அவதரித்து உங்கள் இடர் தீர்ப்பேன்" என்கிறான். அப்பொழுது இந்திரன் கூறுகிறான்: "இராமனுக்கு உதவும் பொருட்டு என்னுடைய அம்சமாக வாலியும், அவன் மகனும் உலகில் பிறப்பர்" என்று. சூரியன் கூறுகிறான்: "என்னுடைய அம்சமாக சுக்ரீவன் பிறப்பான்" என்று. காப்பிய வரிகள் பின்வருமாறு:

*"தருவுடைக் கடவுள் வேந்தன் சாற்றுவான், 'எனது கூறு*
*மருவலர்க்கு அசனி அன்ன வாலியும் மகனும்' என்ன ;*
*இரவி மற்று எனது கூறு அங்கு அவர்க்கு இளையவன் என்று ஓத*
*அரியும், 'மற்று எனது கூறு நீலன்' என்று அறைந்திட்டானால்"*
*(பால - திருஅவதாரம் - 26)*

ஆனால் வாலி தன் பிறப்பின் நோக்கத்தை மறந்து இராமனுக்குத் தீங்கிழைத்த இராவணனோடு நட்பு பூண்டிருந்தான். இத் தவற்றை ஒறுக்கவே திருமாலின் அம்சமாகிய இராமன் வாலியைத் தண்டித்தான். ஆயினும் பிறப்பில் இருந்த தெய்வாம்சம் வெளிப்படும் நிலையை வாலி எட்டும் காலம் கனிந்து வந்ததால், இராமன் வாலியை ஒறுத்த செயலும், தாய் சேய்க்குச் செய்யும் செயல்போல் நன்மையையே அளித்தது. வாலியும் "வானின் அப்புறத்து உலகம் ஆனான்" என்கிறான் கம்பன். வானின் அப்புறத்து உலகம் என்பது இந்திரன் உலகமே ஆகும்.

*"தன்னைத்தான் உணரத் தீரும் தகையறு பிறவி"*
*(கிட்கிந்தா – கிட்கிந்தை – 92)*

என்பது கம்பன் கூற்று. இந்திரன் அம்சமான வாலி தான் யார் என்பதை உணர்ந்து இந்திரலோகம் அடைந்தான். அதற்கு உதவியவன் திருமாலின் அம்சமான இராமன் என்பதே இதன் பொருளாகும். ஆனால் திருமாலிடம் இந்திரன் அளித்த வாக்கைக் காக்கும் பேறு அவனுடைய மற்றொரு கூறான அங்கதனுக்கு வாய்க்கிறது. இராமனுடைய அடியார்களில் ஒருவன் ஆனான் அங்கதன். இராமனுக்கு அயோத்தியில் முடிபுனை விழா நடக்கும்பொழுதும்கூட, அங்கதனே உடை வாள் ஏந்தி வாழ்நாள் முழுதும் இராமனுடைய மெய்க்காப்பாளனாகித் தொண்டு செய்து வாழ்கிறான்.

*"அரியணை அனுமன் தாங்க, அங்கதன் உடை வாள் ஏந்த,"*
*(யுத்த – திருமுடிசூட்டு – 38)*

என்பது காப்பிய வரிகள். எனவே தன்னுடைய தெய்வத்தன்மையை ஆணவத்திலும், உடல் பலத்திலும் மறைத்து, விலங்கு வாழ்க்கை வாழ்ந்த வாலியைத்தான், இராமன், வாலி பெற்றிருந்த வரத்தில் பொதிந்திருந்த பொருளுக்கு ஏற்ப, மறைந்திருந்து அம்பெய்தி, விலங்கைக் கொல்லும் விற்தொழில் மூலம் கொல்கிறான். சாதகமான சூழலில் அறம் காப்பதில் ஒருவருக்குப் பெருமையில்லை. தனக்குப் பாதகமான சூழலிலும் அறத்தின் பக்கமே நிற்க வேண்டும். அதுவே பெருமைக்குரியது. அத்தகைய பெருமைக்குரியவன் இராமன் என்பதை வாலி வதை நிகழ்ச்சி விளக்குகிறது. வாலி வதத்தின் நன்மையான இறுதி விளைவுகளை நோக்க – வாலியின் உடலை வீழ்த்தி, ஆன்மாவை உயர்த்தி, அவனுடைய தெய்வ நிலையை அவனுக்கே தெரியப்படுத்திய விதத்தில், வாலி வதத்தில், இராமனுடைய பங்களிப்பில், குற்றம் எதுவும் இன்றிக் குணமே வெளிப்படுகிறது என்பதே கம்பனின் கருத்து. ஆதலால் "காசில் கொற்றத்து இராமன்" எனும் பாயிரத் தொடர் பொருள் பொதிந்ததே ஆகும். 'இராமன் குற்றமற்ற கோமகன்' என்ற இந்நூலின் தலைப்பும் பொருத்தமானதே ஆகும்.

⌘ ⌘ ⌘

---

அறம் திறம்பிய வாலியை இராமன் விலங்கு என்று கணித்து வதைத்தான் என்பது ஒருபுறமிருக்க, கம்பனே வாலி வதத்தை இராமனுடைய வீரச் செயல் என்பது

மட்டுமன்றி, வாலியுடைய மரணத்தைப் பிறர்க்கு நன்மை பயக்கும் மங்கல நிகழ்ச்சியாகவே கருதுகிறான். இந்த உண்மையை நிலைநாட்ட காப்பியத்தில் சான்று உள்ளது.

பொதுவாக எள் என்னும் தானியம் மரணம் என்ற அமங்கல நிகழ்ச்சியோடு தொடர்புபடுத்தப்பட்டும், உளுந்து எனும் பயறு திருமணம் போன்ற மங்கல நிகழ்ச்சியோடு தொடர்புப்படுத்தப்பட்டும் மக்களால் பேசப்படுகிறது. கம்பனும் இவ்விரு பொருட்கள் பற்றித் தன் காப்பியத்தில் பேசுகிறான்.

'இராவணன் கிளையோடு இறந்து பட்டால் அவர்களுக்கு எள்ளும் நீரும் இறைத்துத் தர்ப்பணம் செய்ய வேண்டித் தன் குலத்தில் வீடணன் ஒருவனாவது வாழ வேண்டும்' என்ற பொருள்பட, கும்பகர்ணன் வீடணனிடம் போர்க்களத்தில் கூறுவதாகக் காட்சி அமைக்கிறான் கம்பன்.

சான்று:

'.... மற்று இல் அரக்கராய் உள்ளோர் எல்லாம்
எய் கணை மாரியால் இறந்து, பாழ் முழுதும் பட்டால்,
கையினால் எள் நீர் நல்கி, கடன் கழிப்பாரைக் காட்டாய்'

*(யுத்த காண்டம் - கும்ப கர்ணன் வதை - 137)*

அவ்வாறே இராவணனின் சடலம் மீது விழுந்து புரண்டு அழும் மண்டோதரி, 'எள் இருப்பதற்குக் கூட உடலில் இடமில்லாதபடிக்கு இராமனின் புனித வாளில் உம்முடைய உடலைச் சல்லடை கண்களாகக் துளைத்துவிட்டதுவோ' என்று புலம்புகிறாள்.

சான்று:

'எள்ளிருக்கும் இடமின்றி, உயிர் இருக்கும் இடம் நாடி, இழைத்தவாறோ?

*(யுத்த காண்டம் - இராவணன் வதை - 237)*

கம்பன் உளுந்தை மங்கல நிகழ்ச்சியோடு தொடர்புப்படுத்துகிறான். சான்றாக, இராமனின் திருமணத்திற்குக் கூடிய கூட்டத்தில் உளுந்தைப் போட்டால் அது நெருக்கியடித்து நிற்கும் மக்களிடையே சிக்கி, அங்கேயே நிற்குமே தவிர, நிலத்திற்கு சென்று சேராது என்கிறான்.

சான்று:
‘உழுந்து இடமில்லை உலகம் எங்கணும்’

*(பால - எழுச்சி - 23)*

(திருமண நிகழ்ச்சியை விளக்கும் புறநானூற்றுப் பாடல் ஒன்று ‘உழுந்து தலைப்பெய்த’ என்றே ஆரம்பிக்கிறது.)

இவ்வாறு திருமணம் எனும் மங்கல நிகழ்ச்சி தொடர்பாக உழுந்து எனும் சொல்லைப் பயன்படுத்தும் கம்பன், வாலி இராமபாணத்தை மார்பில் தாங்கி அதனைப் பெயர்த்தெடுக்கும் முயற்சியில் ஈடுபடும்பொழுது ‘ஓர் உழுந்து நிலைபெயர்ந்து உருளும் காலத்திற்கு முன்னமேயே நான் திசையனைத்தையும் முறித்து அழிப்பேன்’ என்று அடங்காத சினத்தோடு கூறுகிறான்.

சான்று:
“எழுந்து ‘வான் முகடு இடித்து உகப்படுப்பல்’ என்று இவரும்;
‘உழுந்து பேருமுன், திசை திரிந்து ஒறுப்பல்’ என்று உறுக்கும்”

*(கிட்கிந்தா – வாலி வதம் – 69)*

எனவே, தன் உடல் பலத்தால் பிறரை வெருட்டியும், மருட்டியும் துன்புறுத்திய – பிறன் மனை கவர்ந்து புலனின்பம் விரும்பிய – வாலியின் மரணம் கம்பனால் மங்கல நிகழ்ச்சியாகவே கருதப்பட்டது என்பது காப்பியம் காட்டும் உண்மை.

⌘ ⌘ ⌘

# III

# திருமகள் தீக்குளிப்பு

## காதற் கணவன் இராமன்

'நடையில் நின்றுயர் நாயகன்' என்று கம்பனால் சிறப்பிக்கப் பெறும் இராமன், தன் இன்னுயிர் அனைய தேவியின் கற்பில் ஐயமுற்று அவளைத் தீக்குளிக்கச் செய்து, தன் உயர் நடையில் தவறினான் என்று இராமன் மேல் இன்றளவும் பாரதநாட்டின் சொல் வழக்கிலும், மரபு வழக்கிலும் ஒரு பெரும் பழி உள்ளது. இது பாமரர்களின் கூற்று. கம்பன் இயற்றிய காப்பியத்தில் அத்தகைய பெரும் பழிக்கான சான்றுகள் இல்லை. கம்பன் காப்பியத்தைப் பழுதறக் கற்போர், இராமன் மேல் இத்தகைய குற்றத்தைச் சுமத்த முடியாது.

இராமன் ஒரு கணமும், ஒரு பொழுதும், ஒரு நாளும், ஒருக்காலும் சீதையின் கற்பை ஐயுறவே இல்லை. சிவதனுசை முறித்துச் சீதையின் கைத்தலம் பற்றும் இராமன், அவளோடு கவவுக்கை நெகிழாமல், உணர்வுகளால் கலந்து இல்லற தர்மம் போற்றுகின்றான். இராமன் கானகம் ஏகும்போது இளையோனுடன் சீதையும் உடன் ஏகுகிறாள். எனவே மண முடித்த நாள் முதலாக, உடலும் உயிரும் போல இணை பிரியாத நிலையில் இல்லறம் காக்கின்றனர் இருவரும்.

கணவன் மனைவியரிடையே நிகழும் காதல் வாழ்க்கையில் இருவரும் உடலும் உயிரும் போல் இணைந்து வாழ வேண்டும் என்பதே இன்ப வாழ்க்கைக்கு அறம் வகுத்த வள்ளுவனின் கருத்து.

"உடம்பொடு உயிரிடை என்ன மற்று அன்ன
மடந்தையொடு எம்மிடை நட்பு" – (குறள் – 1122)

பொருள்: (காதலனின் உரை) உடலோடு உயிர் கொண்டுள்ள தொடர்பு போன்றது நான் என் காதலியோடு கொண்டுள்ள உறவு. (இங்குப் பெண் உடலாகவும், ஆண் உயிராகவும் உவமைப்படுத்தப்பட்டுள்ளனர்.) இத்தகைய கருத்தை இராமனுக்கும் சீதைக்கும் உள்ள அன்புறவில் அழகாகப் பொருத்திக் காண்பிக்கிறான் கம்பன். சீதையை உடலுக்கும், இராமனை அந்த உடலில் உறைந்து உடலை இயக்கும் உயிருக்கும் உவமை காட்டிக் காப்பியத்தின் பல இடங்களில் கம்பன் கவிதைகள் புனைந்துள்ளான்.

பாலகாண்டத்தில், வரிசிலை அண்ணலும், வாள் கண் நங்கையும், இருவரும் மாறிப் புகுந்து இதயம் எய்திக் காதல் உணர்வால் கலந்த பொழுதே,

*"மருங்கிலா நங்கையும், வசைஇல் ஐயனும்*
*ஒருங்கிய இரண்டு உடற்கு உயிர் ஒன்று ஆயினர்"*
*(பால – மிதிலைக் காட்சி – 38)*

என்பது கம்பன் காட்டும் காதல் காட்சி.

அதே பால காண்டத்தில், இராமனுக்கும் சீதைக்கும் நடைபெறும் திருமண நிகழ்ச்சியைப் பற்றி விவரிக்கிறான் கம்பன்....... மண வினைச் சடங்குகள் நடக்கின்றன... மங்கையின் தளிர்க் கரங்களைத் தன் தடக்கைகளால் பற்றுகிறான் இராமன். பின்னர், இருவரும் தீ வலம் வருகின்றனர்... இராமன் முன்னால் செல்ல, சீதை பின்னால் அவனுடைய அடியொற்றி நடக்கிறாள். அப்பொழுது சீதை,

*"உடம்பு உயிரைத் தொடர்கின்றதை ஒத்தாள்"*
*(பால – கடி மணம் – 90)*

*என்கிறான் கம்பன்.*

"உடலோ உயிரோ இரண்டும் தனித்தனியே இயங்க முடியாது. உயிரில்லாத உடல் பிணம்; உடலில்லாத உயிர் பேய். இரண்டும் சேர்ந்திருந்தால் மட்டுமே அது உயிர்த்துடிப்புள்ள உருவமாகக் கொள்ளப்படும். செயலூக்கமும், ஆக்கமும் அவ்வுருவத்துக்குத்தான் இருக்கும். இராமனைக் கணப்பொழுதும் பிரியாதிருக்கச் சகியாதவள் சீதை. இராமனைக் கன்னி மாடத்தின் மீதிருந்து கண்ட கணம் முதல், தன் இன்னுயிரை இராமனிடத்து அனுப்பி விட்டு உயிரற்ற உடல் போல் இருந்தாள் சீதை. இப்பொழுது, அவ்வுயிர் அவளது உடலைக் கை வழியே தீண்ட, அவ்வுயிரைத் தொடர்ந்து அது செல்லும் வழியெல்லாம் தானும் பயணிக்கும் உடல் ஆனாள் சீதை" என்கிறான் கம்பன்.

ஆரணிய காண்டத்திலே, சீதையைப் பர்ணசாலையில் விட்டு விட்டு, கரதூடணர்களுடன் போரிடுவதற்காகக் காட்டுக்குள் செல்கிறான் இராமன். கடலெனப் பெருகி வந்த படைவீரர்களைத் தன் பகழியின் துணை கொண்டு நிர்மூலம் செய்துவிட்டு முனிவர்களை மகிழ்வித்து இனிய சிந்தையனாக இராமன் தன் இருப்பிடம் திரும்புகிறான். அங்கே சீதை இருக்கிறாள். உயிர் ஒன்று, தான் அடைக்கலம் புக விரும்பும் உடலைத்தேடி வந்தடைவது போன்ற ஆர்வத்துடன் சீதையின் பால் இராமன் வந்தடைந்தான் என்கிறான் கம்பன்.

*"முனிவர் வந்து முறை முறை மொய்ப்புற,*
*இனிய சிந்தை இராமனும் ஏகினான்,*
*அனிக வெஞ்சமத்து ஆருயிர் போகத்தான்*
*தனி இருந்த உடல் அன்ன, தையல் பால்"*
*(ஆரண்ய – கரன் வதை – 187)*

அடுத்து, ஆரணிய காண்டத்திலேயே, மாய மானாகிய மாரீசனை அடித்து வீழ்த்திய பின்னர், சீதையின் இருப்பிடத்துக்கு உடலைப் பிரிந்திருந்த உயிரைப்போல ஓடி வந்த இராமன், தான் அடைக்கலம் புகுவதற்கு அங்கே உடலில்லாமல் அவ்வுயிர் திகைத்ததுபோல, சீதையை அவ்விடத்தில் காணாமல் இராமன் திகைத்தான் என்கிறான் கம்பன்.

*"ஓடி வந்தனன்; சாலையின், சோலையில் உதவும்*
*தோடு இவர்ந்த பூஞ்சுரி குழலாள் தனைக் காணான்,*
*கூடு தன்னுடையது பிரிந்து, ஆர் உயிர், குறியா,*
*நேடி வந்து, அது கண்டிலது ஆம் என, நின்றான்"*
*(ஆரணிய – சடாயு உயிர் நீத்த – 71)*

சுந்தர காண்டத்தில் இராம தூதனாகச் சீதையைச் சந்திக்கும் அனுமன், "நீ உடல், இராமன் உயிர்" என்ற கருத்து விளங்கப் பின்வருமாறு கூறுகிறான்.

*" 'ஈண்டு நீ இருந்தாய்; ஆண்டு அங்கு எவ்வுயிர் விடும் இராமன்?' "*
*(சுந்தர – உருகாட்டு – 77)*

என்று சீதையைக் கண்டவுடன் கூறும் அனுமன், இராமன்

*"இன் உயிர் இன்றி ஏகும் இயந்திரப் படிவம் ஒப்பான்"*
*(சுந்தர – உருகாட்டு – 78)*

என்று மீண்டும் கூறுகிறான்.

*“ ‘வீவாய், நீ இவண்; மெய் அஃதே?*
*ஓய்வான், இன் உயிர், உய்வானாம்! ”*
*(சுந்தர – சூடாமணி – 40)*

என்றும் கூறுகிறான்.

மேலும், இராமன் அனுபவித்த பிரிவுத்துயர் பற்றிச் சொல்லும் அனுமன்

*“தேண்டி நேர் கண்டேன்; வாழி! தீது இலன் எம்கோன் ; ஆகம்*
*பூண்ட மெய் உயிரே! நீ! அப்பொய் உயிர் போயே நின்ற*
*ஆண் தகை நெஞ்சில் நின்றும் அகன்றிலை; அழிவு உண்டாமோ?*
*ஈண்டு நீ இருந்தாய் ; ஆண்டு, அங்கு, எவ் உயிர் விடும் இராமன்?”*
*(சுந்தர – உருக்காட்டு – 77)*

என்று கூறுகிறான்.

அதாவது “இராமனின் மெய்யுயிர் உன்னிடம் உள்ளது. அவன் தன்னிடம் இல்லாத உயிரைத் தான் விட முடியாதல்லவா? எனவே பொய்யுயிர் கொண்டு, உடலை வாழ்வதற்குரியதாகத் தக்க வைத்துக் கொண்டு இராமன் வாழ்கிறான்” என்று ஆரம்பத்தில் தான் கூறிய அதே கருத்தை மீண்டும் கூறிவிட்டுச் சீதையிடம் விடைபெறுகிறான்.

மேலும் இலங்கை வெற்றிக்குப் பிறகு இராமன் சீதையை வீடணன் மூலமாகச் சிறை மீட்கிறான். அப்பொழுது இராமனைக் காண வரும் சீதை, “தான் தொலைத்துவிட்ட உயிரைக் கண்டுவிட்ட பொய் உடல், அவ்வுயிரைக் கவர்வதில் காட்டும் ஆர்வத்தோடு வருவதுபோல் வந்தாள்” என்கிறான் கம்பன்.

*“மானமீது அரம்பையர் சூழ வந்துளாள்*
*போன பேர் உயிரினைக் கண்ட பொய் உடல்*
*தான் அது கவர்வுறும் தன்மைத்து ஆம் எனல்*
*ஆனனம் காட்டுற, அவனி எய்தினாள்”*
*(யுத்த – மீட்சிப்படலம் – 580*

இவ்வாறு, உயிரும் உடலும் என்று இணை பிரியாது இயைந்து வாழும் இராமனும் சீதையும் இராவணனின் குறுக்கீட்டால்தான் பிரிகின்றனர். அப்பிரிவால் இருவரும் துயர்க்கடலில் விழுகின்றனர்; பிரிவின் வெம்மை தாங்காமல் புலம்புகின்றனர்; அரற்றுகின்றனர்; உயிர் வாழ்க்கையையும் வெறுக்கின்றனர்.

இவ்வாறு காதல் உணர்வால் ஒன்றி வாழும் இருவரில் ஒருவனான இராமன், 'சீதையின் கற்பை ஐயுற்று அவளைத் தீக்குளிக்கச் செய்தான்' என்று அரற்றுபவர்கள், சீதையைப் பிரிந்த கணம் முதல், சீதையின் கற்பைப் பொருத்த வகையில் இராமனுடைய மனநிலை என்னவாக இருந்தது என்பதை ஆத்மசுத்தியுடன் ஆராய்தல் நலம். அதனைச் செய்வோம்.

மாய மானாக வந்த மாரீசன் மேல் அம்பு பாய்ச்சிய பின்னர், அரக்கரின் வஞ்சகத்தை ஒருவாறு ஊகித்த இராமன், சீதையிருக்குமிடம் தேடி ஓடி வருகிறான். பன்னசாலையோடு சீதையும் மறைந்த விதம் அறியாது மயங்குகிறான். "தான் உயிர் வாழ்வதற்கு ஒரு பொருளாக இருந்த சீதையைக் காணாமல், மாநிதியம் தொலைத்து விட்ட மனிதனைப் போல் திகைக்கிறான்"

*"கைத்த சிந்தையன், கனங்குழை அணங்கினைக் காணான் –*
*உய்த்து வாழ்தர வேறு ஒரு பொருள் இலான்; உதவ*
*வைத்த மாநிதி மண்ணொடும் மறைந்தன, வாங்கிப்*
*பொய்த்துளோர் கொள, திகைத்து நின்றானையும் போன்றான்"*
*(ஆரணிய – சடாயு உயிர்நீத்த – 72)*

பிறகு சீதையைச் சிறையெடுத்துத் தனக்குக் கொடுமை இழைத்தவன் இராவணன் என்ற செய்தியைக் கழுகு வேந்தன் சடாயு மூலம் அறிய வருகிறான் இராமன். அறிந்தவுடன் ஒரு கணவனுக்கு நியாயமாக ஏற்படவேண்டிய சான்றோன் சினப்பண்பு மேவியவனாகக் காட்சி தருகிறான் இராமன். சடாயு நடந்த நிகழ்ச்சிகளைக் கூறி முடிக்கும் முன்பாகவே சினம் பொங்கி வரும் செம்மலாகத் தோற்றம் கொள்கிறான்.

*"கூறின மாற்றம் சென்று செவித்தலம் குறுகா முன்னம்,*
*ஊறின உதிரம், செங்கண்; உயிர்த்தன, உயிர்ப்புச் செந் தீ;*
*ஏறின புருவம் மேல் மேல்; இரிந்தன சுடர்கள் எங்கும்;*
*கீறினது அண்ட கோளம்; கிழிந்தன கிரிகள் எல்லாம்"*
*(ஆரணிய – சடாயு உயிர்நீத்த – 114)*

பாரதப் பண்பாட்டிலே மனைவியானவள், ஓர் ஆண் மகனுடைய ஆண்மைக்கும், வீரத்துக்கும், உரிமைக்கும், மானத்துக்கும் அடையாளமாகத் திகழ்பவள். இந்தப் பண்பாட்டை உள்ளத்தில் கொண்டே வள்ளுவப் பெருந்தகையும்,

*"புகழ் புரிந்த இல் இல்லோர்க்கு இல்லை – இகழ்வார் முன்*
*ஏறுபோல் பீடு நடை" – (குறள் – 59)*

என்றார். சொல்லலங்காரமாக வாய் வீரம் பேசுவது இராமனுடைய இயல்புக்கு ஒவ்வாத ஒன்று. ஆயினும்,

*"வீரம் சேர்ப்பது தாய் முலைப் பாலடா*
*மானம் சேர்ப்பது மனைவியின் வார்த்தைகள்"*

என்ற பாரதியின் கூற்று உண்மையாகும் வண்ணம், அயலான் ஒருவனால் தன் மனைவிக்கு ஏற்பட்ட அவலத்தைப் பொறுத்துக்கொள்ள இயலாத நிலையானது, இயல்பாக மனச்சீர்மை கொண்ட இராமனையும் இப்பொழுது மான உணர்ச்சி நிறைந்த அலங்காரமான வாய் வீரச் சொற்களைப் பேச வைக்கிறது. அத்தகைய வாய் வீரச்சொற்கள், "உலகின் சிறந்த மானுடன் இராமன்" என்ற புகழுக்குரியவனாகவும் அவனை ஆக்குகின்றன. எனவே மான உணர்ச்சி தூண்டப் பெற்றவனாக, ஆண்மையும் வீரமும் பொதிந்து தோன்றும் இராமனுடைய நாவிலிருந்து வீரம் விளங்கும் சொற்கள் கனல் கங்குகளெனப் புறப்படுகின்றன. கற்புடைய பெண்ணொருத்திக்கு இத்தகைய துன்பம் விளைந்ததைக் கண்ணுற்றும், அந்த அநீதியைக் களைய ஏதும் செயல்படாமல் மௌன சாட்சியாக நின்ற அண்ட சராசரங்கள் மீதே சினம் பொங்கிப் பிரவகிக்க, இராமன், தன் கணையொன்றினால் பிரபஞ்சத்தையே அழிப்பதாக வஞ்சினம் சாற்றுகின்றான். அவனது கோபம் கண்டு மண்ணும், விண்ணும் மால்வரையும், மணிப்புனலும் காற்றும் கதிரும் தத்தம் நிலை திரிந்து தடுமாறுகின்றன.

*" 'பெண் தனி ஒருத்தி தன்னை, பேதை வாள் அரக்கன் பற்றிக் –*
*கொண்டனன் ஏக, நீ இக்கோளுற, குலுங்கல் செல்லா*
*எண் திசை இறுதியான உலகங்கள் இவற்றை, இன்னே,*
*கண்ட வானவர்களோடும் களையுமாறு, இன்று காண்டி' "*
*(ஆரணிய – சடாயு உயிர் நீத்த – 117)*

"என் வெங்கணை ஒன்றினால், விண்மீன்கள் உதிருமாறும், வெங்கதிரோன் சாயுமாறும், வான மண்டலம் எரியுமாறும், நீர் நிலம் காற்று அனைத்தும் திரியுமாறும், உலகம் ஏழும் மறையுமாறும் - அண்டம் முழுவதையும் நீர்க்குமிழி போல் உடையுமாறும் செய்வேன்" என்று அனல் கக்கும் சொற்களை அள்ளி வீசுகிறான். காப்பியப் பாடல்கள் பின்வருமாறு:

*"தாரகை உதிருமாறும், தனிக்கதிர் பிதிருமாறும்,*
*பேர் அகல் வானமெங்கும் பிறங்கு எரிபிறக்குமாறும்,*
*நீரொடு நிலனும் காலும், நின்றவும், திரிந்த யாவும்,*
*வேரொடு மடியுமாறும், விண்ணவர் விளியுமாறும்' "*

*(ஆரணிய - சடாயு உயிர் நீத்த - 118)*

*"இக்கணம் ஒன்றில், நின்ற, ஏழினொடு ஏழ சான்ற*
*மிக்கன போன்று தோன்றும், உலகங்கள் வீயுமாறும்*
*திக்குடை அண்ட கோளப் புறத்தவும் தீந்து, நீரின்*
*மொக்குளின் உடையுமாறும் காண்" என முனியும்*

*(ஆரணிய - சடாயு உயிர் நீத்த - 119)*

"அயலவன் ஒருவன் என் மனைவியைக் கை தீண்டி மெய் தீண்டிச் சிறையெடுத்துவிட்டான்! எனவே அவள் இனி என் மனைவி அல்லள்" என்று உடனே தள்ளி வைத்துவிட்டானா இராமன்? இல்லையே. மாறாக தன் அன்பு மனைவிக்காக அண்ட சராசரங்களையும் அழிக்கத் துணியும் அன்புக் கணவனே இராமன்.

அடுத்து, இராவணன் கோலோச்சும் இலங்கையில் சீதை அசோகவனத்தில் சிறைபட்டுக் கிடக்கிறாள் என்ற உண்மையை மாருதி மூலம் அறிய வருகிறான். அப்பொழுது அவனுடைய மனநிலை என்ன? அயலவன் அகத்தில் சிறைப்பட நேர்ந்த விதிக்குப் பிறகும், தன் மனைவி உயிர் வாழ்கிறாளே என்று அவளை இகழ்ந்தானா? வெறுத்தானா? இல்லை. அவளிருக்கும் திசையறியாத பொழுது அவளுக்காக எவ்வாறு இரங்கி ஏங்கினானோ அவ்வாறே இப்பொழுதும், அவள் இருப்பிடம் அறிந்த பிறகும் ஏங்குகிறான். இரண்டு கால கட்டத்திலும் அவன் அன்பு மாறாத கணவனாக இருந்தான் என்பதைக் காப்பியத்தில் காண்கிறோம். உதாரணமாக, மாய மானை – மாரீசனைக் கொன்று, பின் சீதையின் இருப்பிடம் தேடி ஓடி வரும் இராமன், அங்கு அவளைக் காணாமல், கூட்டைப் பிரிந்து சென்ற ஆவி மீண்டு வந்து தன் கூட்டைக் காணாமல் திகைத்ததுபோல் திகைத்தான். அந்த திகைப்பினூடே சித்தம் தடுமாறினான். அதனால் விண்ணும் மண்ணும் மேலும் கீழும் சுழல மயங்கினான்.

*"மண் சுழன்றது; மால்வரை சுழன்றது; மதியோர்*
*எண் சுழன்றது; சுழன்ற, அவ் வெறி கடல் ஏழும்;*
*விண் சுழன்றது; வேதமும் சுழன்றது; விரிஞ்சன்*
*கண் சுழன்றது; சுழன்றது கதிரெடு மதியும்*
*(ஆரணிய – சடாயு உயிர் நீத்த – 73)*

அறத்திற்கே சார்புடையவனாக இராமன் வாழ்ந்திருந்தும், அவனுக்கு இத்தகையதொரு இன்னலை அறக்கடவுள் தருவானேயானால், அறிவும் இதயமும் உடைய இராமன் அந்த அறக்கடவுளிடம் உரிமையுடன் சீற்றம் கொள்வது என்பது தகுதியுடைய செயலே அல்லவா? இராமனுக்கு அத்தகையதொரு சீற்றம் இப்பொழுது வந்து விட்டதுபோல் தோன்றுகிறது. தகாத செயல் தகாத முறையில் நிகழ்ந்துவிட்டதால் அறத்தின் செம்மல் அறத்தையே சீறுவானோ அன்றி வேறு எவரையும் சீறுவானோ என்று உலகம் இராமனின் அறச்சினப்பண்பு கண்டு நடுங்கியது.

*"அறத்தைச் சீறும் கொல்? அருளையே சீறும் கொல்? அமரர்*
*திறத்தைச் சீறும் கொல்? முனிவரைச் சீறும் கொல்? தீயோர்*
*மறத்தைச் சீறும் கொல்? "என் கொலோ முடிவு?" என்று மறையின்*
*நிறத்தைச் சீறும் கொல் நெடுந்தகையோன்?" என நடுங்கா*
*(ஆரணிய – சடாயு உயிர் நீத்த – 74)*

இராமனின் மனநிலை திரிந்ததால், பிரபஞ்சத்தின் மூல காரணத்தவனோடு உலகம் காலம் எல்லாம் மேலும் கீழுமாகப் பிறழ்ந்தன என்கிறான் கம்பன்.

*"நீல மேனி அந் நெடியவன் மனநிலை திரிய,*
*மூல காரணத்தவனொடும் உலகெலாம் முற்றும்*
*காலம் ஆம் என, கடையிடு கணிக்க அரும்பொருள்கள்*
*மேல கீழுற, கீழன மேலுறும் வேலை"*
*(ஆரணிய – சடாயு உயிர் நீத்த – 75)*

ஆக, சீதையின் கதி என்னவாயிற்று என்று அறியாது மயங்கிய நிலையில், சீதையின் கற்பு நிலை பற்றி இராமன் எதுவும் பேசவில்லை என்பது தெளிவு.

சீதை இராவணனால் சிறையெடுக்கப்பட்டாள் என்பதைச் சடாயு மூலம் அறிந்த பிறகாவது சீதையின் கற்பு நிலை பற்றி ஐயுற்று ஏதேனும் புலம்பினானா? இல்லை.

மாறாக, அவள் எப்படியெல்லாம் துயருறுகிறாளோ என்றும் பிரிவின் வேதனையில் என்னவெல்லாம் சிந்தை செய்து கலங்குகிறாளோ என்றும், சிறைபட்டபொழுது எவ்வாறெல்லாம் நிலைகுலைந்தாளோ என்றும் எண்ணியெண்ணி இராமன் புலம்பித் தளர் கிறானேயன்றிச் சீதையின் கற்பு பற்றிக் கவலைப்படவே இல்லை. காப்பியச் சான்று நிலை பின்வருமாறு:

*" ' "வாங்கு வில்லன் வரும், வரும்" என்று, இரு*
*பாங்கும் நீள் நெறி பார்த்தனளோ?' எனும்*
*வீங்கும் வேலை விரிதிரை ஆம் என,*
*ஓங்கி ஓங்கி ஒடுங்கும் உயிர்ப்பினான்"*

*(ஆரணிய - அயோமுகி - 10)*

*" 'தன் நினைந்திலள் என்பது சாலுமோ -*
*மின் நினைந்த விலங்கும் எயிற்றினான்,*
*'நில் நில்' என்று, நெருங்கிய போது அவள்*
*என் நினைந்தனளோ?' என எண்ணுமால"*

*(ஆரணிய - அயோமுகி - 11)*

*" "வெஞ்சினம் செய் அரக்கர்தம் வெம்மையை*
*அஞ்சினான் கொல்?" என்று ஐயுறுமால் ............"*

*(ஆரணிய - அயோமுகி - 12)*

சீதை இராவணனுக்கு உரிமையுள்ள இடத்தில் சிறையில் இருக்கிறாள் என்று அறிந்த பின்னரும் சீதையின் கையறு நிலை பற்றி மட்டுமே கவலையுறும் காகுத்தன், அவளது இன்னலைப் போக்குவதற்கு வினை ஏதும் ஆற்றாமல் வாழும் தனக்கு வில் ஒன்றும் வேண்டுமோ? என்று தன்னையே நொந்து கொண்டு மனம் வெதும்புகின்றான். சீதையைப் பிரிந்த இராமன், இவ்வாறு காதலுணர்வும், மானவுணர்வும் தூண்ட நின்றான் என்கிறான் கம்பன்.

*"பூண்ட மானமும், போக்க அருங் காதலும்,*
*தூண்ட நின்று, இடை தோமுறும் ஆர் உயிர்*
*மீண்டு மீண்டு வெதுப்ப, வெதும்பினான்,*
*'வேண்டுமோ எனக்கு இன்னமும் வில்?' என்பான்"*

*(ஆரணிய - அயோமுகி - 13)*

*" 'வேத வேள்வி விதி முறை மேவிய*
*சீதை என் வயின் தீர்ந்தனளோ?' எனும்*
*போதகம் எனப் 'பொம்' என் உயிர்ப்பினான்"*
*(ஆரணிய – அயோமுகி – 15)*

"பல்லுயிர்களையும் காக்கும் திறம் கொண்டவன் நான் எனும் பீடுடைய என்னை நம்பி என்னோடு வனம் புகுந்த ஏந்திழையைக் காக்கும் வல்லமை இழந்தேனே! என்னே என் வீரமும் வலிமையும்!" என்று தன் மீதே கழிவிரக்கம் கொள்கிறான்.

*" 'நின்று பல் உயிர் காத்தற்கு நேர்ந்த யான்,*
*என் துணைக் குல மங்கை ஓர் ஏந்திழை*
*தன் துயர்க்குத் தகவு இலென் ஆயினேன்;*
*நன்று, நன்று, என் வலி!' என நாணுமால்"*
*(ஆரணிய – அயோமுகி – 16)*

தன் இன்னுயிரில் கலந்தவளைக் காணாமல் போக்கிவிட்டு இவ்வாறு புலம்பும் அருங் கணவனாகிய இராமன் உண்ண மறந்துவிட்டான்; உறக்கம் துறந்துவிட்டான். உறக்கம் வராது தவிக்கும் இராமன், "கங்குல் எல்லையில்லாது நீள்வது ஏன்? என் இரு கண் மலர்கள் இமை பொருந்த இனி ஆயிரம் கல்ப காலங்கள் ஆகுமோ? சீதையைச் சிறையிட்ட வாளரக்கன், கங்குல் கழிய எழும் கதிரவனையும் சிறையிட்டு விட்டானோ?" என்றும் புலம்புகிறான். அன்பு மனைவியைப் பிரிந்த பின்னரும், எப்பொழுதும் போல் உண்டும் உறங்கியும் உணர்வின்றியும் வாழ்ந்தால், பின் ஒன்றாகக் கூடி வாழ்ந்ததன் பொருள்தான் என்ன? பிரிவில் வேதனையுற்று உறவை மேன்மைப்படுத்துகிறான் இராமன் என்னும் அன்புறு சிந்தையன்.

அடுத்து, இராவணனோடு போர் புரிய வேண்டி வானர சேனையோடு இலங்கை புகுந்துவிட்டான் அண்ணல் இராமன். சீதையிருக்குமிடத்துக்கு வந்துவிட்ட நிலையிலும்கூட, சீதையை மீண்டும் பெறும் வாய்ப்பு தனக்கு வாய்க்குமோ அன்றி வாய்க்காதோ எனும் மனவுணர்வோடு கவலைப்படுபவனாகவே தோன்றுகிறான் அன்புக் கணவன் இராமன்.

*"உடலினை நோக்கும்; இன் உயிரை நோக்குமால்;*
*இடரினை நோக்கும்; மற்று யாதும் நோக்கலன்;*
*கடலினை நோக்கும்; அக் கள்வன் வைகுறும்*
*திடரினை நோக்கும்; தன் சிலையை நோக்குமால்"*

*(யுத்த – இலங்கைக் கேள்வி – 11)*

*"பணி பழுத்து அமைந்த பூண் அல்குல் பண்பினால்,*
*பிணி பழுத்து அமைந்தது ஓர் பித்தின் உள்ளத்தான்,*
*அணி பழுத்து அமைந்த முத்து அரும்பு செம்மணி*
*மணி பழுத்து அமைந்த வாய் மறக்க வல்லனோ?"*

*(யுத்த – இலங்கைக் கேள்வி – 12)*

இவ்வாறு தன் கையறு நிலை பற்றியும், சீதையின் நிலை பற்றியும் கவலையுறும் இராமனைத்தான் காப்பியம் காட்டுகிறதே அன்றித் தன் மனைவி தன் கற்பு நிலை காத்தாளோ அன்றி தவறினாளோ என்று ஒரு கணப்பொழுதேனும் கவலைப்பட்டவனாக இராமனைக் காப்பியம் காட்டவில்லை.

சீதையைக் காணவில்லை என்ற போதும், அவளை விரைவில் மீட்க இயலவில்லையே என்ற போதும் தன் கையறு நிலையை எண்ணிக் கலங்கிய காகுத்தன், "சீதை இறந்து பட்டாள்" எனும் செய்தியைச் செவியுற்றால் என்ன ஆவான்? காப்பியத்தின் மாயா சீதைப் படலத்துப் பக்கங்களைப் புரட்டினால் இராமனின் நிலையை அறியலாம்.

.......... இலங்கை யுத்தம் தொடங்கி நடந்து கொண்டுள்ளது. முதல் நாள் போரில் இராவணன் தோற்றுப்போய்விட்டான். "இன்று போய் நாளை வா" என்று இராமன் கருணையுடன் மொழிய, அவமானமும் அதிர்ச்சியும் அடைந்தவனாக இராவணன் மண் மகளை மட்டுமே நோக்கி நடந்து அரண்மனை அடைகிறான். இதுவே இராவணனுக்குக் கிட்டிய பெரும் தோல்வியாகும். அடுத்து கும்பகருணன் வீரப்போர் புரிந்து முடிவில் இராமனின் கணைக்கு இரையாகி இறந்து படுகிறான். அடுத்து இந்திரசித்தன் போர்க்களம் புகுகிறான். தான் விடுத்த அயன் படை இராமனை வலம் வந்து செயலிழந்ததைக் கண்டு மனம் குழம்புகிறான். "இனி வஞ்சனையால்தான் இராமனை வெல்ல வேண்டும்" என்று முடிவெடுத்துச் சீதையைப் போன்றதொரு உருவம் சமைத்து அதனைப் போர்க்களத்தில் அனுமன் பார்க்க வெட்டி விட்டு, அடுத்து,

தான் அயோத்தி செல்லப்போவதாக ஓங்கிக் குரலெடுத்து அறிவிக்கிறான். இத்தகைய செயல்கள் மூலம் இராமனைக் குழப்பத்தில் ஆழ்த்திவிட்டு 'நிகும்பலை யாகம்' செய்து பகைவர்களை வென்று விட வேண்டும் என்பதே அவனது நோக்கம். உடனே இம்முடிவைச் செயல்படுத்துகிறான். அனுமன் கண்டிருக்க மாயா சீதையைக் கொல்கிறான். இதனைக் கண்டு மருண்டு மயங்கும் மாருதி ஓடோடிச் சென்று இராமனிடம் செய்தியைக் கூறுகிறான். செய்தியைக் கேட்ட இராமனின் நிலை என்ன? கம்பன் கூறுகிறான். "இராமன் தன் இதயம் ஒரு கணம் துடித்திட மறந்து நின்றது போல் ஆனான்; பேச்சிழந்தான்; புலன்கள் செயலற்றுப் போனான்; உயிர்ப்பின்றி நிலத்தில் சாய்ந்தான்" என்று,

*"துடித்திலன்; உயிர்ப்பும் இல்லன்; இமைத்திலன்; துள்ளிக் கண்ணீர்*
*பொடித்திலன்; யாதும் ஒன்றும் புகன்றிலன்; பொருமி, உள்ளம்*
*வெடித்திலன்; விம்மிப் பாரில் வீழ்ந்திலன்; வியர்த்தான் அல்லன்;*
*அடுத்துள துன்பம் யாவும் அறிந்திலர் அமரரேயும்"*

*(யுத்த – மாயா சீதை – 56)*

*"சித்திரத் தன்மை உற்ற சேவகன், உணர்வு தீர்ந்தான்,*
*மித்திரர் வதனம் நோக்கான், இளையவன் வினவப் பேசான்,*
*பித்தரும் இறை பொறாத பேர் அபிமானம் என்னும்*
*சத்திரம் மார்பில் தைக்க, உயிர் இலன் என்னச் சாய்ந்தான்"*

*(யுத்த – மாயா சீதை – 58)*

இராமன் தன் தேவியைத் தன் ஆவியில் வைத்திருந்தான் என்ற உண்மை ஒன்று அன்றி, அவளது கற்பில் ஐயுற்றான் – ஐயுற்ற மனநிலையில் இருந்தான் – என்பதான கருத்து இங்கு இராமனுடைய சொற்களிலோ செயல்களிலோ எங்கேனும் வெளிப்படுகிறதா?

அடுத்து இறுதிக் கட்டத்துக்கு வருவோம்.

இராவணனுடைய பகை முடித்துப் போரில் வெற்றியை ஈட்டிய பிறகு உடனடியாக இராமன் இரு காரியங்கள் செய்கிறான்.

ஒன்று, இலக்குவன் மூலம் வீடணனுக்கு முடி புனையச் செய்கிறான். வீடணனை இலங்கை வேந்தனாக்குகிறான்.

இரண்டு, இராவணனைத் தான் வெற்றி கொண்ட செய்தியோடு, வீடணன் இலங்கைக்கு அரசனாகி விட்ட செய்தியையும் சேர்த்துச் சீதையிடம் கூறுமாறு அனுமனைப் பணிக்கிறான்.

அப்படிப் பணிக்கும் பொழுது சீதையை எப்படிக் குறிப்பிடுகிறான்? அறிய வேண்டியது அவசியம்.

*" 'துப்பு உறழ் செய்ய வாய் மணித் தோகை பால்*
*செப்புறு, இப்படிப் போய்' எனச் செப்பினான்"*
*(யுத்த - மீட்சி - 14)*

என்கிறான் கம்பன்.

பொருள்: பவளம் போன்று சிவந்த இதழுடைய மயிலன்ன தோற்றம் கொண்ட சீதையின் பால் இவ்விடத்துச் செய்திகளைக் கூறுவாயாக.

இச்சொற்களின் உட்பொருள் என்ன? "வெற்றிச் செய்தி எப்படியும் இத்தனை நாழிகைக்குள் சீதையைச் சென்றடைந்திருக்கும். செய்தியறிந்து செவ்விதழில் நலம் நிறைந்தவளாக ஆகியிருப்பாள் சீதை. (இராமனை நினைந்து நினைந்து மனம் சிவந்தும், இராமநாமத்தைச் செப்புதலால் இதழ் சிவந்தவளாகவும் சீதை அசோகவனத்தில் இருந்த நிலையை அனுமன் கூறக் கேட்டவனல்லவா?) கார் முகிலைக் கண்ட தோகை மயில் போன்ற தோற்றம் கொண்ட அச் சீதையிடம் இவ்விடத்தில் நடந்த அவளறியாத செய்திகளையெல்லாம், முதலில் நீ போய்க் கூறு" என்கிறான் இராமன். சீதையின் வருத்தம் போக்கும் வாசகங்களைத்தான் சீதையிடம் கூற வேண்டும் என்ற மன விழைவு கொண்ட இராகவனைத்தான் நாம் இங்கு காண்கிறோமே தவிர, சீதையின் பால் வருத்தம் கொண்டிருந்த இராமனைக் காண்கிறோமா? இல்லை.

அடுத்து நடப்பது மிகவும் முக்கியமான நிகழ்ச்சி. இலங்கையின் மன்னனாக ஆகிவிட்ட வீடணனிடம் சீதையைத் தன்னிடத்துக்கு அழைத்து வரச் சொல்கிறான் இராமன். அப்பொழுது எத்தகைய சொற்களை இராமன் வாய் மலர்ந்தருளுகிறான் என்பதை அறிய வேண்டும்.

*"வீடண! சென்று தா, நம் தேவியை, சீரொடும்"*
*(யுத்த - மீட்சி - 37)*

என்று இராமன் வீடணனிடம் கூறுகிறான். பொருள் என்ன? "வீடண! நீயே நேரில் சென்று, நம் தேவியைச் சீர்மையோடு அழைத்து வா"

. இராமன் எந்தவொரு செயலையும் நிதானித்து நெறிமுறையோடு செய்பவன்; பேசுபவன். இங்கு நான்கு சொற்களைக் கூறுகிறான்.

முதலில் 'சென்று' என்கிறான். அதாவது சீதையைச் சிறையெடுத்தவன் இலங்கை வேந்தன் ஆகையால் அவளைச் சிறை விடுவிப்பவனும் இலங்கை வேந்தனாகவே இருக்க வேண்டும். எனவே நீயே நேரில் செல்ல வேண்டும் என்கிறான். சீதையை இராவணன் சிறையெடுத்திருக்கலாம். ஆனால் இராவணனால் சீதையின் மனச் சிறையில் அடைபட முடியவில்லை என்பதை இராமன் அறிவான். சீதையையும், இராவணனையும் மறைமுகமாகக் கூட வேறு வகையில் தொடர்பு படுத்தி இங்கு இராமன் எந்தச் சொல்லையும் கூறவில்லை. சீதையின் அன்பைப் பெறும் முயற்சியில் தோல்வியுற்ற இராவணன், இறக்கும் வரை இலங்கை வேந்தன் என்ற பட்டத்தைத்தான் தக்க வைத்துக்கொள்ள முடிந்ததே அன்றிச் சீதையைக் கற்புப் பிறழ்வுறச் செய்யும் தன் நோக்கத்தில் அவன் வெற்றி பெற முடியவில்லை என்பதும் இராமனின் கருத்து.

இரண்டாவதாக 'தா' என்கிறான். பொருள் என்ன? இலங்கை வேந்தனாகிய இராவணன் என்னை வஞ்சகமாக அப்புறப்படுத்திச் சீதையைத் தனியாளாக்கி நெறி தவறிச் சிறை கொண்டான். நான் அவனை உரிய முறையில் போர் செய்து வெற்றி கொண்டேன். இப்பொழுது இலங்கை வேந்தனாக உள்ள நீ, இந்த வெற்றியை மட்டுமல்லாது, சீதையின் கற்பு நிறை நிலையையும் கௌரவிக்கும் வண்ணம், நீயே பொறுப்புடன் சீதையின் கணவனாகிய என்னிடம் அவளைத் திரும்பத் தரவேண்டும்.

மூன்றாவதாக 'நம் தேவியை' என்கிறான். பொருள் என்ன? வீடணனை இலங்கை வேந்தனாக மட்டுமன்றித் தன் உடன் பிறவாச் சகோதரனாகவும் ஏற்றுக் கொண்டுவிட்டதால் சீதையை 'நம் தேவி' என்று குறிக்கிறான் என்றும் கொள்ளலாம். இதை விட வேறு ஒரு சிறப்பான பொருத்தமான விளக்கமும் பெறலாம்.

யுத்த களத்தில், இராமன் இராவணனை நிராயுதபாணியாக்கிப் பின், "இன்று போய், நாளை வா" என்று இராவணனிடம் கூறும் நாளிலேயே இராமனுடைய வனவாசம் முடிந்து போய்விடுகிறது. இந்தச் செய்தியைத் தெரிவிக்கும் வண்ணம், கம்பன், இராமனை இவ்விடத்தில் அயோத்தி வேந்தன் கோசலை நாடுடைய வள்ளல் என்றே குறிப்பிடுகிறான். காப்பிய வரிகள் பின் வருவன:

*“ ‘ஆள் ஐயா! உனக்கு அமைந்தன மாருதம் அறைந்த*
*பூளை ஆயின கண்டனை; இன்று போய் போர்க்கு*
*நாளை வா’ என நல்கினன் – நாகு இளங் கமுகின்*
*வாளை தாவுறு கோசலை நாடுடை வள்ளல்”*

*(யுத்த - முதற்போர் புரி – 255)*

பரதனுடன் செய்து கொண்ட ஒப்பந்தத்தின்படி இராமன் என்றும் அயோத்தி வேந்தனே ஆவான். ஆயினும் பதினான்காண்டுகள் வனவாசம் புரிந்து தந்தையின் ஆணையைப் பூர்த்தி செய்த பிறகுதான் தன்னைச் சட்டபூர்வமாக அயோத்தி வேந்தனாக உணர்கிறான் இராமன். எனவே இராமன் இப்பொழுது அயோத்தியின் அரசன். அப்படியென்றால் சீதை அயோத்தியின் அரசியே ஆவாள் அல்லவா? அரசர்கள் தம்மையும், தம் செயல்களையும் சுட்டிப் பேசும்போது பன்மைச் சொற்களை ஆளுவது மரபு. எனவே, தனக்கும் சீதைக்கும் உரிய அரச அடையாளம், தம் இருவருக்கும் உரிமையாகிவிட்டது என்பதை உறுதி செய்யும் வண்ணமே, சீதையை இங்கு ‘நம் தேவி’ என்று குறிப்பிடுகிறான். இராமன்தான் அயோத்தியின் வேந்தன் என்றால், தன் பட்டத்தரசி சீதை என்பதால் பெருமையோடு இராமன் அறிவிப்பதை கற்போர் உணர்தல் நலம்.

நான்காவதாக ‘சீரொடும்’ என்கிறான். பொருள் என்ன? சீதையின் கற்புத்தவம் பற்றி அனுமன் கூறக்கேட்டவன் இராமன். புனல் படியாது, குழல் திருத்தாது, கண்ணீர்க் கடலில் குளித்து புகையுண்ட ஓவியம் போல சீதையைத் தான் கண்டதாக அனுமன் கூறிய வாசகங்களை நினைந்து, அத்தகைய நிலையைத் திருத்தாமல் சீதை பலர் காண இப்பொழுது இங்கு தோன்றுவது உசிதம் ஆகாது ஆகையால், அவளுடைய தோற்றத்தைத் திருத்திச் சீர்மையோடு (அதாவது, பெருமையோடும் – என்னுடைய தேவி என்ற தகைமையோடும்) அழைத்து வா என்பது பொருள்.

இவ்வாறு தன்பால் சீதைக்குரிய உரிமையையும், அவளுடைய பெருமையையும் வலியுறுத்தும் வண்ணம் கார்மேகவண்ணன் கூறும் சொற்களில் அவளுடைய கற்பை ஐயுறும் பொருள் எங்கேனும் தென்படுகிறதா? இல்லை. ஆரணிய காண்டத்தில், அயோமுகிப் படலத்தில், சீதையைக் கற்பினுக்கு அருங்கலம் என்று கூறிப் புகழ்கிறான். காப்பியத்தில் ஓரிடத்தில் மட்டும் இராமனின் சிந்தையில் “சீதையும் உயிருடன் இருக்கிறாள். அவள் கற்பும் சீர்மையுடன் இருக்கிறது” என்று அறிவதாகக் கம்பன் அமைக்கிறான். அந்நிகழ்ச்சி பின்வருமாறு:

இலங்கையில் சீதையைக் கண்டு இராமனிடம் மீண்டு வரும் அனுமன், இராமனிடத்துக்கு வரும் முன்னம், தூரத்திலேயே நின்று, சீதை இருக்கும் தென்திசை நோக்கித் தொழுகிறான். அதனைக் கண்ட இராமன்,

*"வண்டுறை ஓதியும் வலியள்; மற்று இவன்*
*கண்டதும் உண்டு; அவள் கற்பும் நன்று"*

*(சுந்தர – திருவடி தொழுத – 23)*

என்று எண்ணுகிறான். இதுகாறும் இல்லாது இங்கு மட்டும் "சீதையின் கற்பு நிலைத்துள்ளது" என்று இராமன் ஏன் எண்ணுவதாகக் கம்பன் அமைக்கிறான். காரணம் உள்ளது. இராமனைத் தன் தெய்வமாகக் கொண்டுவிட்ட அனுமன் இப்பொழுது, இராமனிருக்குமிடத்துக்கு வந்த பின்னரும், அவனை முதலில் தொழாது, சீதையிருக்கும் திசை நோக்கித் தொழுகிறான் என்றால் என்ன பொருள்? அனுமன் தன்னுடைய கணிப்பில் சீதை கற்பினளாகக் காட்சியளித்திருக்கிறாள் என்ற செய்தியை அனுமன் தனக்குக் கூறுகிறான் என்றுதான் பொருள். அனுமன் தனக்குக் குறிப்பினால் உணர்த்திய இச்செய்தியை இராமன் குறிப்பினாலேயே அறிவதால், அனுமன் குறிப்பினால் முழுச் செய்தியையும் சொல்லும் தன் முயற்சியில் இங்கு வெற்றி பெறுகிறான் என்றுதான் பொருளே தவிர, இராமன் சீதையின் கற்பு பற்றிய ஐயம் தீர்ந்தான் என்ற பொருள் அல்ல. இதை வலியுறுத்தவே கம்பன் அவ்விடத்தில் இராமனை "குறிப்பினால் உணரும் கொள்கையான்" என்று குறிப்பிடுகின்றான். அதாவது அனுமனின் குறிப்புச் செய்திகளை இவன் முழுமையாக உணர்ந்து கொண்டான் என்று பொருள். எனவே சீதையின் கற்புநிலை பற்றி இராமன் எள்ளளவும் எப்பொழுதும் ஐயுறவில்லை என்பதே உண்மை. அயலவனால் சிறையெடுக்கப்பட்டுப் பல காலம் தன்னைப் பிரிந்திருந்து, அயலவன் அகத்திலேயே வாழும் தன் மனைவியின் கற்புத்திறம் பற்றிய இராமனின் ஐயமற்ற வலிமையான நேர்க்கணியக் கருத்துக்கு ஆதாரம் என்ன? ஆதாரம் இராமனுடைய மனமே ஆகும். இராமன் தன்னுடைய அகவாழ்க்கை உணர்வுகளுக்குத் தன் மனத்தையே சாட்சியாக வைப்பவன் என்பதைப் பால காண்டத்திலேயே கம்பன் நமக்குத் தெரிவித்து விடுகிறான்.

………. விசுவாமித்திரரோடு மிதிலை புகும் இராமன், சீதையைக் கன்னி மாடத்தில் கண்டு கருத்தை அவள் பால் செலுத்தித் தன் மனத்தைப் பறி கொடுத்துவிடுகிறான். பிறகு அவளை நிலனந்து நினைந்து விரகதாபத்தில் தவிக்கிறான்….. அவளுடைய மேனி நலத்தைக் கற்பனையில் மீண்டும் மீண்டும் கொணர்ந்து அவள் அழகை ஆராதிக்கிறான். ….. இவ்வேளையில் இராமனுக்கு ஓர்

ஐயம் தோன்றுகிறது. தான் இத்தனை நாழிகையும் தலை முதல் பாதம் வரை ஒரு பெண்ணின் மேனி அழகை எண்ணி எண்ணி விரகதாபம் கொண்டிருக்கிறோமே, அவள் கன்னியாக இல்லாமல், பிறன் மகன் ஒருவனுடைய மனைவியாக இருக்கக்கூடுமானால், தான் எத்தகையதொரு அறப்பிறழ்வான காரியத்தைச் செய்து கொண்டிருக்கிறோமென்று ஒரு கணம் திடுக்கிடுகிறான். மறுகணமே, 'அறச்செம்மை படர்ந்த தன் மனம் அறமல்லாத எண்ணங்களைத் தனக்குள் தோற்றுவிக்காது' என்று கவலை தீர்ந்து, "தன் மனம் இத்துணை அளவுக்கு ஒரு பெண்ணின் பால் ஈர்க்கப்படுமானால் அவள் உறுதியாகக் கன்னியாகவே இருக்க வேண்டும்" என்று மனச்சமநிலை அடைகிறான்.

*"ஆகும் நல்வழி; அல்வழி என் மனம்*
*ஆகுமோ? இதற்கு ஆகிய காரணம்,*
*பாகுபோல் மொழிப் பைந்தொடி, கன்னியே*
*ஆகும்; வேறு இதற்கு ஐயுறவு இல்லையே!"*

*(பால - மிதிலைக்காட்சி - 147)*

இவ்வாறே, சீதையின் பிரிவுக்குப் பிறகு இராமன் தன் மனத்தையே சாட்சியாக வைத்துத்தான் தன் மனைவியின் கற்புத்திறம் பற்றிச் சற்றும் ஐயமில்லாமல் இருக்கிறான். மேலும் சீதையின் பிரிவுக்குப் பிறகு இராமன் சீதையின் மேனி அழகைப் பலமுறை நினைந்து நினைந்து காதலால் உருகுகிறான். அவள் உருவத்தைத் தான் காணும் இயற்கைக் காட்சிகளிலெல்லாம் காண்கிறான்.

*"கானகம் முழுவதும், கண்ணின் நோக்குங்கால்*
*சானகி உரு எனத் தோன்றும் தன்மையே!"*

*(ஆரணிய - அயோமுகி - 96)*

சானகியின் உரு வெளித்தோற்றத்தைத் தழுவ முனைந்து தோல்வியடைந்து "நடப்பது கனவோ, நனவோ" என்றறியாது மயங்குகிறான்.

*"கருங்குழல், சேயரிக் கண்ணி, கற்பினோர்க்கு*
*அருங்கலம், மருங்கு வந்து இருப்ப, ஆசையால்*
*ஒருங்குறத் தழுவுவென்; ஒன்றும் காண்கிலென்;*
*மருங்குல் போல் ஆனதோ வடிவும், மெல்லவே?"*

*(ஆரணிய - அயோமுகி - 97)*

*"புண்டரிகப் புதுமலரில் தேன் போதி*
*தொண்டை அம் சேயொளித் துவர்த்த வாய் அமுது*
*உண்டனென்; ஈண்டு அவள் உழையள் அல்லளால்;*
*கண் துயில் இன்றியும் கனவு உண்டாகுமோ?"*
*(ஆரணிய – அயோமுகி – 98)*

பறவை, விலங்கு போன்ற பிற உயிரினங்கள், தத்தம் இணையோடு கூடியிருப்பதைக் கண்டு, தனக்கு அத்தகைய பேறு தற்பொழுது இல்லையே என்று சீதையின் பிரிவை எண்ணிக் கலுழ்கிறான். கம்பன் இவ்விடத்தில் கவிக்கூற்றாக, அமிழ்தினும் இனிய மொழி பிதற்றுவாளைப் பிரிந்த அன்புக் கணவன் இவ்வாறு மனம் அழிந்துபடாமல் வேறு என்ன செய்வான் என்கிறான். காப்பியப்பாடல்:

*"மயிலும் பெடையும் உடன் திரிய,*
*மானும் கலையும் மருவி வர,*
*பயிலும் பிடியும் கட கரியும்*
*வருவ, திரிவ, பார்க்கின்றான்;*
*குயிலும், கரும்பும், செழுந்தேனும்,*
*குழலும், யாழும், கொழும் பாகும்,*
*அயிலும், அமுதும், சுவை தீர்த்த,*
*மொழியைப் பிரிந்தான் அழியானோ"*
*(ஆரணிய – அயோமுகி – 29)*

அடுத்து சீதையின் நினைவில் விரகதாபம் மேவப் பெற்றவனாகிறான் இராமன். சீதையின் நினைவைத் தூண்டி அல்லும் பகலும் இடைவிடாது தன்னைக் காம உணர்வில் தள்ளும் மாரனைத் தன்னை விட்டுப் போய்விடும்படி கெஞ்சுகிறான்; கோபிக்கிறான்.

*" 'உள் நிறைந்து உயிர்க்கும் வெம்மை உயிர் சுட, உலைவேன் உள்ளம்*
*புண் உற, வாளி தூர்த்தல் பழுது, இனி; போதி – மார!'"*
*(கிட்கிந்தா – கார்கால – 62)*

*" 'வில்லும், வெங்கணையும், வீரர் வெஞ்சமத்து அஞ்சினார்மேல்*
*புல்லுந அல்ல; ஆற்றல் போற்றலர்க் குறித்தல் போலாம்; –*
*அல்லும் நன் பகலும் நீங்கா அனங்க! நீ அருளின் தீர்ந்தாய்;*
*'செல்லும்' என்று, எளிவந்தோர்மேல், செலுத்தவும் சீர்மைத்து ஆமோ?'*
*(கிட்கிந்தா – கார்கால – 63)*

மேலும் தன்னைத் துன்புறுத்தும் காமதேவனின் மலரம்புக்கு எதிராகத் தான் வலிமையான அம்பொன்று எய்யவியலாமல் இராமன் தடுமாறினான் என்கிறான் கம்பன்.

*"தேனின் தெய்வத் திருநெடு நாண் சிலைப்*
*பூ நின்று எய்யும் பொரு கணை வீரனும்,*
*மேல் நின்று எய்ய விமலனை நோக்கினான்*
*தான் நின்று எய்யகில்லான், தடுமாறினான்"*

*(ஆரணிய - அயோமுகி - 25)*

இவற்றுக்கெல்லாம் சிகரம் வைத்தது போன்ற காட்சி ஒன்று காப்பியத்தின் கிட்கிந்தா காண்டத்தில் காட்டப்படுகின்றது.

..... இராமனும், சுக்ரீவனும் ஒருவருக்கொருவர் நட்பு உடன்படிக்கை செய்துகொண்டு ஒருவருக்கொருவர் வாழ்க்கையில் தமக்குற்ற துன்பங்களைக் களைவதற்கு உதவிக் கொள்வது என்றும் முடிவு செய்திருக்கின்றனர். இச்சூழலில் சுக்ரீவன் இராமனிடம் ஒரு செய்தி சொல்கிறான். அச்செய்தி பின்வருமாறு:

"சிறிது காலத்துக்கு முன்னால், இராவணன் ஒரு பெண்ணைக் கடத்திக் கொண்டு வான் வழியே ஏகும்பொழுது நாங்கள் வாழும் இந்த மலையைக் கடந்து சென்றான். அப்பொழுது மழை போல் நீர் பெருக்கிய கண்ணினளாகிய பெண்ணொருத்தி அரற்றிப் புலம்பியவாறு ஒரு இழை பொதியை (அணிகலன்கள் நிரம்பிய முடிச்சிட்ட மூட்டையை) இந்நிலத்தின் மேல் விட்டெறிந்தாள். அந்தப் பெண் உன்னுடைய தேவியாகத் தானிருக்க வேண்டுமென்று உன் கதையை அறிய வந்த நாளிலிருந்து ஊகிக்கிறேன். இப்பொதியில் உள்ள அணிகலன்கள் உன் தேவியுடையவைதானா என்று பார்" என்று கூறிப் பொதியை அவிழ்த்துக் காட்டினான். ஏற்கனவே சீதையின் நினைவால் வாடி, கனவிலும் கற்பனையிலும் அவள் உருவத்தைக் கண்டு மனம் மறுகிக் கிடந்த இராமன் சீதையின் அணிகலன்கள் நிறைந்திருந்த அப்பொதியை நோக்கினான்; கூர்ந்து நோக்கினான்; எரியிடையிட்ட மெழுகு போல உடலும் உயிரும் உருக ஆரம்பித்துவிட்டான். இராமனுடைய அச்சமயத்து உள்ளத்து உணர்வுகளைப் பற்றித் தன்னால் எழுதவே இயலாது என்கிறான் பன்னீராயிரம் பாடல்கள் எழுதிய தெய்வமாக் கவி கம்பன்!!!

*“தெரிவுற நோக்கினன், தெரிவை மெய்அணி;*
*எரிகனல் எய்திய மெழுகின் யாக்கை போல்*
*உருகினன் என்கிலம்; உயிருக்கு ஊற்றம் ஆய்ப்*
*பருகினன் என்கிலம்; பகர்வது என் கொல் யாம்?”*

*(கிட்கிந்தா – கலன்காண – 5)*

பொருள் : இராமன் சீதையைப் பிரிந்து உயிரற்ற எந்திரப்படிவம் போல இருந்தான். சீதை அணிந்திருந்த அணிகலன்களைக் கண்ட பிறகு அவனுடைய உயிர் ஊற்றம் கண்டது. தனக்கு உயிரைத் தரும் ஊற்றம் அவ்வணிகளே என்னுமாறு கண்களால் அவற்றைப் பருகினான் என்று வேண்டுமானால் சொல்லலாம். அதற்குமேல் என்னால் ஒன்றும் கூற முடியவில்லை என்கிறான் கம்பன்.

மேலும் சீதையின் அணிகலன்கள் அவனுடைய எந்தெந்த அங்கங்களை அலங்கரித்தனவோ, அந்தந்த அங்கங்களையே அவ்வணிகலன்களில் கண்டு மனம் நெக்குருகுகிறான்.

*“நல்குவது என் இனி? நங்கை கொங்கையைப்*
*புல்கிய பூணும், அக்கொங்கை போன்றன;*
*அல்குலின் அணிகளும், அல்குல் ஆயின;*
*பல் கலன் பிறவும், அப் படிவம் ஆனவே”*

*(கிட்கிந்தா – கலன் காண – 6)*

வானர சேனையோடு இலங்கையை அடைந்த பிறகு, சீதையின் இருப்பிடம் வந்த பின்னரும், அவளைச் சிறை மீட்கும் பெரும்பணியை நினைந்து மயங்கும் இராகவன் அப்பொழுதும் சீதையின் நினைவால் பித்துப் பிடித்தவன் போலாகிறான்.

*“பணி பழுத்து அமைந்த பூண் அல்குல் பண்பினால்,*
*பிணி பழுத்து அமைந்தது ஓர் பித்தின் உள்ளத்தான்”*

*(யுத்த – இலங்கைக் கேள்வி – 12)*

சீதையின் ஆழமான அன்பை அனுபவித்தவன் இராமன். உதாரணமாக, இராமன், இலக்குவன், சீதை மூவரும் தண்டகாரண்யத்தில் (அகத்தியரைக் காண்பதற்கு முன்) ஒன்றாக வனத்தில் வாழ்ந்த காலம் பத்தாண்டுகள் என்கிறான் கம்பன்.

காப்பியச் சான்று:

*"ஐந்தும் ஐந்தும் அமைதியின் ஆண்டு, அவண்,*
*மைந்தர், தீது இலர் வைகினர்"*

*(ஆரணிய - அகத்திய - 26)*

அப் பத்தாண்டுகளில் மூவரும் வனத்தில் நடந்த தூரம் கொஞ்சமா? நஞ்சமா? பல காத தூரம் நடந்ததாகக் கம்பன் கூறுகிறான்

*"நடந்தனர் காவதம் பலவும்; நல் நதி*
*கிடந்தன, நின்றன; கிரிகள் கேண்மையின்*
*தொடர்ந்தன, துவன்றின ; சூழல் யாவையும்*
*கடந்தனர்............................"*

*(ஆரணிய - சடாயு காண் - 1)*

மிதிலை மாளிகையில் சீதையின் வண்ணச் சீரடிகளுக்கு எத்தகைய பணிவிடைகள் அவளுடைய சேடியரால் செய்யப்பட்டன என்பதை நினைவு கூரும் கம்பன், சீதையின் பாதங்கள் நிலத்தில் நடந்து வர வர, சேடியர்கள் அவள் நடக்கும் வழியெல்லாம் எப்பொழுதும் மலர் தூவிக் கொண்டே சென்றனர் என்கின்றான்.

*"தன் நேர் இல்லா மங்கையர் 'செங்கைத் தளிர் மானே,*
*அன்னே, தேனே, ஆரமிழ்தே' என்று அடி போற்றி*
*முன்னே முன்னே மொய்ம் மலரத் தூவி முறை சார,*
*பொன்னே சூழும் பூவின்................."*

*(பால - மிதிலைக் காட்சி - 30)*

பாதங்களுக்கு உரிமையுடையவள் சீதை. அத்தகைய மென்பாதங்கள் இராமன் பொருட்டன்றி வேறு எவர் பொருட்டு கானகத்தில், கல்லிலும் முள்ளிலும் நடக்கச் சம்மதித்தன?

அரச மாளிகையின் வேளை தவறாத அறுசுவை உணவைப் புறந்தள்ளி விட்டு, இராமன் பொருட்டன்றி வேறு எவர் பொருட்டு கானகத்தில் வேகாத காயும், கிழங்கும், கனியும், அடகும் உண்டு வாழச் சம்மதித்தன? 'இராமன் வாழும் இடமே அயோத்தி' என்று உயிரைத் தொடரும் உடல் போல் இராமனைப் பின் தொடர்ந்து வனம் வந்தவள் சீதை. இராமனுடைய 'பிரிவினும் சுடுமோ பெருங்காடு?' என்று இராமனிடம் வாதம்

புரிந்து வழக்காடி வெற்றி பெற்றுச் சீரையுடுத்தித் திருமகனின் கரம் பற்றிக் கானகம் வந்தவள்.

இத்தகைய திருமகளின் அன்பை அறியாதவனா இராமன்! சீதையின் அன்பில் கட்டுண்டவன் இராமன். அன்புக்கு நிலையமாகும் சீதையைப் பிரிந்த பிறகு இராமனிடம் இதுகாறும் நாம் காணாத இரு பண்புகளைக் காண்கிறோம்.

ஒன்று தன் உயிர் வாழ்க்கையை வெறுக்கும் போக்கு.

இரண்டு பகைவர்களைப் பூண்டோடு ஒழிப்பதாக வஞ்சினம் சாற்றும் பண்பு.

சீதையின்பால் காதல் மேலோங்கிப் புலம்புவதோடு தன் உயிரையே வெறுத்தும் பேசுகிறான் இராமன். பொய்மானைக் கொன்ற பிறகு பன்னசாலைக்கு ஓடி வந்து சீதையை அங்குக் காணாமல் தவிக்கும் இராமன், "இனி தான் உயிர் வாழ்வதற்கு என்ன பொருள்?" என்று நினைக்கிறான்.

*"கைத்த சிந்தையன், கனங்குழை அணங்கினைக் காணான் –*
*உய்த்து வாழ்தர வேறு ஒரு பொருள் இலான்"*

*(ஆரணிய – சடாயு உயிர் நீத்த – 72)*

அடுத்து இராமனைத் தமியன் (தனிமைப்படுத்தப்பட்டவன்) (இலக்குவன் உடன் இருந்தபோதும்) என்கிறான் கம்பன். புண்டரீகக் கண்ணனாகிய இராமன், அவை புனல் பொழியும் தோற்றத்தினனாகவும், எப்பொழுதும் தெளிந்த காட்சியையுடைய செம்மல், இப்பொழுது, குழம்பிய மனத்தனாகவும் காட்சியளிக்கிறான். பிறகு உயிரை வெறுத்துச் சொற்களை உதிர்க்கிறான்.

*"மாண்டேனே அன்றோ? மறையோர் குறை முடிப்பான்*
*பூண்டேன் விரதம்; அதனால் உயிர் பொறுப்பேன்;*
*நீண்டேன் மரம் போல, நின்று ஒழிந்த புன் தொழிலேன்;*
*வேண்டேன், இம் மாமாயப் புன்பிறவி வேண்டேனே!"*

*(ஆரணிய – சடாயு உயிர் நீத்த – 97)*

என்றும்,

*"வன் தாள் சிலை ஏந்தி, வாளிக் கடல் சுமந்து*
*நின்றேனும் நின்றேன்; நெடு மரம் போல் நின்றேனே"*

*(ஆரணிய –.சடாயு உயிர் நீத்த – 98)*

என்றும், தன்னைப் பற்றிக் கழிவிரக்கம் கொண்டு புலம்புகிறான். மேலும், இராமனைக் காண்போர்,

*"மடித்த வாயன்; வயங்கும் உயிர்ப்பினன்,*
*துடித்து வீங்கி, ஒடுங்குறு தோளினன்"*

*(ஆரணிய – அயோமுகி – 9)*

என்று கூறுமளவுக்கு உடல் மெலிவும் அடைந்ததோடு,

*"ஆவி புழுங்க அழுங்குமால் – வாயும் நெஞ்சும்*
*புலர மயங்குவான்"*

*(ஆரணிய – அயோமுகி – 17)*

என்னுமாறும்,

*"உயிர், நெடிது உயிர்ப்பிடை ஊசலாடுவான்"*

*(ஆரணிய – அயோமுகி – 95)*

என்னுமாறும், அவனுடைய ஆளுமையைப் பிறர் கணிக்கும் வண்ணம் தோற்றப் பொலிவிழந்து காணப்படுகிறான். மேலும்,

*"தெரிகணை மலரொடும் திறந்த நெஞ்சொடும்,*
*அரிய வன் துயரொடும், யானும் வைகுவேன்"*

*(கிட்கிந்தா – கார் கால – 87)*

என்றும்,

*"மறந்திருந்து உய்கிலேன்; மாரி ஈது எனின்,*
*இறந்து விண் சேர்வது சரதம்...."*

*(கிட்கிந்தா – கார் கால – 89)*

என்றும், புலம்பித் தன் உயிர் வாழ்க்கையையே வெறுத்தொதுக்குகிறான்.

சீதையைச் சிறை மீட்க ஆகும் காலத்தின் அளவு பற்றி அறியாது மயங்கும் புயல்வண்ணன் "நான் நோயுற்று மாண்டு போனால் மனைவியை சிறை மீட்க இயலாதவன் என்ற பழியிலிருந்தாவது தப்பிக்கலாமே" என்றும் கூட நினைக்கிறான்.

*" ................................. நோய் தெற*
*மாண்டனன் என்றது மாட்சிப்பாலது ஆம்"*

*(கிட்கிந்தா – கார் கால – 90)*

சீதையின் பிரிவாற்றாமை தாளாத காரணத்தால் தன் உயிர் வாழ்க்கையையே வெறுக்கும் இராமனைக் காப்பியத்தில் காண்கிறோம். வாழ்க்கை தரும் அற்ப சுகங்களையும் கூட புறந்தள்ளுகிறான் இராமன். நல்ல உணவும் கூட உண்ண மறுக்கிறான். காப்பியச் சான்று பின்வருமாறு:

கிட்கிந்தையின் அரசனாகிவிட்ட சுக்ரீவன், இராமனைத் தன் மாளிகைக்கு விருந்துண்ண அழைக்கிறான். அதனை இராமன் இரு காரணங்களுக்காக மறுப்பதாகக் கூறுகிறான்.

ஒன்று, சீதையோடு தான் கொண்ட அன்பு ஆத்மார்த்தமானது ஆகையால், அவளன்றித் தனக்கு வேறு இன்பமில்லை என்கிறான். காப்பிய வரிகள்:

*"யாழ் இசை மொழியோடு அன்றி யான் உறும் இன்பம் என்னோ?"*
*(கிட்கிந்தா – அரசியல் – 21)*

இரண்டு, "மனைவியைப் பிரிந்தவனாகிய இராமன், நண்பர்களோடு வாழ்க்கை இன்பங்களை அனுபவித்தானே! இவன் என்ன கணவன்!" என்று உலகம் இகழ்ந்துரைக்கும் பழிக்கு அஞ்சுகிறேன் என்கிறான். காப்பிய வரிகள்:

*" "தேவி வேறு அரக்கன் வைத்த சேமத்துள் இருப்ப, தான் தன்*
*ஆவி போல் துணைவரோடும் அளவிடற்கு அரிய இன்பம்*
*மேவினான், இராமன்" என்றால், ஐய! இவ்வெய்ய மாற்றம்,*
*மூவகை உலகம் முற்றும் காலத்தும், முற்றவற்றோ?"*
*(கிட்கிந்தா – அரசியல் – 22)*

இவ்வாறு, சீதையின் பால் காமமும் காதலும் உற்று, அவளது பிரிவினைச் சகியாது இராமன் புலம்பித் தளர்கிறான் என்றால், அதற்கு அடிப்படையாக இருந்த உணர்வு என்ன? தன் மனைவி தன்னையன்றிப் பிறிதொரு ஆடவனுக்குக் கண நேரம் கூட தன் நெஞ்சத்தில் இடம் கொடுத்திருக்கமாட்டாள் என்ற நம்பிக்கை உணர்வுதான் அது. திருமணத்துக்கு முன் சீதை பிறன் மனைவியாக இருப்பாளோ என்று ஐயுற்றுப் பின் மனம் தெளிபவன், இப்பொழுது இராவணனுடைய காமத்துக்குத் தன் மனைவி பணிந்து போயிருப்பாள் என்று ஐயுற்றிருந்தால், அவள் மேனியழகை நினைந்தும், அகவாழ்வில் அவள் அளித்த இன்பத்தை நினைந்தும் விரகதாபத்தில் இராமனைப் போன்ற உத்தமன் ஒருவன் உருகுவானா? இராமனின் மனமே சீதையின் கற்புக்குச் சான்றாக நின்றது. **எனவே அவன் ஒரு கணப் பொழுது கூட இறுதி வரை**

சீதையின் கற்பில் ஐயுறவில்லை என்பதே காப்பியம் காட்டும் உண்மை என்பது தெளிவாகிறது.

அடுத்து, தனக்கு இன்னா செய்தார்க்கும் இனியவே செய்ய எண்ணும் அருள் உள்ளம் கொண்ட இராமன், சீதையை இழந்தபின்னரோ பகைமையைத் தக்க வைக்கும் இயல்பினன் ஆகிறான். உள்ளத்தில் பகையை நிறுத்தி வஞ்சினம் உரைக்கும் இராமனை – இதுகாறும் நாம் கண்டிராத புதிய இராமனை – சீதையின் பிரிவுக்குப் பிறகு காணுகிறோம். இராவணனுடைய ஒற்றர்களிடம் தன் படைத்திறம் பற்றியும், தன் வீரம் பற்றியும், இராவணாதியரைப் பகை வென்று பழி முடிக்க உள்ள தன் எண்ணத்தைப் பற்றியும், இராவணனிடம் இயம்புமாறு ஆணையிட்டு அவர்களை இராவணனிடம் திருப்பி அனுப்புகிறான்.

*"கொத்துறு தலையான் வைகும் குறும்புடை இலங்கைக் குன்றம்*
*தத்துறு தட நீர் வேலைதனின் ஒரு சிறையிற்று ஆதல்*
*ஒத்துற உணர்ந்திலாமை, உயிரொடும் உறவினோடும்*
*இத்துணை இருந்தது என்னும் தன்மையும் இயம்புவீரால்*
*(யுத்த – ஒற்றுக் கேள்வி – 34)*

*"எல்லை இல் இலங்கைச் செல்வம் இளையவற்கு ஈந்த தன்மை*
*சொல்லுதி; மகர வேலை கவிக் குல வீரர் தூர்த்துக்*
*கல்லினின் கடந்தவாறும் கழறுதிர்; காலம் தாழ்த்த*
*வில்லினர் வந்தார் என்றும் விளம்புதிர் – வினையம் மிக்கீர்"*
*(யுத்த – ஒற்றுக் கேள்வி – 33)*

*" 'சண்டம் கொள் வேகமாகத் தனி விடை உவணம் தாங்கும்,*
*துண்டம் கொள் பிறையான், மௌலித் துளவினானோடும், தொல்லை*
*அண்டங்கள் எவையும் தாங்கிக் காப்பினும், அறம் இலாதாற்*
*கண்டங்கள் பலவும் காண்பென்' என்பதும் கழறுவீரால்"*
*(யுத்த – ஒற்றுக் கேள்வி – 35)*

*" 'தீட்டுறு மழு வாள் வீரன் தாதையைச் செற்றோன் சுற்றம்*
*மாட்டிய வண்ணம் என்ன, வருக்கமும் மற்றும் முற்றும்*
*வீட்டி, என் தாதைக்காக மெய்ப் பலி விசும்புளோரை*
*ஊட்டுவென் உயிர் கொண்டு' என்னும் வார்த்தையும் உணர்த்துவீரால்"*
*(யுத்த – ஒற்றுக் கேள்வி – 36)*

*" 'தாழ்வு இலாத் தவத்து ஓர் தையல் தனித்து ஒரு சிறையில் தங்க,*
*சூழ்வு இலா வஞ்சம் சூழ்ந்த தன்னைத் தன் சுற்றத்தோடும்,*
*வாழ்வு எலாம் தம்பி கொள்ள, வயங்கு எரி நரகம் என்னும்*
*வீழ்வு இலாச் சிறையின் வைப்பென்' என்பதும் விளம்புவீரால்"*
*(யுத்த – ஒற்றுக் கேள்வி – 37)*

நெருக்கடி நேரும் காலங்களிலெல்லாம் அமைதி காக்கும் இயல்புடைய இராகவன், சீதையின் பொருட்டே, காப்பியத்தில் முதன் முறையாக வாய் திறந்து வீர வசனங்கள் பேசிச் சொற்களாலேயே போர்ப்பறை முழக்கும் போர்த்தொழில் இராகவனாகிறான். "போர்க்களத்தில் ஒப்பாரிக்கு இடம் இல்லை" என்ற பழமொழிக்கிணங்க, பகைவரைத் தெறுதலும், ஒறுத்தலுமே வீரம் என்று போற்றப்படுதலால், இந்திரசித்துவின் தலையை இலக்குவன் தன் வடிசிலைக் கணையால் அறுத்து அதனை இராமனுடைய திருவடிகளில் சமர்ப்பிக்கும் பொழுது, அச்செய்கை கண்டு பேச்சும் உரைப்பதற்கின்றிக் களிகொள் மனத்தவனாய் ஆனான் இராமன். அவ்வமயம், இராமன் மனக்களிப்போடு கூறும் வாசகங்கள் பின்வருவன: " 'கம்பமதத்துக் களியானைக் காவல் சனகன் பெற்றெடுத்த, கொம்பும் என் பால் இனி வந்து குறுகினாள் என்று அகம் குளிர்ந்தேன்' " மனம் குளிர்ந்ததோடு தம்பியை இயல்பாகக் கட்டித் தழுவிக் களிப்பெய்துகிறான் இராமன். எந்த உணர்வின் அடிப்படையில் இராமன் களிப்பெய்துகிறான்? இந்திரசித்தனைக் கொன்றுவிட்டால் இராவணனை வெல்வது என்பது இராமனுக்குப் பிள்ளை விளையாட்டுதான். எனவே சீதையின் சிறை மீட்புப் பணி எளிதாகத் தனக்கு முடிந்துவிடும் என்று எண்ணுகிறான். அது மட்டுமல்ல; சீதை தன்னை வந்தடைந்துவிட்டதாகவே எண்ணுகிறான். எனவேதான், "கொம்பும் என் பால் இனி வந்து குறுகினாள்" என்று அகமகிழ் வெய்துகிறான். 'கற்பைத் தவறவிட்டவள் தன் கருத்தில் உறையும் சீதை' என்று இராமன் எண்ணியிருந்தால் மேற்கண்டவாறு அகமகிழ்வெய்தியிருப்பானா? "சீதையை எப்பொழுது சிறை மீட்பது?" , "சீதை தன்னை எப்பொழுது வந்தடைவாள்?" என்ற கேள்விகளும், அக்கேள்விகளால் உருவாகும் கவலையும் இராமனின் நெஞ்சகத்தை வாள்கொண்டு அறுத்துக் கொண்டிருந்தன. அதனால் கடந்த காலங்களில் உள்ளம் தளர்ந்தவனாகவும், வீரவாய்ச் சொற்களினால் தனக்குத்தானே வலிமை ஏற்றிக்கொள்கிறவனாகவும் இருந்த இராமன், இப்பொழுது மாறிய பண்பினனாக மகிழ்ச்சியுடன் தோற்றம் தருவது, சீதையின் இருப்பிடத்திற்கு அண்மையில் தான் வந்துவிட்ட களிப்பினால் அல்லவா?

சீதையைத் தீண்டும் இன்பத்தையும் இராமன் வேண்டுகிறான் என்பதற்குச் சான்றாக காப்பியத்தில் ஒரு மன நெகிழ்ச்சியை ஏற்படுத்தும் நிகழ்ச்சியை விவரிக்கிறான் கம்பன்.

...................... சீதையை இலங்கையில் கண்டு மீளும் அனுமன், சீதை இராமனுக்கு அனுப்பிய அடையாளப் பொருளாகிய சூடாமணியை இராமனிடம் அளிக்கின்றான். அந்த சூடாமணியைத் தன் கரத்தினால் தீண்டிப் பெற்ற இராமன் சீதையைத் தீண்டும் மன உணர்வைப் பெற்றான். முதன் முதலில் கன்னி மாடத்தில் கண்டு தன் கருத்தில் பதிந்துவிட்ட காதலியாகிய சீதையைப் பாரும் ஊரும் அறிய மனைவியாக்கிக் கொண்ட சமயத்தில், மணமேடையில் தீ வலம் வந்த பொழுது, சீதையின் மலர்க்கரத்தை முதன் முதலில் தொட்டபொழுது எத்தகைய உணர்ச்சி வேகத்தைப் பெற்றானோ அத்தகைய உணர்ச்சி வேகத்தை இப்பொழுது சீதை அணிந்திருந்த சூடாமணியைத் தொட்டபொழுதும் இராமன் உற்றான் என்கிறான் கம்பன்.

*"ஐயனுக்கு, அங்கி முன்னர், அங்கையால் பற்றும் நங்கை*
*கை எனல் ஆயிற்று அன்றே – கை புக்க மணியின் காட்சி"*
*(சுந்தர – திருவடி தொழுத – 47)*

அம்மட்டோ! சீதையின் பிரிவும் எதிர்காலத்தின் நிச்சயமற்ற தன்மையும் சேர்ந்து இதுகாறும் சீதைபால் இராமனுக்கு எழும் காம உணர்வையே மழுங்கச் செய்திருந்தன. சீதையன்றிப் பிற பெண்டிரைத் தீண்டியறியாச் செம்மலாகிய இராமன் – அவளிடமன்றிப் பிற பெண்டிர் எவர் பாலும் காம எழுச்சியை உணர்ந்திராத உயர் நடையினனாகிய இராமன் – சீதையின் உடலைத் தீண்டிய சூடாமணியைத் தான் தீண்டிய கணத்தில் தன்னுள்ளே மறுகியும் மறைந்தும் கிடந்த காம உணர்ச்சியைச் சிறிது சிறிதாக மீண்டும் பெறும் நிலையினனாகினான் என்றும் அதனால் இராமன் உள் வலிமையுடையவனும் ஆனான் என்றும் கூறுகிறான் கம்பன்.

*"பை பையப் பயந்த காமம் பரிணமித்து உயர்ந்து பொங்கி,*
*மெய்யுற வெதும்பி, உள்ளம் மெலிவுறு நிலையை விட்டான்"*
*(சுந்தர – திருவடி தொழுத – 47)*

உள் வலி உயர்ந்து ஓங்கி எழுந்த பிறகு, "இனி ஒரு கணமும் காலம் தாழ்த்தக்கூடாது. சீதையை மீண்டும் பெற்று உரிமையாக்கிக் கொள்வதே தனக்குற்ற ஒரே குறிக்கோள்" என்று எண்ணுகிறான். அந்த எண்ணத்தின் கூர்மையால்

"தூண் திரண்டனைய தோளான், பொருக்கென எழுந்து சொன்னான்"

(சுந்தர – திருவடி தொழுத – 49)

பொருக்கென எழுந்து என்ன சொன்னான்? "எழுக வெம் படைகள்!" என்றான். இராமன் எந்த அளவுக்கு அழுத்தமாகவும் ஆழமாகவும் இந்த வார்த்தைகளைக் கூறினான் என்றால், 'எ' என்று அவன் கூறிய அளவிலேயே படைகள் எழுந்து, முரசு கொட்டி முழங்கிக் கடல்போலப் பரந்து இலங்கை இருக்கும் தென்திசைப் பக்கம் நீண்டு வளர்ந்து கொண்டே சென்றது என்கிறான் கம்பன்.

*"எழுக, வெம் படைகள்!" என்றான்; 'எ' எனும் அளவில் எங்கும்*
*முழு முரசு ஏற்றி, கொற்ற வள்ளுவர் முடுக்க முந்தி*
*பொழி திரை அன்ன வேலை புடை பரந்தென்னப் பொங்கி,*
*வழுவல் இல் வெள்ளத் தானை, தென் திசை வளர்ந்தது அன்றே!"*

*(சுந்தர – திருவடி தொழுத – 50)*

எனவே இராமன் தன் மனைவியின் கற்பு நிலை பற்றி வாழ்க்கையில் எந்தக் கட்டத்திலும் ஐயுறவே இல்லை என்பதே காப்பியம் காட்டும் உண்மை.

இராமனுடைய தனிப்பட்ட மனநிலை இப்படி இருக்க, சீதையின் கற்பு காப்பியத்தில் இராமனுடைய அணியினரால் எவ்வாறு உறுதி செய்யப்படுகிறது என்பதைப் பற்றியும் அறிவது அவசியம்.

இலங்கை மீளும் அனுமன் மற்ற வானரர்களிடம்,

*"ஆண்தகை தேவி உள்ளத்து அருந் தவம் அமையச் சொல்லி"*

*(சுந்தர – திருவடி தொழுத – 7)*

சீதையின் கற்பு நிலையை விளக்கினான் என்பது காப்பிய வரிகள்.

'கண்டனன் கற்பினுக்கணியைக் கண்களால்' என்று பலரும் அறியக் கூறிக் கொண்டு வந்து இராமனைத் துதிக்கும் அனுமன், "இலங்கு நீர் இலங்கை வெற்பில், கற்பினுக்கணியது ஒன்று களிநடம் புரியக் கண்டேன்" என்று மீண்டும் கூறுகிறான். அத்துடன் சீதையை, இலக்குவன் அமைத்திருந்த பன்னசாலையோடு இராவணன் தூக்கிச் சென்றான். ஆகையால் 'சீதையை அவன் மெய் தீண்டவே இல்லை' என்ற உண்மையை மீண்டும் மீண்டும் உரைக்கிறான்.

*"மண்ணொடும் கொண்டு போனான் - வான் உயர் கற்பினாள்தன்*
*புண்ணிய மேனி தீண்ட அஞ்சுவான்"*
*(சுந்தர - திருவடி தொழுத - 32)*

*"தீண்டிலன் என்னும் வாய்மை - திசைமுகன் செய்த முட்டை*
*கீண்டிலது; அனந்தன் உச்சி கிழிந்திலது எழுந்து வேலை*
*மீண்டில; சுடர்கள் யாவும் விழுந்தில; வேதம் செய்கை*
*மாண்டிலது; - என்னும் தன்மை வாய்மையால், உணர்தி மன்னோ?"*
*(சுந்தர - திருவடி தொழுத - 33)*

"இராவணன் சீதையை மெய் தீண்டிலன்" என்பது கவிக்கூற்றாகவும் காப்பியத்தில் காணப்படுகிறது.

*"வஞ்சியை அரக்கனும் வல்லை கொண்டுபோய்,*
*செஞ்செவே திரு உருத் தீண்ட அஞ்சுவான்,*
*நஞ்சு இயல் அரக்கியர் நடுவண், ஆயிடை,*
*சிஞ்சுப வனத்திடைச் சிறை வைத்தான் அரோ"*
*(ஆரணிய - சடாயு உயிர்நீத்த - 59)*

தேவியின் கற்பும், நின் அருளும், நல் அறனும் அவளைத் தொடர்ந்து பாதுகாத்து வருகின்றன என்று மீண்டும் கூறுகிறான். மேலும், வீடணன், இராவணனிடமிருந்து பிரிந்து வந்து இராமனிடம் அடைக்கலம் வேண்டி வரும் பொழுது, இராமன், சுக்ரீவன், அனுமன் முதலான வானரத் தலைவர்கள் அடங்கிய மந்திரக்குழுவிடம் ஆலோசனை கேட்கிறான். அப்பொழுது தன் கருத்தைக் கூறும் அனுமன், பலரும் நிறைந்துள்ள அச் சபையில் இராவணனுக்குள்ள ஒரு சாபம் பற்றிக் கூறுகிறான். அந்தச் சாபம் யாதெனின், "முன்னொரு காலத்தில் வேதவதியாக வாழ்ந்த புஞ்சிகஸ்தலை என்ற அந்தணப் பெண் நான்முகனைக் குறித்துத் தவமிருந்து வரம் பெறும் முயற்சியில் ஈடுபட்டிருந்தாள். அப்பொழுது கயிலையங்கிரியிலிருந்து மீண்டு திரும்பிய இராவணன் அத் தவத்தி மேல் ஆசை கொண்டான். அவளுடைய விருப்பத்தை மீறி அவளைத் தீண்டினான். தீண்டிய காலை வேதவதி மனம் நொந்து துயருற்று, "இனி உன்மேல் விருப்பமில்லாத அயல் மகளை நீ தீண்டுவாயாயின், அப்பொழுதே உன் தலை சிதறி அழிவதாக" என்று இராவணனைச் சபித்து தீயுள் புக்கு மாய்ந்தாள் . இந்தச் சாபம் பற்றிச் சீதைக்குத் தெரியப்படுத்தி, அவளுடைய மனப் பதற்றத்தைக் குறைத்து சீதையிடம் இனிமையோடு பழகியவள் வீடணனின் மகள் திரிசடையே" என்றும் கூறுகிறான் அனுமன்.

*“அன்னவன் (வீடணன்) தனி மகள், “அலரின்மேல் அயன்*
*சொன்னது ஓர் சாபம் உண்டு, உன்னனத் துன்மதி,*
*நன்னுதல்! தீண்டுமேல் நணுகும் கூற்று” என,*
*என்னுடை இறைவிக்கும் இனிது கூறினாள்”*
*(யுத்த - வீடணன் அடைக்கலம் - 98)*

இராவணனுக்குற்ற சாபத்தைப் பற்றி அறிய வந்த பின்னர், இராவணனின் கழுத்துக்கு மேல் அவனுடைய தலை இருத்தலாலேயே சீதையை அவன் தீண்டவில்லை, என்பதை அனைவரும் உணரவே செய்தனர்.

மேலும் இராமனிடம் அடைக்கலம் பெறுவதில் வெற்றி பெறும் வீடணன், சிறிது காலத்தில் இராமன் அணியைச் சேர்ந்த வானரத் தலைவர்கள், அமைச்சர்கள் ஆகியோருடைய அன்பையும் பெற்று விடுகிறான். அவர்களுடன் அவன் கொண்டிருக்கக்கூடிய உரையாடலில் தன்னுடைய செய்கைக்கான நியாயத்தை மீண்டும் மீண்டும் உறுதிப்படுத்த வேண்டி, சீதையின் கற்புத்திறம் பற்றியும், இராவணனுக்குற்ற சாபம் பற்றியும் இராவணனுடைய வேண்டுதலுக்குச் சீதை இணங்காத நல்றைச் செயலால் நெகிழ்ந்து தன் மகளாகிய திரிசடையை சீதைக்குத் தோழியாக்கி இருப்பதைப் பற்றியும் எல்லாம் விளக்கமாக வீடணன் மீண்டும் மீண்டும் கூறியிருப்பான் என்பதும் உறுதி. சீதையின் கற்பு பற்றிய இந்த உறுதிமொழிப் பேச்சுக்கள் எல்லாம் உலகத்தாருக்கே அன்றி இராமனுக்கல்ல. **உலகத்துக்குத்தான் சான்றுகள் சாட்சியங்கள் வேண்டும். ஆனால் இராமனுக்கு அவன் அகவுணர்வே சாட்சியாகும்.** எனவே அனுமன் வீடணன் ஆகியோருடைய உரைகளெல்லாம் இராமனுக்கு வெறும் செய்திகளே.

எனவே, இதுகாறும் கூறப்பட்ட காப்பியச் செய்திகள், இராமன் சீதையின் கற்பில் ஐயுறவு கொள்ளவில்லை என்பதோடு அவளை மீண்டும் பெற்று மகிழவேண்டும் என்ற காதல்நிறை மனத்தினனாகவும் இருந்தான் என்பதை நமக்குத் தெற்றென உணர்த்துகின்றன. **அகமுக நோக்கில் சீதையின் தூய்மையை ஐயமற உணர்ந்தவன் இராமன் என்பதில் இனி இரண்டு கருத்துக்கு இடமேயில்லை.**

ஆயினும், இராவணனைப் பகை முடித்து இராமன் கொண்டாடும் வெற்றி விழாவில், தன் தூய்மையை நிருபிக்கச் சீதை தீக்குளிக்கத்தான் செய்தாள். இராமன் அந்நிகழ்ச்சிக்குச் சான்றாக நிற்கவும்தான் செய்தான். இது எவ்வாறு நிகழ்ந்தது? ஆய்வு அவசியம்.

⌘ ⌘ ⌘

# எதிர் நின்ற இராமன்

காப்பியத்தில், இராமன், சீதையின் வரவு நோக்கி இரு வேறு கால கட்டங்களில் காத்திருக்கிறான்.

ஒன்று, பாலகாண்டத்தில் சீதையை மணம் புரியும் நாளில் மணவறையில் அவளுக்காகக் காத்திருக்கிறான்.

இரண்டு, யுத்த காண்டத்தில் சீதையைச் சிறை மீட்டு அழைத்து வர வீடணனுக்குப் பணித்துவிட்டு வெற்றி விழாக் களத்தில் அவளுடைய வரவு நோக்கிக் காத்திருக்கிறான்.

இவ்விரு காத்திருப்புக்களின்போதும் இராமன் இரு வேறான மனநிலைகளில் உள்ளான் என்பதை முதலில் நாம் உணர வேண்டும்.

மணவறையில் காத்திருக்கும் பாலகாண்டத்து இராமன், வாழ்க்கை ஏட்டின் இனிமையான பக்கங்களை மட்டுமே புரட்டிப் பார்த்திருந்த அரச குமாரன். மேலும், தன் கன்னிக்கருக்கழியாத இளம் பருவத்தில் ஒரு பெண்ணைக் கண்டவுடன் மனம் பறிகொடுத்துவிட்டுக் காதல் நினைவில் கரைந்துருகும் இளங்காளைப் பருவத்தினன்.

கன்னி மாடத்தில் மின்னலைப் போல் தோன்றி மறைந்த பெண்ணொருத்தியின் தன்மை பற்றி ஒன்றும் அறிய இயலாதவனாக அவனுடைய இளம் பிராயத்துக்கே ஒத்த வகையில் காதல் உணர்வில் கசிகிறான்.

*"முன் கண்டு முடிப்ப அரு வேட்கையினால்,*
*என் கண் துணைகொண்டு, இதயத்து எழுதி,*
*பின் கண்டும், ஓர் பெண் கரை கண்டிலெனால்;*
*மின் கண்டவர் எங்கு அறிவார் வினையே?"*

*(பால – கடிமண – 13)*

மின்னலைப் போல் தோன்றி மறைந்த சீதையைப் பற்றியே எண்ணியிருக்கும் இராமன், அவள் மணிமண்டபத்துக்கு வரும் கணத்துக்காகக் காத்திருக்கிறான். மணவறையில் நிற்கும் இராமனுடைய மனத்தில் சீதை மாட்டு மேவும் காதல் உணர்வு ஒன்றைத் தவிர வேறு எந்த உணர்வும் இல்லை. வாழ்க்கை பற்றிய கவலைகளும் இல்லை.

ஆனால் யுத்த காண்டத்து இராமனோ விதியின் கைகளால் விளையாட்டுப் பொம்மையாக உருட்டப்பட்டு வாழ்க்கையின் துயரத் தழும்புகளை மனத்தில் ஏற்றுக் கொண்டு நிற்பவன். இப்பொழுதும் சீதை பால் எழும் காதல் உணர்வுக்குக் குறைவு இல்லைதான்! ஆனால் அந்த உணர்வு மட்டும் மனத்தில் மேவிய நிலையில் இப்பொழுது இராமன் நிற்கவில்லை. ஒரு பெரும் பகை முடித்த மாவீரனாக இப்பொழுது இராமன் வெற்றி விழாக் களத்தில் நிற்கிறான். அத்துடன் அயோத்திக்கு மீண்டு செல்ல வேண்டும் என்ற கடமையுணர்வு மனத்தை அழுத்தவும் நிற்கிறான். அனைத்துக்கும் மேலாக, சீதையைப் பிரிந்த நாள் முதலாக அடுக்கடுக்காகப் பல துன்பங்களைச் சந்தித்து, உடல், உள்ளம், உணர்வு ஆகிய பல களங்களிலும் காயப்பட்டு நிற்கிறான் என்பதை நாம் உணர வேண்டும்.

சீதையைப் பிரிந்த பிறகு, இராமனுக்கு ஏற்பட்ட துன்பங்களை வரிசையாகப் பட்டியலிட்டால்தான் மானுடன் ஒருவன் பட முடியாத துயரங்களையெல்லாம் பட்டவன் இராமன் என்பதை நாம் உளம் கொள்ள முடியும். எனவே எத்தகைய துன்பங்களின் சுமைகள் அழுத்தும் மனத்தவனாக இராமன் சீதையை எதிர்நோக்கி நிற்கிறான் என்பதைப் பற்றிப் பகுதி பகுதியாக ஆராய முற்படலாம்.

கானகம் நண்ணியது முதல் இராமனுடைய மனநிலை எப்படி இருந்தது என்பதிலிருந்து தொடர்ச்சியாக அவன் மனநிலையை ஆராயலாம்.

முதலில் நான்மறை ஓதும் முனிவர்களைத் தீவினை அரக்கர்களிடமிருந்து காக்கும் பொறுப்பு தனக்கு ஏற்பட்டதைப் பெரும் பேறாகக் கருதி, அக்கடமையைச் செவ்வனே ஆற்றி வந்தான்.

*"தையல் தன் கற்பும், தன் தகவும், தம்பியும்*
*மைஅறு கருணையும், உணர்வும், வாய்மையும்*
*செய்ய தன் வில்லுமே, சேமமாகக் கொண்டு"*

*(அயோத்தி – தைலம் ஆட்டு – 47)*

வனத்தில், இளையோன், சீதை ஆகியோரிடத்து எழுகின்ற காதலுடனும், இயற்கையின் எழிலை இதயத்தால் அனுபவித்தும் இன்பமாக வாழ்ந்தான் ஐயன் இராமன். அந்த இன்ப வாழ்க்கைக்கு ஊறுவிளைவித்தான் இராவணன். சீதையை அரக்கன் ஒருவன் சிறையெடுத்ததை அறிந்த பின்னர் அவன் பட்ட துன்பம் கொஞ்சமா? நஞ்சமா? அவள் இருக்கும் திசையறியாது திகைக்கிறான்; பிறகு தன் தந்தைக்கு ஒப்பான சடாயுவை இழக்கிறான்; சீதையைத் தேடி வரும் வழியில் நீர் கொண்டு வரச் சென்ற இளையோனைக் காணாமல் பரிதவிக்கிறான்; சீதையைச் சிறை மீட்க வேண்டி சுக்ரீவனோடு கொள்ளும் நட்பினால், வாலி வதம் எனும் பழியேற்கிறான்; இல்லறம் மட்டுமன்றி வில்லறம் துறந்தமை குறித்து வருந்தி அதற்குக் கழுவாயாகத் தன் விரத வாழ்க்கையை மேலும் கடுமையாக்குகிறான். கார் காலம் முழுதும் செயல் ஏதுமின்றி வறிதே கழியக் கழிய உடலும் உள்ளமும் மெலிய வெதும்பிச் சாம்புகிறான். இவற்றையெல்லாம் மனத்துட்கொண்டு இப்பொழுதுள்ள இராமனுயை மனநிலையை அறிய வேண்டும். அதற்கு அவனுக்கேற்பட்ட இடர்களின் பல பரிமாணங்களை ஒவ்வொன்றாக ஆய்வு செய்வது அவசியம்.

* * * * *

மனைவியைத் தொலைத்துவிட்ட ஒருவனுடைய மன உணர்வு எந்த அளவுக்குச் சிதைவுக்கு ஆளாகும் என்பதற்கு இராமனே சாட்சியாக நிற்கிறான். தன் ஆண்மையுணர்வு பங்கமுற, தன் மான உணர்வு பழுதுற, கையறு நிலையில் கலங்கும் இராமன் தன் வீரத்துக்கு ஏற்பட்ட குறைவையும், ஆளுமையில் படிந்துவிட்ட பழியையும் எண்ணி எண்ணிக் கழிவிரக்கத்தால் கண்ணீர் விடுகிறான்.

*"பொன் தோடு இவர்கின்ற பொலங் குழையாள் –*
*தன் தேடி வருந்து தவம் புரிவேன்"*

*(ஆரணிய – அயோமுகி – 71)*

மேலும் தன்மான உணர்வு இழப்பு தனக்கு ஒரு நோயாகிவிட்டதாக உணர்கிறான். அவமான உணர்வில் உறக்கம் கொள்ளாது தவிக்கிறான்.

*"மயில் இயல் பிரிந்தபின், மான நோயினால்,*
*அயில்விலன் ஒரு பொருள்; அவலம் எய்தலால்*
*துயில்விலன் என்பது சொல்லற்பாலதோ?"*

*(ஆரணிய – அயோமுகி – 95)*

*"புண்ணின் எரியும் ஒரு நெஞ்சம்"*

*(கிட்கிந்தா – சவரி பிறப்பு நீங்கு – 24)*

கொண்டவனாகிய இராமன், மனைவியுற்ற துயரம் தீர்க்க வகையறியாதவன் என்ற பெரும் பழியைத் தான் பெற்றுள்ளதாகக் கூறி, செயல் திறமில்லாத தன் வில் தாங்கிய தோளினைப் பழிக்கிறான். வில் திறத்தால் சீதையை வென்று மணம் புரியும் காலத்தில் இராமன் தன் வீரத்தின் பெருமை விளங்கத் தோன்றுகிறான். ஆனால் சீதையைப் பிரிந்த பின்னர் தன் வீரத்தின் மீதே இராமனுக்கு ஐயம் ஏற்பட்டு விடுகிறது. எனவே பின்வரும் வகையில் தன் பழுதுற்ற வீரம் பற்றிப் புலம்புகிறான்

*"வாள் நெடுங் கண்ணி என் வரவு நோக்க, யான்,*
*தாள் நெடுங் கிரியொடும், தடங்கள்தம்மொடும்*
*பூணொடும் புலம்பினேன் பொழுது போக்கி, இந்*
*நாண் நெடுஞ் சிலை சுமந்து, உழல்வென் ; நாண் இலேன்"*

*(கிட்கிந்தா – கலன் காண் – 21)*

*"இந்திரற்கு உரியது ஓர் இடுக்கண் தீர்த்து, இகல்*
*அந்தகற்கு அரிய போர் அவுணன் – தேய்த்தனன்,*
*எந்தை ; மற்று, அவனின் வந்து உதித்த யான், உளேன்,*
*வெந் துயர்க் கொடும் பழி வில்லின் தாங்கினேன்"*

*(கிட்கிந்தா – கலன் காண் – 24)*

சாதனைகள் மிகப் புரிந்த பெருமையும் பீடும் மிக்க முன்னோர் பலர் உதித்த குலத்தில் தானும் பிறந்தது பிழை என்றும், ஒரு மங்கையின் துயர் தீர்க்க வகையறியாத குறை தனக்குப் பெரும் பழி என்றும் அலமருகின்றான்.

*"கருங் கடல் தொட்டனார்; கங்கை தந்தனர்;*
*பொரும் புலி மானொடு புனலும் ஊட்டினர்;*
*பெருந் தகை என் குலத்து அரசர்; பின், ஒரு*
*திருந்திழை துயரம் நான் தீர்க்ககிற்றிலேன்"*

*(கிட்கிந்தா – கலன் காண் – 23)*

'ஒரு பழியிலிருந்து தப்பிக்க மகுடத்தை விட்டொழித்தேன்; ஆனால் கரும்பு நிகர் கிளவி பேசும் துணைவியைத் தொலைத்து விட்டுப் பெரும்பழி சூடிக் கொண்டேன்' என்று மீண்டும் மீண்டும் நாணுகிறான்.

*" 'விரும்பு எழில் எந்தையார் மெய்ம்மை வீயுமேல்,*
*வரும் பழி' என்று, யான் மகுடம் சூடலேன்;*
*கரும்பு அழி சொல்லியைப் பகைஞன் கைக்கொள*
*பெரும் பழி சூடினேன்; பிழைத்தது என் அரோ?"*
*(கிட்கிந்தா – கலன் காண் – 25)*

சான்றோர் பொதுவாகப் பழிக்கு நாணுவர்.

"பழியெனில் உலகுடன் பெறினும் கொள்ளலர்" என்பது புறநானூற்று உரையல்லவா?

சான்றாண்மை மிக்க இராமன் பழிக்கு அஞ்சுபவனாக இருப்பதால், சானகியை அந்நியனுக்குப் பறி கொடுத்துவிட்டு அவமான உணர்ச்சியில் தவிக்கிறான்; அவளை உடனே மீட்க இயலாதது தனக்குற்ற பழியென்று நாணுகிறான்.

மீண்டும் மீண்டும் செயல் திறம் மிக்க தன் வெஞ்சிலையும் தூணியும் வெற்றுச் சுமையாயினவே என்ற கழிவிரக்க உணர்விலிருந்து மீள முடியாமல் தவிக்கிறான்.

*"தூ நிறச் சுடு சரம் தூணி தூங்கிட*
*வான் உறப் பிறங்கிய வைரத் தோளொடும்*
*யான் உறக் கடவதே இதுவும்? இந் நிலை*
*வேல் நிறத்து உற்றது ஒத்துழியும், வீகிலேன்"*
*(கிட்கிந்தா – கார் காலம் – 86)*

*"தெரி கணை மலரொடும், திறந்த நெஞ்சொடும்*
*அரிய வன் துயரொடும், யானும் வைகுவேன்"*
*(கிட்கிந்தா – கார் காலம் – 87)*

வனம் புகுந்து தான் செய்துள்ள காரியம் எள்ளற்குரியது என்று வெதும்புகிறான்.

*"கானகம் புகுந்து யான் முடித்த காரியம்,*
*மேல் நகும், கீழ் நகும்; இனி என் வேண்டுமோ?"*
*(கிட்கிந்தா – கார் காலம் – 88)*

"இந்த மாரிக்காலம் தொடருமானால், சீதையைக் கண்டுபிடிக்க முடியாத நிலையில், இறந்துபடுவது மட்டுமே நான் பழியிலிருந்து தப்பிப்பதற்குரிய ஒரே வழி'' என்கிறான்.

*"மறந்திருந்து உய்கிலேன்; மாரி ஈதுஎனின்*
*இறந்து விண் சேர்வது சரதம் ; இப் பழி*
*பிறந்து பின் தீர்வலோ?............*

*(கிட்கிந்தா – கார் காலம் – 89)*

" 'இவள் உன் கையடை' என்று என்னிடம் சீதையை அடைக்கலப்படுத்திய சனகனுக்கு நான் என்ன மாற்றுரை கூறி அவனை ஆற்றுவிப்பேன்"என்று அயர்கிறான்.

சீதை இராமனுடைய மனைவி என்பதோடு, அவள் அவனது ஆட்சிக்குட்பட்ட குடிமகளும் ஆவாள். அயோத்தி சென்று இராமன் முடிசூடி உலகு புரக்கும் கடமையை ஏற்கப் போகிறவன். கானகத்துத் தவ வாழ்க்கையில் தன் கருத்துக்கிசைந்து வாழ்ந்த காதலியைத் தொலைத்துவிட்டுப் பழி தீர்க்காமல், பகை முடிக்காமல் அவன் அயோத்திக்குத் திரும்புவதை எவர்தான் வரவேற்க முடியும்?

இதே கருத்தை அசோகவனத்தில் இருக்கும் சீதையும் கூறுகிறாள். "கணவன் என்னும் நிலையில் இராமன், தன்னை அன்புகூர்ந்து எண்ணவில்லையாயினும், இரவி குலத்துத் தோன்றல் என்ற நிலையில், தன் குலத்துக்கேற்ற வீரம் காப்பதற்காகவாவது என்னை மீட்டெடுக்க வேண்டும் என்று இராமனிடம் கூறு" என்று அனுமனிடம் வேண்டுகிறாள்.

''சீதையைக் காணாமல் போக்கியது இராமனுடைய குலத்துக்கே பெரும் பழியாகி விட்டது'' என்று சடாயுவும் கூறுகிறான்.

*"வம்பு இழை கொங்கை வஞ்சி வனத்திடைத் தமியள் வைக,*
*கொம்பு இழை மானின் பின் போய், குலப்பழி கூட்டிக் கொண்ணீர்"*

*(ஆரணிய – சடாயு உயிர்நீத்த – 14)*

உயர்ந்த கொள்கைகளைத் தன் வாழ் நெறியாகக் கொண்ட இராமனுக்கு விதிவசத்தால் நேர்ந்துவிட்ட இப்பெரும் பழி அவனுடைய மான உணர்வுக்கு ஊறு விளைவித்து அவனுடைய உள்ளத்தை வாள் கொண்டு அறுக்கிறது என்பது

வெள்ளிடை மலை. தன் வீரத்துக்கு ஏற்பட்ட பழியால் நாணமுற்று மன உளைச்சலுக்கு ஆளாகி உடலும், உள்ளமும் நலிவுற்று மெலிவுற்று மனத்தில் ஆறாத புண்கள் சுமந்த உள்ளத்தினனாக இராமன் சீதையை எதிர்கொள்ள நிற்கிறான்.

* * * * *

அடுத்து, நண்பன் என்று தான் ஏற்றுக் கொண்ட சுக்ரீவனோடு உள்ளத்தளவில் மோத வேண்டியவனாகிறான் இராமன். நட்பின் பெயரால் தனக்கு உதவச் சம்மதித்த சுக்ரீவன் கிட்கிந்தையின் அரசனாகிவிட்ட பிறகு போக வாழ்க்கையில் மூழ்கி விடுகிறான். இராமனின் அருளால் தனக்கு அரச வாழ்க்கை கிட்டியது என்பதை மறந்து நன்றி கொன்றவனாகத் தோற்றம் காட்டுகின்ற சுக்ரீவனின் நடத்தை இராமனின் மனத்தை வாட்டுகிறது. நண்பன் என்று தான் ஏற்றுக் கொண்டவனிடம் கடுமையுடன் நடந்துகொள்ள வேண்டிய இடும்பை ஏற்படுகிறது. இராகவன் சுக்ரீவனின் நன்றி கொன்ற செயலுக்காக தான் அவனைக் கொல்லவும் தயங்க மாட்டான் என்றும், தன்னுடைய வில்லில் தனக்கு நஞ்சு போன்றவரைக் கொல்லும் கூற்றம் தங்கியிருக்கிறது என்றும் இலக்குவன் மூலம் செய்தி சொல்லியனுப்ப வேண்டிய இக்கட்டான சூழலுக்கு உள்ளாகிறான்.

*"நன்றி கொன்று நட்பினை நார் அறுத்து,*
*ஒன்றும் மெய்ம்மை சிதைத்து, உரை பொய்த்துளார்க்*
*கொன்று நீக்குதல் குற்றத்தில் தங்குமோ?"*
*(கிட்கிந்தா – கிட்கிந்தை – 3)*

*"வெம்பு கண்டகா விண்புக வேர் அறுத்து,*
*இம்பர் நல் அறம் செய்ய எடுத்த விற்*
*கொம்பும் உண்டு; அருங் கூற்றமும் உண்டு; உங்கள்*
*அம்பும் உண்டு" என்று சொல்லு, நம் ஆணையே"*
*(கிட்கிந்தா – கிட்கிந்தை – 4)*

நண்பனே ஆயினும் கொடுத்த வாக்கைக் காக்க மறந்த சுக்ரீவன் இராமனுக்கு நஞ்சு அனையனே என்றும், குறித்த நாளில் உதவவில்லையென்றால் வானரர்கள் அனைவரும் மாள்வது உறுதி என்றும், அத்தகைய தன்னுடைய செய்கையை நியாயப்படுத்த மனு தர்மத்தில் இடமிருக்கிறது என்றும் இலக்குவன் மூலமாகச் சுக்ரீவனுக்குச் செய்தி அனுப்ப வேண்டியுள்ளது. பிறிதொருவருடைய உதவியை நாடிப் பெறுதல் என்பது இராமனைப் போன்ற மகாவீரனுக்கு எத்தகைய மனஉளைச்சலை

ஏற்படுத்தக்கூடிய நிலை என்பதை ஓர்தல் வேண்டும். இத்தகைய மனச் சங்கடங்களுக்கு உள்ளாகி உள்ளம் நொந்திருந்த இராமனே இப்பொழுது சீதையை எதிர்கொள்கிறான்.

* * * * *

அடுத்து, வானரர்கள் சீதையைத் தேடி நான்கு திசைகளுக்கும் செல்ல, நல்ல செய்தியைக் கேட்பதற்காகக் காத்திருக்கிறான் காகுத்தன். காலம் நீட்டித்தலால் நம்பிக்கை இழந்து கவலையுறுகிறான்.

"சீதையைத் தேடிச் சென்றவர்களுக்கு ஏதேனும் துன்பம் நேர்ந்துவிட்டதோ? அன்றி மாண்டுதான் போய்விட்டனரோ? அவர்கள் என்னதான் ஆயினர்?" என்று அறியாமல் மயங்குகிறான்.

"ஒருவேளை சீதை இறந்துபட்டாளோ? அதை அறியப் பெற்ற நம் வானர வீரர்கள் இச்செய்தியை இராமனிடத்தில் கூறுவதைவிட நாம் மாண்டொழிந்து போகலாம் என்று பட்டனரோ? அன்றி இன்னும் தேடித் திரிந்து கொண்டே இருக்கிறார்களோ?" என்றும் மறுகுகிறான்.

"ஒருக்கால் அரக்கர் இருப்பிடம் அடைந்த காலை அவர்களுடன் அமர் புரிய நேரிட்டதோ? வஞ்சனை மிக்க அரக்கர்களுடைய மாயத்தில் சிக்கி உயிரைவிட்டனரோ? அன்றிச் சிறைபட்டுத் துன்புறுகிறார்களோ?" என்று வேதனையுறுகிறான்.

உடனிருக்கும் சுக்ரீவனிடம், "தூதுவர்களுக்கு என்னதான் ஆயிற்று? சானகிக்கு என்னதான் ஆயிற்று?" என்று மீண்டும் மீண்டும் உசாவித் துன்பத்தின் எல்லை காண்கிறான்.

கடந்து சென்றுவிட்ட பத்து மாதங்களில் இத்தகைய மன உளைச்சலை இடையறாது அனுபவித்து உடலும் உள்ளமும் நலியப் பெற்ற இராகவன்தான் இப்பொழுது சீதையைக் காண வேண்டிக் காத்திருக்கிறான்.

* * * * *

அடுத்து, அனுமன் வந்து சீதையைக் கண்களால் கண்ட நற்செய்தியை அறிந்த பிறகு அவன் உடனே பொருக்கென்று போருக்கு எழுந்தது உண்மைதான் ஆயினும், இலங்கையை அடைவது எளிதான செயலாக இருந்ததா? கடப்பதற்கு அரிதான கடலைக் கடந்து இலங்கையை அடைவது எப்படி? வருணனிடம் வழிகேட்க எண்ணி

மந்திரம் செபிக்கிறான் இராமன். ஒரு ஊழிக்காலம் என்னும் கால அளவுக்கு மந்திரம் கூறியும் வருணன் தோன்றாமையால் தன்னுடைய ஆத்ம பலமும் கூடத் தன்னைக் கைவிட்டு விட்டதோ என்று ஐயுற்று வேதனையுறுகிறான். "தாரம் இழந்ததோடு வீரமும் இழந்தனன்" என்று தன்னை வருணனும் ஒரு பொருட்டாக நினைக்கவில்லை போலும் என்ற கழிவிரக்கம் மூட்டிய சினத் தீயில் வெந்து மனஉளைச்சல் உறுகிறான்.

*" "பாரம் நீங்கிய சிலையினன், இராவணன் பறிப்பத்*
*தாரம் நீங்கிய தன்மையன், ஆதலின், தகைசால்*
*வீரம் நீங்கிய மனிதன்" என்று இகழ்ச்சி மேல் விளைய,*
*ஈரம் நீங்கியது, எறி கடல் ஆம்" என இசைத்தான்"*

*(யுத்த - வருணனை வழி வேண்டு - 10)*

" 'கானில் வசித்து, காய் கனிகள் உண்பவனுடைய ஊனுடை உடம்பு பொறுமைக்கு இலக்கணமாய் இருக்கும் என்று தவறாகக் கணித்துவிட்டதனால், சிறுமையேன் என்று என்னைப் பற்றி எண்ணுகின்ற வருணனிடம் என் பெருமையை நான் வலிந்து காட்ட வல்லவனாகிறேன்' என்று சினந்து வருணன் மேல் அம்பு தொடுத்துப் போர்ச் செயல் புரிகிறான். சதுர்முகன் கணையினால் வருணனை வருவித்துப் பணிய வைக்க வேண்டியுள்ளது. எனவே இராவணன் மேல் பொருதும் முன்னர், ஒரு சிறு போர்ச் சூழலில் சிக்க வேண்டியவனாகி மனத்துன்பம் உறுகிறான் மாதவன்.

வருணன் வழிகாட்ட கடலில் அணை கட்டும் பணியை ஆரம்பிக்கின்றான் இராமன். கடலில் அணை கட்டுதல் என்பது பிள்ளை விளையாட்டு அல்லவே! 'சேது பந்தனப் படலம்' என்று ஒரு படலத்தையே இதற்காக ஒதுக்குகிறான் கம்பன். 72 பாடல்களில் அணை அமைக்கும் பணியைப் பற்றி வருணிக்கிறான். அணையைக் கட்டுவதற்காக, நெடு வரைக் குன்றங்களைத் தொடர்ந்து கொண்டு வந்து வானரங்கள் கடலில் தள்ளுவதால் துள்ளி எழுந்த கடல் நீர்த்துளிகள், வானவர் நாட்டு மங்கையரின் இடை சுற்றிய மேகலையை நனைத்தன என்கிறான் கம்பன்.

*"வேணுவின் நெடு வரை வீச, மீமிசைச்*
*சேண் உறு திவலையால் நனைந்த செந் துகில்,*
*பூண் உறும் அல்குலில் பொருந்திப் போதலால்,*
*நாணினர், வான நாட்டு உறையும் நங்கைமார்"*

*(யுத்த - சேது பந்தன - 14)*

மேலும் விண்ணைத் தொடும் மலைகளை அடியோடு பெயர்த்து வந்து கடலில் கொட்டியதால், நீர்த் தலமாகிய கடல் மறைந்து அங்குத் திண் தலமாக மண் தலம் உருவாகியது. குறிஞ்சியும் நெய்தலும் கூட்டு சேர்ந்தாற் போன்ற புதிய நிலம் ஒன்றும் அங்கு உருவாகியது என்கிறான் கம்பன்.

இறுதியில் அணை உருவாகியது. "தோடு சேர் குழலாள் துயரை நீக்குவதற்கு என் மேல் ஓடுங்கள்" என்று கூறிக் கடல் மேல் கிடந்த ஆதிசேடன் போல் தோன்றியது அந்த அணை!

இலங்கையின் காவல் தெய்வ மகள், தன் மன்னன் இராவணன் இராமனுக்குச் செய்த தீவினை பொறுக்காது, தருமத்தின் பக்கம் நின்று, அன்போடு ஐயன் இராமனை 'வா' என்று வரவேற்க நீட்டிய அன்புக் கரங்களாகத் தோன்றியது அந்த அணை.

ஞான நாயகன் இராமன் தன் பாதம் பதித்துக் கடக்க இருக்கும் பாக்கியமுடையதால் அவ்வணை, இந்திர வில்லின் அழகு கொண்டு மிளிர்ந்து பொலிந்தது! இவ்வாறு கடத்தற்கு அரிய கடலைக் கடப்பதற்குப் பெருமுயற்சி செய்யும் பெருவினைக்கு ஆளாகிறான் இராமன். அப் பெருமுயற்சி உண்டாக்கிய மனக் களைப்புகுள்ளான அனுபவத்தினனாக இராமன் இப்பொழுது சீதையை எதிர்கொள்ள நிற்கிறான்.

* * * * *

இதனை அடுத்து இராவணனின் படைபலம், பக்க பலம், உள் வலி, உதவுவோர் வலி என்று மாற்றான் வலிமையைப் பற்றிய கணிப்பைச் சரியாகச் செய்ய வேண்டியவனாகிறான் இராமன். இராவணனுடைய படைபலம் பற்றிய செய்திகளை இராமன் வீடணனிடமிருந்து பெறுகிறான் என்பது உண்மையே!

ஆயினும் வீடணன் விளக்கும் இராவணனுடைய மூலபலத் தானை என்பதைப் பற்றிய விளக்கத்தைக் கேட்ட பின்னரும், வெறும் வானரச் சேனையை வைத்துக் கொண்டு போரைத் தொடங்கிவிட முடிவெடுப்பதற்கு இராமனைப் போன்ற ஆத்மபலம் உள்ளவர்களால்தான் இயலுமே தவிர, ஏனையோரால் இயலாது என்பதே உண்மை.

வீடணன் விவரிக்கும் மூல பலத்தானையைப் பற்றி வருணிக்க நமக்கு வார்த்தைகள் போதா! காரணம், (வருணித்தால் அது ஒரு நூலாக விரியும். சுருங்கக் கூறின்,) அந்தத் தானை உயரத்தில் விண்ணையும் மண்ணையும் தொட்டுக்கொண்டு நின்றது. அகலத்தில் உலகத்தைச் சுற்றியும் பற்றியும் நின்றது. கம்பனின் வரிகள்;

*"........................................ குவலயம் முழுதும்*
*தழுவி, விண்ணையும் திசையையும் தடவும் மாத் தானை"*
*(யுத்த - மூலபல வதை - 4)*

எனும் பெரும்படை எவருக்கும் அச்சமூட்டுவதாகவே இருக்கும். வலிமை கொண்ட பகைவனை 'சிங்கத்தை அதன் குகையிலேயே சந்திக்கும் வீரனாக' பகைவனுக்கு உரிமையுள்ள நாட்டிலேயே அவனை எதிர் கொண்டு பகை முடிக்க இராமனுக்கு எத்துணை உள்ளாற்றல் வேண்டும் என்று தேர்ந்து தெளிய வேண்டும். ஆதலின் உள்ளத்தால் வலிந்து இத்தகைய உள்ளாற்றலை உருவாக்கிக் கொள்ளும் முயற்சியில் அயர்ச்சி கண்ட இராமனே, இப்பொழுது சீதையை எதிர்கொள்ள நிற்கிறான்.

* * * * *

இதனை மேவிய ஒரு வீரத்தையும் வெளிப்படுத்துகிறான் இராமன். இராவணன் போரை மறுத்துச் சரண் புகுவானேயாகில் தான் அபயம் அளிக்கச் சித்தமாக இருப்பதாக அங்கதன் மூலம் தூது விடுகிறான் இராமன். அப்பொழுது இராவணனிடம் அங்கதன் கூற வேண்டிய செய்திகளாக எவற்றையெல்லாம் இராமன் கூறியனுப்பினான் என்றறிவது இராமனுடைய உள்ளார்ந்த போர்க்குணத்தைப் பற்றிச் சரியாகக் கணிக்க உதவுவதாக இருக்கும். காப்பியத்தில் இராமன் கூற்றாக வரும் செய்திகளை அவ்வண்ணமே காண்போம். அவை பின்வருமாறு;

"தன்னுடைய குலம் முழுவதையும் கூற்றுவனுக்கு அளித்து விட முடிவெடுத்து விட்ட பாவியிடம் - போருக்கு அஞ்சி அரண்மனைக்குள் பதுங்கிக் கிடக்கும் கோழை யிடம் - 'இராமனின் தேவியை விடுக! அன்றேல் உன் ஆவியை விடுக!' என்று சொல்"

" 'இராமனுடைய வில்லுக்கு ஆற்றாது பாட்டி தாடகை பருந்துண்ண இறந்த போதும், சுபாகு எனும் தாய்மாமனைப் படைகளோடு இராமன் உயிர் தொலைத்த போதும், காதலால் கருத்தழிந்த இராவணனின் தங்கை இரு செவியும், இணை முலையும் மூக்கும் இழந்த போதும், சினந்து கனன்று பொருக்கென போருக்கு எழாத உனக்கு ஆண்மையும் உண்டோ?' என்று கேட்கிறான் இராமன் என்று சொல்"

“ ‘கரன் முதலான உன் தம்பியரைப் படையோடும் கிளைஞரோடும் அடியோடு இராமன் களையக் கண்டும், போர்த்தொழில் புரிய நேரில் வாராது, புன்மையான மான் மாயம் செய்து, வஞ்சகமாக இளையவனை அப்புறப்படுத்தி, ஆயிழையை, வெளவிய அரக்கனான உனக்கு இராமனைப் போரில் எதிர்க்கும் தகுதியும் உண்டோ?’ என்று இராமன் கேட்கிறான் என்று சொல்”

“ ‘ஏந்திழை சீதையை அசோகவனத்தில் கண்டு, தன்னை எதிர்த்தவர் களையெல்லாம் எற்றி, உன் மகன் அக்ககுமாரனைக் கொன்று, இலங்கை மாநகரை எரியுண்ண வைத்துக் கடல் தாவி இராமனிடம் மீண்டுவிட்ட அனுமனிடம் போரிட இயலாதவனுக்கு இனி ஒரு போர்க்களத்தில் போரும் உண்டோ?’ என்று இராமன் கேட்கிறான் என்று சொல்”

“ ‘இலங்கையின் ஒற்றர்களை உயிர் உண்ணாது பொறுத்தருளிய பொழுதும், வருணன் வந்து இராமனைத் தொழுது பணி செய்தபொழுதும், இலங்கையின் கொற்றக்குடையை வீடணனுக்குத் தான் அளித்த பொழுதும், கடல் மேல் அணை கட்டிய பொழுதும் என்னோடு போர்த்தொழில் புரிய வராத இராவணன், இனி எங்கே போர் முகத்தில் தோன்றப் போகிறான் என்று இராமன் ஐயம் கொள்கிறான்’ என்று இராமன் கூறுவதாகச் சொல்”

“ ‘மதிப்புடைய தேவர்களும், உன் தோளில் மயங்கிக் கிடந்த மங்கையர்களும் காண, சுக்ரீவன் உன்னுடைய மகுடத்தை உன் தலையினின்றும் பறித்துக் கொண்டு பறந்து விட்ட பிறகும் பொருக்கென போருக்கெழாத உனக்கு இனி போர்க்களத்தில் தோன்றும் தகுதியுமுண்டோ?’ என்றும் இராமன் கேட்கிறான் என்று சொல்”

இவ்வாறு இராவணனின் கோழைத்தனத்தைச் சுட்டிக் காட்டி “ ‘நீரிலே, நெருப்பிலே, பாரிலே வானப் பரப்பிலே பட்ட அனைத்துயிரையும் போரிலே பட வீழ்த்திய இராவணன், இராமனால் அவனுடைய ஊரிலேயே பட்டான்” எனும் பழிக்கு ஆளாகாதவாறு தன்னிடம் இராவணன் சரணடைய வேண்டும்’ என்று இராவணனுடைய தலைநகரத்திலேயே நின்று, அருள்தவம் புரிய வந்த தவசி ஒருவன் கேட்கிறான் என்றால், அதற்கு அவன் எத்தகைய அளவுக்குத் தன் உள் வலியை வளர்த்திருக்க வேண்டும் என்பதைத் தேர்ந்து தெளிய வேண்டும்.” போர்க்குத் திட்டமிடுதல், திட்டத்தைச் செயல்படுத்துதல், நெருக்கடிகளை எதிர் கொள்ளுதல் என்று போர் தொடர்பாக எழும் அனைத்துச் சங்கடங்களையும் தன்னந்தனியனாக இராமன் ஒருவனே சமாளிக்க வேண்டிய மனநெருக்கடிக்கு ஆளாகிறான் என்பதையும் உன்னி

ஓர்தல் வேண்டும். இத்தகைய துன்பங்களுக்கு ஆளாகிய இராமனே இப்பொழுது சீதையை எதிர்கொள்ள நிற்கிறான்.

* * * * *

அடுத்து, அனுமன், சுக்ரீவன் முதலான வானர வீரர்களின் ஆற்றல் எல்லையற்றதுதான். வானரப் படைகளும், எண்ணிக்கையில் குறைவுபட்டது அல்ல. ஆயினும் தன்னுடைய வில் ஒன்றை நம்பித்தான் இராமன் போரிட இலங்கைக்கு வருகிறான். இலங்கை வெற்றி முழுவதும் இராகவனின் மூளை பலத்தையும், அவனுடைய மூரி வெஞ்சிலையாற்றலையும் நம்பியே நடத்திச் செல்லப்படுகிறது. 'விதிக்கு விதி செய்யும் விற்றொழில் வித்தகன் இலக்குவன்' துணையிருக்கிறான் என்பது உண்மைதான். ஆயினும் இராமனோடு ஒப்ப நோக்க இலக்குவனுடைய வில்லாற்றல் சற்றுக் குறைவுபட்டதே. இந்த உண்மை, காப்பியத்தில் நிகும்பலை யாகப் படலத்தில் நிகழும் நிகழ்ச்சி ஒன்றால் தெரிய வருகிறது.

இலக்குவன் ஒருமுறை இந்திரசித்து விடும் நாகபாசத்தால் கட்டுண்டு மூர்ச்சையடைகிறான். மறுமுறை அவன் விடும் அயன் படையால் கட்டுண்டு மீண்டும் மூர்ச்சையடைகிறான். இரு சமயங்களிலும் இலக்குவன் இறந்து பட்டான் என்றே கருதித் தாளாத துயர் கொள்கிறான் இராமன். இத்தகைய சூழலில், முன்னெச்சரிக்கையின் பொருட்டு, இராமன் இலக்குவனுக்கு விற்கலையின் நுட்பங்களைப் போதிக்கவும், விளக்கி உரைக்கவும் யுத்த களத்திலேயே சிறிது கால அவகாசம் எடுத்துக் கொள்கிறான்.

யுத்த களத்தில் சிறிது காலம் ஒதுக்கி இராமன் இலக்குவனுக்குத் தனுர் கலையின் சூட்சுமங்களை எல்லாம் விளக்குவதைக் காப்பியத்தில் காண்கிறோம். அயன் படையை விலக்கும் விதம்; முக்கண்ணன் படையையும், ஆழி முதல்வன் படையையும் பகைவன் ஒக்க விடுவானேயாகில், அவற்றைத் தக்கவாறு எதிர்கொள்ள வேண்டிய விதம், பகைவன் மாயவித்தைகள் கைக் கொண்டால் அவற்றை வேரோடு கல்லுதல் எனும் கலையைப் பயன்படுத்த வேண்டிய முறை, பகைவன் தளர்ந்திருக்கும் சமயத்தைக் கணித்து அவன் மருமத்தை ஒட்டி வாளியைச் செலுத்தி அவனை வதைத்து முடிக்கும் முறை எல்லாவற்றையும் விரிவாக இளவலுக்கு இராமன் விளக்கிச் சொல்கிறான்.

*"தொடுப்பதன்முன்னம், வாளி தொடுத்து, அவை துறைகள்தோறும்*
*தடுப்பன தடுத்தி; எண்ணம் குறிப்பினால் உணர்ந்து, தக்க*
*கடுப்பினும், அளவு இலாத கதியவாம் கணைகள் காற்றின்*
*விடுப்பன அவற்றை நோக்கி விடுதியால் – விரைவு இலாதாய்"*

*(யுத்த – நிகும்பலையாக – 7)*

தனுர் வேதத்தின் நுட்பங்களையெல்லாம் கூறி, திருமாலின் வில் ஒன்றை இலக்குவனுக்கு அளித்துத் தம்பியைத் தழுவுகின்றான்.

*"என்பன முதல் உபாயம் யாவையும் இயம்பி, ஏற்ற*
*முன்பனை நோக்கி, 'ஐய! மூவகை உலகும் தான் ஆய்*
*தன் பெருந் தன்மை தானும் அறிகிலா ஒருவன் தாங்கும்*
*வன் பெருஞ்சிலை ஈது ஆகும்; வாங்குதி; வலமும் கொள்வாய்!"*

*(யுத்த – நிகும்பலையாக – 8)*

*" 'இச் சிலை இயற்கை மேல்நாள்; தமிழ் முனி இயம்பிற்று எல்லாம்*
*அச்செனக் கேட்டாய் அன்றே? ஆயிரம் மௌலி அண்ணல்*
*மெய்ச் சிலை; விரிஞ்சன் தானே வேள்வியின் வேட்டுப் பெற்ற*
*கைச்சிலை கோடி என்று கொடுத்தனன் கவசத்தோடும்"*

*(யுத்த – நிகும்பலையாக – 9)*

*"ஆணி, இவ் உலகுக்கு, ஆன ஆழியா! புறத்தின் ஆர்த்த*
*தூணியும் கொடுத்து, மற்று உறுதிகள் பலவும் சொல்லி,*
*தாணுவின் தோற்றத்தானைத் தழுவினான்; "*

*(யுத்த – நிகும்பலையாக – 10)*

எனவே போர் நடத்தும் முழுமையான பொறுப்பு இராமன் ஒருவனுடையதே ஆகிறது என்பதைக் காண்கிறோம். அத்தகைய பொறுப்பைத் தோளில் தாங்கிச் செயல்படுத்திய களைப்பு மேலிடும் மனிதனாக இங்கு இராமன் சீதையை எதிர்கொள்ள நிற்கிறான்.

* * * * *

அடுத்து யுத்த களத்திலோ அடுத்தடுத்துப் பெரும் சோதனைகள் ஏற்படுகின்றன இராமனுக்கு.

முதலாவதாக, இலக்குவன் இந்திரசித்துவின் நாகபாசத்தால் கட்டுண்டு மூர்ச்சையுற்று விழுகிறான். 'இளவல் இறந்தான்' என்று தவறாகப் புரிந்து கொண்ட இராமன், மனம் கலங்குகிறான். இச்சமயத்தில் மனச்சீர்மையை ஒரு கணம் தொலைத்துவிட்ட இராமனைக் காண்கிறோம். போர்க்களத்து நெருக்கடியான நிலையில் "தம்பியுடையான் பகைக்கஞ்சான்" என்று, தான் மலை போல நம்பியிருந்த வில் வீரன் ஒருவன் இறந்துபட்டான் என்பது மட்டுமல்லாமல், எத்தகைய பழிக்கும் வேறு இராமன் ஆளாவான்? தம்பியின் யாக்கை மேல் விழுந்து மார்பு அழுந்தப்புல்லி, ஆவி உயிர்த்து உயிர்த்து உருகிக் கண்ணீர்ப் பெருந்துளிகள் தாரைகளாய் இறங்க தான் கதியற்றுத் தனியனாய் ஆகிவிட்டதாகப் புலம்புகிறான் இராமன். "பாரில் யார் இது பட்டார், என் போல் எளி வந்த வண்ணம்!" என்று தன் நிலைக்குத் தானே இரங்கிக் கண்கள் கலுழ்கிறான். கருடனின் கருணையால் நாகபாசக் கட்டினின்றும் இலக்குவன் விடுபட்டு விட்டாலும், மீண்டும் இந்திரசித்துவின் அயன்படையினால் கட்டுண்டு மூர்ச்சையுற்று நிலத்தில் விழுகிறான் இளையோன். சுக்ரீவன் முதலானோரும் கூட அவ்வண்ணமே இறந்து பட்டவர் போல் கிடக்கின்றனர். இராமனின் துயரம் இச்சமயத்தில் எல்லை கடந்ததாகிறது. சுக்ரீவன், அனுமன், அங்கதன் முதலான வானரப் போர் வீரர்களின் சாவுக்குத்தானே காரணம் என்ற குற்றவுணர்ச்சியால் (தான் முதலில் தந்தை தயரதன் நல்கிய அரசை ஏற்றுக் கொண்ட தவறினால் இத்துணை நிகழ்ச்சிகள் நடந்தன என்றெண்ணுகிறான்) குமுறுகிறான்; புலம்புகிறான்.

*"புன் தொழில் புலை அரசினை வெஃகி, என் பூண்டேன்?*
*கொன்று ஒருக்கினேன், எந்தையை; சடாயுவைக் குறைத்தேன்;*
*இன்று ஒருக்கினேன், இத்தனை வீரரை; இருந்தேன்!*
*வன் தொழிற்கு ஒரு வரம்பும் உண்டாய் வரவற்றோ?"*

*(யுத்த - மகரக் கண்ணன் வதை - 194)*

வாலியால் தன்னிடம் அடைக்கலப்படுத்தப்பட்ட அங்கதனைக் கண்டு,

*" 'படைக்கலங்களைச் சுமக்கின்ற பதகனேன், பழி பார்த்து*
*அடைக்கலப் பொருள் காத்தவாறு அழகிது' என்று அழுதான்"*

*(யுத்த - மகரக் கண்ணன் வதை - 196)*

அடைக்கலப் பொருளாய் ஏற்ற சுக்ரீவனைக் காக்க வேண்டி, உலகம் "இராமன் வில்லறம் துறந்தான்" என்று ஏசும் வகைக்கு வாலியை மறைந்திருந்து கொன்ற அருளாளன் இராமனுக்கு, "அடைக்கலப் பொருளாகிய அங்கதன் தன் பொருட்டு

இறந்தான்" என்ற எண்ணம் எத்தனை மன உளைச்சலை உண்டாக்கியிருக்கும் என்று தேர்தல் வேண்டும்.

இறுதியாக தன் உதிரத்தின் உதிரமான இலக்குவனைக் காண்கிறான். இடியினால் நிலம் வீழ்ந்த மராமரம் என நிலத்தில் வீழ்ந்தான்.

*"பொருமினான், அகம்; பொங்கினான்; உயிர் முற்றும் புகைந்தான்;*
*குரு மணித் திரு மேனியும், மனம் எனக் குலைந்தான்;*
*தருமம் நின்று தன் கண் புடைத்து அலமர, சாய்ந்தான்;*
*உருமினால் இடியுண்டது ஓர் மராமரம் ஒத்தான்"*

*(யுத்த – மகரக்கண்ணன் – 198)*

*"உயிர்த்திலன் ஒரு நாழிகை; உணர்ந்திலன் ஒன்றும்*
*வியர்த்திலன், உடல்; விழித்திலன், கண் இணை; விண்ணோர்*
*அயிர்த்து இலன் கொல்? என்று அஞ்சினர்; அங்கையும் தாளும்*
*பெயர்த்திலன்; உயிர் பிரிந்திலன் – கருணையால் பிறந்தான்"*

*(யுத்த – மகரக் கண்ணன் – 199)*

பகை முடிக்க இலங்கை வந்த இராமன், தன்பொருட்டு இறந்துபட்டதாகத் தான் நினைத்த துணைவர்களோடு தானும் களத்தில் பட்டவன் போல் கிடக்கும் இரக்க நிலையை என்னென்பது? எல்லோரும் துணை நிற்க உள் வலிமை கொண்ட இராமன், தன்னை மூர்ச்சை தெளிவிக்கவும் கூட எவருமின்றிப் போர்க் களத்தில் தம்பியைத் தழுவிய வண்ணம் கிடந்தான். இந்தத் தனியனின் துயரத்தை எவர் தீர்க்க வல்லார் என்று கம்பன் கழிவிரக்கம் தோன்றக் கேட்கிறான்.

*"தாங்குவார் இல்லை; தம்பியைத் தழீஇக்கொண்ட தடக் கை*
*வாங்குவார் இல்லை; வாக்கினால் தெருட்டுவார் இல்லை;*
*பாங்கர் ஆயினார் யாவரும் பட்டனர்; பட்ட*
*தீங்குதான் இது; தமியனை யார் துயர் தீர்ப்பார்?"*

*(யுத்த – மகரக் கண்ணன் – 200)*

இவ்வாறு எவரும் தீர்க்கவியலாத துயர்க்கடலைத் தாண்டி வந்து தொடர்ந்து போர் புரிந்த இராமனின் உடலும் உள்ளமும் எத்துணை அளவு நைந்து போயிருக்கும் என்பது அவரவர் கற்பனைக்கே விடப்பட வேண்டிய ஒன்று. அத்தகைய இராமனே இப்பொழுது சீதையை எதிர் நோக்கி நிற்கிறான்.

* * * * *

அம்மட்டோ! அடுத்து ஒரு பெரும் சோதனை! இந்திரசித்து மாயா சீதையை வாளால் வெட்டி விட்டு அனுமனிடம், "அயோத்தி சென்று, இனி பரதன் முதலானவரை அழிப்பேன்" என்று கூறி வானில் மறைகிறான். அனுமன் கொண்டு வரும் இச்செய்தி கேட்டு ஆவி சோர்ந்து நிலத்தில் விழுந்து மூர்ச்சையடைகிறான் இராமன். இராமனை உணர்வு வரப் பெறச் செய்வதற்கு வீடணன் தன் உயிர் உளையப் பாடுபடுகின்றான். முகத்தில் நீர் ஒற்றி, இராமனின் கையும் தாளும் பற்றி வருடிப் பல பணிவிடைகள் புரிய அண்ணல் கண் விழிக்கின்றான்.

*"சீத நீர் முகத்தின் அப்பி, சேவகன் மேனி தீண்டி,*
*போதம் வந்து எய்தற்பால யாவையும் புரிந்து, பொன் பூம்*
*பாதமும் கையும் மெய்யும் பற்றினன் வருடலோடும்*
*வேதமும் காணா வள்ளல் விழித்தனன், கண்ணை மெல்ல"*
*(யுத்த – மாயா சீதை – 61)*

கண் விழித்தவன் அடுத்து இந்திரசித்தனின் அயோத்திப் பயணம் பற்றி அனுமனிடம் அறிகிறான். மனத்தின் சாந்தி முற்றிலுமாக அழியப் பெற்றவனாகிவிடுகிறான் இராமன்.

தாய் தம்பியரை எண்ணிப் பின்வருமாறு புலம்பத் தொடங்குகிறான்,

*"தீரும் இச் சீதையோடும் என்கிலது அன்று, என் தீமை;*
*வேரொடு முடிப்பது ஆக விளைந்தது; வேறும் இன்னும்*
*யாரொடும் தொடரும் என்பதும் அறிகிலேன்; இதனை, ஐய!*
*பேரிட அவதியுண்டோ? எம்பியர் பிழைக்கின்றாரோ?"*
*(யுத்த – மாயா சீதை – 76)*

*"........................................ வினையேன் வந்த*
*மனை பொடி பட்டது, அங்கு; மாண்டது, தாரம் ஈண்டும்;*
*எனையன தொடரும் என்பது உணர்கிலேன்! இறப்பும் காணேன்!"*
*(யுத்த – மாயா சீதை – 77)*

தன்னைச் சார்ந்தவர்களின் இறப்புக்குக் காரணமாகிவிட்ட தான் மட்டும் உயிர் வாழ்தலை எண்ணித் தன் உயிர் வாழ்க்கையையே வெறுக்கிறான் இராமன்.

இவற்றுக்கெல்லாம் சிகரம் வைத்தாற்போல போர்க்களத்தில் இந்திரசித்தனின் மாயம் விளைவித்த குழப்பத்தினால் ஒரு தவறும் செய்ய முனைந்துவிடுகிறான்

இராமன். 'சீதை இங்கு இறந்துபட்டாள். போகட்டும் ; அயோத்திக்காவது விரைவில் சென்று இந்திரசித்தனுடன் போர் புரிந்து இனி ஆகக் கூடியதை ஆற்றலாம்' என்று முடிவெடுத்து விடுகிறான். அத்தகைய முடிவொடு அனுமன் தோள் மீது இராமனும் இலக்குவனும் பயணப்பட உள்ள பொழுது வீடணன் திகைத்து, "இது இந்திரசித்தனின் மாயமாக இருக்க வாய்ப்புண்டு" என்று கூறி இராமனை அமைதிப்படுத்தி விட்டு, வண்டுருவில் சீதையிடம் சென்று அவளுடைய இருப்பை உறுதி செய்து கொண்டு மீண்டு வந்து உண்மையை இராமனிடம் உரைக்கிறான். வீடணனுடைய வழிகாட்டுதலில்லாமல் போயிருந்தால் எத்தகைய விபரீதம் விளைந்திருக்கும் என்பதை எண்ணிப் பார்க்கவும் இயலவில்லை! போர்க்களத்தில், சரியாகக் கணிக்கப்படாத தவறான காரணங்களுக்காக நடுவிலேயே போரை நிறுத்திவிட்டு, சீதையையும் சிறையில் தவிக்க விட்டு விட்டு, இதுகாறும் வகுத்த போர்த்திட்டங்களால் எந்தவிதமான முழுப் பயனையும் பெறாமல் போயிருந்தால் – அவசரப்பட்டு அயோத்திக்குச் சென்று அங்கு இந்திரசித்தன் வரவில்லையென்றறிந்தால் – இதைவிட இராமனுக்கு இகழ்ச்சி வேறு என்ன இருந்திருக்கும்! வீரம் வீரத்துடன் மோதலாம். ஆனால் தூய வீரம் மாயத்துடனும் வஞ்சனையுடனும் மோதி இகழ்ச்சிக்கு ஆளாகும் அவப்பேறு இராமன் வாழ்க்கையில் மீண்டும் மீண்டும் நிகழ்கிறது. இத்தகைய அடுக்கடுக்கான மனத் துயரங்களை இந்த உலகில் அறத்தின் பொருட்டு அனுபவித்தவர் இராமனைத் தவிரப் பிறிதொருவர் யார்?

ஒவ்வொரு முறையும் இராமன் அக்னியில் குளித்து எழுவதுபோல் உணர்வுகளால் மாய்ந்து மாய்ந்து மீண்டும் மீண்டும் எழுச்சி பெற்று உயிர்க்கிறான்; மாயத்தையும் வஞ்சனையையும் வெல்லும் வேகத்தோடு மீண்டும் மீண்டும் உள் வலியும் ஊக்கமும் பெறுவது என்பது அசாதாரணமான நிலைமையல்லவா? இத்தகைய துயர்க்கடலில் நீந்தி நீந்திக் கரை சேர்ந்து போர்க்களத்தின் சவால்களைச் சமாளிக்கிறான். அத்தகைய முயற்சிகள் தந்த அயர்ச்சியை அனுபவித்தவனாக மனம் களைத்து நிற்கிறான் சீதையை எதிர்கொள்ள நிற்கும் இராமன்.

× × × × ×

அடுத்து, இலங்கை யுத்தத்தில் இராவணனின் கடல் போன்ற போர்ப் படைகளைத் தான் ஒருவனாக மட்டுமே சிதற அடிக்க வேண்டிய பெரும பொறுப்புக்கு ஆளாகிறான். மகரக்கண்ணன் முதலான இராவணனின் தானைத் தளபதிகள், கும்பன் முதலான தம்பியர், இந்திரசித்து முதலான மைந்தர்கள் யாவரும் போர்க்களத்தில் பட்டனர். ஆயினும் இராவணன் ஒருவன் உள்ளான்! அவனோடு

அவனுடைய மூலபலத் தானையும் உள்ளது. அவனோடு பொருதுகின்ற பெரும் பொறுப்பு இராமனுக்குள்ளது. இந்தச் செய்தியை மேலும் விளக்க வேண்டியுள்ளது.

இராவணனின் மூலபலத் தானை பற்றி வீடணனிடம் உசாவி அறிந்த பின் போர்த்திட்டத்தைச் சடுதியில் மாற்றி முடிவெடுக்கிறான் இராமன். வானரச் சேனையைக் காக்கும் பணியை இலக்குவனுக்கு அளிக்கிறான். இலக்குவனுக்குத் துணையாக அனுமனை அவன் பின் நிற்கப் பணிக்கிறான். தன்னைத் தனியனாக்கிக் கொண்டு இராவணனுடன் பொருத ஆயத்தப்படுத்திக் கொள்கிறான்.

*"..................... அரக்கர்தான், அவுணரேதான்*
*எத்தனை உள்ர் என்றாலும் யான் சிலை எடுத்தபோது*
*தொத்துறு கனலின் வீழ்ந்த பஞ்சு எனத் தொலையும் தன்மை"*
*(யுத்த - மூலபல வதை - 58)*

என்று தன் வில்லாற்றலில் முழு நம்பிக்கை கொண்டவனாய்க் களமிறங்குகிறான். அவ்வாறே இராவணனின் மூலபலச்சேனையை இராமன் ஒருவன் மட்டுமே தன்னுடைய தனுவின் ஆற்றலால் முற்ற முடிக்கிறான். இவ்விடத்தில் இராமனின் வில்லாற்றல் பற்றிச் சலியாது புகழ்கிறான் கம்பன். மூலபலத்தானை வதைப் படலம் முழுவதுமே இராமனின் மூரிவெஞ்சிலை புகழ்பாடும் படலம் என்றால் அது மிகைக் கூற்றாக இருக்க முடியாது.

எடுத்துக்காட்டாக ஓரிரு பாடல்கள் காணலாம். அரக்கர்கள் இராமனை மொய்த்து நிற்கின்றனர். அவர்களை வழுவாத தன் சரக்குழுவால் வதைக்கிறான் இராமன்.

*"மொய்த்தாரை ஓர் இமைப்பின்தலை, முடுகத் தொடு சிலையால்,*
*தைத்தான்; அவர் கழல் - திண் பசுங் காய் ஒத்தனர், சரத்தால்,*
*தைத்தார் நெடுந் தேரும், கடுங் களிறும், களத்து அழுந்தக்*
*குத்தான், ஆழி குழம்பு ஆம்வகை, வழுவாச் சரக் குழுவால்"*
*(யுத்த - மூலபல வதை - 110)*

இராமன் நின்று பகழி துரந்தது தமக்கு முன்னேயா, பின்னேயா, பக்கலிலா, மேலா, கீழா, நிலத்திலா, விசும்பிலா என அயிர்க்கின்றது அரக்கர் குழாம்.

*"முன்னே உளன்; பின்னே உளன்; முகத்தே உளன்; அகத்தின் –*
*தன்னே உளன்; மருங்கே உளன் ; தலைமேல் உளன்; மலைமேல்*
*கொன்னே உளன்; நிலத்தே உளன் ; விசும்பே உளன்; கொடியோர்*
*'என்னே ஒரு கடுப்பு! என்றிட, இருஞ்சாரிகை திரிந்தான்"*
*(யுத்த – மூலபல வதை – 113)*

"என் நேரினன்", "என் நேரினன்" (இராமன் எனக்கு முன் தான் நின்றான்! எனக்கு முன் தான் நின்றான்) என்று ஒவ்வொரு அரக்க வீரனும் கூறிக் குழம்புகின்றனர். மேலும் கடல் மணலினும் பல இராமர்கள் களத்தில் உள்ளனர் என்று உறுதியாகக் கூறுகின்றனர். அந்த அளவுக்கு வேகச் சரங்கள் விட்டு வில் வித்தை காட்டுகின்றான் வேதநாயகன்.

*"ஒருவன் என உன்னும் உணர்ச்சி இலார்,*
*'இரவு அன்று இது; ஓர் பகல்' என்பர்களால்;*
*'கரவு அன்று இது; இராமர் கணக்கு இலரால்;*
*பரவை மணலின் பலர்' என்பர்களால்"*
*(யுத்த – மூலபல வதை – 210)*

திரிபுரம் எரித்த சிவன் போல் தோன்றும் இராமன் மூலபலச் சேனை முழுவதையும் முடித்து, இராவணனுடன் போர் புரியும் இலக்குவனுக்கு உதவச் செல்கிறான். ஆங்கு இலக்குவன், வீடணனைக் காத்தல் வேண்டி, இராவணன் வீடணன் மேல் எறியும் வேலைத் தன் மார்பில் ஏற்க, அது முதுகில் புகுந்து நின்றது. இதைக் கண்ணுறும் இராமனுடைய துயர் எல்லையற்றதாகிறது. அனுமன் மீண்டும் மருந்து கொணர்ந்து இலக்குவனை உயிர்ப்பிக்கிறான். இறுதியில் சீதைபால் காமம் ஒழிந்து வீரம் விளைந்து நிற்கும் இராவணனோடு கடும் போர் புரிகின்றான். இவ்விடத்தில் விஞ்சையும், அவிஞ்சையும், தருமமும் பாவமும் போல் எதிரெதிர் நின்றனர் இராமனும், இராவணனும் என்கின்றான் கம்பன். தேவாசுர யுத்தம் தொடங்குகிறது. கமலக்கண்ணன் மேல் அரக்கன் இராவணன் தன் துமில வாளியைத் துரக்கும் முன்னரே, விமலன் தன் வாளியை வீட்டி அரக்கன் மேல் அனந்தமாகச் சரம் தொடுத்துப் போரிடும் ஆற்றலை மிக அழகாக வருணிக்கிறான் கம்பன். இராவணனின் அசுரப்படையும், இராமனின் அக்கினிப் படையும் மோதுகின்றன. இராவணனின் மயன் படைக்கு இராமனின் கந்தருவக் கணை பதில் தருகின்றது. இராவணனின் தண்டுப் படைக்கு இராமனின் அம்பு மழையே பதிலாகிறது. இராவணனின் மாயப் படையை இராமன் ஞானக் கணையால் எதிர்கொள்கிறான். இராவணனின் சூலப்படை இராமனின் உங்காரப் படைக்கு ஈடு கொடுக்க இயலாமல்

அழிகிறது. இராவணனின் நிருதிப்படையைக் கருடக் கணையால் அழித்து ஒழிக்கிறான் இராமன். இராமனுடைய வலிமை மேலும் மேலும் மிகுதல் கண்டு இராவணன் அயர்வுற இராமனுடைய பிறைமுக அம்பு இராவணனின் சிரத்தைக் கொய்கிறது. மீண்டும் மீண்டும் முளைக்கும் அரக்கனின் கைகளை இராம பாணம் அறுத்துத் தள்ளுகிறது. இராவணனின் தலை அறுபட்டுச் சிதறி வீழ்கிறது. இராவணன் மேனி முழுவதையும் இராமனின் அம்புகள் சல்லடைக் கண்களாய்த் துளைக்கின்றன. இறுதியில் இராகவன் விடும் அயன்படை இராவணனின் உயிர் மூச்சையே நிறுத்துகிறது.

*"முக்கோடி வாழ்நாளும் முயன்றுடைய*
*பெருந் தவமும், முதல்வன் முன் நாள்,*
*'எக் கோடி யாராலும் வெலப்படாய்*
*எனக் கொடுத்த வரமும், ஏனைத்*
*திக்கொடும் உலகு அனைத்தும் செருக் கடந்த*
*புய வலியும், தின்று, மார்பில்*
*புக்கு ஓடி உயிர் பருகி, புறம் போயிற்று*
*இராகவன்தன் புனித வாளி"*

*(யுத்த - இராவணன் வதை - 196)*

* * * * *

இவ்வாறு, ஒரு பெரும் போர் உருவாக்கும் பன்முகப் பரிமாணச் சங்கடங்களைத் தன்னந் தனியனாகப் போர்க்களத்திலேயே எதிர்கொள்ளும் ஒரு மன்னனாகவும், தளபதியாகவும், மாவீரனாகவும் தன் பங்களிப்பைச் செய்ய வேண்டிய சூழலில், தன் உயிராற்றல் முழுவதையும் ஒரு முகப்படுத்திப் பகை முடித்துவிட்ட பெரு முயற்சி தந்த அயர்ச்சியில், மனம் களைத்துக் கிடக்கும் இராமனே இப்பொழுது சீதையை எதிர்கொள்ள நிற்கிறான்.

* * * * *

எனவே சீதையைக் காணும் ஆவலில் பகை வென்று நிற்கும் இராமன் ஒருவனல்லன் என்பதை உணர வேண்டும். வாழ்க்கையின் துயர் மிகுந்த பக்கங்களைப் புரட்டிப் பார்த்த - நெருஞ்சி முள் நிறைந்த வாழ்வின் வழித் தடங்களைக் கடந்து வந்த - வெந்த புண்ணில் மீண்டும் மீண்டும் வேல் பாய்ச்சியதையொத்த வாழ்க்கை அனுபவங்களைக் கண்ணீர் கலந்த துயரத்தோடு உள்வாங்கிய ஆயிரமாயிரம் இராமர்கள் அந்த ஒரு இராமனுக்குள் அடக்கமாகி நிற்கிறார்கள்

என்பதை உணர வேண்டும். சீதையை இராவணன் சிறை எடுத்த நாளிலிருந்தே இராமனுக்கு இயல்பான சத்வ குணம் அவனிடமிருந்து மறைந்து போய் அரசர்களுக்குரிய ரஜோகுணம் மேவியிருப்பதைக் காண்கிறோம். எவர் ஒருவரையும் பணி ஏவியும், தன் எந்தவொரு விருப்பத்தையும் ஆணைகளிட்டும் நிறைவேற்றிக் கொள்ளும் போர்க்குணம் முந்துற நிற்கும் ஒரு அரசனாக இப்பொழுது இராமனைக் காண்கிறோம். பகைவனைப் பழி முடிக்கப் புறப்பட்டவனிடம் அத்தகைய க்ஷத்திரிய குணங்கள்தாம் வேண்டப்படுவன. மேலும், இன்று பகை வென்று புகழ் பூண்டு நிற்கும் இராமன், வனவாச காலம் முழுமையடைந்து விட்டதால், தருமப்படி, அயோத்தியின் அரசனாக நிற்கிறான். 'தன்னுடைய மனைவியைக் காப்பதற்கும், சிறை மீட்கவும் திறனற்ற இராமன் அயோத்தி போன்ற பேரரசுக்கு உரிமையுடைய மாமன்னன் என்று அரியணையில் அமர முடியுமா? உலகம் இதை ஏற்குமா?' குடிகளைக் காப்பதில் தனக்கு நிகர் வேறு ஒருவன் இல்லை என்பதை நிரூபிக்க மன்னனானவன் பகைவர்களைச் செருக்களத்தில் சிதறடிக்க வேண்டும். இன்று பகை வென்று நிற்கும் இராமனிடம் அந்த அரச குணமே மேவி நிற்கிறது. போர்க்களத்தில் சினம் பொங்கிப் பிரவகிக்க வீரம் விளைந்து நிற்கும் இராமனைத் தான் – தான் இட்ட ஆணைகளை மட்டுமே நிறைவேற்ற வேண்டுமேயன்றி, இடாத ஆணைகளைத் தன் விருப்பத்துக்குச் செய்ய எவருக்குமே உரிமையில்லை என்று கருதி நிற்கும் ஒரு அரசனைத்தான் – வீடணனிடம் வெகுண்டெழுந்து பேசும் இராமனிடம் காண்கிறோம். இந்தச் சினம் பொங்கும் பண்பை இக்கணத்தில் மாற்ற ஒருவரால் மட்டுமே முடியும். அவள்தான் சீதை.

ஆண், இயல்பில் வன்மையானவன். ஆனால் அவனுடைய வல்லியல்பு பெண்மையின் உடனிருப்பில் மென்மையாக மாறுவது கண்கூடு. இது ஒரு உளவியல் கூறு. அந்த உளவியல் அம்சத்தைச் சுட்டிக் காட்டித்தான் வாலி இராமனிடம், "சீதை உடனில்லாத காரணத்தால்தான், நீ, வில் திறம் பிழைத்தனையோ?" என்று கேட்கிறான்.

*"ஆவியை, சனகன் பெற்ற அன்னத்தை; அமிழ்தின் வந்த*
*தேவியை பிரிந்த பின்னை திகைத்தனை போலும் செய்கை"*
*(கிட்கிந்தா – வாலி வதை – 86)*

என்பது வாலியின் கேள்வி.

ஆணுக்குரிய வன்மையான குணக்கூறு பெண்மையின் மென்மையால் மட்டுமே மாற்றப்படக்கூடியது எனும் கருத்தை மிகத் தெளிவாகக் காப்பியத்தின் இரணியன் வதைப் படலத்தில் கூறுகிறான் கம்பன்.

தானே முழு முதற் கடவுள் என்று தருக்கி ஆணவம் கொள்ளும் இரணியனை, திருமால் நரசிங்க உருவம் கொண்டு அழித்து ஒழிக்கிறார். நரசிங்கம், தன் வள்உகிர் பலத்தால் இரணியனின் வைர மார்பைக் கிழித்து அவனுடைய உதிரம் உலகெலாம் பரந்து விட, தீ எழ விழித்த கண்களுடனும், திண்ணிய தோற்றத்துடனும் அண்டமே கிடுகிடுக்க கர்ஜனை புரிந்து நின்ற தோற்றத்தைக் கண்டு தேவரும் அஞ்சுகின்றனர். சீயத்தின் சீற்றம் தணிக்கத் திருமகளைத் தருவிக்கின்றனர். திருமகளைக் கண்ட நரசிங்க மூர்த்தி சீற்றம் தணிந்து அவளை அன்பு எழ நோக்கியதாக எழுதுகிறான் கம்பன்.

*"பூவில் திருவை, அழகின் புனை கலத்தை,*
*யாவர்க்கும் செல்வத்தை, வீடு என்னும் இன்பத்தை,*
*ஆவித் துணையை, அமுதின் பிறந்தாளை,*
*தேவர்க்கும் தம் மோயை, ஏவினார், பாற் செல்ல"*

*(யுத்த – இரணியன் வதை – 163)*

"செந்தாமரைப் பொருட்டில் செம்மாந்து வீற்றிருக்கும் நந்தா விளக்கனைய தேவியைக் கண்டு நரசிங்கம் அன்பியல் உற்றது" என்றும் எழுதுகிறான் கம்பன்.

இயற்கை விதி இவ்வாறு இருக்க, இராமன் மட்டும் இவ் விதிக்கு விலக்காவது எங்ஙனம்? இராமனின் சீற்றமிகு போர்க்குணம் சீதையைக் கண்ட பிறகே மாற்றத்துக்குள்ளாகும். தன்னுடைய இயல்பான மனச்சீர்மையைத் தனக்கு மீண்டும் தரக்கூடிய தேவியைக் காணத்தான் இராமன் ஆவலோடு காத்திருக்கிறான்..............

சீதையின் எத்தகைய கோலத்தை மனத்தில் கற்பனை செய்துகொண்டு இங்கு இராமன் காத்திருக்கிறான் என்பது, இவ்விடத்தில் மிகுந்த முக்கியத்துவம் பெறும் விஷயமாகிறது, **சீதையைத் தவக்கோலத்தில் காண விழைந்தவனாகவே இராமன் இப்பொழுது அவளுக்காகக் காத்திருக்கிறான்.**

தாங்கொணாத் துயரம் தாங்கி வழிநடந்து, வாழ்க்கைப் பயணத்தில் இன்று இலங்கையில் பகை முடித்து இராமன் நிற்கக் காரணமே, சீதையைச் சிறை மீட்பதோடு, தனக்குற்ற பழியையும் போக்கிக் கொள்ள வேண்டும் என்பதற்காகத்தான். சீதை தன் கற்பை அனுமன் மூலம் மட்டுமன்றி இராவணனுடைய சுற்றம் மூலமும் கூட உலகுக்கு அறிவித்து விட்டாள். அத்துடன், இராமனுக்கு ஊற்றம் ஊட்டிச் செயல் திறத்தைப் பெருக்கி வளர்த்ததே "இராமனைப் பிரிந்த சீதை தவத்தியாக வாழ்கிறாள்" என்ற செய்தியே என்றால் அது மிகையில்லை. எனவேதான் இராவணனின் ஒற்றர்களிடம்

பேசும்பொழுது தன் மனைவியைத் "தவத்துத் தையல்" என்று பெருமிதத்தோடு குறிப்பிடுகின்றான். மற்றும் பல சமயங்களில் சுக்ரீவன், அனுமன், இலக்குவன், வீடணன் ஆகியோர் சீதையை 'தவத்தி' என்று குறிப்பிட்டே பேசுகிறார்கள். அச்சொல் அனல் கனலும் இராமனின் அகத்துக்கு அருமருந்தாக அமைந்திருக்கும் என்பது சொல்லாமலே புரிய வேண்டியது. எனவே ஒரு அரசனுக்குரிய கம்பீரத்துடன் செயல்புரியும் இராமன், சீதையை அயோத்தியின் அரசி என்ற தகுதியுடனும், சீர்மையுடனும், தவத்தவனாகிய தன்னுடைய கருத்தில் ஒன்றிய தவத்தியாகவுமே இப்பொழுது உலகுக்கு அறிமுகப்படுத்த விரும்புகிறான். ஆம்! அனுமன் காணக் கொடுத்து வைத்த சீதையின் தவக்கோலத்தைத் தானும் காண விழைந்து நிற்கிறான் இராமன்.

ஆனால், சீதையோ இராமனுடைய எதிர்பார்ப்புகளையெல்லாம் பொய்ம்மை யாக்கி விடுகிறாள். பாதாதிகேசம் அலங்காரம் செய்யப்பட்ட அழகுப் பதுமையாக வந்து நிற்கிறாள். அறம் எனும் உரை கல்லில் தன் செயல்களை உரைத்து உரைத்துப் பார்த்து வாழும் இராகவன், முன்னர், தன்னோடு கருத்தால் ஒன்றி வாழும் பண்பை உள்ளுணர்வாய்ப் பெற்று வாழக் கற்றுக் கொண்டுவிட்டவளாகிய தன் சீதை, வாழ்க்கையின் முக்கியமான கட்டத்தில், தன்னுடைய உள்ளுணர்வைப் பிரதிபலிக்காமல் போனது எப்படி என்று திகைத்து நிற்கும்படிக்கு இராமன் முன் அலங்காரப் பதுமையாகத் தோன்றுகிறாள். எதிர்பாராத இந்த நிகழ்ச்சியால் உணர்வுகள் மரத்துப் போனதும், உள்ளம் கல்லாகிவிட்டதுமான நிலையை எய்துகிறான் இராமன். சூழ்நிலைக்கு ஒவ்வாத வகையில் உள்ள தன்னுடைய கோலம் புனைந்த எழிலார்ந்த தோற்றத்தால், சீதை, இராமனுடைய உள்ளத்தில் ஒரு பிரளயத்தையே உண்டாக்கி விடுகிறாள். அத்தகைய நிகழ்வுகளையும், அவை தொடர்பான செய்திகளையும் இனி காண்போம்.



## எதிர் கொண்ட இராமன்

இராமனைப் போலவே சீதையும் காப்பியத்தில் இரு சமயங்களில் இராமனை எதிர் வந்து சந்திக்கிறாள்.

ஒன்று, பாலகாண்டத்தில்; பிறிதொன்று, யுத்த காண்டத்தில்.

இராமனைப் போலவே இவ்விரு காலகட்டங்களிலும் சீதையும் இரு வேறு மனநிலைகளில் இருக்கிறாள்.

பாலகாண்டத்துச் சீதை உலகமறியாப் பேதை. கண்களால் கண்டவுடன் கருத்தில் குடியேறிய இராமனைத் தன் கன்னி மனக் கோயிலில் தெய்வமாகக் குடியேற்றிக் காதலில் உருகியவள். யுத்த காண்டத்துச் சீதையோ வாழ்க்கைப் பயணத்தின் மேடு பள்ளங் களிலெல்லாம், இராமனுக்காகத், தன் உள்ளத்தில் வளர்த்த காதலையே ஊன்றுகோலாக்கி நடந்து வந்து, விதியின் வஞ்சனையால் கணவனைப் பிரிந்து இன்று அயலவனின் சிறையில் அடைபட்டுக் கிடக்கிறாள்.

இராமனைப் பிரிந்த பின் சீதைக்கு நேர்ந்த தாங்கொணாத் துன்பங்கள் இரண்டு.

ஒன்று, இராமனின் பிரிவு.

இரண்டு, இராவணனின் முறையற்ற காமச் சொற்களைக் கேட்கும் அவப்பேறு.

இவ்விரண்டுக்குமிடையிலும், முன்னும் பின்னும், அவள் படும் உள்ள நலிவும், உணர்வு மெலிவும் மேற்கூறிய இரு பெருந்துயரங்களோடு தொடர்பு கொண்டவையே ஆகையால், இராமன் பட்ட துன்பங்களைப் போன்று, சீதையின் துன்பங்களைப் பற்றிப் பகுதி பகுதியாகப் பார்க்க வேண்டிய அவசிமில்லை. சிறையிருந்த செல்வி என்ற நிலையில் அவள் பட்ட துன்பங்களை ஒட்டுமொத்தமாகவே ஆய்வு செய்யலாம்.

* * * * *

மனிதர் அனைவரும் ஒன்று போல்வர் அல்லர். ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமான குணாதிசயங்களைக் கொண்டவர்கள். அந்தக் குணங்களின் அடிப்படையில் அவர்களுடைய விருப்பு வெறுப்புக்கள் வேறுபடும், மனப்பான்மைகள் மாறுபடும். இந்த மனப்பான்மைதான் ஒருவரை மற்றவரிடமிருந்து இனம் பிரித்துக் காட்டுவது.

இராமன் அறவோன்; அவனுக்கு இன்பத்தில் நாட்டமில்லை; அறமே பெரியது. இராவணன் காமுகன்; அவனுக்கு இன்பத்தில்தான் நாட்டம்; அறம் எனப்படுவது அவனது விருப்பமேயன்றி வேறு அல்ல. தயரதனின் உயிர் இராமனிடம் தங்கியிருந்தது; கூனிக்கு இன்பம் கைகேயியின் உயர்வு; கைகேயியிக்கு இன்பம் அதிகாரத்தைக் கைப்பற்றுவதிலே. இவ்வாறு ஒவ்வொருவருக்கும் அடிமனதிலுள்ள நாட்டமே அவர்களுடைய இலக்கைத் தேர்ந்தெடுக்க உதவியது; வாழ்க்கைப் போக்கை மாற்றியது. இந்த ரீதியில் பார்க்கும்பொழுது சீதைக்கும் இலக்குவனுக்கும் இன்பம் என்பது இராமனின் உடனிருப்புத்தான்; இராமனை நிழல்போல் தொடர்ந்து நின்றான் இலக்குவன். உயிரை உடல் தொடர்வதுபோல் இராமனைப் பற்றி வாழ்ந்தாள் சீதை. 'நீரின்றேல் மீனில்லை; பார் இன்றேல் பல பொருட்களும் இல்லை' என்பது போல் 'இராமனில்லை என்றால் இலக்குவனுக்கும், சீதைக்கும் உயிர் வாழ்வே இல்லை' என்ற கருத்தைக் காப்பியத்தில் இலக்குவனே கூறுகிறான். கானகத்துக்குச் செல்லும் இராமன் இலக்குவனிடம் விடை பெறும் பொழுது தானும் உடன் இராமனோடு வனம் புகப் போவதாகப் புகலும் இலக்குவன் மேற்கூறப்பட்ட கருத்துக்களை அப்பொழுதுதான் கூறுகிறான்.

> *" 'நீர் உள எனின் உள, மீனும் நீலமும்;*
> *பார் உள எனின் உள, யாவும்; பார்ப்புறின்*
> *நார் உள தனு உளாய்! நானும் சீதையும்*
> *ஆர் உளர் எனின் உளம்? அருளுவாய்!' என்றான்."*
>
> *(அயோத்தியா - நகர் நீங்கு - 152)*

சீதை இராமனைப் பிரிந்தால் நீரை விட்டுப் பிரிந்த மீனாகத் துடித்துப் போய் உயிர் நீப்பாள் என்பது கருத்து.

இராமனை இறுதி வரை பிரியாமல் வாழும் பேறு இலக்குவனுக்குக் கிட்டியது. ஆனால் அத்தகைய பேறு சீதைக்கு வாய்க்கவில்லையாதலால், இராமனுடைய பிரிவு சீதையை எவ்வாறு பாதித்தது என்றும், ஒரு மனைவி என்ற நிலையில் அவளுடைய துயரத்தின் ஆழம் என்ன என்பதையும் ஆராய வேண்டியது அவசியம்.

சீதையின் பிறப்பின் நோக்கம் என்ன? இராமனைவிட்டுப் பிரியாமல் வாழ வேண்டும் என்பதே. திருமால் இராமனாக அவதரிக்க மனம் கொண்ட பொழுது, அவன் பாற்கடலை விட்டு வரவேண்டியதாகியது. திருமாலைப் பிரிந்திருக்க இயலாத திருமகள் நிலத்தில் சீதையாக உருவெடுத்து வந்து திருமகனைப் பற்றி வாழ்ந்தாள். இக்கருத்தைக் கூறும் காப்பியப் பாடல் பின்வருமாறு:

*"..................................................*
*உறைந்த பாற்கடல் சேக்கை உடன் ஓரீஇ,*
*அறம் திறம்பும் என்று ஐயன் அயோத்தியில்*
*பிறந்த பின்பும் பிரியலள் ஆயினாள்"*

*(அயோத்தியா - நகர் நீங்கு - 219)*

என்பது கம்பன் வாக்கு.

*" 'இந்த, இப்பிறவிக்கு இரு மாதரைச்*
*சிந்தையாலும் தொடேன்' ..........."*

*(சுந்தர - சூடாமணி - 34)*

என்று சீதையிடம் செவ்வரம் சாற்றியவன் இராமன். ஆனால் "இப்பிறவியன்றி, மறுபிறவியிலும் கூட இராமனைத் தீண்டி வாழும் இன்பம் அன்றி வேறு ஓர் வரம் தான் வேண்டிலள்" என்றவள் சீதை.

அசோகவனத்துச் சீதை, இராமனுக்கு அனுமன் மூலம் சொல்லியனுப்பும் செய்தியாகும் இது.

*" 'ஈண்டு நான் இருந்து, இன் உயிர் மாயினும்,*
*மீண்டு வந்து பிறந்து தன் மேனியைத்*
*தீண்டலாவது ஓர் தீ வினை தீர் வரம்*
*வேண்டினாள், தொழுது' என்று விளம்புவாய்"*

*(சுந்தர - சூடாமணி - 35)*

சீதையின் உயிர்நிலை இராமனிடம்தான் இருந்தது. இதை உணர்ந்து வாழ்ந்தவள் சீதை.

.......... இராவணன் சீதையிடம் காதல் வேண்டி நிற்கிறான். சீதையின் காதல் கடைக்கண் தன் மீது பட்டாலன்றித் தனக்கு உடலில் உயிர் தரியாது என்று கூறிச் சீதையிடம் தனக்கு உயிர் தருமாறு வேண்டுகிறான். சீதை, "என் உயிர் இராமன் எனும்

வடிவமாகவே மாறி அவனிடம் தங்கியுள்ளது. என்னிடம் இல்லாத உயிரை நான் உனக்குத் தருவது எப்படி?" என்று தன் இயலாமையை விளக்குகிறாள்.

*" 'எனக்கு உயிர் பிறிதும் ஒன்று உண்டு என்று இரேல், – இரக்கம் அல்லால்*
*தனக்கு உயிர் வேறு இன்றாகி, தாமரைக்கண்ணது ஆகி,*
*கனக் கரு மேகம் என்று கார் முகம் தாங்கி, ஆர்க்கும்*
*மனக்கு இனிது ஆகி, நிற்கும் அஃது அன்றி ......"*

*(யுத்த – மாயா சனக – 24)*

பொருள்: எனக்கென்று தனியாக உயிர் ஒன்றில்லை. இரக்கம் என்னும் பெரும் பண்பு தனக்கு இருப்பிடமாக இராமனுயிரைத் தேர்ந்தெடுத்துள்ளது. அந்த உயிர் தாமரைக் கண்களாகி, கனக் கருமேகம் போன்று கார் முகம் தாங்கி, உள்ளது. அவ்வடிவும் தோற்றமும்தான் என் உயிராகவும் நிற்கிறது.

ஒருமுறை வீடணன் மகள் திரிசடையிடம், சீதை, தன்னுடல் பொய்யுடல் என்றும், அப் பொய்யுடலிலிருந்து உயிர் எப்பொழுதோ மறைந்துவிட்டது என்றும் கூறுகிறாள்.

*" '............................................. இறத்தல் என்பால்*
*முன்னமே முடிந்தது அன்றே?' என்றனள் முளரிநீத்தாள்"*

*(யுத்த – சீதை களம் காண் – 30)*

ஆயினும் இராமனைப் பிரிந்த பின்பும் தான் உயிர் வாழ்ந்திருந்தாளே சீதை! எதனால்? அதற்கும் இராமனே காரணம். மறுபிறவியிலும் அவனையே கணவனாகப் பெற விழையும் சீதை, இப்பிறவியில் ஒரு முறையேனும் தான் இராமனைக் காணலாம் என்ற ஆவலால் உயிர் தரிக்கிறாளேயன்றி, தன் ஊன் பொதி உடலைப் பேண வேண்டும் என்ற ஆசையினால் அல்ல என்று இராவணனிடம் கூறுகிறாள் சீதை.

*" 'ஊண் இலா யாக்கை பேணி, உயர் புகழ் சூடாது, உன் முன்*
*நாண் இலாது இருந்தேன் அல்லேன்; நவை அறு குணங்கள் என்னும்*
*பூண் எலாம் பொறுத்த மேனிப் புண்ணியமூர்த்தி தன்னைக்*
*காணலாம் இன்னும் என்னும் காதலால் இருந்தேன்' ............"*

*(யுத்த – மாயாசீதை – 22)*

இதே கருத்தைத் திரிசடையிடமும் கூறுகிறாள்.

*" 'நாண் எலாம் துறந்தேன், இல்லின் நன்மையின் நல்லார்க்கு ஏய்ந்த;*
*பூண் எலாம் ஆகி நின்ற என் தன் பொரு சிலை மேகம் தன்னைக்*
*காணலாம் என்னும் ஆசை தடுக்க, என் ஆவி காத்தேன்;*
*ஏண் இலா உடலம் நீக்கல் எளிது, எனக்கு' எனவும் சொன்னாள்."*

*(யுத்த – சீதை களம் காண் – 31)*

காப்பியத்தின் சூடாமணிப் படலத்தில், அனுமனிடம், "இதுகாறும் நான் கொண்ட பிரிவுத் துயரால் பட்டபாட்டைத் தொடர்ந்து பட முடியாது. இராமன் வரவு நோக்கி இன்னும் ஒரு திங்கள்தான் உயிர் வாழ்வேன். குறித்த காலம் தாண்டிவிட்டால் உறுதியாக இறப்பேன்" என்று இராமன் மேல் ஆணையிட்டுக் கூறுகிறாள் சீதை.

*" 'இன்னும், ஈண்டு, ஒரு திங்கள் இருப்பல் யான்;*
*நின்னை நோக்கிப் பகர்ந்தது, நீதியோய்!*
*பின்னை ஆவி பிடிக்ககிலேன்; அந்த*
*மன்னன் ஆணை; இதனை மனக் கொள் நீ "*

*(சுந்தர – சூடாமணி – 29)*

கணவனைப் பிரியாது வாழ எண்ணுவது எல்லா மனைவியர்க்கும் இயல்புதானே! இஃதென்ன போற்றற்குரிய பெரும் பண்பு என்ற கேள்வி எழலாம். ஆனால் தன் விருப்பத்தைச் செயலாக்கிக் காட்டும் திறன் சில பெண்களுக்கே இருக்கும். அந்த வினைத் திறன் சீதையிடம் இருந்தது. அந்தச் சக்தியும் திறனும் இராமனைக் கணமும் பிரிய விழையாத அவளுடைய உண்மையான அன்பு மனத்தால் ஊற்றமாய் விளைந்து நின்றது. இராமன் வனம் புக்க பொழுது இலக்குவனின் மனைவி ஊர்மிளை அவனைத் தொடர்ந்து வனம் செல்லவில்லை. பரதன் தவ வேடம் புனைந்து விரத வாழ்க்கை மேற்கொண்ட பொழுது அவனுடைய மனைவி மாண்டவியும் அவனைப் பற்றியே தவநெறி ஒழுகினாள் என்றோ, சத்ருக்கனனின் மனைவி சுருதகீர்த்தியின் வாழ்நெறி என்னவென்றோ காப்பியம் கூறவில்லை. காரணம், அவர்கள் மூவரும் அரண்மனை வாழ்க்கையைத்தான் தேர்ந்தெடுத்தார்கள் போலும்! ஆனால் சீதை, தன் கணவன் இராமன் எவ்வளவோ தடுத்தும் கேளாமல் அவனோடு வனத்துக்குப் புறப்பட்டு விடுகிறாள். இராமனுக்கும் சீதைக்கும் ஒரு வாக்குவாதமே நடக்கிறது. அப்பொழுது ........... இராமன் வனம் செல்லும் முன்னர் சீதையிடம் விடைபெற வருகிறான். அவளிடம், "காடு என்பது அண்மையில்தான் இருக்கிறது. நான்போய் அது எப்படி இருக்கிறதென்று பார்த்துவிட்டு வந்து விடுவேன். நீ பிரிவு எண்ணி வருந்தக் கூடாது. இங்கேயே இருக்க வேண்டும்"

என்கிறான். ஆனால் சீதை அவன் நாடு விட்டுக் காடு செல்வதையெல்லாம் ஒரு செய்தியாகவே பொருட்படுத்தவில்லை. "நீ வருந்தாதே! இங்கேயே இரு" என்று சொன்ன சொற்கள்தான் அவள் செவியில் விழுந்தன. அச்சொற்கள் தீயைப் போன்று தன் செவிகளைச் சுட, தேம்பி அழுகிறாள். சீதை, "என்னை இங்கேயே இரு என்றானே இராமன்! அஃதெப்படி அவன் சொல்லலாகும்?" என்று உன்னி உன்னி உழல்கிறாள். காப்பிய வரிகள் இக்காட்சியை ஓவியம் போல் தீட்டுகின்றன.

*"'பொரு இல் எம்பி புவி புரப்பான்; புகழ்*
*இருவர் ஆணையும் ஏந்தினென்; இன்று போய்*
*கருவி மாமழைக் கல் – கதம் கண்டு; நான்*
*வருவென் ஈண்டு; வருந்தலை நீ என்றான்."*

*(அயோத்தியா – நகர் நீங்கு – 217)*

இராமனின் இச்சொற்களைக் கேட்ட சீதை,

*"நாயகன் வனம் நண்ணல் உற்றான் என்றும்,*
*மேய மண் இழந்தான் என்றும், விம்மலள்;*
*'நீ வருந்தலை, நீங்குவென் யான்' என்ற*
*தீய வெஞ் சொல் செவி சுடத் தேம்புவாள்"*

*(அயோத்தி – நகர் நீங்கு – 218)*

*"அன்ன தன்மையள், 'ஐயனும் அன்னையும்,*
*சொன்ன செய்யத் துணிந்தது தூயதே;*
*என்னை, என்னை, 'இருத்தி' என்றான்?' எனா*
*உன்ன, உன்ன, உயிர் உமிழா நின்றாள்"*

*(அயோத்தி – நகர் நீங்கு – 220)*

தானும், இராமனோடு வனத்துக்குப் பயணப்பட ஆயத்தமாகிறாள். இராமன், "உன் செம்பஞ்சுப் பாதங்கள் வனத்தின் வெம்மையைத் தாங்காது" என்கிறான். பதிலாக, "நின் பிரிவினும் சுடுமோ, பெருங்காடு?" என்று எதிர்வாதம் புரிகிறாள். பிறகு இராமனின் பதிலுக்குக் காத்திராமல் அரண்மனையின் உள்ளே சென்றாள்; சீரை உடுத்தினாள்; வெளிப் போந்தாள்; ஐயனின் அயற்புறத்தில் வந்தாள். அவன் நீள் கரம் பற்றிக் கொண்டு நின்றாள் – எம்மை எவராலும் பிரிக்க இயலாது என்பது போல. பேரரசன் சனகனின் மகளாய்த் தோன்றி, பேரரசன் தயரதனின் மருகியாய் அயோத்தி வந்து, புகழ் பூத்த அயோத்தி அரசை எதிர்காலத்தில் ஆளப் பிறந்த பேரரசன்

இராமனுக்குத் தான் மனைவியாக இருக்கும் பேறு பெற்றவள் என்ற மமதை கிஞ்சித்தும் இல்லாமல் ( தன் கணவனுக்கு மரபின் அடிப்படையில் மகுடம் சூட்டப்பட்டிருந்தால் பட்டத்துக்குரிய பேரரசியாக ஆகி இருக்க வேண்டிய ஒரு பெண், ஒரு கணவனிடத்தில் என்னவெல்லாம் கேள்விகள் கேட்டு, நியாய அநியாயத்தைப் பற்றிய வாதங்கள் எல்லாம் இவ்விடத்தில் செய்திருக்க வேண்டும்! அவை எதுவுமே செய்யவில்லை சீதை!) மகுடம் இழந்த கணவனோடு கானகம் ஏக விரும்புகிறாள்! ஏனெனில் சீதைக்கு அரச போக வாழ்வு, அது தரும் அதிகார போதை இதில் எல்லாம் நாட்டமே இல்லை என்பது தான் உண்மை. அவளுடைய வாழ்வும் தாழ்வும், இன்பமும் துன்பமும் இராமனுடைய உடனிருப்பை ஒட்டியே இருந்தது.

இலக்குவன் சீதையைப் போன்றே இராமனிடம் உறுதியான அன்பு பூண்டவன். அவனோ இராமனுக்கு உரிமையுடைய அரசு மறுக்கப்பட்ட செய்தியறிந்தவுடன், மூட்டாத காலத் தீயென சினம் மூண்டெழ வெகுண்டு, தந்தையை, சிற்றன்னையைப் பற்றித் தகாதனவெல்லாம் கூறி வசை பாடுகிறான். தன் வெஞ்சிலையின் உதவி கொண்டு, தயரதனை ஒறுத்து, இராமனுக்கு அயோத்தி மட்டுமென்ன, ஏழேழு உலகங்களையும் கூட உரிமையாக்குவேன் என்று வஞ்சினம் சாற்றுகின்றான். இராமன் "மறை ஓதிய நாவால், வாய் தந்த சொற்களையெல்லாம் கூறுதல் உனக்கு அழகாமோ?" என்று இலக்குவனைக் கடிந்து கொள்ள வேண்டியதாகிறது. கோசலையும் கூட, தன் மகன் இராமனுக்கு அயோத்தியின் அரச உரிமை கிடைக்கப் போவதையறிந்து உவகை பூத்தாளென்றாலும்கூட, தன் கணவன் உரிமை இழக்கப் போகின்றானே என்று ஒரு கணம் துணுக்குற்றாள்!

காப்பிய வரிகள்,

*" 'சிறக்கும், செல்வம் மகற்கு' என, சிந்தையில்*
*பிறக்கும் பேர் உவகைக் கடல் பெட்பு அற,*
*வறக்கும் மா வடவைக் கனல் ஆனதால் -*
*துறக்கும் மன்னவன் என்னும் துணுக்கமே"*

*(அயோத்தியா - மந்தரை சூழ்ச்சி - 5)*

காரணம் அரச பதவி, உரிமை என்பது அத்துணை மாட்சிமையுடையது. ஆனால் சீதைக்கு இந்த அரச உரிமை பற்றிய ஆர்வம் இருப்பதாகவே தெரியவில்லை. "இராமனிருக்கும் இடமே அயோத்தி" என்பது போல மிக இயல்பாக அவனோடு கானகம் நோக்கி நடக்கிறாள்.

*"கல்நகு திரள் புயக் கணவன் பின் செல,*
*நல் நகர் ஒத்தது, நடந்த கானமும்;"*
*(அயோத்தியா – திருவடி சூட்டு – 87)*

"ஒரு பெண்ணின் இத்தகைய ஆழமான, குன்றாத அன்பைவிட உயர்ந்து சிறந்த பொருள் இவ்வுலகில் வேறு ஒன்று உண்டோ?" என்று கம்பனே, சீதை இராமன் மீது கொண்டிருந்த அன்பை வியந்து போற்றுகின்றான்.

*"சிறுநிலை மருங்குல் கொங்கை ஏந்திய செல்வம் என்னும்*
*நெறியிருங் கூந்தல் நங்கை சீறடி, நீர்க் கொப்பூழின்*
*நறியன; தொடர்ந்து சென்று நடத்தலின், 'நவையின் நீக்கும்*
*உறுவலி, அன்பின் ஊங்கு ஒன்று உண்டு!' என உணர்வது உண்டோ?"*
*(அயோத்தியா – தைலம் ஆட்டு – 52)*

என்பது கம்பனின் வியப்பு.

இப்படிப்பட்ட ஒரு பெண்ணுக்குக் கணவனைப் பிரிவது ஒன்று மட்டும்தான் வாழ்க்கைத் துயரம்! மற்றெதுவும் அவள் மனச்சீர்மையைப் பாதிக்க முடியாது. இராமனைப் பிரிதல் என்பது எந்த அளவுக்குச் சீதையின் மனச் சீர்மையைக் கெடுக்கும் என்றால், பொய்மானாக வேடமிட்டு வந்த மாரீசனின் பொய்க்குரல் கேட்ட சீதை, இராமனுக்கு அபாயம் நேர்ந்துவிட்டதை அறிந்த பின்னும், அவனைக் காப்பதற்குப் போகாமல் தன்னுடனேயே நிற்கும் இளையவனின் ஒழுக்கத்தின் மீதே பழி சுமத்திப் பேசத் துணிந்து விடுகிறாள்! "இன்னும் ஒரு கண நேரம் தாமதித்தாலும் தீயில் விழுந்து நான் இறப்பேன்" என்கிறாள். இராமனுடைய உறவே அவளுக்குச் சாகா வரம் அளிக்கக் கூடிய உறுதிப் பொருள் என்பதை அவள் வாழ்க்கையின் பல கட்டங்களிலும் நிலைநிறுத்திக் கொண்டே வருகிறாள்.

.......... அரச போகம், அரச வாழ்வு ஆகியவற்றிலெல்லாம் நாட்டமே இல்லாத சீதை, கணவனின் அன்பில் மட்டுமே வாழ்க்கையின் முழுப் பயனையும் பெற்று உய்ந்துவிடுவதென்ற வாழ்நெறி கொண்டவளாகக் காட்டப் பெறும் சீதை – நாளும், பொழுதும், இரவும் பகலும் எப்பொழுதும் இராமனுடனேயே ஒட்டி உறவாடி வாழ்வதற்கு ஏதுவாக இருக்கும் இந்த வனவாழ்க்கையை மனதுக்குள் மறைவாக விரும்பியிருந்தால்கூட வியப்பதற்கில்லை. காரணம், வன வாழ்க்கையின் இடர்கள் பற்றிச் சீதை எதுவுமே பேசுவதில்லை. மாறாக, கானகத்தில் இடம் மாறிச் செல்லும் பொழுதெல்லாம் சீதை இராமனோடு விளையாடி இன்புற்றுக் கொண்டே போனாள் என்கிறான் கம்பன்.

*" 'அருப்பு ஏந்திய கலசத்துணை, அமுது ஏந்திய மதமா*
*மருப்பு ஏந்திய' எனல் ஆம் முலை, மழை ஏந்திய குழலாள்*
*கருப்பு ஏந்திரம் (பாலை) முதலாயின கண்டாள், இடர் காணாள்,*
*பொருப்பு ஏந்திய தோளானொடு விளையாடினள், போனாள்"*
*(அயோத்தியா - கங்கை - 6)*

அவள் மகிழ்வதற்கொப்ப இராமனும் வழியின் இயற்கைக் காட்சி களையெல்லாம் சீதைக்குக் காட்டிக் காட்டி விளக்குவதோடு, அன்னம், மயில், கிளிகள், மலர்கள் ஆகிய கவினுறு உயிரினங்களைக் காணும்தோறும், அவற்றைத் தன் மனைவியின் இணையற்ற அழகுக்கு உவமையாகக் கூறிக் கொண்டே செல்கிறான். அதிலும் பஞ்சவடி எனும் வனப்பகுதி இயற்கையின் எழிலார்ந்த கோலச் சிறப்பை முழுவதுமே தனக்கு உரிமையாக்கிக் கொண்டுவிட்டது போன்ற வனப்பு மிக்க வளமான வாழ்விடமாகிறது சீதைக்கு. அங்கே இராமனும் சீதையும் ஒருவரையொருவர் அன்பு செய்து வாழ்ந்த அமைதியான வாழ்க்கையை மிக அழகான சொல்லோவியமாகத் தருகிறான் கம்பன்.......... அழகிய தடாகத்தில் கூம்பி நிற்கும் தாமரை மொக்குகள், அழகிய சீதையின் இணை முலைகளுக்கும், அன்னத்தின் அழகு நடை அணங்கின் மென்னடைக்கும், வளைந்து நெளிந்து ஓடிக் கிடக்கும் கொடி, அவள் இடைக்கும் ஒப்பாவதை ஆவல் நிறைந்த கண்களால் கண்டு களித்துச் சிரித்திருந்தான் இராமன். கம்பீரமாக நடந்து வரும் ஆண் யானையின் நடையில் இராமனின் ஆண்மை அழகைக் கண்டும், அமைதியான குன்றுகளின் அமைப்பில் இராகவனின் திண் தோள்கள் கண்டும், அல்லியம் கமலத்தின்அழகிலே அண்ணலின் வடிவழகைக் கண்டும் மனம் களித்திருந்தாள் சீதை. மேற்காணும் கருத்து விளங்க நிற்கும் காப்பியப் பாடல்கள் பின்வருவன:

*"நாளம் கொள் நளினப் பள்ளி, நயனங்கள் அமைய, நேமி*
*வாளங்கள் உறைவ கண்டு, மங்கை தன் கொங்கை நோக்கும்,*
*நீளம் கொல் சிலையோன்; மற்றை நேரிழை, நெடிய நம்பி*
*தோளின் கண் நயனம் வைத்தாள், சுடர் மணித் தடங்கள் கண்டாள்"*
*(ஆரணிய - சூர்ப்பணகை - 4)*

*"ஓதிமம் ஒதுங்க, கண்ட உத்தமன், உழையள் ஆகும்*
*சீதை தன் நடையை நோக்கி, சிறியது ஓர் முறுவல் செய்தான்;*
*மாது அவள் தானும், ஆண்டு வந்து, நீர் உண்டு, மீளும்*
*போதகம் நடப்ப நோக்கி, புதியது ஓர் முறுவல் பூத்தாள்"*
*(ஆரணிய - சூர்ப்பணகை - 5)*

*"வில் இயல் தடக்கை வீரன், வீங்கு நீர் ஆற்றின் பாங்கர்*
*வல்லிகள் நுடங்கக் கண்டான், மங்கைதன் மருங்குல் நோக்க*
*எல்லி அம் குவளைக் கானத்து, இடை இடை மலர்ந்து நின்ற*
*அல்லி அம் கமலம் கண்டாள், அண்ணல் தன் வடிவம் கண்டாள்"*

*(ஆரணிய - சூர்ப்பணகை - 6)*

இவ்வாறு அண்ணலின் தவக் கோலத்தையும், அழகிய எழிற்கோலத்தையும் தன் மலர்க்கண்களால் மாற்றி மாற்றிக் கண்டு இன்பமுற்றிருந்தாள் சீதை.

இத்தகைய இனிய வாழ்வைச் சிதைத்தவன் இராவணன். சீதை வேண்டியது அரச போகமும், அறுசுவையுணவும், ஆடை அலங்காரமும், அதிகாரமும் அல்ல. இராமனைப் பிரியாது வாழும் பேறு ஒன்றைத்தான். அந்தப் பேற்றைக் குலைத்தவன் இராவணன். அத்துடன் அவள் விரும்பாத அரச போகத்தைத் தான் தருவதாக ஆசை காட்டுகிறான். அறமும் கருணையும் எளிமையும் இரக்கமும் சூழ நிற்கும் இராமனின் ஆளுமையை மனத்தால் வழுத்தி வாழும் பேறு ஒன்றே வாழ்வின் பயன் என்று வாழும் சீதை, இராமனின் பிரிவை எப்படிச் சகிப்பாள்? கன்னி இள வயதில் கார்மேக வண்ணனைக் கண்ட நாள் முதல் இராமன் ஒருவனை மட்டுமே அவளுடைய உள்ளத்தில் நிறுத்தியவள் அல்லவா? மேலும் இராமனைத் தான் மணக்க இயலவில்லையென்றால், தன் உயிரையே மாய்த்துக் கொள்வது என்றும் முடிவெடுத்திருந்தாள் சீதை!

காப்பியச் சான்று:

*" 'இல்லையே நுசுப்பு' என்பார், 'உண்டு , உண்டு' என்னவும்,*
*மெல்லியல, முலைகளும் விம்ம விம்முவாள்;*
*சொல்லிய குறியின், அத்தோன்றலே அவன்;*
*அல்லனேல், இறப்பென்' என்று அகத்துள் உன்னினாள்."*

*(பால - கார்முக - 63)*

மேலும், திருமண நிச்சய நாளில் வில்லை இறுத்தவனும், தன்னுடைய நிறையை இறுத்தவனும் ஒருவர்தானா என்பதை ஐயமற அறிவதற்குக் கைவளைகளைத் திருத்துபவள் போல் கடைக் கண்களால் கண்டு உண்மையறிந்து மனம் அமைதியுற்றாள்.

*"எய்ய வில் வளைத்ததும், இறுத்ததும் உரைத்ததும்,*
*மெய் விளைவு இடத்து, முதல் ஐயம் விடலுற்றாள்,*
*ஐயனை, அகத்து வடிவே அல, புறத்தும்,*
*கைவளை திருத்துபு, கடைக் கணின் உணர்ந்தாள்"*
*(பால - கோலங் காண் - 37)*

இவ்வாறு உலகமறியாத கன்னி இள வயதில் இராமனின் கரம் பற்றியவள், வாழ்நாள் முழுதும் அவனே தன் உலகம் என வாழ்ந்தாள். அண்ட கோளங்கள் அனைத்தையும் ஆளும் ஆசை கொண்ட இராவணனோ, இவளுடைய அந்த அழகிய சிறு உலகத்தைச் சிதைக்க ஆசை கொண்டுவிட்டான். கயிலையின் கிரியையே பெயர்த்தெடுக்க முனைந்தவனல்லவா இராவணன்! அது முற்ற முழுக்க முடிவுறாமல் போனதால், காரிகை ஒருத்தியின் காதல் வாழ்க்கையையே பெயர்த்துவிட முடிவு செய்து விட்டான் போலும்! ஆனால் இராமனை அன்பு செய்து வாழும் உலகம் அன்றி வேறொரு உலகம் அறியாத பேதைப் பெண்ணாகிய சீதைக்கு இராமனை விட்டால் வாழ்வில் செல்வம் ஏது? உயிர் ஏது? வாழ்வுக்குப் பொருள்தான் ஏது? இராமனைப் பிரிந்து வாழும் நிலையை விட கொடியதான துயரம்தான் ஏது? அந்தக் கொடிய துயரத்துக்கு ஆட்பட்ட சீதையின் வேதனைக்கு எல்லைதான் ஏது? இத்தகைய நோக்கில், பெண்ணொருத்தி அடையக் கூடாத பெருந்துயர் உற்றவள் சானகி என்பதில் ஐயமில்லை; அது மிகையான கணிப்பும் இல்லை.

எனவே சீதைக்கு ஏற்பட்ட பெருந்துயரம் இராமனின் பிரிவே! பிரிவு எனும் துயரம் ஒரு பிணியாகியது அவளுக்கு! பிரிவுப் பிணிக்கு ஓர் உருவம் கொடுத்தால் எப்படியிருக்கும்? அசோக வனத்துச் சீதையைப் போல் இருக்கும் என்கிறான் கம்பன்.

*"அரிய மஞ்சினோடு அஞ்சனம் முதல் இவை அதிகம்*
*கரிய காண்டலும், கண்ணின் நீர், கடல் புகக் கலுழ்வாள்*
*உரிய காதலின் ஒருவரோடு ஒருவரை உலகில்*
*பிரிவு எனும் துயர் உருவு கொண்டாலன்ன பிணியாள்"*
*(சுந்தர - காட்சி - 7)*

உடலின் அடிப்படைத் தேவைகளான உண்ணுதல், உறங்குதலையும் ஒழித்தாள். மயில் போன்ற குயில் மொழியாள், மான் போன்ற தோற்றத்தாள், அயில் எயிற்று அரக்கியர் இடையில் இருந்து வேறு என்னவெல்லாம் செய்தாள்? பிரிவெனும் துயரத்தைப் பெரும் பிணியாக உணர்ந்தவள் என்னவெல்லாம் செய்வாளோ அவற்றையெல்லாம் செய்தாள். கம்பன் பட்டியலிடுகிறான்.

*"விழுதல், விம்முதல், மெய் உற வெதும்புதல், வெருவல்,*
*எழுதல், ஏங்குதல், இரங்குதல், இராமனை எண்ணித்*
*தொழுதல், சோருதல், துளங்குதல், துயர் உழந்து உயிர்த்தல்*
*அழுதல் அன்றி மற்று அயல் ஒன்றும் செய்குவது அறியாள்"*
*(சுந்தர – காட்சி – 5)*

*"துயில் எனக் கண்கள் இமைத்தலும் முகிழ்த்தலும் துறந்தாள்;*
*வெயிலிடைத் தந்த விளக்கு என ஒளி இலா மெய்யாள்"*
*(சுந்தர – காட்சி – 4)*

சீதையின் கண்கள் நிரந்தரமான 'மழைக் கண்கள்' ஆகி அவளுடைய பொன் முலைத் தடங்களின் வழியே அருவியெனப் பெருகி ஓடியது.

*"தழைத்த பொன் முலைத் தடம் கடந்து, அருவி போய்த்தாழப்*
*புழைத்த போல, நீர் நிரந்தரம் பொழிகின்ற பொலிவால்,*
*இழைக்கும் நுண்ணிய மருங்குலாள், இணை நெடுங் கண்கள்*
*'மழைக் கண்' என்பது காரணக் குறி என வகுத்தாள்"*
*(சுந்தர – காட்சிப் – 6)*

அத்தகைய கண்ணீர் அருவியிலேயே குளித்தாள்; பிரிவு வெம்மையிலே உலர்ந்தாள், தவம் செய்த தவமாம் தையல் சீதை.

*"........................... நெடுங் கண்கள் உகுத்த*
*அப்பினால் நனைந்து, அருந்துயர் உயிர்ப்புடை யாக்கை*
*வெப்பினால் புலர்ந்து, ஒரு நிலை உறாத மென்துகிலாள்"*
*(சுந்தர – காட்சி – 8)*

தன் உயிர் வாழ்க்கைக்கு ஊற்றமாய் உள்ள இராமனைத் தன்னிடமிருந்து பிரித்த விதியை, 'வலியதே' என்ற வியப்பால் அயிர்ப்பாள். 'விதியையும் மாற்ற வல்ல ஆற்றல் கொண்டவன் தன் நாயகன்' என்று ஒரு கணம் துணிவாள்; அத்தகைய முடிவால் சுருதி நாயகன் வரும் திசை எதுவாக இருக்கும் என்று கருதிக் கருதி அண்டவெளி முழுவதையும் கண்களால் அளப்பாள்.

அமிழ்து கொண்டு அனங்கவேள் செய்த அன்னம் சீதை, புனலிடைத் தோயாது, துகில் ஒன்று மேனியைத் தழுவியவளாய், இராமநாமம் ஆவியைத் தழுவியவளாய், ஓவியம் புகையுண்டது போன்ற உருவத்தவள் ஆனாள்.

இதுதான் இராமனைப் பிரிந்து வாழ்ந்த சீதை இயற்றிய 'கற்புத்தவம்' என்ற அழகு வடிவம். எந்த அழகு இராவணனைத் தன்னிடம் மயங்க வைத்ததோ, அந்த அழகு வடிவத்தை இனி இராவணன் காணக் கூடாது என்று வன்மம் கொண்டவள் போல், இராமன் தன்னைச் சிறை மீட்கும் நாள் வரை, இத்தகைய தவக் கோலத்தில்தான் இருந்தாள். அனுமன் தன்னை அசோக வனத்தில் கண்டபொழுது இருந்த அதே தவக்கோலத்தில்தான் இராவண வதம் முடியும் வரை இருந்தாள் சீதை.

(இந்த உண்மையை வலியுறுத்தும் வண்ணம் மாயா சனகப் படலத்தில் மீண்டும் கம்பன் கூறுவான்.)

*"வரி சடை நறு மலர் வண்டு பாடு இலாத்*
*துரிசு அடை புரி குழல் சும்மை சுற்றிய*
*ஒரு சடை உடையவட்கு...."*

*(யுத்த - மாயா சனக - 93)*

என்று சீதையின் குழல் ஒரு சடையாகித் திருத்தமில்லாது கிடந்தது என்கிறான்.

எனவே சீதை புனல் படியாது, குழல் திருத்தாது, முறைப்படி பூசனைகள் புரியாது, "தன் மன நோய்க்கு மருந்து ஏது?" என்ற எண்ணத்தினால், தான் இருந்த இடம் செல்லரித்துப் போகும் வண்ணம் ஓரிடத்திலேயே கிடந்தாள். இதுதான் சீதை இயற்றிய கற்புத்தவமும் தவக் கோலமும் ஆகும்.

இந்த தவத்துக்கான மூல மந்திரம் என்ன? இராமனின் நாமமே! மும்மை சால் உலகுக்கெல்லாம் மூல மந்திரத்தை, முற்றும் தம்மையே தமர்க்கு நல்கும் தனிப்பெரும் பதத்தை, இம்மைக்கும் எழுமை நோய்க்கும் மருந்தினை, இராமன் என்னும் செம்மை சேர் நாமத்தை மூலமந்திரமாக ஆக்கி, அவளுடைய உயிரின் ஆழத்தில் அதனை உள் நிறுத்தி, அந்த ஒலியலைகள் எழுப்பும் காந்த சக்தியின் பயனால் உயிர் வாழ்ந்தாள் சீதை; தவம் புரிந்தாள் அன்னை.

இந்தத் தவத்துக்கான சடங்குகள் யாவை? இராமனைப் பற்றிய முந்தைக் கால - கடந்த கால நினைவுகளே. 'வாயினால் பாடி மனத்தினால் சிந்தித்து' இறைவனை

வழுத்த வேண்டும் என்பது மரபு. மனமும், வருணனைக்குள் அடங்காத அழகு வடிவத்தையும், எல்லையில்லாத அருட்பண்புகளையும் சிந்தை செய்து களித்து மகிழ வேண்டும்.

அவ்வாறே தன் இறைவனாகிய இராமனின் அருட்பண்புகளையெல்லாம் பின் வருமாறு நினைவு கூர்ந்து மகிழ்ந்தாள் சீதை.

வனவாச காலத்தில் இராமனுடைய திருமுகத்தைக் கண்களால் கண்டு கண்டு களித்து அனுபவித்தாள். அப்பொழுது ஓர் உண்மை கண்டாள். அயோத்தியில் இராமனுடைய வதனத்தில் தான் கண்ட முகப்பொலிவைவிட ஆரண்ய வாசத்தில் முகப்பொலிவு மும்மடங்கு கூடியிருக்கக் கண்டாள்! "சோர் நிலம் உன் தம்பியின் உடைமை" என்று கூறிய கேகயன் மடந்தையின் சொல்லை ஏற்று, சிங்கமனைய இராமன், நிலையற்ற பொருட்செல்வத்தைத் துறந்த மனத்தூய்மையினால் ஏற்பட்டதோ இந்த அழகு என்று முன்பு ரசித்தவள், இராமனுடைய அன்றைய மும்மடங்கு முகப்பொலிவை இன்று சிறையில் கிடந்து எண்ணி, உழன்று வெதும்புவாள்!

ஒருக்கால் அந்த முகப்பொலிவு காலம் செல்லச் செல்ல ஏற்பட்ட அழகோ என்று எவரும் எண்ணவியலாது. காரணம் தந்தை தயரதன் "மெய்த்திருப்பதம் மேவு" என்றான். தாயோ "இத்திருத் துறந்து வனம் ஏகு" என்றாள். இரு சமயங்களிலும் இராமனுடைய முகம், சித்திரத்தில் காணப்படும் மலர்ந்த தாமரையானது மாறாத தன்மையுடன் இருக்குமே, அத்தகைய மலர்ந்த தாமரையை ஒத்திருந்த முக அழகோடு வாட்டமின்றி இருந்ததே! இராமனுடைய மனச்சீர்மை பண்பினால் அன்று ஏற்பட்டிருந்த அந்த அழகை இன்று எண்ணி வியந்து போற்றுவாள்!

இந்திரலோகத்து இன்பம் அழிந்துபடத் தேவர்களுக்கு இன்னல் விளைவித்த அரக்கர் தம் பல்பதினாயிரம் படையினைப் பஞ்சாய்ப் பறக்க வைத்த தன் மணவாளனின் வில் நலம் புகழ்ந்து ஏங்கி ஏங்கி இரங்குவாள்!

ஆழநீர்க் கங்கைக்குத் தலைவனாகிய ஏழை வேடன் குகனிடம், "எம் தம்பி, உன் தம்பி, நீ என் தோழன்; என் மனைவி உன் கொழுந்தி" என்று கூறிய இராமனை – உயர்வு தாழ்வைப் பிறப்பில் காணாமல், மனத்தின் பண்புச் செம்மையில் கண்டு நட்பு பாராட்டும் இராமனின் உயர்ந்த குண நலனை – எண்ணி மயங்குவாள்!

சனகன் தன்னை இராமனுக்குக் கன்னிகாதானம் செய்த காலத்தில், தன் கைத்தலங்கள் பற்றி, ஒன்றின் மேல் ஒன்றாகத் தன் கைத்தலங்களை அடுக்கிய இராமனுடைய மண வினைச் செய்கை ஒன்றை நினைந்து மனத்துக்குள் மறுகுவாள்!

உரிமையுடைய முடியைப் புனையாது, செஞ்சடை கட்டிச் செல்வம் துறந்து வனம் போந்த தன் தம்பி பரதனுடைய செய்வினையை எண்ணி இரங்கிய இராமனது அன்புடை மனத்தை இன்று எண்ணி இவள் இரங்குவாள்!

அரசைத் துறந்த காலை, அரண்மனையில் தனக்கென்றிருந்த ஆன்குலம் முதலான அனைத்துச் செல்வத்தையும் இராமன் ஈந்தும், இன்னும் செல்வம் வேண்டி நின்ற திரிசடன் எனும் அந்தணனுடைய ஆசை அறாத மனநிலை கண்டு நகை செய்த நாயகனின் முக அழகை எண்ணி எண்ணி, அவ்வழகைத் தொடர்ந்து காணப்பெறாத இன்றைய தன் அவலத்தை உன்னி உன்னி உள்ளம் அயிர்ப்பாள்!

தருக்குற்ற தயரதனின் தானையை எதிர்கொண்ட அன்புடைய பரசுராமனின் செருக்கை அடக்கிய பான்மையையும், காகத்தின் வடிவு கொண்டு தன்னைத் துன்புறுத்திய இந்திரன் மகன் சயந்தனை, வேகச் சரங்களால் வென்று வீழ்த்திய காகுத்தனின் வீரத்தின் தன்மையையும், விராதனின் தீவினை மாற்றி, அவனுக்குற்ற சாபத்தையும் ஒழித்த இராமனின் உயர் பண்பினையும் உணர்ந்து, உணர்வு ஒழிந்து இன்று உயிர் சாம்புவாள்! ......

........... இவ்வாறு, இராமனின் பண்புகளைப் பற்றி நினைந்து நினைந்தே தவமியற்றினாள் தையல். உடனிருந்தால் இராமனின் தோள்களைப் பற்றி வாழ்வது; பிரிந்தால் இராமனின் நினைவுகளைப் பற்றி வாழ்வது என்பதுதான் அவள் வாழ்நெறி. இராமனுடைய தொடர்பின்றி அவளால் வாழ இயலாது; உயிர் உடலில் தரிக்காது.

இத்தகைய தவமியற்றும் சீதை, தவத்தின் பயனாகக் கண்டது என்ன? மென்மேலும் துயர் மேவும் எண்ணங்களையே! இராமனைக் காணத் தவமியற்றும் தன்னை நாடி அவன் இன்னும் வராதது ஏனோ என்ற எண்ணம் தரும் துன்பம் அவளுக்கு நாளுக்கு நாள் கூடியது. நம்பிக்கைக் குறைவும் ஏற்பட்டது. அதனால் மனக்குழப்பம் அடைந்து தன் கணவனுடைய அன்பு மனநிலையில் மாற்றம் ஏற்பட்டு விட்டதோ, அன்றி அவனுக்கு ஏதேனும் துன்பம் நேர்ந்துவிட்டதோ என்று எண்ணாதனவெல்லாம் எண்ணிப் பின்வருமாறு கலங்கினாள்.

"வன் கொடுமை அரக்கர் என்னைத் தின்று தீர்த்தனர் என்று எண்ணிவிட்டானோ என் கணவன்? இனி ஒன்றும் செய்வதற்கில்லை என்று முயற்சியே செய்யாமல் இருந்துவிட்டானோ? தன் குலப் பொறுமையை என் வகையில் பின்பற்றிவிட்டானோ? நான் என்னவென்று எண்ணுவேன்? எப்படி ஆறுதல் கொள்வேன்?" என்று கண்ணீர் பெருக்கினாள்.

"ஒருக்கால் குறித்த காலத்துக்கு மேல் வனவாசம் நீட்டித்துவிட்டதோ? எனவே பரதன் தாயர் முதலானோர் மீண்டும் வந்து கொற்ற மாநகர்க்கு இராமனைக் கொண்டு சென்றுவிட்டார்களோ?" என்று இராமன் பக்கத்துச் செய்திகள் ஒன்றையும் அறிய இயலாமல் கண்ணீர் கலுழும் கண்ணும், நினைவுகள் தீய்க்கும் நெஞ்சுமாய் அரற்றிப் பிதற்றிப் பித்தேறியவள் போலானாள்.

இத்தகைய நினைவு தரும் துயரம் ஒன்றுமேயில்லை என்பதுபோல வேறொரு கூட்டுத்துயரம் சீதையின் உள்ளத்தில் பொருக்கென மேலெழுகிறது. அந்த நினைவின் அழுத்தத்தைத் தாள முடியாமல் தவிக்கிறாள் தேவி. தன்னுடைய கற்பில் இராமனே ஐயமுற்றானோ என்பதோடு அப்படி இராமனே ஐயுறவில்லையென்றாலும், "அயலவன் அகத்தில் பல காலம் சிறைப்பட்டவள் அடுத்து தன் கணவனைச் சேர்ந்து வாழ்வதற்கு இந்த உலகம் ஒப்புக் கொள்ளுமா?" என்று எண்ணிக் கலங்கினாள். 'இதுகாறும் தான் உயிரோடு இருப்பதையே இந்த உலகம் ஒப்புக் கொள்ளாது என்பது உண்மையே அல்லவா?' என்று நடைமுறைக்கொப்பச் சிந்தித்தாள்.

எனவே, தான் உயிருடன் இருந்தால் பழிதான். இறந்து புகழைப் பெறுதல் ஒன்று மட்டுமே மேன்மையானது என்றெல்லாம் பலவாறு எண்ணிப் பின்வரும் வகையில் பிதற்றி உயிர் அழிகிறாள்.

காப்பிய வரிகள்:

*" 'ஒன்று என் உயிர் உண்டு எனின், உண்டு இடர்; யான்*
*பொன்றும் பொழுதே புகழ் பூணும்' ......................"*

*(சுந்தர – உருக்காட்டு – 10)*

மேலும்,

*" 'பொறை இருந்து ஆற்றி, என் உயிரும் போற்றினேன்,*
*அறை இருங் கழலவற் காணும் ஆசையால்,*
*நிறை இரும் பல் பகல், நிருதர் நீள் நகர்ச்*
*சிறை இருந்தேனை, அப்புனிதன் தீண்டுமோ?' "*

*(சுந்தர – உருக்காட்டு – 11)*

பொருள்: (மனுதர்மப்படி, கணவனைப் பிரிந்து ஒரு மனைவி பிறிதொருவர் இல்லத்தில் ஒரு நாள் தங்கியிருந்தாலும், அவள் கணவனால் கைவிடப்பட

வேண்டியவள். அவள் கணவனை விட்டு நிரந்தரமாகப் பிரிந்துவிட வேண்டும். அன்றேல், தீயில் குளித்துத் தன் கற்பை நிருபிக்க வேண்டும், அல்லது இறந்துபட வேண்டும்). இந்த நீதியை சீதை அறிந்தவள் ஆதலால், பலகாலம் அரக்கர்தம் நகரில் சிறை இருந்து உயிர் வாழ்ந்துள்ள என்னைப் புனிதன் (மறைநூல் வழியும், மனுதர்மப்படியும் வாழும் இராமன்) மீண்டும் மனைவியாக ஏற்றுக் கொள்வானா? (மாட்டான்).

*" 'உன்னினர் பிறர் என உணர்ந்தும், உய்ந்து, அவர்*
*சொன்ன சொல்லை செவியில் துங்கவும்,*
*மன் உயிர் காத்து, இருங்காலம் வைகினேன்;*
*என்னின், வேறு அரக்கியர், யாண்டையார் கொலோ?' "*
*(சுந்தர – உருக்காட்டு – 12)*

அதாவது எனைச் சூழ்ந்து இங்கிருப்பவர்களை அரக்கியர் என்று எண்ணுகின்றேனே! என்னுடைய கற்பின் நிலை பற்றிப் பழி கூட்டிப் பிறர் பேசுவர் என்று உணர்ந்த பின்னரும், அவற்றை அறியாதவள் போல பாவனை காட்டி உயிர் வாழ்க்கையில் ஆசை வைத்துப் பல காலம் வாழ்ந்துவிட்ட **என்னைவிட வேறு அரக்கியர் உலகில் யார் உளர்?**

*" 'சொல் பிரியாப் பழி சுமந்து தூங்குவேன்:*
*நல் பிறப்பு உடைமையும் நாணும் நன்று அரோ!*
*கற்புடை மடந்தையர், கதையுளோர்கள்தாம்*
*இல் பிரிந்து உயர்ந்தவர், யாவர் யான் அலால்?' "*
*(சுந்தர – உருக்காட்டு – 13)*

பொருள்: பழி சுமந்த சொற்களைச் சுமந்தும் வாழ்கிறேன்; நல் பிறப்பு எனும் குணமே என்னைக் கண்டு நாணும் தகைமையேன். கதைகளிலே, வாழ்ந்த கற்புடைய பெண்டிரில் தன் கணவனைப் பிரிந்தபின் உயிர் வாழ்ந்தவர்கள் என்னைப் போல் பிறிதொருவர் இல்லையே!

'பிறன் மனையில் வாழ்ந்த பெண்ணைக் காப்பாற்றுவது அறம் இல்லை என்று இறைவனாகிய இராமன் முடிவெடுத்துவிட்டான் என்பது கண்கூடு. நான் அறத்தொடு வாழ்ந்தவள் என்பதை அறமிலாது வாழ்ந்து (உயிருடன் இருந்து) எப்படி நிரூபிக்க இயலும்? எப்பொழுது அரக்கனால் சிறையெடுக்கப்பட்டேனோ, அப்பொழுதே நான் உயிர் விட்டிருக்க வேண்டும். எத்தகைய துறக்க வாழ்க்கையை அனுபவிக்க வேண்டி

நான் பெருமையழிந்த பின்னரும் உயிருடன் இருக்க உளங் கொண்டேன் என்றே அறியேன்!'

'புகழ்பெற்ற சனகன் குலத்தில் பிறந்த நான், விதியின் விளையாட்டால் பழி சுமந்துவிட்டேன். என் பழியைப் பிறர் துடைப்பது எங்ஙனம்? உயிரை விட்டு விடுவதன் மூலம் மட்டுமே எனக்குற்ற பழியை நானே துடைத்துக் கொள்ள முடியும்!'

........................ இவ்வாறு இதற்கு முன்பு உறாத உணர்வெல்லாம் உற்று, எண்ணாத சிந்தனையெல்லாம் எண்ணி வருபவளுக்கு ஐயத்துடன் கூடிய மேலும் பல கேள்விகள் எழுகின்றன.

"ஒருக்கால் இவ்வுலகம், நான் திட்டமிட்டே இலங்கைக்கு விருப்பத்துடன் வந்தேன் என்றும், அதற்காகவே மைந்தன் இலக்குவனை வைது, பின் 'இராமன் பின் செல்வாய்' என்று நாடகமாடி விட்டு, அரக்கனுடன் வந்தேன் என்று கூறி விடுமோ? நான் உயிருடனிருந்தால் அப்படித்தான் கூறும் என்பதில் ஐயமேது? நான் இளவலை வசைபாடி விரட்டி விட்ட இழிச் செயலுக்கு எத்தனை விளக்கம் கொடுத்தாலும் உலகம் இனி ஏற்றுக் கொள்ளுமா?" என்றும் எண்ணுகிறாள்.

எண்ணத்தினூடே வேறொரு சிந்தனை பளிச்சிடுகிறது சீதைக்கு– "இராமன் தன்னுடைய வீரத்துக்குற்ற பழியைப் போக்குவதற்காகப் போர் புரியலாம். அதில் வென்றாலும் வெல்லலாம்; அன்றி, சிறை மீட்க வேண்டும் என்ற ஒரே நோக்கத்துக்காகப் போரிட்டு என்னைச் சிறை மீட்டாலும் மீட்கலாம். ஆனால் 'அறத்தை மீறிய பின்னரும் வாழ்ந்த சீதையின் கணவன் இராமன்' என்ற பழி எதிர்காலத்தில் இராமனைச் சுற்றி விடுமோ?"

"உயிர் வாழ்ந்திருந்தால் எத்தனை இடர்கள்? மான உணர்வின்றி, கணவனைப் பிரிந்த பின்னரும் கள்வன் ஊரிலே உயிர் வாழ்ந்தவள் இவள்" என்று கவரிமான் அனைய மாண்புடைய குல மாதர்கள் என்னை ஏசும்படியும் நான் கையறு நிலையோடு அந்த ஏச்சுகளைச் செவியுறும்படியும் எதிர்காலத்தில் நிற்க வேண்டியிருக்குமோ?"

"இராமன் தன் வில்திறம் கொண்டு என்னைச் சிறை மீட்பதாகவே வைத்துக் கொண்டாலும், 'நீ என்னோடு இல்லறம் நடத்தத் தகுதியில்லாதவள்' என்று கூறினால், நான் எப்படி என் கற்பு நிலையை நிரூபித்துக் காட்டுவேன்?"

(உலகம் எப்படியெல்லாம் சீதையின்பால் பழி தூற்றும் என்று இராமன் எண்ணி, சிறை மீட்ட பின்னர், அவள் மேல் எத்தகைய பழிகளைச் சுமத்துகிறானோ, அவற்றையெல்லாம் மிகச் சரியாக சீதை முன்கூட்டியே எண்ணிப் பார்ப்பது அவளுடைய பெண்மைச் சிறப்பையும், குலப் பெருமையையும் காட்டுவதாகும். கணவனோடு கருத்தொருமித்துள்ள நிலையையும் காட்டுவதாகும்).

இத்தகைய எண்ணங்களால் உந்தப்பெற்ற சீதை, மாதவிப் பொதும்பரிடைச் சென்று, 'அறத்தின் வழி இதுவே' என்று தன் உயிர் விடத் துணிகிறாள். அனுமன் சரியான தருணத்தில் வந்து அவள் முன் தோன்றி அவள் திட்டத்தைத் தகர்க்கிறான். அவன் அங்கில்லாது போயிருந்தால் சீதை மரணத்தைத் தழுவியிருப்பது உறுதியே அல்லவா? எனவே இராமனுடைய பிரிவும் அவனுக்குப் பழி வருமோ என்ற நினைவும் தன்னுடைய உயிர் வாழ்க்கையையே முடித்துக் கொள்ளும் அளவுக்குத் துயரம் கூட்டுவதாக இருந்தது சீதைக்கு என்பது தெளிவு.

இராமனே சீதையின் உயிரல்லவா? அவனைக் காண இயலாத சிறை வாழ்வில் அவனுடைய நாமத்தை மனத்திலே இருத்தியன்றோ பிரிவின் வெம்மையைத் தணித்திருந்தாள்! அந்த உண்மை விளங்க அடுத்து ஒரு நிகழ்ச்சி நடக்கிறது.

உயிர் விடத் துணிந்த சீதையின் முன்னர் அனுமன், "அண்ட நாயகன் இராமனின் அருந் தூதன் யான்! இராமனுடைய ஆணையால் இவ்விடம் வந்தேன். உம்மைச் சிறை வைத்த அரக்கர் இன்னும் உயிர் வாழ்தலிலிருந்தே ஆண் தகை இராமன், நீவிர் உறையும் இவ்விடத்தே அறிந்துகொள்ளவில்லை என்பதை நீவிர் உணர்ந்து கொள்ளவில்லையா? ஐயம் வேண்டாம்! அச்சம் வேண்டாம். ஐயன் அனுப்பிய அடையாளமும், உரைத்த உரைகளும் என் வசம் உள்ளன. உள்ளங்கை நெல்லிக் கனியென என் உரைகள் உண்மையென்பதைச் சில கணங்களில் காணலாம்" என்று ஒரே மூச்சில் பல கருத்துகளைப் பொதிந்து ஒரே கூற்றாகக் கூறுகிறான்.

இவ்வாறு இராம நாமத்தைக் கூறி நின்ற அனுமனின் புனித தோற்றத்தைக் கண்டவுடனேயே அன்னை, உணர்வில் உருகினாள், "இவன் அரக்கன் அல்லன்; பொறிகள் ஐந்தையும் வென்ற விண்ணவன்" என்று உறுதியடைகிறாள்.

ஆயினும் ஓர் ஐயம் மின்னல்போல் பளிச்சிடுகிறது. "மாயத்தில் வல்ல அரக்கர்களின் சூழ்ச்சியில் இவனுடைய வருகையும், சொற்களும் அடங்குமோ?" என்று நினைப்பவள், அதே மின்னல் வேகத்தில் அந்த எண்ணத்தைத் தன் சிந்தையிலிருந்து

அகற்றிவிட்டு, "அரக்கனாகவே அன்றி குரக்கனாகவே இருக்கட்டுமே! என் இறைவனின் நாமத்தைக் கூறி என் உணர்வை உருக்கினானே! இதைவிட எனக்கு ஒருவன் செய்யக்கூடிய உதவி வேறு உண்டோ?" என்று எண்ணி இன்புறுகிறாள் அன்னை! ஆக, இராமநாமத்தைப் பிறர் கூறக் கேட்டாலும் உருகும் தன்மையில் உள்ளாள் இராமனுடைய அன்பில் பித்தேறிக் கிடந்த பேதை சீதை!

அனுமன், அடுத்து, சீதையைப் பிரிந்தபின் உள்ள இராமனுடைய வாழ்க்கை வரலாற்றைச் சுருக்கமாகக் கூறுகிறான். அவள் இராமனிடம் கொண்டுள்ள எல்லையற்ற அன்பை அவனுடைய உரைகள் மூலம் தெளியும் அன்னை, அவனுடைய வாயாலேயே இராமனுடைய மேனியழகின் மேன்மையைத் தான் செவியாரக் கேட்க எண்ணுகிறாள். இராமனின் ஓவியத்தில் எழுதவொண்ணாத மேனியழகைப் புறக் கண்களால் காணும் பேற்றைப் பலகாலம் இழந்திருந்த சீதை, அந்த இழப்பை ஒரே நாளில் ஈடு செய்து கொள்ளும் வண்ணம், பாதாதிகேசம் இராமனின் வடிவழகை அனுமன் கூறக் கூற, பக்திப் பெருக்குடன் கேட்டுக் கண்ணீர் அருவியெனப் பொழிய நிற்கிறாள். இந்த நிகழ்ச்சிகள் எல்லாம் சீதை இராமன் பால் கொண்டிருந்த கரை காணாக் காதலை உணர்த்துவதற்குச் சிறந்த சான்றுகள். இதற்குப் பிறகு நடக்கும் நிகழ்ச்சி இவற்றிலும் சிறப்புடையதாகும்.

அழகு வர்ணனை முடிந்த பின், இராமன் கூறிய அடையாளச் செய்திகளைக் கூறிப் பின் ஆழிவண்ணன் அளித்த கணையாழியை அடையாளப் பொருளாகக் காட்டுகிறான் அனுமன். இங்குச் சீதையின் நிலையை வருணிக்கிறான் கம்பன். இராமனுடைய பிரிவு என்பதுதானே அவளுக்குற்ற பெருந்துயரம்! இந்தச் சோகத்துக்கு எதையுமே உவமையாகக் கூற முடியாதுதான்! ஆயினும் அந்த இழப்புக்கு உலக வாழ்க்கை நடைமுறையில் எவற்றையெல்லாம் ஒப்புமை கூறலாம் என்று பார்த்துப் பார்த்துப் பட்டியலிட்டுப் பின்னர், "அந்த இழப்புகளெல்லாம் விதி வசத்தால் பேறுகளாக மாறினால் இழப்புக்குள்ளானவர்கள் எத்தகைய உவகை கொள்வார்களோ அத்தகைய உவகையையெல்லாம் ஒரு சேரப் பெற்றாள், இராமனின் கணையாழியைக் கண்ட சீதை" என்கிறான் கம்பன்! காப்பியப் பாடல்களைக் காண்போம்.

இராமனின் கணையாழி சீதையிடம் ஏற்படுத்திய 'உவகை நல் விளைவுகளை' எப்படித்தான் கூறுவது என்று கேள்வி கேட்டுக் கொண்டே போகிறான் கம்பன். அந்தக் கேள்வியிலேயே பதிலும் பொதிந்து கிடக்கிறது.

*"இறந்தவர் பிறந்த பயன் எய்தினர் கொல் என்கோ?*
*மறந்தவர் அறிந்து உணர்வு வந்தனர் கொல் என்கோ?*
*துறந்த உயிர் வந்து இடைதொடர்ந்தது கொல் என்னோ?*
*திறம் தெரிவது என்னை கொல், இந்நல் நுதலி செய்கை?"*
*(சுந்தர - உருக்காட்டு - 64)*

எத்தகைய இழப்பையெல்லாம் ஈடு செய்தாள் சீதை என்கிறான்.

*"இழந்த மணி புற்று அரவு எதிர்ந்தது எனல் ஆனாள்;*
*பழந்தனம் இழந்தன படைத்தவரை ஒத்தாள்;*
*குழந்தையை உயிர்த்த மலடிக்கு உவமை கொண்டாள்;*
*உழந்து விழி பெற்றது ஓர் உயிர்ப் பொறையும் ஒத்தாள்"*
*(சுந்தர - உருக்காட்டு - 65)*

இராமனின் கணையாழியைக் கண்ட சீதை எத்தகைய உவகைபூக்கும் உணர்ச்சிகரமான செயல்பாடுகளில் ஈடுபட்டாள் என்பதையும் வரிசைப்படுத்துகிறான் கம்பன்.

*"வாங்கினள்; முலைக் குவையில் வைத்தனள்; சிரத்தால்*
*தாங்கினள்; மலர்க்கண் மிசை ஒற்றினள்; தடந்தோள்*
*வீங்கினள்; மெலிந்தனள்; குளிர்ந்தனள்; வெதுப்போடு*
*ஏங்கினள்; உயிர்த்தனள்; இது இன்னது எனல் ஆமே?"*
*(சுந்தர - உருக்காட்டு - 66)*

*"மோக்கும்; முலை வைத்து உற முயங்கும்; ஒளிர் நல் நீர்*
*நீக்கி, நிறை கண் இணை ததும்ப, நெடு நீளம்*
*நோக்கும்; நுவலக் கருதும், ஒன்றும் நுவல்கில்லாள்;*
*மேக்கு நிமிர் விம்மலள்; விழுங்கலுறுகின்றாள்"*
*(சுந்தர - உருக்காட்டு - 67)*

அண்ணலின் திருக்கணையாழியைத் தீண்டப் பெற்றுப் பொன்னின் நிறம் என்னத்தக்க மின்னின் வண்ணம் எய்தி பொலிவு கூடி நின்றாள் அன்னை சீதை. இக்கணையாழியைத் தன் கண்களுக்குத் காட்டிய அனுமனை, "அம்மை நீ! அப்பன் நீ! அத்தனும் அருளின் வாழ்வும் நீயே! இம்மையோடு மறுமையும் எனக்கு இன்று நல்கினை! ஏழேழு உலகங்கள் நிற்கும் அளவும் நீ வாழி பல்லாண்டு" என்று

இராமனின் பிரிவின் இறுக்கம் தீர்த்தமைக்காகப் போற்றுகின்றாள். ஆக, இராமனுடைய தூதுவனைக் கண்டும், இராமன் தொடர்பான செய்திகளை அவன் மூலம் அறிந்தும் சீதை கொண்ட களிப்பின் ஆழத்திலிருந்தே அவளுடைய பிரிவுத் துயரின் ஆழத்தைக் கற்போராலும் புரிந்து கொள்ள முடிகிறது.

அனுமனைக் காண்பதற்கு முன் அசோக வனத்தில் மேலும் இரு துயர்களுக்கு ஆளானாள் சீதை. பிறன்மனையான அவளைச் சிறை கொண்டது மட்டுமல்லாமல், இராவணன், கற்புக் கனலியான சீதையிடம் காதலால் இறைஞ்சி வேண்டி நின்று, அவன் அவள் பால் உரைத்த நெறியற்ற காதல் மொழிகளையெல்லாம் தன்னிரு செவிகளால் கேட்கும் அவப்பேற்றுக்கு ஆளானாள்.

காகுத்தனுக்காகக் கற்புநிலை காப்பதிலே பீடும் பெருமையும் கொண்டவள் சீதை. எனவே 'தேவர்களுக்கு உரிய அவியை நாய் விரும்புவதா?' என்று கொதித்தெழுந்து இராவணனின் தகாத சொற்கள் தன் செவியில் புகாதவண்ணம் தன் செங்கைகளால் தடுக்கிறாள்.

*" 'செவிகளைத் தளிர்க் கையாலே சிக்குறச் சேமம் செய்தாள்;*
*கவினும் வெஞ்சிலைக் கை வென்றிக் காகுத்தன் கற்பினேனை*
*புவியிடை ஒழுக்கம் நோக்காய்; பொங்கு எரி, புனிதர் ஈயும்*
*அவியை நாய் வேட்டதென்ன, என் சொனாய் அரக்க! என்னா"*
*(ஆரணிய – இராவணன் சூழ்ச்சி – 67)*

இராவணன் கண்களைக் காணவே அஞ்சி,

*"கூற்றம் வந்துற்ற காலத்து உயிர் என, குலைவு கொண்டாள்"*
*(ஆரணிய – இராவணன் சூழ்ச்சி – 64)*

இராவணனோ அறத்தைப் பற்றிச் சற்றும் சிந்தியாமல், கற்பை உயிரெனப் போற்றும் குலமகளிடம் பின்வரும் வகையில் தகாத வார்த்தைகளைக் கூறுகிறான்.

"இன்று நாளை என்று ஒவ்வொரு நாளும் கழிகிறதே! என்னை விரகதாபத்தில் வீழ்த்திக் கொன்ற பின் என்னைக் கூடலாம் என்று எண்ணுகிறாயா? மூவுலகும் தழுவி நிற்கும் என் பொருட்செல்வ மிகுதியை நீ அறியவில்லையோ? நோற்றும், நுண் பொருள் நோக்கியும் வாழும் தவவாழ்க்கையில் என்ன வாழ்க்கைப் பயனுள்ளது? என் சொற்கேட்டால் உனக்கு இன்பமன்றி வேறொன்றில்லை. யாழும் விளரியும் பூவையும் மருளும் வண்ணம் நீ பேசுகின்ற அன்பு மொழியும், அருள் வாசகமும், உன் மின்

இடைபோல், என் வகையில் இல்லை என்றாக்குகிறாயே! இளமையை வறிதே கழித்து இடர் உறுகிறாயே! கண்ணே! உன் அன்பைப் பெறாமல் நான் இறந்துபடுவேன். அதற்கும் நான் வருந்தவில்லை. உன்னுடைய அழகை ஆள்வதற்குப் பின் உலகில் எவரும் இல்லாமல் போய் விடுவார்களே என்று அஞ்சுகின்றேன். உன் தந்தை சனகனை வள்ளல் என்கிறார்களே! அத்தகைய வள்ளண்மை உனக்கு இல்லையோ? மானைத் துரத்தியவன் அலறி வீழ்ந்த குரல் கேட்டும், மீண்டும் கணவனைக் காணலாம் என்றிருப்பது இகழ்ச்சிக்குரிய செயலன்றோ? "உன்னால் என் உயிர் தங்கியது" எனும் புகழைப் பெறுவதல்லாமல், "உன்னால் என் உயிர் நீங்கியது'' என்ற பழிக்கு ஆளாகிவிட சிந்தை கொண்டாயோ? தேவ தேவியரெல்லாம் தொழ நிற்கும் மூவுலகின் தனி நாயக வாழ்வு உன்னைத் தேடி வருகின்றது. அதனை விலக்காதே! என்னை உன் அடிமையாக்கி விடு, அருளைத் தந்து விடு" என்று சீதையின் அடிமேல் முடிபட நிலத்தில் விழுந்தான்.

இராவணனுடைய இந்த நடத்தை, இராமனின் பிரிவு தரும் துன்பத்தைவிடப் பெரிய துன்பமாகிறது சீதைக்கு! இச்சொற்களைக் கேட்டு அவளுடைய செவிகள் தீய்ந்தன; உள்ளம் திரிந்தது; கண்களில் தீப்பாய்ந்து நின்றது. தன் விதியை நினைத்து நெருப்புக் கண்ணீர் விடுகின்றாள் சீதை!

சீதையை அடுத்தடுத்துச் சந்தித்துத் தன் காதல் மொழிகளை இராவணன் அரற்றிக் கொண்டே இருக்க, சீதையும் அடுத்தடுத்து வெந்தீயில் விழுந்து கொண்டே இருந்தாள். மேலும் மருத்தன் என்பவனை மாயா சனகன் போல் உருமாற்றி அவனைக் கொல்லப்போவதாகச் சீதையை அச்சுறுத்தி அவளுடைய உறவைப் பெற எண்ணும் இராவணன் பின்வருமாறு கூறுகின்றான்:

"காமவேளின் அம்புக்கு நான் ஆளாகாமலிருப்பது எப்படி? இதுகாறும் மாதர் பலரிடம் அமுதம் போல் தோன்றிய நஞ்சையே உண்டிருக்கிறேன் என்பதை, அமுதின் வந்த தேவியே, உம்மைக் கண்டு உணர்ந்து கொண்டேன்! நான் உம்மிடம் தோற்றுப்போனேன்! என் மேனி அனலாயக் கொதிக்கிறது; தென்றல் வீசினாலும் வியர்க்கிறது; என் வயிரத்தோள் மெலிந்துவிட்டது. இதனால் அமரரும் என் பால் அச்சம் தீர்ந்தனர். இவையெல்லாம் உம்மால் எனக்கு இதுகாறும் நிகழ்ந்துவிட்டன. இன்னும் என்னை என்ன செய்யப் போகிறீர் அம்மா? பெண் என்றால் எனக்கு நீவிர் மட்டும்தான்! என் நா உம் பெயரன்றிப் பிற பெண்ணின் பெயரை இனி உச்சரிக்காது; காணும் இடம் எல்லாம் உம் கண்ணழகு ஒன்றையே காண்கின்றேன். காமவேளின் அம்பு செய்யும் புண் எல்லாம் என் ஒருவனுக்கு மட்டுமே உரியதாக்கி விபரீதம் செய்து விட்டீரே! நான் என்ன செய்வேன்?".

"காமசாத்திரம் வகுத்த நூலோர் அதன் அங்கங்கள் பத்து என்று பொய்யாக எழுதி வைத்து விட்டனர். காமநோய் கண்டதால் என்னை நானே நாய் என்று உணரும் மனநிலையில் உள்ள எனக்குத்தான் தெரியும், காமக்கலையின் அங்கங்கள் பத்து அல்ல, ஆயிரம் என்று. அமிழ்தினும் இனிய அணங்கே! நான் பிறந்த பயன் பெறாமல் நிற்கின்றேன்! வாழ்வின் பெரும் பொருட்கள், சாதனைகள் அனைத்தையும் மறந்துவிட்டேன். நாளும் இறந்து இறந்து உய்கின்றேன்! எவர் அறிவார் என் நிலையை? முந்தைய நாளில் இந்திரன் வேண்டி நின்ற காதலை இன்பமுற நல்கிய அகலிகை, அச்செய்கையால் இழுக்கடையவில்லையே! எனவே என்னை அன்பு செய்தால் உமக்கு இன்பமன்றி இழுக்கில்லை! என் காமநோய்க்கு உம் சுந்தரக் குமுதவாய் எனக்கு நல்கும் அமுதம் அன்றி என் மையல் நோய் தீர்க்கும் வேறு மந்திரச் சொற்களும் இல்லை; மருந்தும் இல்லை. அருளுவீர் அமுதச் சொல்லீர்!" என்று இராவணன் தன் நீண்ட காம உரையை நிகழ்த்தி முடிக்கிறான்.

........... இரக்கத்துக்குரிய நிலையில் கண்கள் அருவியென நீர் பொழிய "இப்படி ஒருவன் தன்னிடம் பேசவும் தனக்கு விதியானதே! காகுத்தனுக்காகக் கற்பினைக் காக்கும் தன்னிடம் இப்படிப் பேசிய பிறகும் ஒருவன் தன் கிளையோடு முடியாமல் உயிர் வாழ்கிறான் என்றால், என் கற்பு நிலையின் மேன்மையும் இதுதானோ? அறத்தின் மேன்மையும் இதுதானோ? நீ பேசுவதையெல்லாம் நான் கேட்கும் விதிக்கு உள்ளாகி உயிர் வாழும் புன்மை உடையவள் நான் என்றால், நீ எதைத்தான் என்னிடம் பேச மாட்டாய்? என்னதான் செய்யத் துணிய மாட்டாய்?" என்று கழிவிரக்கம் தோன்றக் கதறுகிறாள். காப்பிய வரிகள்,

*"பழி இது; பாவம்" என்று பார்க்கிலை; "பகரத் தக்க*
*மொழி இவை அல்ல" என்பது உணர்கிலை; முறைமை நோக்காய்*
*கிழிகிலை நெஞ்சம்; வஞ்சக் கிளையொடும் இன்று காறும்*
*அழகிலை என்ற போது என் கற்பு என் ஆம்? அறம்தான் என் ஆம்?"*
*(யுத்த - மாயா சனக - 19)*

*"வான் உள அறத்தின் தோன்றும் சொல் வழி வாழ மண்ணின்*
*ஊன் உள உடம்புக்கு எல்லாம் உயிர் உள; உணர்வும் உண்டால்*
*தான் உள, பத்துப் பேழ்வாய், தகாதன உரைக்கத்தக்க,*
*யான் உளென் கேட்க என்றால், என் சொலாய்? யாது செய்யாய்?"*
*(யுத்த - மாயா சனக - 20)*

தன் கணவன் கண்டு இன்புற வேண்டிய தன் மேனியழகைக் காமுகன் வருணித்துத் தன்னிடம் காதலை இச்சிக்கும் கொடுமையான அனுபவமன்றிப் பிறிதொரு பெருந்துயரம், கற்புடைய மகளிருக்கு நேரவும் கூடுமோ? அப் பெருந்துயருக்கு உள்ளானாள் சீதை.

பிறிதொரு துன்பமும் சீதைக்கு நேர்ந்தது. சீதை, சிறையில், தன்னந்தனியே விடப்பட்டிருந்தால் கூட, அவளுடைய துயர் கூடாமல் இருந்திருக்கும். ஆனால் இராவணன் நியமித்த அரக்கியர் அவளைச் சூழ்ந்து நின்று காவல் புரிந்தனர். மயில் அன்ன மங்கை சீதை, இடை பெருத்தும், உடல் தடித்தும், பற்கள் நீண்டும், வன்மையுடையவர்களாகத் தோன்றிய அரக்கியர் சூழ இருந்த நிலை, மான் இளம் பேடை ஒன்று புலிக்குழாத்துள் அகப்பட்ட நிலையை ஒத்ததாக இருந்தது என்கிறான் கம்பன்.

*"வன் மருங்கு வாள் அரக்கியர் நெருக்க, அங்கு இருந்தாள்"*
*(சுந்தர - காட்சி -3)*

*"மயில் இயல் குயில் மழலையாள், மான் இளம் பேடை*
*அயில் எயிற்று வெம்புலிக்குழாத்து அகப்பட்ட தன்னாள்"*
*(சுந்தர - காட்சி - 4)*

இராவணனோ அடுத்தடுத்து வந்து சீதையின் காதலை இச்சித்துத் துயரத்தைக் கூட்டிப் போனான். அப்படிப் போகும் பொழுதெல்லாம் அங்கு இருந்த நகை இலாத முகத்து, பேழ் வாய், அரக்கியரிடம் சீதைக்கு நற்சொற்கள் கூறி அவளுடைய மனத்தை மாற்றும்படி கட்டளையிட்டு விட்டுச் சென்றான். அவ்வண்ணமே அரக்கியர் அவனுடைய ஆணையை நிறைவேற்ற முயல்கின்றனர். இராவணன் ஒன்று கூறினால் அதை ஒன்பதாகப் புரிந்து கொண்டு சீதையை இழித்தும், பழித்தும், உரப்பியும், தெருட்டியும் நனிமிக வருத்துகின்றனர். வேறு எப்பொழுது எண்ணியிராவிட்டாலும், இத்தகைய சூழலில், ஒரு கணமாவது, தான், அன்பு நிறைந்த சேடியர் சூழ வாழ்ந்திருந்த மிதிலை நகரத்து அரண்மனை வாழ்க்கையை நினைவு கூராமலா இருந்திருப்பாள் சீதை? அவள் அவ்வாறு செய்தாளோ இல்லையோ, நாம் நினைவு கூர வேண்டியுள்ளது.

......... நீரிலிருந்து நிலத்துக்கு வந்த திருமகள் என்றே மிதிலையில் சானகி போற்றப்பட்டாள். அவள் செம்பஞ்சுப் பாதங்கள், நடக்க நடக்கச் சேடியர் 'பொன்னே! அமிழ்தே!' என்று கூறிக் கூறி மலர்களைத் தூவிக் கொண்டே சென்றனர்.

*"தன் நேர் இல்லா மங்கையர், 'செங்கைத் தளிர் மானே!*
*அன்னே! தேனே! ஆர் அமிழ்தே!' என்று அடி போற்றி,*
*முன்னே, முன்னே, மொய்ம் மலர் தூவி முறைசார,*
*பொன்னே சூழும் பூவின் ஒதுங்கிப் பொலிகின்றாள்"*

*(பால – மிதிலைக் காட்சி – 30)*

கார்மேகவண்ணனைக் கண்டு காதல் கைம்மிகக் கொண்டு காமநோயில் வருந்துகிறாள் சீதை. அதனை அறியாத சேடியர் அன்னையினும் பரிவு தோன்ற அவளது மேனியில் மலர்களைக் கொட்டுகின்றனர். சீதை கொண்ட காம வெம்மையில் மலர்கள் கரிந்து போகின்றன. மேலும் மேலும் மலர்களைத் தொடர்ந்து கொட்டிக் கொண்டே இருக்கின்றனர் சேடியர்.

*"தாயரின் பரி சேடியர், தாது உகு*
*வீ, அரித் தளிர், மெல் அணை, மேனியில்*
*காய் எரிக் கரியக் கரிய, கொணர்ந்து*
*ஆயிரத்தின் இரட்டி அடுக்கினார்"*

*(பால – மிதிலைக் காட்சி – 81)*

மேலும், வாச மென் கலவைச் சாந்தத்தைச் சீதையின் மேல் வாரி வாரிப் பூசினர். அக்கலவை புலரப் புலர மேலும் மேலும் இடையறாது பூசினர்.

எனவே, சீதைக்கு அமைந்த ஆயிழைச் சேடியர் தாயின் பரிவும், பாசமும் கொண்டு,

*"கரை செயற்கு அரிய காதல் கடாவிட.. கடிது சென்றார்*
*பிரைசம் ஒத்து இனிய சொல்லார்......."*

*(பால – கோலங் காண் – 2)*

ஆக இருந்தனர் என்கிறான் கம்பன். அப்படிச் சேடியரால் அன்பு செய்யப்பட்டு வளர்ந்த சீதை, அசோகவனத்தில், கண்கள் சிவந்து கனல் சிந்தும் பார்வையினராய், சூலமும் வேலும் கைக்கொண்டவராய், "சீதையைக் கொல்லுங்கள்! கொல்லுங்கள்! இவளைக் கொன்று உம் குடல் ஆர உண்ணுங்கள்! உண்ணுங்கள்!" என்று ஓலமிட்டு அவளை வருத்துபவராய் இருந்த அரக்கியரால் எப்பொழுதும் தெருட்டப்பட்டுக் கொண்டே இருந்தாள். இராவணனுடைய தற்புகழ்ச்சி போதாதென்று இவர்களும் அவன் புகழ் பாடினர். இராவணனுடைய வன்சொல் போதாதென்று இவர்களும் சீதை மேல் வசைச் சொல் பொழிந்தனர்.

"இராவணன் யார்? பிரம்ம தேவனுக்குக் கொள்ளுப் பேரன்! ஆயிரம் வேதம் ஓதியவன். அறிவாளன்! உன் பால் மெய்யான அன்பு வைத்துள்ளான்! அதுவன்றி அவனிடத்தில் வேறு தவறு என்ன கண்டாய்?" என்றனர் சிலர். "மானுட இனத்தைச் சேர்ந்த தீய பெண்ணாகிய நீ, இனி புண்ணில் கோலிடுவது போல் எம் கோவிடம் பேசாது மெய்ம்மை உணர்ந்து பேசுவாய்" என்றனர் சிலர்.

"புக்க வழிக்கும் போந்த வழிக்கும் புகழ் சேர்க்காது உற்றனள் இவள்! இனி இவள் இனம் வாழாது! இவளுடைய இனத்தின் பெருமையையும் அழிப்பான் நம் கோன்! இவள் அவனுக்கு இணங்க மறுக்கிறாள்; இவளைக் கொன்று தின்போம்!" என்று வேறு சிலர் சூலத்தையும் வேலையும் கடிது ஓங்கிக் கொண்டு சீதை பால் ஓடி வந்தனர்.

( இதனைக் கண்ணுறும் அனுமன், இலங்கை வெற்றிக்குப் பிறகு, "இவர்களைக் கொல்வதற்கு அனுமதி தாருங்கள்" என்று சீதையை வேண்டுகின்றான். சீதை அவர்களைப் பொறுத்தருள்கிறாள் ) .

இவ்வாறு சீதை உற்ற துயர் மிக்க கொடிது. பெண்ணொருத்தி அனுபவிக்கக்கூடாத இத்தகைய பெரும் துயரம், அனுமன் சீதையைக் கண்களால் கண்ட நாளிலிருந்துதான் குறைய ஆரம்பிக்கிறது. அத்துடன் இரண்டு விதமான மகிழ்ச்சியும் சீதைக்கு ஏற்படுகிறது.

ஒன்று, இராமனைப் பற்றிய எல்லாச் செய்திகளையும் அனுமன் மூலமாக அறிவதால் ஏற்படும் மகிழ்ச்சி!

இரண்டு, மிக முக்கியமானது, தன் கற்புநெறி நிலைக்குச் சான்று என்று தான் சுட்டிக்காட்ட இராமன் அனுப்பிய தூதுவன் இப்பொழுது தனக்குக் கிடைத்தான் என்ற மகிழ்ச்சி!

இராவணன் தன்னிடம் பேசிய மொழிகள், அதற்குத் தான் உரைத்த வெய்ய மாற்றம், தான் உயிர்விடத் துணிந்தது இவற்றுக்கெல்லாம் சான்றாக நின்று உண்மையைக் கண்டு இராமனிடத்துச் சொல்லவும் உலகுக்கு உரைக்கவும் ஒருவன் கிடைத்தானே! அதிலும் அனுமன், "மெய்ம்மையின் வேலி போல்வான்" என்று போற்றப்பட்ட மறை ஓதிய அறிவன். அவன் சொல் இவ்வுலகத்தில் எடுபடும் அல்லவா? சீதை இயற்றிய கற்புத் தவத்தைக் கண்களால் நேரில் கண்டவன் அவனேயல்லவா? அக்கோலத்தைக் கண்டு என்புருகியதால் அல்லவோ பின்னாளில் இராமனிடம்,

*"'உன் பெருந் தேவி என்னும் உரிமைக்கும், உன்னைப் பெற்ற*
*மன் பெரும் மருகி என்னும் வாய்மைக்கும் மிதிலை மன்னன் –*
*தன் பெருங் தனயை என்னும் தகைமைக்கும் தலைமை சான்றாள்*
*என் பெருந் தெய்வம்! ஐயா! .............."*

*(சுந்தர – திருவடிதொழுத – 26)*

என்று சீதைக்குப் புகழாரம் சூட்டுகின்றான். ..............

இலங்கையிலிருந்து மீளும் அனுமன், இராமனைத் தூரத்திலேயே கண்டு விடுகிறான். ஆயினும், விரைவாக வந்து இராமனுடைய பாதம் பணியாமல், சீதை இருக்கும் திசை நோக்கித் தொழுது நிற்கிறான். அதற்குரிய காரணமாகத்தான் "அவள் என் பெருந்தெய்வம்" என்று கூறுகிறான்.

மேலும்,

*" 'விற்பெருந் தடந்தோள் வீர! வீங்கு நீர் இலங்கை வெற்பில்,*
*நற்பெருந் தவத்தளாய நங்கையைக் கண்டேன் அல்லேன்;*
*இந் பிறப்பு என்பதொன்றும், இரும் பொறை என்பதொன்றும்*
*கற்பு எனப் பெயரதொன்றும் களி நடம் புரியக் கண்டேன்' "*

*(சுந்தர – திருவடி தொழுத – 29)*

என்கிறான்.

எனவே சீதையை வருத்திக் கொண்டிருந்த ஒரு பெரும் துயர் தீர்ந்தது. சீதையைக் கற்பினளாகக் கண்டுவிட்டான் அனுமன்! உலகத்துக்குத் தன் தூய்மை நிலையைப் பறையறிவித்து விடுவான்! இத்தகைய நிகழ்ச்சியால் அவளுடைய இரங்கல் நிலை முடிவுக்கு வருகிறது.

இனி இராமனைக் காணாது போனாலும், இறந்தே போனாலும் பழியின்றித் தன் பெயர் விளங்குவதோடு இராமனுக்கும், இனி பழியேற்படாது என்று அமைதி கண்டாள் சீதை.

மேலும் இராமனுடைய அணியில் சீதையின் கற்பினைச் சடாயு, சுக்ரீவன், இலக்குவன், அனுமன், அங்கதன் என்று பலரும் பலபடப் பாராட்டுகின்றனர். அனுமன், இராவணனிடமிருந்து இராமன் அணிக்கு வந்த வீடணன் ஆகியோர் இராவணனுக்குற்ற ஒரு சாபத்தைப் பற்றி நன்கு அறிவார்கள். அந்தச் சாப வரலாறு பின்வருமாறு:

முன்னொரு காலத்தில் வேதவதியாக வாழ்ந்த புஞ்சிகஸ்தலை என்ற அந்தணப் பெண் நான்முகனைக் குறித்துத் தவமிருந்து வரம் பெறும் முயற்சியில் ஈடுபட்டிருந்தாள். அப்பொழுது கயிலையங்கிரியிலிருந்து மீண்டு திரும்பிய இராவணன் அத் தவத்தி மேல் ஆசை கொண்டான். அவளுடைய விருப்பத்தை மீறி அவளைத் தீண்டினான். தீண்டிய காலை வேதவதி மனம் நொந்து துயருற்று, "இனி உன்மேல் விருப்பமில்லாத அயல் மகளை நீ தீண்டுவாயாயின், அப்பொழுதே உன் தலை சிதறி அழிவதாக" என்று இராவணனைச் சபித்து தீயுள் புக்கு மாய்ந்தாள். இந்தச் சாப வரலாற்றை, அசோகவனத்தில் இலக்குவன் சமைத்த இலைக் குடிலில் வாழும் சீதை அனுமனுக்குக் கூறுகிறாள் பின்வருமாறு:

*" 'மேவு சிந்தை இல் மாதரை மெய் தொடின்,*
*தேவு வன் தலை சிந்துக நீ என*
*பூவில் வந்த புராதனனே புகல் சாவம் உண்டு;*
*எனது ஆர் உயிர் தந்ததால்"*

*(சுந்தர - சூடாமணி - 21)*

இச் சாபத்துக்கு அஞ்சியே இராவணன் தன்னைத் தீண்டாமல், இலக்குவன் சமைத்த இலைக் குடிலை மண்ணோடு பெயர்த்து வந்திருந்த செய்தியையும் அப்பொழுது கூறுகிறாள்.

காப்பிய வரிகள்:

*"ஆண்டு நின்றும், அரக்கன் அகழ்ந்து கொண்டு*
*ஈண்டு வைத்தது, இளவல் இயற்றிய*
*நீண்ட சாலையொடு நிலை நின்றது,*
*காண்டி ஐய! நின் மெய் உணர் கண்களால்"*

*(சுந்தர - சூடாமணி - 24)*

இதே சாப வரலாற்றை நினைவு கூரும் வீடணன், அந்த வேதவதியே இப்பொழுது சீதையாகப் பிறப்பெடுத்துள்ளாள் என்று உறுதியாக நம்புகிறான். காப்பியத்தில்,

*"தீயிடைக் குளித்த அத்தெய்வக் கற்பினாள்*
*வாயிடை மொழிந்த சொல் மறுக்க வல்லமோ?*
*"நோய் உனக்கு யான்" என நுவன்றுளாள் அவள்*
*ஆயவள் சீதை, பண்டு அமுதின் தோன்றினாள்"*

*(யுத்த - இராவணன் மந்திர- 81)*

இச்செய்தியை அனைவரும் கூடியுள்ள வானரச் சபையில், அனுமன் மீண்டும் கூறி உறுதி செய்கின்றான். காப்பியப் பாடல்:

*"அன்னவன் (வீடணன்) தனி மகள் 'அலரின் மேல் அயன்*
*சொன்னது ஓர் சாபம் உண்டு, உன்னைத் துன்மதி*
*நன்னுதல் தீண்டுமேல் நணுகும் கூற்று' என*
*என்னுடைய இறைவிக்கும் இனிது கூறினாள்"*

*(யுத்த - வீடணன் அடைக்கலம் - 98)*

கும்பகர்ணனோ, "திட்டியின் விடமன்ன கற்பின் செல்வி" என்று சீதையைக் குறிக்கிறான்.

*"ஆனதோ வெஞ்சமம்? அலகில் கற்புடைச்*
*சானகி துயர் இனம் தவிர்ந்ததில்லையோ?"*

*(யுத்த - கும்பகருணன் வதை - 79)*

என்று கற்புநிறைச் செல்விக்குத் தன் தமையன் இழைத்துவிட்ட கொடுமையை எண்ணி மனம் பதறுகிறான்.

மேலும்,

*"தீயினை நயப்புறுதல் செய்தனை!"*

*(யுத்த - இராவண மந்திர - 48)*

எனவே,

*"அசைவு இல் கற்பின் அவ்வணங்கை விட்டருளுதி"*

*(யுத்த - இராவணன் மந்திர - 99)*

என்று இராவணனுக்கு அறிவுறுத்தவும் செய்கிறான்.

இராவணனுடைய மாமனாகிய மாலியவான், இராவணன் தொடர்ந்து தோல்வியைத் தழுவுவதற்குக் காரணமே 'கற்புடைய சீதையின் சாபமே' என்கிறான்.

*"இது இயற்கை; ஓர் சீதை என்று இருந் தவத்து இயைந்தாள்*
*பொது இயற்கை தீர் கற்புடைய பத்தினி பொருட்டால்*
*விதி விளைத்தது ......................................................"*

*(யுத்த - நிகும்பலை யாகம் - 48)*

மேலும்,

*"தோன்றாத் தாய் அவள் உலகுக்கெல்லாம்"*

*(யுத்த - ஒற்றுக் கேள்வி - 78)*

என்றும்,

*"தாயினும் உயிர்க்கு நல்லாள்"*

*(யுத்த - ஒற்றுக்கேள்வி - 80)*

என்றும் சீதையைக் குறிப்பிட்டு அவளது கற்பின் திண்மையைப் போற்றுகிறான்.

இராவணனே சீதையின் கற்புத்திறன் பற்றிப் பின்வருமாறு வியக்கிறான்.

*"காந்தள் மெல் விரல் சனகி தன் கற்பு எனும் கடலை*
*நீந்தி ஏறுவது எங்ஙன்?" ........................*

*(சுந்தரகாண்டம் - பிணி வீட்டு - 5)*

இராவணன் இறப்புக்குப் பிறகு அவன் மனைவி மண்டோதரி,

*"காந்தையர்க்கு அணி அனைய சானகியார் பேர் எழிலும் அவர்தம் கற்பும்"*

*(யுத்த - இராவணன் வதை - 239)*

இராவணனுடைய உயிருக்குக் கூற்றமாய் விளைந்தது என்று கதறுகிறாள்.

எனவே இராவணனும், அவனது சுற்றமும், நட்பும், மக்களும் அனைவருமே சீதையைக் கற்பின் கனலி என்று அறிந்துகொண்டு விட்டனர்.

ஆக, சீதை தான் சிறைப்பட்ட நாள் முதல் தன் கற்பு நெறி பழிக்குள்ளாகியதே என்று மறுகியும், தன் கற்பு நிலையை உலகுக்கு எவ்வாறு நிரூபிப்பது என்று மயங்கியும், மலைத்தும் இருந்த நிலைமை, அனுமன் இலங்கை வந்து அவளைக் கண்டு சென்ற பிறகு அடியோடு மாறிவிட்டது.

*"நாயகன் வலி எண்ணியும், நாணுடைத்*
*தூய்மை காட்டவும், இத்துணை தூங்கினேன்"*
*(சுந்தர - சூடாமணி - 23)*

எனவே இனி விதிவசத்தால் இறந்துபட்டாலும் கூட தனக்குப் பழியில்லை என்றும், தன் கற்பின் தூய்மையை உலகத்துக்கு அறிவிக்கவே இத்தனைக் காலம் தான் உயிர் வாழ்ந்தது என்றும், இறுதிவரை இராமனின் மனைவியாகவே அவள் வாழ்ந்து மடிந்தாள் எனும் நிலையில், சீதை சிறைப்பட்டது இராமனுக்கும் பழியுண்டாக்குவதாக இருக்காது என்றும் எண்ணி மன அமைதி அடைகிறாள். அத்துடன் சீதை தன்னுடைய கற்புநெறி உலகத்தாரின் ஐயத்துக்கு அப்பாற்பட்டதாகிவிட்டது என்று துயர் தீர்ந்தாள். **இனி சீதைக்கு இது ஒரு பிரச்சினையே இல்லை என்றாகிறது. எனவே சீதை, தன் கற்பு நிலை பற்றிய தன் மனத் துயரினின்றும் விடுதலை அடைந்தாள்.**

அடுத்து, இராமன் வரவை நோக்கியிருக்கிறாள். இலங்கைக்கு வருவதற்கு இராமன் மேற்கொள்ளும் சேது கட்டுதல் முதலான முயற்சிகள் தொடங்கி, போர்க்களத்தின் போக்கு தொடர்பான அனைத்துச் செய்திகளையும் சீதை இடையீடின்றி அறிந்துகொண்டுதானிருக்கிறாள். காப்பியச் சான்று,

*" 'அடைத்தது கடலை; மேல் வந்து அடைந்தது; மதிலை; ஆவி*
*துடைத்தது பகையை, சேனை' எனச் சிலர் சொல்லச் சொல்ல*
*படைத்தது ஓர் உவகை தன்னை ..........................................."*
*(யுத்த - மாயா சனக - 47)*

என்பது சீதையின் கூற்று. மேலும் வீடணனின் மகள் திரிசடை சீதைக்கு நல்ல தோழியாகிறாள். அவள் மூலமாகவும் செய்திகளைத் தடை இன்றி அறிந்து கொண்டே இருக்கிறாள் சீதை. அவள்தான் இராவணனுக்கு வேதவதி கொடுத்த சாபத்தைப் பற்றிக் கூறிச் சீதைக்கு ஆறுதலைத் தருகிறாள். இராமன் திண்ணமாக இலங்கைக்கு வருவான் என்று சீதைக்குச் சாதகமாக, தான் கண்ட கனவு ஒன்றைப் பற்றிக் கூறிச் சீதைக்கு நம்பிக்கையூட்டுகிறாள் திரிசடை.

*"ஆயது தேரின் உன் ஆவி நாயகன்*
*ஏயது தூது வந்து எதிரும் என்னுமால்;*
*தீயது தீயவர்க்கு எய்தல் திண்ணம்; என்*
*வாயது கேள்" என, மறித்தும் கூறுவாள்*
*(சுந்தர - காட்சி - 38)*

அதாவது இராமன் தேர் ஏறி இங்கு வந்ததாகவும், இலங்கை மக்களில் தீயோர் அழிந்ததாகவும் தான் கனவு கண்டதாகக் கூறுகிறாள். இராவணன் சீதையிடம் வந்து தெருட்டிப் போகும் ஒரு நாளில், சீதை சிறையிருக்கும் அசோக வனத்திற்குச் சென்று, "நான் கண்ட கனவு பலிக்கும். நீ வருந்த வேண்டாம்" என்று மீண்டும் தேற்றுகிறாள். அந்தத் தேறுதலினாலே தேவியின் ஆவி நிலைத்தது. காப்பியச் சான்று:

"..........................................................................................

*முன்னே சொன்னேன் கண்ட கனாவின் முடிவு அம்மா!*

*பின்னே, வாளா பேதுறுவீரேல், பிழை என்றாள்"*

*(சுந்தர - காட்சி - 158)*

*"அறிந்தார் அன்ன முச்சடை என்பால் அது சொல்ல;*

*பிரிந்தார் சீற்றம்; மன்னனை அஞ்சிப் பிரிகில்லார்;*

*செறிந்தார் ஆய தீவினை அன்னார் தெறல் எண்ணார்*

*நெறிந்து ஆர் ஓதிப் பேதையும் ஆவி நிலை நின்றாள்"*

*(சுந்தர - காட்சி - 159)*

எனவே திரிசடையின் நட்பாலும், மனக் கலக்கமற்று சீதை அமைதி கொண்டிருந்தாள். திரிசடை தன்னைத் தேற்றுவதற்குக் கூறும் ஆறுதல் சொற்களெல்லாம் உண்மையிலேயே பலித்து விடுவதை அனுபவ பூர்வமாக அறியும் சீதை, திரிசடையின்பால் எல்லையில்லா நன்றி பாராட்டுகின்றாள்.

*"உன்னையே தெய்வமாகக் கொண்டு, இத்தனை காலம் உய்ந்தேன்"*

*(யுத்த - சீதை களம் காண் - 30)*

என்று சீதை திரிசடையைத் தெய்வம் என்றும் புகழ்கிறாள். எனவே பழியற்ற மனநிலை கொண்டவள் ஆகி திரிசடை துணையிருக்க, போர்க்களத்துச் செய்திகள் எல்லாம் தன்னிடம் வந்து சேர, தன் தவத்தைத் தொடர்ந்து கொண்டிருக்கும் சீதை, இறுதியில் இராமனுடைய வெற்றிச் செய்தியை அனுமன் மூலம் அறிகிறாள். உவகை மிகுதியால் சீதையின் அழகு கூடியது.

*" ஆம்பல் வாயும், முகமும் அலர்ந்திட,*

*தேம்பும் நுண் இடை நோவ, திரள் முலை*

*ஏம்பல் ஆசைக்கு இரட்டி வந்து எய்தினாள் -*

*பாம்பு கான்ற பனி மதிப் பான்மையாள்"*

*(யுத்த - மீட்சி - 21)*

இராமனின் வெற்றிச் செய்தியைக் கேட்ட சீதையின் கோலப் புருவங்கள் குனித்தன; கொம்மை செம்மைக் கொங்கைகள் பனித்தன; மழலைச் சொற்கள் அனைய இனிய சொற்கள் நாவிலே மலர்ந்தன. சொல்ல நினைப்பது ஒன்று; ஆனால் சொல்வது வேறொன்றாகக் கள்ளுண்டவர் நிலையை ஒத்துச் சொல் தடுமாறினாள் சீதை என்கிறான் கம்பன்.

*"நுனித்தது ஒன்று, நுவல்வது ஒன்று ஆயினாள்"*
*(யுத்த - மீட்சி - 23)*

என்று மிக நுட்பமாகவும், அழகாகவும் சீதையின் மனநிலையைச் சித்திரிக்கிறான் கம்பன். மேலும், சீதை ஒன்றுமே பேசாமல் நீண்ட நேரம் மௌனமாக இருந்தாள். அனுமன்பால் எல்லையில்லாத நன்றியுணர்வு மேவுபவளாகி, "உலகம் மூன்றையும் உன் உதவிக்கு ஈடாகக் கொடுத்தாலும் அவை நிலையற்றவை. ஆகையால் அது முறையான கைம்மாறு ஆகாது. எப்படித்தான் உனக்கு நன்றி கூறுவது? ஒன்று செய்யலாம்! உன்னை என் தலையாலே தொழுதல் ஒன்றுதான் தகும்" என்கிறாள்.

அன்னை சிறையிலிருந்த காலத்தில் அவளைத் தெருட்டி வருத்திய அரக்கியரைத் தான் ஒறுக்க விரும்புவதாகக் கூறிச் சீதையிடம் அதற்கு அனுமதி வேண்டுகின்றான் அனுமன். ஆனால் சின்னாட்களுக்கு முன்னர்கூட இராவணனின் சுற்றமும், இலங்கை மக்களும் அடியோடு அழிய வேண்டும் என்று சாபமிட்ட சீதை. இப்பொழுது வெற்றியின் களிப்பில், அமைதியடைந்து அருள் உள்ளத்தவள் ஆகிறாள். எனவே, அனுமனிடம், "தாயினும் தயை உடையோனே! இராவணனுடைய ஆணையை நிறைவேற்றியதன்றி இவர்கள் இழைத்த பிழையென்ன? மேலும் என் விதியின் பயனை நான் அனுபவித்தேனேயல்லால், எவரிடமும் குறையில்லை" என்று அனுமனை அமைதிப்படுத்தித் தன்னைச் சரணடைந்த அரக்கியரைக் காக்கிறாள். எனவே இலங்கைப் போர் முடிவுற்ற பொழுது சீதையின் மனநிலை எப்படி இருக்கிறது? **சீதையின் உள்ளம் இப்பொழுது வஞ்சினம் அற்றதாகவும், அருள் நிறைந்ததாகவும் உள்ளது. உவகையும் நிறைந்துள்ளது. தன் கற்பின் தூய்மையை இப்பொழுது இராமனும் அறிவான். உலகமும் ஏற்றுக் கொண்டுவிட்டது என்ற குற்றமற்ற மனநிலையில் இருக்கிறாள்.** சீதை இத்தகைய மனநிலையில் இருக்கும்பொழுதுதான் வீடணன் சீதையை இராமனிடத்தில் அழைத்துச் செல்ல வருகிறான். இந்த உண்மையை நாம் மனத்தில் நிறுத்த வேண்டும்.

அதாவது தன் கற்பின் தூய்மையை உலகுக்கு நிரூபிக்கத் தேவையில்லை என்ற மனநியில் சீதை இருக்கிறாள். தன் துணைவனோடு உடனே சேர்ந்துவிடலாம்

என்ற உவகையுடனும் இருக்கிறாள். அப்பொழுதுதான் வீடணன் சீதையிடம் வந்து பின்வருமாறு கூறுகிறான்:

*" 'வேண்டிற்று முடிந்தது அன்றே; வேதியர் தேவன் நின்னைக்*
*காண்டற்கு விரும்புகின்றான்; உம்பரும் காண வந்தார்;*
*பூண் தக்க கோலம் வல்ல புனைந்தனை, வருத்தம் போக்கி,*
*ஈண்டக் கொண்டு அணைதி' என்றான் எழுந்தருள் இறைவி என்றான்"*
*(யுத்த – மீட்சி – 39)*

பொருள்: 'குறித்த இலக்காகிய வெற்றியை அடைந்து விட்டோம். வேதங்களின் நாயகனாகிய இராமன் உம்மைக் காண்பதற்கு விரும்புகின்றான். "அணிகலன்கள் பூட்டிய நல்லழகுக் கோலம் புனைந்து வருத்தமில்லாத களித்த உள்ளத்துடன் என்னிடம் அழைத்து வா" என்று என்னிடம் ஆணையிட்டுள்ளான். தாங்கள் அவ்வாறே வர வேண்டும்.'

வீடணன் இங்கு இராமன் கூறாததையெல்லாம் தேவியிடம் கூறுகிறான் என்பதை நாம் உணர வேண்டும் (தேவியைச் சீர்மையோடு அழைத்து வருக என்றான். அதாவது இராமனின் மனைவி என்ற பெருமைக்குரிய தகைமையோடு அழைத்து வருக என்றுதான் கூறினான். நல்லழகுக் கோலம் புனைந்து அணிகள் பூட்டி வர வேண்டும் என்று கூறவில்லை.)

இராமனோடு கருத்தால் ஒன்றிய தன்மையள் ஆகையால் சீதை, "இராமனுடைய கருத்து இவ்வாறு இருக்க முடியாது" என்பதைச் சரியாகத்தான் ஊகிக்கிறாள். எனவே, வீடணனை மறுத்து, "உம்பரும், முனிவரும், உயர் கற்புக்குரிய குலமாதர்களும் கூடியுள்ள இச்சமயத்தில் இராமன் உட்பட அனைவரும் நான் இப்பொழுது இருக்கும் தவக்கோலத்தில் என்னைக் காண்பதே இக்கணச் சூழலுக்குத் தக்கதாகும். எனவே கோலம் புனைதல் நன்று அன்று" என்று கூறுகிறாள். காப்பிய வரிகள்:

*"யான் இவண் இருந்த தன்மை, இமையவர் குழுவும், எங்கள்*
*கோனும், அம் முனிவர் தங்கள் கூட்டமும், குலத்துக்கு ஏற்ற*
*வான் உயர் கற்பின் மாதர் ஈட்டமும், காண்டல் மாட்சி! –*
*மேல்நிலைக் கோலம் கோடல் விழுமியது அன்று – வீர!" என்றாள்*
*(யுத்த – மீட்சி – 40)*

எத்தகைய தேர்ந்த தெளிவான சொற்கள்! இராமன் விரும்பும் சீதை இவளே!

ஆனால் கூனி, சூர்ப்பணகை, மாயமான் ஆகியோர் வடிவில் வந்த விதி, இப்பொழுது வீடணன் உருவத்தில் வந்து அவன் நாவில் அமர்ந்து ஆட்சி புரிந்து சீதையின் மாட்சிமையோடு விளையாடுகிறது.

அவன் கூறுகிறான்,

*"......................... கேட்ட இராக்கதர்க்கு இறைவன், 'நீலக்*
*குன்று அன தோளினான் தன் பணியினின் குறிப்பு இது' என்றான்".*
*(யுத்த – மீட்சி – 41)*

சீதையிடம் இப்பொழுது பேசுகின்ற வீடணனை அரக்கர்கோன் (இராக்கதர்க்கு இறைவன்) என்று கம்பன் குறிப்பிடுவதை நோக்க வேண்டும். அறத்தின்பால் பற்று கொண்டு, இராமனை அணைந்த வீடணன் அல்லன் இவன். வீடணன் இப்பொழுது இலங்கை வேந்தன்! எனவேதான் தன் விருப்பத்தை இராமனின் விருப்பமாக மாற்றிக் கூறுகிறான் போலும்! சீதையின் பதிலைக் கேட்டபிறகாவது, இராமன் கூறாததைக் கூறிய தன் அறமற்ற செயலை நினைந்து உடனே அவன் மனத்துக்குள் வருந்தியிருக்க வேண்டும்! அப்படிச் செய்யவில்லை வீடணன்! சீதையின் கூற்றுப்படி இராமனின் விருப்பம் நூற்றுக்கு நூறு விழுக்காடு "சீதையைத் தவக்கோலத்தில் காணுவதாகத் தான் இருக்குமோ?" என்ற ஐயமாவது அவனுக்கு எழுந்திருக்க வேண்டும். ஆனால் இப்பொழுது அரக்கர் கோன் நிலையில் நிற்பவன் ஆகையால் தன்னுடைய விருப்பத்துக்கேற்ப இங்கு (ஆணையிடவில்லையென்றாலும்) நிகழ்ச்சிகளை அமைத்துக் கொள்ள விரும்புகிறான் போலும்! அதே சமயத்தில் சீதையின் பதிலைக் கேட்டுச் சற்றுத் தடுமாறியதால் "இராமன் இப்படித்தான் ஆணையிட்டான்" என்று ஆணித்தரமாகக் கூறவுமில்லை (ஏனெனில் ஒருக்கால் இராமனின் கூற்றைத் தவறாகப் புரிந்து கொண்டோமோ என்ற அச்சமும் எழுந்திருக்கலாம்). எனவே இரண்டுக்கும் பொதுவாக, "ஐயன் எனக்கிட்ட பணியில் இத்தகைய விருப்பம்தான் தென்பட்டது" என்ற கருத்தில் 'இராமன்தன் பணியின் குறிப்பு இது' என்று கூறுகிறான்.

உறுதியான கொள்கைப் பிடிப்பில் இராமனுக்கு நிகராக விளங்கும் சீதை இவ்விடத்தில் சற்று கூர்ந்து வீடணனின் சொற்களை ஆய்வு செய்திருக்க வேண்டும். ஆயினும் விதியை எவரால் வெல்ல இயலும்? அது வீடணன் உருவில் வந்து சீதை அடுத்து அனுபவிக்க வேண்டிய துன்பத்துக்கு அடி போடுகிறது. இராமனே விதியின் வலிக்கு ஆற்றமாட்டாமல் பொய் மானின் பின்னே சென்றவன்தானே! விதியின் கைகளில் வசமாக சிக்கிக் கொள்ளும் சீதை "நன்று" என்று வீடணனின் கூற்றுக்கு இசைவு தெரிவித்து விடுகிறாள். இதுதான் சீதையின் குற்றமாகிவிடுகிறது.

சீதை குணங்களால் விண்ணிலும் மண்ணிலும் எவ்விடத்தும் ஒப்பாரும் மிக்காரும் இல்லாதவாறு சிறந்து விளங்குபவள் என்பதில் ஐயமில்லை. அவளுடைய குண மேன்மையை எவ்வாறு கூறுவது என்று கம்பன் ஒரு கணம் திகைத்துவிட்டு, நற்குணங்களெல்லாம், "நானே சீதையை அடைந்து சிறப்புறுவேன்; நானே அவளிடம் அடைக்கலம் ஆகி என் குணமே சிறந்தது என்று உலகம் போற்ற உய்வேன்" என்று போட்டி போட்டுக் கொண்டு அவளிடம் தஞ்சம் அடைந்து அவளுடைய ஆளுமையைப் பற்றிக் கொண்டு நின்றன என்கிறான்.

*"குணங்களை என் கூறுவது? கொம்பினைச் சேர்ந்து*
*அவை உய்யப் பிணங்குவன"*
*(பால – கார்முக – 18)*

என்று கவிதை புனைகிறான்.

பெண்ணுக்கு வேண்டப்படுவதாகிய கற்பு நெறியோ அவளிடத்தில் தவநெறியாகிக் களிநடம் புரிந்தது. மேலும் அவள் தன்னுடைய செயல்களை 'இராமனுடைய மாட்சிமை' என்னும் உரைகல்லில் உரைத்துப் பார்த்து வினையாற்றும் தன்மை கொண்டவள் ஆனாள். எனவேதான் இராமனுக்குப் பழி நேராத வண்ணம், தான் இறந்துவிடுவதே நலம் என்று கருதி உயிர் துறக்கவும்கூட முடிவெடுத்து விடுகிறாள். தக்க சமயத்தில் அனுமன் அங்குத் தோன்றியிராவிட்டால் சீதை மரணத்தைத் தழுவியிருப்பது உறுதியே. தன்னுடைய செயல்களை 'இராமனுக்குப் பெருமை' என்ற தராசுத் தட்டில் வைத்துச் சீர் தூக்கிப் பார்த்து, அறிவால் ஆராய்ந்து செயல்புரியக்கூடிய பண்புடையவள் சானகி என்பதற்குச் சிறப்பான ஒரு கட்டத்தைக் காப்பியத்தில் நாம் காண முடியும். அது சுந்தர காண்டத்தில் சூடாமணிப் படலத்தில் காணப்படுகிறது. நிகழ்ச்சி பின்வருமாறு:

அசோக வனத்தில் சீதையைக் கண்டு களிப்புறும் அனுமன் அவளைத் தானே சிறை மீட்டு அழைத்துச் சென்று இராமனிடம் சேர்ப்பித்து விடுவது என்று முடிவெடுத்து விடுகிறான். சீதையின் தவக்கோலம், இராவணன் அவளிடத்தில் காமம் மீதூரப் பேசிய பேச்சு, அதற்கு சீதையுரைத்த வெய்ய மாற்றம், துயர் தாளாது சீதை தன் வாழ்வை முடித்துக் கொள்ள முனைந்தது, ஐயன் பெயர் கேட்ட மாத்திரத்தில் மனம் உருகி நெகிழ்ந்தது; கணையாழியைக் கண்டு கண்ணீர் பெருக்கி உன்மத்தம் கொண்டது; இராமனின் வடிவழகை அனுமன் கூறக்கேட்டு மெய்ம்மறந்து நின்றது...... என்று சீதை எனும் பெருமாட்டியின் ஆளுமையின் பல பரிமாணங்களைக் கண்ணுற்ற அனுமன், உணர்ச்சி மேலீட்டால், "இத்தனையையும் கண்ட பின்பு வெறுங் கையனாக

இராமனிடம் மீண்டு போய் "கண்டு வந்தேன்" என்று சொல்வதோ இந்த அடிமைக்கு அழகு? 'கொண்டு வந்தேன்' என்று சொல்வதே அழகு" என்று எண்ணமிட்டுச் சீதையிடம் "என் தோள் மேல் ஏறிக் கொள்ளுங்கள். கடிதில் உம்மை இராமனிடம் சேர்ப்பேன்" என்கிறான்.

உயர்ந்த பண்புகளும் நெறிகளும் அற்ற ஒரு சாதாரணப் பெண் உடனடியாக அதற்குச் சம்மதித்துத் தப்பித்துச் செல்லும் வழியையே தேர்ந்தெடுத்திருப்பாள். ஆனால் சீதை அத்தகைய செயலுக்கு மனம் இசைய மறுக்கிறாள். அதற்குக் காரணம், இராமனுடைய பெருமைக்கு அத்தகைய செயல் இழுக்கு உண்டாக்கும் என்பதேயாகும். "வில் திறம் கொண்ட வீரன் இராமன் என் துணைவனாக உள்ள பட்சத்தில், எனக்காக அவன் போர் புரிந்து, பகைவனை வென்று, என் உடலைக் கண்களால் கண்டு காமுறும் இராவணனின் கண்களைக் காக்கைகள் கொத்தித் தின்பதை நான் காணும் வகையில் இராமன் இராவணனைப் பகை முடிக்க வேண்டும். அதன்பிறகு தான் இந்த இலங்கையை விட்டு நான் வருவேன்" என்கிறாள்.

*"கொண்ட போரின் எம் கொற்றவன் வில் தொழில்*
*அண்டர் ஏவரும் நோக்க, என் ஆக்கையைக்*
*கண்ட வாள் அரக்கன் விழி, காகங்கள்*
*உண்டபோது அன்றி, யான் உளென் ஆவெனோ?"*
*(சுந்தர – சூடாமணி – 15)*

"இராவணன் என்னும் கொடிய அரக்கனுடைய தகாத செயலைக் கண்டும் அவனைத் தண்டிக்காது, அவனுக்கு அஞ்சி நடுங்கும் அறச் சார்பில்லாத இந்த அகிலத்தையே நான் என் கற்புக் கனலால் சுட்டுப் பொசுக்கிவிட முடியும். ஆயினும் அத்தகைய செயல் நான் இராமனுடைய வில்லாற்றலைக் குறைத்து மதிப்பிட்டுவிட்ட செயலாக உலகத்தால் கணிக்கப்பட்டு விடும் என்று எண்ணியே அவ்வாறு செய்யாது ஒழிந்தேன்" என்கிறாள்.

*"அல்லல் மாக்கள் இலங்கையது ஆகுமோ?*
*எல்லை நீத்த உலகங்கள் யாவும், என்*
*சொல்லினால் சுடுவேன் ; அது தூயவன்*
*வில்லின் ஆற்றற்கு மாசு என்று வீசினேன்"*
*(சுந்தர – சூடாமணி – 18)*

அத்துடன் மேலும் ஒரு கருத்தை அனுமனின் மனம் புண்படாத வண்ணம் அவன் முன் வைக்கிறாள். "உன்னுடைய ஆற்றலுக்கு இயலாதது என்று எதுவுமே இல்லை. ஆயினும் உன்னை 'ஆண் மகன்' என்றே உலகம் கூறும் ஆதலால், உன்னைத் தீண்டுதலும் எனக்குத் தருமம் ஆகாது அல்லவா?" என்கிறாள்.

*"அரியது அன்று; நின் ஆற்றலுக்கு ஏற்றதே!*
*தெரிய எண்ணினை; செய்வதும் செய்தியே;*
*உரியது அன்று என ஓர்கின்றது உண்டு, அது என*
*பெரிய பேதைமைச் சில் மதிப் பெண்மையால்"*

*(சுந்தர - சூடாமணி - 12)*

*"...........................................................*
*ஏறு சேவகன் மேனி அல்லால், இடை*
*ஆறும் ஐம்பொறி நின்னையும், 'ஆண்' எனக்*
*கூறும்; இவ்வுருத் தீண்டுதல் கூடுமோ?"*

*(சுந்தர - சூடாமணி - 19)*

மேலும் தான் உயிருடன் இருப்பதே தன் நாயகன் வலிமையை உலகுக்குக் காட்டவும், தன் தூய்மையை நிரூபிக்கவுமே என்கிறாள்.

*"நாயகன் வலி எண்ணியும், நானுடைத்*
*தூய்மை காட்டவும் இத்துணை தூங்கினேன்"*

*(சுந்தர - சூடாமணி - 23)*

என்கிறாள்.

"வீரமற்ற அரக்கன் இராமனை மாயத்தால் வஞ்சித்தான்; என்னைச் சிறை பிடித்தான். அத்தகைய நேர்மையற்ற மறைவான முறையையே இராமனும் கைக்கொண்டான் என்ற பழியை அவனுக்குத் தர நீயும் எண்ணலாமா?" என்கிறாள்.

*"அன்றியும் பிறிது உள்ளது என்று ஆரியன்*
*வென்றி வெஞ்சிலை மாசுணும், வேறு இனி*
*நன்றி என்? பதம் வஞ்சித்த நாய்களின்*
*நின்ற வஞ்சனை நீயும் நினைத்தியோ?"*

*(சுந்தர - சூடாமணி - 14)*

எனவே இராமனுடைய வில் திறமைக்கும் வீரத்துக்கும் மாட்சிமைக்கும் ஊறு விளைவிக்கும் வண்ணம் எதையும் செய்துவிடலாகாது என்பதை அறிவார்த்தமாகச் சிந்தித்துப் புரிந்து கொண்டு, இராமன் வந்து தன்னை சிறை மீட்கும் நாளுக்காகக் காத்திருப்பதாகவும், குறித்த நாளில் (ஒரு திங்கள் கெடு வைக்கிறாள்) அண்ணல் வரவில்லையானால் தான் ஆவி விடுதல் உறுதி என்றும் இராமன் மேல் ஆணையிட்டுக் கூறுகிறாள்.

*"இன்னும் ஈண்டு, ஒரு திங்கள் இருப்பல் யான்;*
*நின்னை நோக்கிப் பகர்ந்தது, நீதியோய்!*
*பின்னை ஆவி பிடிக்ககிலேன்; அந்த*
*மன்னன் ஆணை; இதனை மனக் கொள் நீ"*

*(சுந்தர – சூடாமணி – 29)*

இவ்வாறு துயர் சூழ்ந்த நிலையிலும், துன்பம் உற்ற காலையிலும் கூட – இருள் சூழ்ந்த சிறையில் இருந்து எதிர்காலம் என்னவென்றே தெரியாத சூழலில் கூட – தன் நாயகன் இராமனின் மாட்சிமையைத் துலாக் கோலாக நிறுத்தி, அதில் தன் செய்கைகளை எடைபோட்டுப் பார்க்கும் நெறியளாகக் காட்சியளிக்கிறாள் சீதை. இத்தகைய பண்பினால்தான், வீடணன், தன்னை அலங்காரம் செய்து கொண்டு வந்து உலகத்தார் முன் தோன்றவேண்டும் என்று கூறும்பொழுது, அதற்கு மறுப்பு தெரிவிக்கிறாள். ஆனால் வீடணன் மீண்டும் மீண்டும் இராமனுடைய விருப்பம் என்று சொல்லவும் அந்தக் கருத்தைப் புறம் தள்ளும் மனநிலையும் அவளுக்கு இல்லாமல் போகிறது. காரணம் அத்தகைய புறக்கணிப்பு குற்றமாகிவிடுமோ என்று மருளுகிறாள். அதற்குக் காரணம், சீதை சிறைப்பட்டிருந்த காலத்தில் தன்னுடைய குணத்தில் உள்ள குற்றம் ஒன்றைப் பற்றி எண்ணித் தனக்குத்தானே வருந்துகிறாள். அந்தக் குற்றம் என்ன? தன் விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்வதில் தான் காட்டும் பிடிவாத குணம்தான் அக்குற்றம். இராமனே தடுத்தாலும் விட்டுக் கொடுக்காமல் தன் விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்வதில் முனைந்து நிற்கும் தன்னுடைய குணம்.

இராமனே அவள் இதயத்தில் அமர்ந்து ஆளும் நாயகன் என்பது உண்மையே ஆனாலும், இராமனே அறிவுறுத்தினாலும் இராமன் தொடர்பான தன் விருப்பம் எதிலும் சமரசம் செய்து கொள்ளாத பிடிவாத குணம் அவளிடம் இருந்தது என்பது காப்பியம் காட்டும் உண்மை. முதலில் இராமனுடைய விருப்பத்துக்கு மாறாக இருந்தாலும், அவனைப் பிரிந்து வாழ இயலாது என்று கூறிப் பிடிவாதமாக அவனோடு காட்டுக்கு வந்து விடுகிறாள். அடுத்து, இலக்குவன், பொய்மான் அரக்கருடைய வஞ்சமாக இருக்கக்கூடும் என்று எவ்வளவோ எடுத்துக் கூறியும், தான் விரும்பி விட்ட

காரணத்தால், அந்த மான் வேண்டுமென்றும், இராமனே அதனைப் பற்றித் தரவேண்டும் என்றும் பிடிவாதம் பிடிக்கிறாள். (இலக்குவன் இராமனைத் தடுத்து தான் சென்று பற்றி வருவதாகக் கூறுகிறான். தொடக்கத்திலிருந்தே இலக்குவனுக்கு மான் குறித்து நல்ல கருத்து இல்லையாதலால் அவன் அதனைக் கொன்றுவிடக் கூடும் என்று கருதி இலக்குவனின் உதவியை ஏற்க மறுக்கிறாள்). எனவே, தன் விருப்பத்தைத் தன் கணவனே நிறைவேற்றித் தர வேண்டும் என்றும் வற்புறுத்துகிறாள். பொய்மான் குரல் கேட்டுப் பதற்றம் இல்லாது நிற்கும் இலக்குவனை வசைச் சொற்களால் வாட்டி எடுத்து, அவனைப் பர்ணசாலையை விட்டு வெளியேற வைக்கிறாள். ............ விதியின் விளையாட்டால் இலங்கையில் சிறைப்பட்டு விடுகிறாள்.

சீதை, தன்னுடைய இத்தகைய பண்புக்காக, அசோக வனத்தில் இருக்கும்பொழுது மிக வருந்துகிறாள். இந்தப் பிடிவாத குணத்துக்காக உலகம் தன்னைப் பழிக்குமோ! என்றும்கூட அஞ்சுகிறாள்.

*"வஞ்சனை மானின் பின்னே மன்னனைப் போக்கி, என்*
*மஞ்சனை வைது, 'பின் வழிக்கொள்வாய்' எனா,*
*நஞ்சனையான் அகம் புகுந்த நங்கை யான்*
*உய்ஞ்சனென் இருத்தலும், உலகம் கொள்ளுமோ?"*

*(சுந்தர – காட்சி – 17)*

எனவேதான், வீடணன் சீதை கோலம் புனைந்து வரவேண்டுமென்பது இராமனுடைய விருப்பம் என்று கூறவும், அது இச்சூழலுக்குத் தக்கதல்லவே என்று அறிவால் உணர்ந்திருந்தும், இராமனுக்காக இசைவு தெரிவித்து விடுகிறாள். "இதுகாறும் இராமனுடைய சொற்களுக்கு மாறாக நடந்து தான் பட்ட பாடு போதும்! இனி இராமனின் விருப்பத்துக்கே இணங்கி வாழ வேண்டும். புனல் படியாது, துகில் மாற்றாது, குழல் திருத்தாது, மழையெனப் பெருகிய கண்ணீரால் ஒளியிழந்து கிடக்கும் கண்களுக்கு ஒப்பனை செய்யாது, பிச்சியைப் போல் தான் உலகத்தார் முன் தோன்றுதல் வேண்டாம் என்று இராமன் எண்ணியிருக்கலாம். இராமனின் கருத்தில் தவறு இருக்க முடியாது" என்று எண்ணியே

*'நன்று' என நங்கை நேர்ந்தாள், நாயகக் கோலம் கொள்ள;"*

*(யுத்த – மீட்சி – 41)*

அந்த 'நன்று' என்ற சொல்லை நோக்க வேண்டும். அதில் தொனிக்கும் கருத்து என்ன? – அது எனக்கு நன்றாகப்படவில்லை. ஆயினும் 'நல்லது! இராமன் விருப்பமெனில் அப்படியே ஆகட்டும்!' – என்ற கருத்துதான் தொனிக்கிறது.

மேலும் வீடணன் தன் நாயகனுக்கு உற்ற நண்பன் என்பதையும் அறிவாள். அவனுடைய உதவியால் அல்லவோ இராமனுக்கு வெற்றி கிட்டியது! அவனுடைய மகள் திரிசடையால் அல்லவோ அவள் பிச்சியாகிவிடாமல் மனநலத்தைக் காப்பாற்றிக் கொள்ள முடிந்தது! அத்தகைய நன்றியுணர்வினாலும் கூட, வீடணனிடம் அதிகமாக மறுப்புரை கூறாமல் இணங்கியிருக்கலாம்.

ஆக, முதலில் கோலம் கொள்ள மறுப்பு தெரிவிக்கும் சீதை அந்தப் பிடிவாதத்தைத் தொடர்ந்து வைத்திராமல், விதி வசத்தால் பின்னர் தளர்த்தி விடுகிறாள். சீதை இசைவு தெரிவித்ததுதான் தாமதம். உடனே அலங்காரம் தொடங்குகிறது. ................ திலோத்தமை, மேனகை, ரம்பை, ஊர்வசி ஆகிய தேவ மாதர்கள் சீதைக்குக் கோலம் புனையும் பணிக்கு அமர்த்தப்படுகிறார்கள். அலங்காரம் ஆடம்பரமாகத் தொடங்குகிறது. கத்தூரி, புனுகு சேர்த்த நான நெய் ஊட்டிச் சீதையை மஞ்சனம் ஆட்டி, சடைப்பட்ட கூந்தலைச் சிக்கெடுத்துச் சீராக்கி வகிர்ந்து, அதனை அழகு பொலியும் அளகத் தொகுதியாக்கிச் செம்மை செய்கின்றனர். சீதையின் அங்கங்கள் எல்லாம் அணிகலன்களால் நிறைகின்றன. பாகு அடர்ந்து, அமுது பில்கும் பவள வாய்ப் பற்கள் விளக்கமுற்றுப் பொலியும் வண்ணம் சீர்மை செய்யப்படுகின்றன. சித்திரப் பவளச் செவ்வாய் அதரங்களுக்குப் பசிய வெற்றிலைச் சாற்றின் செம்மை வண்ணம் ஏற்றப்படுகிறது. இறுதியில் முந்துறும் முலைகளில் குங்குமம் எழுதி, அழகுறு அல்குலுக்கு மேகலையும் சார்த்தி, நிறைவாக ஒப்பனையை முடிக்கின்றனர் தேவமங்கையர். கோலம் புனைந்த சீதை இந்திரன் தேவியாகிய இந்திராணியை ஒப்பத் தோன்றினாள். அணிகலன்கள் பூட்டப் பெற்று முடிந்த ஒப்பனை ஆரவாரத்துடனும், ஆடம்பரமாகவும் இருந்தது என்பதைச் சிறப்பாகக் குறிப்பிடுவதற்காகவே

*“இந்திரன் தேவிக்கு ஏற்ப, இயைவன பூட்டி”*

*(யுத்த – மீட்சி – 46)*

என்று எழுதுகிறான் கம்பன். அதாவது இந்திரன் மனைவி இந்திராணி போன்று அழகு தோன்றத் துலங்கினாள் சீதை என்கிறான். இந்தக் கருத்துக்கு மேலும் விளக்கம் தேவை.

இந்திரலோகம் போகத்தை விரும்பும் உலகம். இந்திரன் போக வாழ்க்கையில் அதிக விருப்பமுள்ளவன். அத்தகைய அமரர் கோன் இந்திரனுடைய மனைவியாகிய இந்திராணியும் போகத்தில் விருப்பம் கொண்டு, காண்பவர் மயங்கும் வண்ணம் அணி மணிகள் அணியும் இயல்பினள். இங்குச் சீதைக்கு ஒப்பனை செய்பவர்கள் அரம்பையர் ஆதலின், சீதையின் அங்கங்களின் அழகை மிகுதிப்படுத்தும் வண்ணம், அத்தகைய நோக்கத்தோடு ஏற்றதான அணிகள் பூட்டி, இந்திராணியை

அலங்கரிப்பதுபோல் சீதையை அலங்கரித்து அவளது மேனியின் வனப்பைப் பொலியச் செய்தனர் என்கிறான் கம்பன்.

இங்கு ஒரு நுணுக்கமான செய்தியைக் கம்பன் சொல்லாமல் சொல்கிறான். அச்செய்தி என்ன?

.......... இராமன் சீதையை மணம் புரிந்த நாளன்றும் அலங்காரம் ஏற்றுத்தான் வந்தாள். சீதைக்குத் தோழியர் கோலம் புனைகின்றனர். அவர்கள் செய்யும் ஒப்பனையை விரிவாக விளக்குகிறான் கம்பன். அந்தப் படலத்துக்கு "கோலம் காண் படலம்" என்றே தலைப்பிடுகின்றான். ஆனால் அந்த ஒப்பனையில் அடக்கமும் தெய்வீகமும் மிளிர்ந்ததை ஒரு பாடலால் சுட்டிக் காட்டுகின்றான் கம்பன்....

*"நை வளம் நவிற்று மொழி நண்ண வரலோடும்*
*வையம் நுகர் கொற்றவனும் மாதவரும் அல்லார்*
*கைகள் தலை புக்கன; கருத்துளதும் எல்லாம்*
*தெய்வம் என உற்ற; உடல் சிந்தை வசம் அன்றோ?"*
*(பால – கோலம் காண் – 34)*

..... சீதை அணிகலன்களால் சிறப்புறுத்தப் பெற்று அழகுப் பதுமையெனத் தன் சீரடி பெயர்த்து அன்னம் போல் நடந்து வந்து மயில் போல நின்றாள். அவளுடைய தெய்வீக அழகு காண்பவர் கண்களில் சேர்ந்து மனத்தில் பக்தியுணர்வை உண்டாக்குகிறது. அழகுத் தெய்வத்துக்கு அஞ்சலி செய்ய அனைவரையும் அவர்களுடைய மனம் தூண்டுகிறது. மாதவரும் மங்கையரும் மன்னரும் மற்றவரும் தம்மையறியாமல் எழுந்து நின்று கைகளைச் சென்னியில் சேர்த்துச் சீதையை வணங்குகின்றனர்.

.......... ஆனால், இலங்கை மக்கள், வாழ்க்கையை நன்கு அனுபவிக்க விரும்பியவர்கள். புலனின்பத்துக்கும், போகத்துக்கும் முக்கியத்துவம் கொடுப்ப வர்கள். ஆடை அணிகலன், உணவு, வாழ்வின் அணுகுமுறை எல்லாவற்றிலும் செல்வச் செழிப்பைச் செருக்கோடு வெளிப்படுத்தும் இயல்பினர். இலங்கையைக் காணும் அனுமன் அதைக் குபேரப்பட்டணம் என்றே கணிக்கின்றான். அதன் செல்வ வளத்தையும், செயற்கையான பகட்டையும் கண்டு மலைத்துப் போகின்றான். இந்நாட்டில், "களிக்கின்றாரேயன்றிக் கவல்கின்றார் எவருமில்லையே" என்று வியப்புறுகின்றான். இலங்கையின் அத்தகைய செயல்பாட்டுக்கு ஏற்ப இங்கே சீதைக்குச் செய்யப்படும் அலங்காரம் பகட்டும் பரபரப்பும் நிறைந்ததாக உள்ளது. இன்ப

நுகர்ச்சியை அடித்தளமாகக் கொண்டதாக உள்ளது. "காமன் திருவிளை அல்குற்கு ஏற்ப மேகலை தழுவச் செய்தனர் உம்பர் மாதர்" என்கிறான் கம்பன். எனவே இன்ப போக வாழ்க்கையை இலக்காகக் கொண்ட இலங்கை அரசில், இன்ப போகத்தை இடையில்லாது நுகரும் உம்பர் மாதர்களான திலோத்தமை முதலான வானக நாட்டு மங்கையர்கள் வந்து சீதையை அழகுறுத்தும் பொழுது, சீதை, இந்திரன் மனைவி இந்திராணியைத்தான் தோற்றத்தில் ஒத்திருக்க முடியுமே தவிர, அவள் திருமாலின் துணைவியாகிய திருமகளை ஒத்திருக்க முடியாது. இந்தப் பகட்டான அலங்காரத்தைக் குறிப்பிடவே "இந்திரன் தேவிக்கு ஏற்ப, இயைவன பூட்டி" சீதையை அழகுறுத்தினர் என்கிறான் கம்பன். இங்குச் சீதைக்கு ஒப்பனை செய்ய வந்த அரம்பையர்களாகிய ரம்பை, ஊர்வசி, மேனகை, திலோத்தமை ஆகியோர் பல்வேறு சமயங்களில் பல முனிபுங்கவர்களுடைய தவத்தைக் கலைத்து உலக மாயையிலும், இன்ப வாழ்விலும் நாட்டம் கொள்ளும் வண்ணம் முனிவர்களுடைய மனநிலையை மாற்றியவர்கள் என்பது புராண இதிகாசச் செய்திகள். எனவே இன்ப வாழ்வுக்கு இட்டுச் செல்லும் பெண்ணழகைச் செம்மையுற எழிலுறுத்துவதிலும், பெண் அழகு வெளிப்பட்டுத் துலங்கித் தோன்றும் வண்ணம் தோற்றம் பெறச் செய்வதிலும் வித்தகிகள் அவர்கள் என்பதும் இங்குக் கம்பன் கூறாமல் கூறும் செய்தி. அத்தகையோர் சீதைக்குச் செய்த ஒப்பனை அதீத பொலிவுடன் இருக்கவே செய்யும் அல்லவா?

இந்த உண்மையைத்தான் நாம் புரிந்து கொள்ள வேண்டும். இவ்வாறு சீதை அலங்காரப் பதுமையாக வந்து நின்ற கோலம்தான் இராமனின் கருத்தையும் கண்களையும் உறுத்திற்று; உள்ளத்தைச் சங்கடத்தில் ஆழ்த்தியது. **ஒப்பனை என்பது அணிகளால் ஒப்பற்றதாக இருக்கலாம். ஆனால் அதில் தெய்வீகம் மிளிர வேண்டும். காண்பவர் உள்ளத்தில் பெருமித உணர்வை எழுப்ப வேண்டுமே தவிர இன்ப உணர்வுக்குப் பெட்டகம் பெண் எனும் உணர்வை எழுப்பக் கூடாது.** அயோத்தி வேந்தன் இராமனுடைய கருத்து இதுவே. காரணம் இராமனுடைய **அயோத்தி நாட்டின் பண்பும் சிறப்பும் புலனடக்கம்தான்.**

கம்பன் காப்பியத்தின் முதல் பாடலில் வைக்கும் கருத்தே புலனடக்கம்தான். காப்பியத்தின் முதல் காண்டம் பால காண்டம். முதல் படலம் ஆற்றுப்படலம். அதில் உள்ள முதல் பாடல் பின்வருமாறு:

*"ஆசலம் புரி ஐம்பொறி வாளியும்,*
*காசு அலம்பு முலையவர் கண் எனும்*
*பூசல் அம்பும், நெறியின் புறம் செலாக்*
*கோசலம் புனை ஆற்று அணி கூறுவாம்"*

*(பால – ஆற்றுப் – 1)*

பொருள்: குற்றத்தையும் துன்பத்தையும் செய்கின்ற ஐந்து பொறிகள் என்னும் அம்புகளும், மாலையணிந்த மார்பகங்களோடு காமப் போர் தொடுக்கின்ற மகளிரின் இரு கண்கள் என்னும் அம்புகளும் தீய வழியில் செல்லாத வண்ணம் வாழும் மக்கள் நிறைந்த கோசலம்.

தொடர்ந்து கம்பன் அயோத்தியில் பெருகி வரும் வெள்ளம் பற்றிப் பேசும்பொழுது மானம், அறம், மனுநெறி, தன் குடை நிழல், வேந்தன் புகழ், ஞானம், ஞானம் நண்ணிய நான்மறையாளர், கைத்தானம் இவைபோன்று நீர் தழைத்து ஓங்கி ஓடியது என்று வெள்ளத்துக்கு மேன்மையான பொருட்களையே உவமையாக்கிப் பேசுகிறான். இறுதியில், பரம்பொருளே அவதாரம் எடுத்து வாழப் போகும் அயோத்தி மாநகரத்தில் விரிந்து பரந்தொழுகும் ஆற்றைப் பற்றிப் பேசும்பொழுது, பரம்பொருளின் நினைவையகற்றிப் பேசக் கம்பனால் இயலவில்லை. எனவே அதற்கேற்ப ஒரு பாடல் அமைக்கிறான்.

*"கல்லிடைப் பிறந்து போந்து, கடலிடைக் கலந்த நீத்தம்,*
*எல்லை இல் மறைகளாலும் இயம்ப அரும்பொருள் ஈது என்னத்*
*தொல்லை இல் ஒன்றே ஆகி துறைதொறும் பரந்த சூழ்ச்சிப்*
*பல் பெரும் சமயம் சொல்லும் பொருளும் போல், பரந்தது அன்றே"*
*(பால - ஆற்றுப் - 19)*

"ஒரே பரம்பொருளைப் பற்றிப் பேசும் பல சமயங்கள், பல திறத்தவாய் பல்கிப் பெருகி விளங்குவதுபோல, மலையினின்று பிறந்து வந்த ஆறு, பல் வகையானும் பரந்து விரிந்து ஓடிற்று" என்கிறான். இத்தகைய அயோத்தியின் மாட்சிமையை வருணிக்கப் புகும் கம்பன், "கல்வி கேள்விகளில் சிறந்து, தவம் தழைத்து, அன்பும் தருமமும் மலர்ந்து போகம் முற்றிய நிலையில் அது யோகமாக மாறும் பழுத்த ஞானம் உடைய மக்களைக் கொண்ட நாடு அது" என்று கூறி நாட்டு வருணனையை முடித்து வைக்கிறான்.

*"ஏகம் முதல் கல்வி முளைத்து எழுந்து, எண் இல் கேள்வி*
*ஆகும் முதல் திண் பணை போக்கி, அருள் தவத்தின்*
*சாகம் தழைத்து, அன்பு அரும்பி, தருமம் மலர்ந்து,*
*போகங் கனி ஒன்று பழுத்தது போலும் அன்றே"*
*(பால - நகர - 75)*

எனவே சீதை அழகுறுத்தப்பட்டதே இராமனின் கணிப்பில் தவறு என்னும்பொழுது அணிகலப் பெட்டகமாகவும் அதீத ஒப்பனைக்கு ஒரு உருவமாகவும் பலர் முன்னர் தன் ஆவியனைய தேவி தோன்றுவதை இராமன் சகித்துக் கொள்வது எங்ஙனம் சாத்தியமாகும்?

ஆனால் இலங்கை நகரத்து அழகு ஒப்பனைப் பண்பாட்டுக்கு ஏற்ப அழகுக் கோலம் புனைந்து கொள்ளும் சீதை இவற்றையெல்லாம் மனம் கொண்டாள் இல்லை. "நாயகன் விருப்பம் எனின் அதுவே நன்று" என்று இசைந்து இணங்கும் சீதை, அக்கணத்தில் இயல்பில் எத்தகையவளாக இருந்தாள் என்பதைக் கம்பன் இங்கே மறவாமல் குறிப்பிடுகின்றான்.

*"காணியைப் பெண்மைக்கு எல்லாம், கற்பினுக்கு அணியை, பொற்பின்*
*ஆணியை, அமிழ்தின் வந்த அமிழ்தினை, அறத்தின் தாயை"*
*(யுத்த – மீட்சி – 43)*

உம்பர் மாதர் அலங்கரித்தனர் என்று கூறிய பிறகு அவளுடைய கற்பின் பொற்பைப் போற்றிப் புகழ்கிறான். அதாவது பகட்டான ஒப்பனைதான்! ஆனால் சீதை அதிலே கவனம் செலுத்தவில்லை. தூய கற்பு நிறை உள்ளத்தவளாகக் கோலத்தை ஏற்றாள் என்கிறான் கம்பன். இராமன் 'வருத்தம் போக்கிச் சீதையைக் கொணர்க' என்று தனக்கு ஆணையிட்டதாக வீடணன் கூறியதால், ஒப்பனை முடிந்து 'இராமனின் விருப்பம்' என்று வருத்தம் போக்கிய தோற்றத்தினளாய்க் காட்சி தர வேண்டி, களித்த உள்ளத்தவளாக இராமனைக் காண வருகிறாள் சீதை.

இராமனுடைய ஆணைப்படி சீதையை நல்லழகுக் கோலத்தோடு, அதாவது "சீர்மையோடு" தான் அழைத்து வருவதாக உள்ளம் களிக்கிறான் வீடணன். ஆனால் வீடணன், சீதை ஆகிய இருவருமே இராமனுடைய விருப்பத்தைச் சரியாக நிறைவேற்றாத குற்றத்தைச் செய்து விடுகிறார்கள். குற்றத்தின் முழுப் பழியும் சீதையை மட்டும் சேர்கிறது.

சீதை தன்னை அணிகளினால் அலங்கரித்துக் கொள்ள இசைந்தமைக்குப் பிறிதொரு காரணமும் கூட இருக்கலாம், கணவனைப் பிரிந்து வாழும் பொழுது கற்புடைய பெண்டிர் அணிகலன்கள் பூண்டு கோலம் புனைதல் குல மரபுக்கொத்தது அல்ல. ஆனால் கணவனோடு கூடி வாழும் பெண்டிர் அணிகள் பூணாது இருப்பது அமங்கலமாகவே பாரதப் பண்பாட்டில் கருதப்படுகிறது. இத்தகைய மரபுத் தொடர்பாகக் காப்பியத்தில் இராமன் கூறும் கருத்தொன்றை இங்கு ஆய்வது அவசியம்.

........ கிட்கிந்தா காண்டத்தில் 'கலன் காண் படலத்தில்' ஒரு நிகழ்ச்சி நடக்கிறது. இராவணன் சீதையைச் சிறையெடுத்த பொழுது சீதை தன் அணிகலன் களையெல்லாம் கழற்றித் தன் துகிலில் பொதிந்து ஒரு சிறு மூட்டையாக்கி அவற்றை வானரர்கள் வாழும் மதங்க மலை மீது எறிந்ததாகவும், தான் அதைக் காத்து வைத்திருப்பதாகவும் ஒரு இழை பொதியை இராமனிடம் சுக்ரீவன் காட்டுகிறான். (இந்த நிகழ்ச்சி இந்நூலில் முன்னரேயே விளக்கப்பட்டுள்ளது). கலன்களைக் கண்டு கலங்கிக் கருத்தழியும் இராகவன் கண்ணீர் சிந்துகிறான். அப்பொழுது இராமன், "வில்லேந்திய ஒருவன் நான் உயிருடன் இருக்கிறேன். ஆயினும் சீதை தன்னுடைய அணிகளையெல்லாம் களைந்து விட்டிருக்கும்படி விதி அமைத்துவிட்டது. கற்பு மேவிய பெண்டிரில் உலகத்தில் இதுபோன்ற விதி வாய்த்த பெண்கள் என் தேவியைத் தவிர வேறு எவருளர்?" என்று கழிவிரக்கம் மேவப் பேசுகிறான்.

*"விலங்கு எழில் தோளினாய், வினையினேனும் ; இவ்*
*இலங்கு வில் கரத்திலும் இருக்கவே, அவள்*
*கலன் கழித்தனள்; இது; கற்பு மேவிய*
*பொலன் குழைத் தெரிவையர் புரிந்துளோர்கள் யார்?"*
*(கிட்ந்தா – கலன் காண் – 20)*

ஆக, இராமனோடு வாழும் கானக வாழ்க்கையின் பொழுது சீதை அணிகலன்கள் அணிந்து மங்கலம் நிறைந்த தோற்றப் பொலிவோடுதான் வாழ்ந்திருக்கிறாள். சடாயுவிடம் இராவணன் சண்டையிட்ட போதோ அல்லது வேறு வாய்ப்பான சமயத்திலோ, தான் அந்நியனால் சிறைபிடிக்கப்பட்ட இக்கட்டான சூழலிலும், மிகவும் அறிவார்த்தமாகச் சீதை அணிகலன்களைக் கழற்றி முடிந்து பொதியாக்கி வைத்திருந்திருக்கிறாள். காடு, மலை கடந்து வரும்பொழுது மதங்க மலையின் மேல் மக்கள் வாழ்கின்ற இடம் ஒன்றைக் கண்ட மாத்திரத்தில், தேடி வரும் இராமனுக்கு உதவியாக இருக்கும்பொருட்டோ, வேறு எந்தக் காரணம் பற்றியோ, சீதை அந்தப் பொதியை நிலத்தில் விட்டெறிந்திருக்கிறாள். ஆனால் சூடாமணி மட்டும் தலையில் தங்கியிருந்துள்ளது . காரணம், அது தலையின் மயிர்க் கற்றைக்குள் சிக்கிக் கொள்ளும் வாய்ப்பு கொண்டது. (முடியால் இறுக்கப்பட்டுத் தலையில் பொருத்தப்படும் காரணத்தால்). எனவே அதை மட்டும் பின்னாளில் எடுத்துத் தன் துகிலில் பொதிந்து வைத்திருந்து, பிறகு அனுமனிடம் அடையாளமாக அளிக்கிறாள் தேவி.

(இவ்விடத்தில் ஓர் ஐயம். சீதை, அயோத்தியில் மரவுரி தரித்து இராமனுடைய கைப்பற்றி நின்ற பொழுது தவக் கோலத்தினளாகத்தானே இருந்தாள். அணிகலன்கள் ஒன்றும் அணிந்து வரவில்லையே! பிறகு அணிகலன்களை அணியும் வாய்ப்பைச்

சீதை எங்ஙனம் பெற்றாள்? இந்தக் கேள்விக்குப் பதில் ஆரணிய காண்டத்தில் விராதன் வதைப் படலத்தில் உள்ளது. இராமனைத் தேடி பரதன் குடி படைகளுடன் காட்டிற்கு வருகிறான். இராமனே அயோத்தியின் அரசன் என்ற கருத்தில் மாறாத பரதன், இராமனுடைய பாதுகைகளை அரியணையில் அமர்த்தித் தான் அரசுக்குக் காவலனாக மட்டுமே இருப்பது என்று முடிவு செய்து அயோத்தி மீள்கிறான். இந்நிகழ்ச்சிக்குப் பிறகு இராமன், இலக்குவன், சீதை ஆகியோர் வனத்தில் மேலும் நடந்து அத்திரி முனிவர் வாழும் தண்டக வனத்தை அடைகின்றனர். அவ்விடத்தில் அத்திரி முனிவரைக் கண்டு உரை செய்யும் பொழுது, அத்திரி முனிவரின் மனைவியாகிய அனசூயை, தன்னுடைய அணிகலன்களையெல்லாம் சீதைக்குத் தன் அன்பளிப்பாகத் தருகிறாள். அவற்றைச் சீதை அணிந்து கொள்கிறாள். இராமன் இப்பொழுது அயோத்தியின் அரசனல்லவா? எனவே சீதை விரும்பிய வண்ணம் அணிகலன்கள் அணிந்து கொள்ள அனுமதி கொடுத்துவிட்டான் போலும்!)

இந்நிகழ்ச்சியை நினைத்துப் பார்த்தும் கூட, தான் அணிகலன் பூணுவது இராமனுக்குச் சம்மதமாகத்தான் இருக்கும் என்று சீதை கருதியிருக்கலாம்.

விளக்கங்கள் எவையாக இருந்தபோதிலும், தவசியாகிய இராமன் முன் தவக் கோலத்தில் தோன்றியிருக்க வேண்டிய சீதை, இராமன் எதிர்பாராத தருணத்திலும் எதிர்பாராத விதத்திலும் அவனுடைய விருப்பத்திற்கு மாறாகவும் அவனுக்குச் சங்கடம் விளைவிக்கும் வகையிலும் அழகுக்கோலம் புனைந்து இலங்கையில் தோன்றினாள் என்பதுதான் உண்மை!

இவ்வுண்மை ஒருபுறமிருக்க, இவ்விடத்தில் வீடணனுடைய குணநலன் பற்றி ஆராய வேண்டிய அவசியம் ஏற்படுகிறது.

வீடணன் எதற்காக இராமன் கூறாதனவெல்லாம் சீதையிடம் கூறி அவளை ஒப்பனைக்கு இணங்க வைத்தான்? சீதையை அழகுபடுத்தி இராமனிடம் அழைத்துப்போக வேண்டும் என்று வீடணன் கூறியதற்குக் காரணம் என்னவாக இருக்கும்?

ஒன்று, இராமன், 'சீர்மையுடன் அழைத்து வா' என்று கூறிய சொற்களை 'அழகுக் கோலத்தில் அழைத்து வா' என்று தவறாகப் புரிந்து கொண்டிருந்திருக்கலாம். அதிலும் வீடணன் சீதையை இப்பொழுதுதான் முதன் முதலாகச் சரியாகப் பார்க்கிறான். (யுத்தம் நடக்கும்பொழுது வண்டுருவில் வந்து, சீதையை அவசர கதியில் ஒருமுறை பார்த்துவிட்டுப் போகிறான்.) பார்த்தவுடன் அவளுடைய கொள்கையை முன்னிறுத்திய

தவக் கோலத்தைக் கண்டு வெதும்பியிருக்கலாம்! 'ஓவியம் புகையுண்டது ஒக்கின்றாள்' என்கிறானல்லவா கம்பன்! மேலும் வீடணன் சீதையின் அழகு பற்றி நிரம்பவே கேட்டும் இருந்தான். இராவணன் தன்னுடைய வீரத்தை மட்டுமல்லாமல், இலங்கை அரசின் எதிர்காலத்தையும், தன் மக்கள், சுற்றம் என்று அனைத்தையுமே இவள் அழகுக்கு விலையாகக் கொடுத்து மாண்டு போயிருக்கிறான் அல்லவா? இராவணனுடைய மனைவி மண்டோதரியே "சானகியார் பேரழகும் பெருங்கற்பும் அன்றோ உம் உயிரைக் கொள்ளை கொண்டது" என்று பெருங்குரலெடுத்து யுத்த பூமியில் அழுகிறாள். தன் வில் திறம் ஒன்றினாலே இலங்கையை அழித்தொழிக்க அருளின் நாயகனாகிய இராமன் முடிவெடுத்து, அதனைச் செயல்படுத்தியும் காட்டியது, சானகியின் பேரழகு ஊக்கிய ஊக்கத்தினாலன்றோ? அத்தகைய பேரழகியைப் புனல் படியாத, குழல் திருத்தாத நிலையில் 'ஓவியம் புகையுண்டது போன்ற' தோற்றத்தில் வீடணன் காண்கின்றான். தவத்தியாகிய வேதவதியைத் தன் காம இச்சையால் துன்புறுத்திய இராவணனைப் பற்றி வீடணன் அறிந்தவனே அல்லவா? வேதவதியின் சாபத்தைப் பற்றி வீடணன் கூறுவதற்கு செவி மடுக்காதவனல்லவா இராவணன்! இந்தத் தவத்தியையும் அவன் எத்தனை அளவு வருத்தியிருப்பான் என்று கற்பனை செய்திருப்பான் போலும்! ஆனாலும் பேரழகுப் பெட்டகமான சானகியை – திருமகளைப் போன்ற திருவுருவத்தை – தன் அண்ணன் வருத்திய அளவைச் சிறிது குறைத்துக் காட்ட வேண்டுமென்று வீடணன் எண்ணியிருப்பான் என்று காப்பியம் கற்போர் நினைக்க வாய்ப்புள்ளது. காரணம், இறந்துவிட்ட அண்ணன்பால் இப்பொழுது, அவனுக்கு இரக்கம் தோன்றியிருந்தது. இதற்குக் காப்பியத்தில் சான்று உண்டு. இராவணன் போர்க்களத்தில் இறந்துபட்டான். அவன் தீயவனே ஆயினும் அவன் இறந்த பிறகு வீடணன் தன் அண்ணனின் உயிரற்ற சடலத்தின் மேல் விழுந்து அழுது அரற்றுகின்றான்.

> *"தா அரும் பொறையினான்தன் அறிவினால் தகைக்க நின்ற*
> *ஆவலும், துயரும் தீர, அரற்றினான் பகு வாய் ஆர"*
>
> *(யுத்த – இராவணன் வதை – 217)*

இராவணனுடைய முதுகில் வடுக்களைக் கண்டு இராமன் அவற்றைப் புறமுதுகுப் புண்கள் என்று தவறாக இகழ்ச்சியுடன் குறிப்பிடுகிறான். அக்கருத்தைப் போக்குவதற்கு வேண்டி "திசையானைகளின் மருப்பு மார்பில் நுழைந்து முதுகின் வழியே வெளி வந்ததால் ஏற்பட்ட புண் இது" என்று வீடணன் விளக்கம் கொடுக்கிறான். தன் தமையனின் வீரத்தைப் பலபடப் பாராட்டிவிட்டு, தாயினும் தொழத்தக்க சீதை பால் வைத்த முறையற்ற காமமும், நின் அறம் சார்ந்த கோபமுமே இராவணனை வென்றதன்றி, அவனை வீரத்தில் வெல்வார் மூவுலகிலும் இல்லை!" என்று

விளக்கமும் அளிக்கிறான். எனவே இறந்து போய் விட்ட இராவணனுக்கு மேலும் இழுக்கு நேராதவண்ணம், சீதையை நன்கு அழகுறுத்தி அழைத்துச் செல்லலாம் என்று நினைத்திருக்கலாம். ஏனெனில் அவன் இப்பொழுது இலங்கையின் அரசன் ஆதலால், இனி ஏற்படும் எந்தப் பழிக்கும் அவனே பொறுப்பாகிறான். எனவே சீதையின் வருத்தம் மிகையாகத் தெரியாத வண்ணம் செயல்படுகிறான் என்ற முடிவுக்குக் கற்போர் வரவேண்டியுள்ளது.

வீடணன் அறவோன்! ஐயமில்லை. அறம் திறம்பிய வாழ்வில் நாட்டம் கொண்ட இராவணனை விடுத்து இராமனிடம் அடைக்கலமானவன். இராமனுக்கு மெய்யன்பனாக நடந்து கொள்கிறான். அதிலும் ஐயமில்லை. ஆயினும் அனுமன் போன்று செயல்திறனும் விவேகமும் படைத்தவன் வீடணன் என்று கூறிவிட முடியாது. அனுமன் இராமனுடைய சொற்களை மிகச் சரியாகப் புரிந்து கொள்பவன்; குறிப்புணர்ந்து நடப்பவன்; காலம் அறிந்தும் இடம் அறிந்தும் உதவுபவன். கைம்மாறு கருதாது உழைப்பவன். காரியங்களைக் கருத்துடன் ஆற்றுபவன். ............ ஆனால் வீடணன் அத்துணை அறிவாற்றல் உடையவன் அல்லன். அறியாமையால் தவறான செயல்களைச் செய்துவிடக் கூடியவன். இராமன் தவறுகளைப் பொறுக்கும் தன்மையன்தான். தன் பக்கத்து நண்பர்கள் எவரையும் மனம் புண் படும்படி உரை செய்யாதவன்தான். அத்தகைய இராமனே, ‘காரியத்தைக் கெடுத்துவிட்டாயே!’ என்று ஒருமுறை சினம் கொண்டு வீடணனிடம் அங்கலாய்க்கும் அளவுக்குத் தவறு செய்துவிடுகிறான் வீடணன். இராமன், பலர் கூடியுள்ள இடத்தில், இப்படி வீடணனைக் குறை கூறுகிறானென்றால், வீடணனுடைய செயல்திறனை ஏற்கனவே குறைவாகக் கணித்து மனத்தில் அந்த உண்மையைப் பல காலம் வைத்திருந்தாலொழிய கிடைத்த வாய்ப்பைத் தவறவிடாமல் இராமன் அப்படிக் கூறியிருக்கமாட்டான் என்பது திண்ணம்.

இராமனுடைய அன்புக்குரியவன் மட்டுமல்லன் வீடணன், இராமனால் உடன் பிறந்தவன் என்றே ஏற்றுக் கொள்ளப்பட்டவனுமாவான். வீடணனுக்கு அடைக்கலம் கொடுத்த காலை இராமன்.

*“குகனோடும் ஐவர் ஆனேம் முன்பு; பின், குன்று சூழ்வான்*
*மகனோடும் அறுவர் ஆனேம்; எம்முழை அன்பின் வந்த*
*அகன் அமர் காதல் ஐய! நின்னொடும் எழுவர் ஆனேம்;*
*புகல் அரும் கானம் தந்து, புதல்வரால் பொலிந்தான் நுந்தை”*

*(யுத்த – வீடணன் அடைக்கலம் – 143)*

என்று கூறுகிறான். வீடணனும் இராமனுக்கு உடன்பிறந்தவனாகவே நடந்து காட்டுகிறான். இராவணன் பக்கத்துச் செய்திகளையெல்லாம் விரிவாக இராமனுக்கு எடுத்துரைக்கிறான். இராமன் வீடணனை தனக்குற்ற மிகப்பெரிய துணையாக எண்ணுகிறான்.

ஆனால், அறத்தின் மேல் பற்றிருக்கும் அளவுக்கு வீடணனுக்கு செயல் திறன் இல்லை என்பதே வீடணனைப் பற்றிய இராமனுடைய கணிப்பு. அதற்கேற்றாற்போல் யுத்த களத்தில் மிக முக்கியமான ஒரு கட்டத்தில் வீடணன் சிரத்தையுடன் செயல்படத் தவறிவிடும்பொழுதுதான் “கெடுத்து விட்டாயே வீடணா!” என்று இராமன் தன் ஆதங்கத்தை வெளிப்படுத்துகிறான். அந்த நிகழ்ச்சியைக் காண்போம்.

.... போர்க்களத்தில் இலக்குவனும் இந்திரசித்தும் போர் புரிகின்றனர். அவர்களிருவரும் ஒருவருக்கொருவர் சளைத்தவரில்லை என்னுமாறு போரிடுகின்றனர். வீடணன் அப்போரைக் கண்டு கொண்டிருக்கிறான். ‘இது காண்டற்கு அரிய காட்சி’ என்று தேவர்களே வானத்தில் குழுமி விடுகின்றனர். இருவருடைய பேராற்றலையும் கம்பன் மிக அற்புதமாக வருணிக்கிறான். வீடணன் மெய்ம்மறந்து கண்ணுற்று ரசிக்கும் ‘இலக்குவன் - இந்திரசித்து போரை’ கம்பனுடைய சொற்களிலேயே காண்பதுதான் உத்தமம். இருவரும் ஒருவருக்கொருவர் சளைத்தவரில்லை என்னும் வண்ணம், எதிர் எதிர் வில்லாற்றல் காட்டி, இருவரும் பொருதும் போர்க்கலை அழகை வீடணன் மெய்ம்மறந்து கண்ணுறும் அந்தக் காட்சியைக் கம்பனின் கவிதைகளிலேயே காண்போம்.

*“ஆயிர கோடி பல்லம், அயில் எயிற்று அரக்கன் எய்தான்;*
*ஆயிர கோடி பல்லத்து அவை துணித்து அறுத்தான் ஐயன்;*
*ஆயிர கோடி நாகக் கணை தொடுத்து அரக்கன் எய்தான்;*
*ஆயிர கோடி நாகக் கணைகளால் அறுத்தான் அண்ணல்”*
*(யுத்த – நாகபாச – 107)*

*“கோட்டியின் தலைய கோடி கோடி அம்பு அரக்கன் கோத்தான்;*
*கோட்டியின் தலைய கோடி கோடியால் குறைத்தான்; கொண்டல்*
*மீட்டு ஒரு கோடி கோடி வெஞ்சினத்து அரக்கன் விட்டான்;*
*மீட்டு ஒரு கோடி, கோடி கொண்டு, அவை தடுத்தான் வீரன்”*
*(யுத்த – நாகபாச – 108)*

*“கங்க பத்திரம் ஓர் கோடி கைவிசைத்து, அரக்கன் எய்தான்;*
*கங்கபத்திரம் ஓர் கோடி கணை தொடுத்து இளவல் காத்தான்”*
*(யுத்த – நாகபாச – 109)*

அடுத்து இலக்குவனின் அம்புக்கு இந்திரசித்தன் எதிர் அம்பு விடும் ஆற்றலைக் கம்பன் வருணிக்கின்றான்.

*“திங்களின் பாதி கோடி இலக்குவன் தெரிந்துவிட்டான்;*
*திங்களின் பாதி கோடி தொடுத்து, அவை அரக்கன் தீர்த்தான்”*
*(யுத்த – நாகபாச – 109)*

அடுத்து இருவரும் மாறி மாறிக் கணை தொடுத்து ஒருவருக்கொருவர் சரியாக ஈடு கொடுத்துப் பகழி மாரி பொழிவதை விளக்குகிறான் கம்பன்.

*“கோரையின் தலைய கோடி கொடுங்கணை அரக்கன் கோத்தான்;*
*கோரையின் தலைய கோடி தொடுத்து அவை இளவல் கொய்தான்;*
*பாரையின் தலைய கோடி பரப்பினான் இளவல், பல் கால்*
*பாரையின் தலைய கோடி அரக்கனும் பதைக்க எய்தான்”*
*(யுத்த – நாகபாச – 110)*

*“தாமரைத் தலைய வாளி, தாமரைக் கணக்கின் சார்ந்த*
*தாம் வரத் துரந்து, முந்தி, தசமுகன் தனயன் ஆர்த்தான்;*
*தாமரைத் தலைய வாளி, தாமரைக் கணக்கின் சார்ந்த*
*தாம் வரத் தடுத்து வீழ்த்தான், தாமரைக்கண்ணன் தம்பி”*
*(யுத்த – நாகபாச – 111)*

*“வச்சிரப் பகழி கோடி வளை எயிற்று அரக்கன் எய்தான்;*
*வச்சிரப் பகழி கோடி துரந்து, அவை அனகன் மாய்த்தான்;*
*முச்சிரப் பகழி கோடி இலக்குவன் முடுகவிட்டான்;*
*முச்சிரப் பகழி கோடி தொடுத்து அவை தடுத்தான் முன்பன்”*
*(யுத்த – நாகபாச – 112)*

*“அஞ்சலி அஞ்சு கோடி தொடுத்து, இகல் அரக்கன் எய்தான்;*
*அஞ்சலி அஞ்சு கோடி தொடுத்து அவை அறுத்தான்; ஐயன்*
*குஞ்சரக் கன்னம் கோடி இலக்குவன் சிலையில் கோத்தான்;*
*குஞ்சரக் கன்னம் கோடி தொடுத்து அவை அரக்கன் கொய்தான்”*
*(யுத்த – நாகபாச – 113)*

இவ்வாறு ஒருவரையொருவர் எஞ்சியும், விஞ்சியும் ஒருவருக்கொருவர் சளைக்காது அடும் விற்போரில் இலக்குவனே மேவி நின்று இந்திரசித்தனின் தேரை அழித்துக் கவசத்தைப் பிளந்து வீரம் பொலிய நின்றான். அடுத்து, இலக்குவன் இந்திரசித்தனைக் கொன்றே விடுவான் என்று அனைவரும் எண்ணியிருக்க, போரின் உச்சத்தில் எவரும் எதிர்பாராதவண்ணம் இந்திரசித்தன் நாகபாசத்தால் இலக்குவனைப் பிணித்து விடுகிறான். இலக்குவன் உலைந்து, குலைந்து நிலத்தில் வீழ்ந்தான்.

செய்தியறிந்து ஓடோடி வரும் இராமன் இளையவனைக் கண்டு "இலக்குவன் போரில் பட்டனன்" என்றெண்ணிக் கலங்குகிறான். வீடணன் அருகில் செய்வதறியாது திகைத்து நிற்கிறான். இந்திரசித்து நாகபாசக் கணைக் கலை அறிந்தவன் என்பதைத் தன்னிடம் வீடணன் கூறாததோடு, இளவல் இந்திரசித்தனோடு கொண்ட கடும்போர் பற்றித் தனக்குத் தெரிவிக்காமல் இருந்ததும் தவறு என்ற எண்ணத்தில், "காரியத்தைக் கெடுத்துவிட்டாயே, வீடணா" என்று வீடணனிடம் சினம் பொங்கக் கூறுகிறான் இராமன்.

> *" 'எடுத்த போர், இலங்கை வேந்தன் மைந்தனோடு இளைய கோவுக்கு*
> *அடுத்தது என்று என்னை வல்லை அழைத்திலை, அரவின் பாசம்*
> *தொடுத்த கை தலையினோடும் துணித்து, உயிர் குடிக்க என்னைக்*
> *கெடுத்தனை வீடணா, நீ என்றனன்' ........... "*
>
> *(யுத்த - நாகபாச - 226)*

இராமனிடமிருந்து இத்தகைய கடும் சொற்களைச் சற்றும் எதிர்பாராத வீடணன் குற்றவுணர்ச்சியுடன் அழுது கொண்டே,

"இலக்குவன் போர் செய்த திறத்தால், அவனே வெல்வான் என்று நினைத்துவிட்டேன். மேகத்தில் மறைந்து நின்று இத்தகைய செயல் செய்யும் மாயத்தவன் இந்திரசித்தன் என்பதை நானும் மறந்து அயர்ந்துவிட்டேன்" என்று கண்கள் கலுழ்கின்றான் வீடணன்.

எனவே போரின் போக்கைச் சரியாகக் கணிக்கத் தெரியாதவனாகக் காட்சி தந்து இராமனின் கோபத்துக்கு ஆளாகின்றான்.

அவ்வாறே, இப்பொழுதும், சீதையை இராமனிடத்தில் அழைத்துச் செல்வதில் இராமனுடைய கருத்துக்கு மாறாகக் காரியம் ஆற்றுகின்றான். இவ்வாறு தகாதன செய்து இராமனுக்குச் சினம் விளைவிக்கும் இயல்பு வீடணனுக்கு உண்டு என்பதைக் காட்டுவதற்கென்றே காப்பியத்தின் மீட்சிப் படலத்தில் பின்வரும் நிகழ்ச்சியை வலிந்து

அமைக்கின்றான் கம்பன். நிகழ்ச்சி யுத்த காண்டத்தில் மீட்சிப் படலத்தில் நடக்கிறது. சீதை கோலம் புனைதல், சீதை இராமனைக் காண்டல் ஆகிய இரு நிகழ்ச்சிகளுக்கும் நடுவில் அந்த நிகழ்ச்சி கம்பனால் படைக்கப்படுகிறது. அதனைக் காண்போம்.

துயர்க்கடலில் நீந்தி வந்து, பெரும் போர் புரிந்து போர்க் குணத்தின் வெம்மை தணியாமல் நிற்கும் இராமனிடத்தில் சீதையை வீடணன் அழைத்து வருகிறான். ........ மதி மண்டலத்தின் நடுவில் தோன்றும் மான் அனைய எழில் துலங்கும் சீதையை வீடணன் இராமனிருக்குமிடத்துக்கு அழைத்து வருகிறான். சீதையைக் காணும் ஆவலால் அங்குக் கூடியிருந்த முனிவர்கள், விஞ்சை மகளிர் முதலானோர் நெருக்கியடித்துக் கொண்டு முயன்று முந்துகிறார்கள். அப்படி விழைந்து முந்துபவர்களைக் கடிந்து அப்புறப்படுத்தும் வேலையில் வீடணனின் ஆட்கள் ஈடுபட்டு, கூட்டத்துக்கு ஆணைகள் இடுவதால் அவ்விடத்தில் எதிர்பாராதவிதமாக, திடீரென்று கருங்கடல் முழக்கம் போன்ற பேரொலி எழுகிறது. இராமன் இத்தகைய பேரொலிக்குக் காரணம் என்னவென்று அங்குள்ள முனிவர்களிடம் வினவுகிறான். அவர்கள் நிருதர்தம் அடக்குமுறையைப் பற்றிக் கூறுகின்றனர். அவர்கள் கூறி முடிக்கும் முன்னரேயே – அவர்கள் சொற்கள் முழுதும் செவியில் புகும் முன்னரேயே – இது வீடணன் செயலாகத்தானிருக்க வேண்டும் என்பதை ஓர்ந்து, இராமன் அடங்காத சினத்துடன் வீடணனை நோக்கி, "அமர்க்கள வெற்றி விழாவைக் காணும் விழைவால் உவகையுடன் இங்குக் கூடும் சாது மாந்தர்களைத் தடுத்துக் கடுஞ்சொல் கூறி அவர்களை விலக்குங்கள் என்று கூறியது யார்?" (நான் கூறவில்லையே என்பது உட்பொருள்) என்று பொதுவாகக் கேட்டு, பின், குறிப்பாக வீடணனைப் பார்த்து, "வீடண! தகாதன செய்தியோ" என்று கடிகிறான்.

*" 'கடுந் திறல் அமர்க்களம் காணும் ஆசையால்,*
*நெடுந் திசைத் தேவரும் நின்ற யாவரும்*
*அடைந்தனர், உவகையின் அடைகின்றார்களை*
*கடிந்திட யார் சொனார்?' – கருது நூல் வலாய்!"*

*(யுத்த – மீட்சி – 52)*

வீடணன், தான் கூறாததையும் செய்து தனக்குக் கோபம் விளைவிப்பவன் என்பதை இங்கே இராமன் தெளிவு செய்கிறான்.

*" '............ நீ தகாத செய்தியோ,*
*புனித நூல் கற்று உணர் புந்தியோய்?' என்கிறான்"*

*(யுத்த – மீட்சி – 51)*

*" '.................. அரக்கர் கோவே! அடுப்பது அன்று உனக்கும், இன்னே*
*சாதுகை மாந்தர்தம்மைத் தடுப்பது' என்று அருளி செங் கண்*
*வேத்நாயகன் தான் நிற்ப, வெய்து உயிர்த்து, அலக்கண் எய்தி,*
*கோது இலா மனனும் மெய்யும் குலைந்தனன் குணங்கள் தூயோன்"*
*(யுத்த - மீட்சி - 54 )*

வீடணன் நல்லெண்ணத்துடன் ஆற்றும் செயல்கள் நன்னடத்தைக்கு மாறாக அமைந்து விடுதலைக் குறிக்கவே, இங்குக் கம்பன் "கோது இலா மனனும் மெய்யும் கொண்ட குணத்தில் தூயவனாகிய வீடணன்" என்று எழுதுகிறான். அதாவது, அடுத்து, சீதையை அதி அலங்காரத் தேவதையாக இராமன் முன்னால் மிகுந்த நல்லெண்ணத்துடன் கொணர்ந்து வீடணன் நிறுத்தப் போக, அது நன்னடத்தைக்கு மாறாக இராமனால் கணிக்கப்படப் போகிறது என்பதை அறியாமல் வினையாற்றி விடுகிறான் வீடணன் என்பதற்கு முன்னோட்டமாக இந்த நிகழ்ச்சி அமைகிறது. வீடணன் செய்யும் தவறுதான் சீதைக்குப் பழியாகி விடுகிறது என்பதைக் குறிப்பாக உணர்த்தவே, இங்கே வலிந்து இத்தகைய காட்சி ஒன்றைக் கம்பன் அமைக்கிறான் என்பது வெள்ளிடை மலை.

ஏனவே, இராமனுடைய மனப் போக்கை முற்ற முழுக்க அறிந்த சீதையும் வீடணனின் தவறான வழி நடத்துதலால் இராமனின் விருப்பம் என்று நம்பி வருத்தம் போக்கிய நிலையுடையவளாகவும், இராமனுடைய வெற்றியின் நிமித்தம் களித்த மனம் உடையவள் போல் தோற்றம் தர வேண்டியவளாகவும், அழகிய அலங்காரத்துடன் இராமனைச் சந்திக்க வருகிறாள்.

மேலும், சீதையும், தன்னுடைய கற்பு நிலை பற்றிய கம்பீர உணர்வு மிக்கவளாகவும், அசோக வனத்தில் ஆரம்ப காலத்தில் தனக்கிருந்த குற்றவுணர்ச்சி எதுவும் இல்லாத மனப்பான்மையுடனும் அங்கு வருகிறாள் என்பதைக் குறிப்பாக உணர்த்துவதற்கென்றே இராமனைச் சீதை சந்திக்க இருப்பதற்குச் சில கணங்களுக்கு முன்பு சில சொற்களைச் சீதை பேசுவதாக வலிந்து ஒரு காட்சியும் அமைக்கிறான் கம்பன். அதனையும் காண்போம்.

இராமனைக் காண நடந்து வரும் சீதை, முதலில், தன்

*"கருந் தடங் கண்ணும் நெஞ்சும் களித்திட"*
*(யுத்த - மீட்சி - 55)*

வருவதாகக் கூறுகிறான். கம்பன்,

அடுத்து, அவ்விடத்தில் நிற்கும் அனுமனைச் சீதை காண்கிறாள். முன்பே கூறப்பட்டதுபோல், அவ்வெற்றி விழாக் களத்தில் முனிவர் கூட்டமும், மாதர் ஈட்டமும், நிருதர் குழுக்களும் செறிந்து நின்று சீதையைக் காண ஆவலுடன் நிற்கின்றனர். அவர்களுடன்தான் அனுமனும் நிற்கிறான். அவ்விடத்தில் அனுமனுடன் சீதை உரையாட வேண்டிய அவசியமே இல்லை. ஆயினும் தன் கற்புநிலையின் சிறப்புப் பற்றித் தானே பெருமையுடன் அவனிடம் சீதை பேசுவதாகக் காட்சி அமைத்துள்ளான் கம்பன். இவ்விடத்தில் சானகியின் நிறை கற்பு ஏற்கனவே உலகத்தோரால் ஏற்றுக்கொள்ளப்பட்டு விட்டது என்ற கருத்தைத் தெரிவிக்க வேண்டி, கம்பன் "அருந்ததி அனைய நங்கை அமர்க்களம் அணுகி" என்கிறான். அருந்ததி அனைய கற்புக்கரசியாகிய சீதையைக் காணும் ஆவலுடன் நிற்கும் மக்கள் நிறைந்த அமர்க்களத்தைச் சீதை குறுகுகிறாள் என்கிறான். அனுமனை நோக்கி, "கருந்தடங் கண்ணும் நெஞ்சும் களித்திட இனைய சொன்னாள்" என்றும் எழுதுகிறான்.

மாருதியிடம் சீதை என்ன சொன்னாள்? அது பின்வருமாறு:

*" 'சீலமும் காட்டி, என் கணவன் சேவகக்*
*கோலமும் காட்டி, என் குலமும் காட்டி, இஞ்*
*ஞாலமும் காட்டிய கவிக்கு நாள் அறாக்*
*காலமும் காட்டும்கொல், என் கற்பு?' என்றாள்"*

*(யுத்த - மீட்சி - 56)*

பொருள்: என்னுடைய ஒழுக்கச் சீலத்தை உலகுக்குக் காட்டி, என் கணவன் போர் புரிந்து என்னை மீட்பதற்குரிய அவனுடைய வினைக் கோலமும் காட்டி, என் கணவனை நான் இன்று சேரும்படிக்கு என் குலமும் காட்டி, உலகத்தாரை நான் இன்று காணும்படிக்கு இஞ்ஞாலமும் காட்டிய குரங்கின அன்பனே! (நான் முன்பே கூறியது போல) ஊழி நாள் வரை இவ்வுலகில் நீ அழியாது இருக்கும் கோலத்தை என் கற்பின் திறன் உனக்குக் கொடுத்து விடாதா என்ன! (கொடுக்கும்).

சீதையின் சொற்கள் தன் கற்பு நிலை பற்றி அவள் கொண்டிருந்த பெருமித உணர்வைக் காட்டுகின்றன. (ஒருக்கால், அனுமனோடு அயலில் நின்றிருக்கும் மக்களுடைய செவியிலும், தன்னுடைய கருத்து விழுந்து, அது கூட்டத்தினருக்குப் பரவட்டும் என்று உள்ளுணர்ச்சி உந்துதலாலும் கூட சீதை இக்கருத்தை அனுமனிடம் வெளியிட்டிருக்கலாம். தான் 'கற்புக் கனலி' என்பதை உலகத்தோருக்குத் தன் நாவால் கூறவேண்டுமென்று எவ்வளவு நாட்கள் சீதை கனவு கண்டிருந்தாளோ!)

இதனையடுத்து, மேலும் ஒரு பாடல் எழுதுகிறான் கம்பன்.

*“எச்சில், என் உடல்; உயிர் ஏகிற்றே ; இனி*
*நச்சு இலை! என்பது ஓர் நவை இலாள்”*
*(யுத்த - மீட்சி - 57)*

பொருள்: சீதை சிறையிடப்பட்ட காலத்தில்

1. என் உடல் தூய்மை இழந்தது (அயலவன் அகத்தில் உள்ளதால்) என்றும்,
2. என் பொய்யுடல் தான் உள்ளது; உயிர் என்றோ போய் விட்டது என்றும்
3. வாழ்க்கையில் எனக்கு இனி பற்றும் இல்லை என்றும்

புலம்பிக் கொண்டிருந்த சொற்களுக்கெல்லாம் பொருள் எதுவும் இனி இல்லை என்பதற்கு எடுத்துக்காட்டாக, சீதை இங்கு அவளுடைய குற்றமற்ற மன உணர்வு விளங்கும் விதத்தில் தன் நிறை கற்பு பற்றிய நிலையில் பெருமிதம் கொண்டவளாகத் தோன்றினாள் என்கிறான் கம்பன்.

அப்படித் தோன்றியவள் முன்

*“பச்சிலை வண்ணமும் பவள வாயும் ஆய்க்*
*கைச் சிலை ஏந்தி நின்றான் (இராமன்)”*
*(யுத்த - மீட்சி - 57)*

இவ்விடத்தில் மீண்டும் இராமனின் மனநிலை பற்றி எழுதப்பட்ட கருத்துக்களை நினைவு கூர்தல் வேண்டும்.

போர் முடிந்தவுடனேயே, களத்தின் ஒரு பக்க இடத்தை வெற்றி விழாக் களமாக்கி வேகமாகக் காரியங்கள் ஆற்றுகிறான் இராமன். அரச தோரணையில் அனைவருக்கும் ஆணைகள் பிறப்பித்துக் கொண்டிருக்கிறான். சீதை சர்வ அலங்கார தோற்றத்துடன் அவ்விடத்திற்கு அச்சமயம் வந்து கொண்டிருக்கிறாள். அப்பொழுதுதான் ‘நான் இடாத ஆணைகள் எல்லாம் இட்டு நிறைவேற்றுவது யார்?’ என்று வீடணனிடம் சினம் பொங்கக் கேட்டுக் கெண்டிருக்கிறான்................ சீதையை அழைத்து வரச் சொல்லியிருக்கும் இராமனே, அவளைப் பற்றிய சில முடிவுகளையும்

எடுக்கக் கடமைப்பட்டவன் என்பது கூறாமலேயே விளங்க வேண்டியது. ஆனால் சீதை இங்கு தன்னுடைய கதியைப் பற்றி இனி உலகம் (இதில் இராமனும் அடக்கம்) தீர்மானிக்க வேண்டிய அவசியமில்லை என்பது போன்ற மனநிலையுடன் வருகிறாள். தன்னை எத்தகைய விசாரணைக்கும் உட்படுத்தாமல் 'கற்பின் கனலி' என்று இராமன் தன்னை உடனடியாக ஏற்றுக்கொள்ளக் கடமைப்பட்டவன் என்ற மனநிலையுடனும் வருகிறான். கூர்த்த மதியுடைய இராகவன் பெருமித உணர்வு தோன்ற புனைந்த கோலத்துடன் வரும் அவளுடைய தோற்றத்தைக் கொண்டே அவளுடைய மனநிலையை உணர்ந்து கொண்டு விட்டான்........

⌘ ⌘ ⌘

# பழி போக்கிய இராமன்

சீதையின் தவக்கோலத் தோற்றத்தைத் தான் இராமன் எதிர்பார்த்திருந்தான். சீதப் புனலாடி, குழல் திருத்திச் சிறப்பாக வரவேண்டும் சீதை என்பதைத்தான் 'சீர்மையோடு' என்ற சொல்லால் குறிப்பிட்டான். ஆனால் சீதை காண்போர் கண்களைக் கவ்வி ஈர்க்கும் வண்ணம், தனக்குள்ள மனநிலைக்கு ஒவ்வாத விதத்தில் களிக்கின்ற கண்ணும் நெஞ்சும் உடையவளாய் உலகத்தின் முன் தோன்றுவாள் என்பதை இராமன் சற்றும் எதிர்பார்க்கவில்லை. பார்வையிலேயே ஒருவரைக் கணிப்பதற்கு உதவுவது அவரது தோற்றமே. கன்னி மாடத்தில் சீதை நின்ற காலை, இராமனுடைய குன்றனைய தோள்களின் வீரத் தோற்றப் பொலிவால் கவர்ந்திழுக்கப்பட்டாள் சீதை. இராமன் சீதையின் அழகிய தோற்றத்தில் மனம் பறி கொடுத்து பார்வையை மீட்க இயலாமல் தவித்தான். காப்பியப் பாடல்:

*"நோக்கிய நோக்கு எனும் நுதிகொள் வேல் இணை*
*ஆக்கிய மதுகையான் தோளின் ஆழ்ந்தன;*
*வீக்கிய கணை கழல் வீரன் செங்கணும்*
*தாக்கு அணங்கு அனையவள் தனத்தில் தைத்தவே"*

*(பால - மிதிலைக்காட்சி - 36)*

சீதையின் இத்தகைய எழிலார்ந்த தோற்றத்தைக் கண்ட பிறகு "சீதை அருள் உள்ளத்தவள்" என்றெண்ணுகிறான் இராமன். இவ்வாறே குகனுடைய தோற்றத்தைக் கொண்டே 'தீராக் காதலன் இவன்!' என்று கணிக்கும் இராமன், 'யாதினும் இனிய நண்ப!' என்று தன் நட்பை உறுதி செய்கிறான். இவ்வாறே இராம இலக்குவர்களைக் கண்களால் காணும் அனுமன் அவர்கள் தோற்றப் பொலிவைக் கண்டே "துன்பத்தைத் துடைத்து மாயத் தொல் வினை நீக்கி மீளா நெறி உய்க்கும் தேவரோ இவர்கள்?" என்று என்புருகிக் காதல் கொள்கிறான். சுக்ரீவனும் இராமனைக் கண்ட அளவில் களி காதல் கொள்கிறான். இந்திரசித்துவைக் காணும் அனுமன், 'இலக்குவனோடு பொருத ஏற்ற வீரன்' என்று மிகச் சரியாகக் கணிக்கிறான். மண்டோதரியின் தோற்றம் அவள் கற்பின்

பொற்பைக் காட்டும் வண்ணம் உள்ளதால் ஒரு கணம் அவள்தான் சீதையோ என்றும் கூட அனுமன் மயங்குகிறான். எனவே தோற்றப் பொலிவும் தோன்றும் நிலையும் பிறர் கணிப்பில் சரியான அல்லது தவறான அனுமானத்தை ஏற்படுத்தவல்லது என்பது பொதுவான உண்மை.

இங்கு இராமனும், உலகம் சீதையைக் கண்களால் கண்டவுடனேயே 'இவள் நிறையுடையவள்' என்று கணித்துவிட வேண்டும் என்பதற்கேற்ப சீதை தோன்ற வேண்டும் என்று நினைத்திருந்தால் அதில் தவறு ஏதேனும் உண்டோ?

இவ்விடத்தில் சீதையை அனுமன் அசோகவனத்தில் கண்டவுடன் என்னென்ன நினைந்தான் என்பதை நினைவு கூர்தல் நலம்.

தவக் கோலத்தில் அன்னையைப் பார்க்கிறான். கண்டவுடனேயே அவள் "மாசில்லாத கற்பினள்" என்று கணித்து விடுகிறான்.

*"மாசுண்ட மணி அனாள், வயங்கு வெங்கதிர்த்*
*தேசுண்ட திங்களும் என்னத் தேய்ந்துளாள்;*
*காசுண்ட கூந்தலாள் கற்பும், காதலும்*
*ஏசுண்டது இல்லையால்; அறத்துக்கு ஈறு உண்டோ?"*

*(சுந்தர – காட்சி – 68)*

................ இராமனைப் பிரிந்து நோன்பு நோற்ற சீதை, புனல் படியாத காரணத்தால், ஒளி பொருந்திய மாணிக்க மணி ஒன்று, தூசு படிந்து ஒளியிழந்து கிடப்பதுபோல் தோன்றினாள். ஊனும், உறக்கமும் துறந்த காரணத்தால் உடல் மெலிந்து, தேய்பிறைத் திங்களை ஒத்திருந்தாள். நெய்யூட்டி வகிர்ந்து சீர்மை செய்யாத காரணத்தால் குற்றம் படிந்த குழலுடன் தோன்றினாள்..... இத்தகைய புற அடையாளங்களைக் கொண்டே 'இவளுடைய கற்பு குறைவற்றது' என்று கணித்து அதனால் 'அறத்திற்கு வரம்பு என்பது உண்டோ?' என்றும் கருதினான் அனுமன்.

அனுமன் சீதையைக் கண்ட கணத்திலேயே எவ்வாறு அவள் கற்பு ஏசுண்டது இல்லை என்று எண்ணினானோ, அவ்வாறே உலகோரும் எண்ணுமாறு, சீதை, இப்பொழுதும் அதே தவக்கோலத்தில் அல்லவா தோன்றியிருக்க வேண்டும்!

தவக்கோல ஒளி வீசும் காரிகையாகச் சீதையைக் கண்டதால், அனுமனுடைய உள்ளத்தில் சீதையின்பால் உடனேயே நன்மதிப்பும் தோன்றுகிறது. பெண் குலத்துக்கே

பெருமை சேர்க்கும் இந்த வனிதையின் மாண்பை எப்படிப் போற்றுவது என்று அறியாமல் மயங்குகிறான் அனுமன்.

காப்பிய வரிகள்:

*"புனை கழல் இராகவன் பொன் புயத்தையோ?*
*வனிதையர் திலகத்தின் மனத்தின் மாண்பையோ?*
*வனை கழல் அரசரின் வண்மை மிக்கிடும்*
*சனகர்தம் குலத்தையோ? யாதைச் சாற்றுகேன்?"*

*(சுந்தர – காட்சி – 69)*

(சீதையை மனைவியாகப் பெற்ற இராகவனைப் போற்றுவதா? அன்றி, சீதையை மகளாகப் பெற்ற சனகனையும் அவன் குலத்தையும் போற்றுவதா? அன்றி, மாதர் குலவிளக்காகத் தோன்றும் சீதையையே போற்றுவதா? எவருடைய மாட்சியை வாழ்த்துவது என்று அறியாமல் எப்படி அனுமன் மயங்குகிறானோ அப்படி உலகோர் மயங்கும் வண்ணம் தவக்கோலத்தில் அல்லவா இப்பொழுது சீதை தோன்றியிருக்க வேண்டும்!).

*"பேண நோற்றது மனைப் பிறவி, பெண்மைபோல்*
*நாணம் நோற்று உயர்ந்தது நங்கை தோன்றலால்;"*

*(சுந்தர – காட்சி – 73)*

என்று சீதையைக் கண்டவுடன் அனுமன் எண்ணினானே, அவ்வாறு உலகம் எண்ணும்படியாக அல்லவா இப்பொழுது சீதை உலகோர் முன் தோன்றியிருக்க வேண்டும்!

*"............ குலத்தில் வந்து , இல்லின் மாண்புடை*
*நங்கையர் மனத் தவம் நவிலற் பாலதோ?"*

*(சுந்தர – காட்சி – 72)*

என்று அனுமன் அன்று சீதையின் தவத் திருக்கோலத்தைக் கண்டு செய்த கணிப்பை, இன்று உலகம் செய்யும் வண்ணம் அல்லவா சீதை உலகோர் முன் இப்பொழுது தோன்றியிருக்க வேண்டும்!

......... இப்படியெல்லாம் பிறர் எண்ணுமாறு சீர்மையோடு தன் தேவி தோன்ற வேண்டும் என்று எண்ணுவதே இராமன் போன்ற மேன்மையான ஆண் மகனுக்குத்

தகும். கருத்தொருமித்த காதல் உணர்வும், கற்பு நிறைவும் கொண்ட தன் ஆருயிர் துணைவி அப்படித்தான் தோன்றுவாள் என்று எதிர்பார்த்து நம்பிக்கையுடன் நிற்கிறான் இராமன். ஆனால் இராமனுடைய எதிர்பார்ப்புக்களெல்லாம் பொய்யாக, அளவிறந்த அணிகலன்களுடனும், எழிலார்ந்த தோற்றத்துடனும் இமையவர் நகரம் சேர்ந்த இந்திராணி போல் அவன் முன் வந்து நின்றாள் சீதை!

இடுக்கண் வந்துற்ற காலை முகத்தில் எவ்விதச் சலனமுமின்றி இருக்கும் பண்பைக் கலையாக வளர்த்து வைத்திருக்கும் இராமன் – எவளைக் காண வேண்டுமென்று காதலால் உருகித் தவித்துத் தவமிருந்தானோ அவளை இப்பொழுது கண்ணுறும் அன்புக் கணவன் இராமன் – தன் மனைவியைத் தான் சற்றும் எதிர்பாராத – கனவிலும் கண்டிராத – கற்பனையும் செய்திராத – தோற்றத்தில் காண்கிறான்; களிப்புடன் தோன்றும் அவளது மனநிலையையும் காண்கிறான்; ஆழ்ந்த நோக்குடன் அமைதியாக அவளைப் பார்க்கிறான்................

............................ நடக்கும் நிகழ்ச்சியை உலகம் எல்லாம் உற்று நோக்குகின்ற கணம் இது. சீதையின் புனைந்த கோலம், இராமனுடைய கணிப்பிலே அவளுடைய குற்றமற்ற நிறை கற்பை கண்டவுடனேயே உலகம் உணருமாறு செய்கின்ற கோலமாக இல்லை. உலகம் கிடக்கட்டும்! அச்சமயத்தில் அவனளவில் சீதையைப் பற்றிய இராமனுடைய கணிப்பு என்னவாக இருந்தது? அதைக் கூறுவதற்காகவே கம்பன் ஒரு கவிதையை அங்கு எழுதுகின்றான். இராமன் தன் முன் வந்து நின்றவளை ஆழ்ந்து நோக்குகிறான் அல்லவா? தன் மனத்துள் அவளை எவ்வாறு கணிக்கிறான்? அது பின்வருமாறு:

*"கற்பினுக்கு அரசினை, பெண்மைக் காப்பினை,*
*பொற்பினுக்கு அழகினை, புகழின் வாழ்க்கையை*
*தற் பிரிந்து அருள் புரி தருமப் போலியை,*
*அற்பின் அத் தலைவனும் அமைய நோக்கினான்"*

*(யுத்த – மீட்சி – 60)*

பொருள்: (கற்பு எனும் பண்பு சீதையைத் தனக்கு அணியாகப் பூட்டி அழகுறுத்திக் கொள்ளுமாம்) எனவே கற்பினுக்கு அணி சீதை.

(பெண்மை எனும் பண்பு தன் உயர்வினைப் பாதுகாத்துக் கொள்ள சீதையை அள்ளி எடுத்துத் தன் மேல் போர்த்திக் கொள்ளுமாம்) எனவே பெண்மைக்குக் காப்பு சீதை.

(பொற்பு எனும் நிறை நலம் தன் பண்பைப் பிறர் அறிய விழைந்தால் 'சீதையைப் பார்த்துக் கொள்ளுங்கள்' என்று கூறுமாம்) எனவே பொற்பினுக்கு அழகு சீதை.

(மானுட வாழ்க்கை இடர்களைத் தாங்கியும் வென்றும் புகழுடைய வேண்டுமானால் அது சீதையின் வாழ்க்கை போல் அமைய வேண்டுமாம்) எனவே புகழின் வாழ்க்கை சீதை.

(தன்னலம் நோக்காது பிறர் நலம் காணத் தன்னைத் தியாகம் செய்யக் கூடிய தருமம் போன்றவள் சீதை) எனவே தருமப் போலி சீதை.

(மேற்கூறப்பட்ட மாட்சிமைகள் உடையவளே என் கண் முன் தோன்றுகின்ற சீதை என்று இராமன் எண்ணுகிறான்). அத்தகைய பெருமையுடையவளை அன்புடைய தலைவனும் (அற்பின் அத் தலைவனும் என்பது பாடல் வரி) அமைய நோக்கினான்.

இங்கு கம்பன் பயன்படுத்துகின்ற 'அமைய' என்ற சொல் கவனத்துக்குரியது. மனத்தில் ஓடுகின்ற சிந்தனைகளை வெளிக்காட்டாமல், பதற்றமின்றி சூழ்நிலையை ஆய்வு செய்து, பிறருடைய உள்ளக் குறிப்பைக் கணிக்கவும் உண்மையை உணரவும் முயற்சிக்கும் ஒருவனுடைய அமைதியான நிலையைக் குறிப்பதற்குக் கம்பன் இந்தச் சொல்லைப் பயன்படுத்துகின்றான். உதாரணமாக, இராமனின் இத்தகைய அமைய நோக்கும் பண்பைச் சுந்தர காண்டத்தில் தெரிவிக்கிறான் கம்பன். அதை அறிய இச்சமயம் யுத்த காண்டத்திலிருந்து பின்னோக்கிப் பயணம் செய்து சுந்தர காண்டத்திற்குச் செல்வோம்....

.... அனுமன் இலங்கையில் சீதையைக் கண்டு திரும்புகிறான். இராமன் இருக்கும் இடத்தைக் குறுகுகிறான்...... வாய்ச் சொற்கள் ஏதுமில்லை...... சீதை இருக்கும் திசை நோக்கித் தொழுகிறான்... இராமனை நோக்கி நடக்கிறான். இராமன் அனுமன் தன்னை நோக்கி வர வர அவனை ஆழ்ந்து நோக்குகிறான். அனுமன் வெற்றிச் செய்தியுடன் வருகிறான் என்பதைக் கண்டு கொள்கிறான். அதாவது அனுமன் மனத்தில் ஓடும் எண்ணங்களை இவன் தன் மனத்தால் அறிகிறான். அப்பொழுது இராமனை வருணிக்கும் கம்பன்,

*"அன்புறு சிந்தையன் அமைய நோக்கினான்"*

*(சுந்தர - திருவடித் தொழுத - 21)*

என்று கூறுகிறான்.

காப்பியப்பாடல்,

*"என்புழி, அனுமனும், இரவி என்பவன்*
*தென் புறத்து உளன் எனத் தெரிவது ஆயினான்;*
*பொன் பொழி தடக் கை அப் பொரு இல் வீரனும்;*
*அன்புறு சிந்தையன், அமைய நோக்கினான்"*

*(சுந்தர – திருவடித் தொழுத – 21)*

அமைய நோக்கி ஐந்து உண்மைகளை உணர்ந்து கொள்கிறான்.

ஒன்று – சீதை உயிருடன் இருக்கிறாள்

இரண்டு – சீதையை அனுமன் கண்டான்

மூன்று – சீதையின் கற்புக்குக் குற்றமில்லை

நான்கு – அனுமனுக்குச் சீதை 'இறைவி' ஆகிவிட்டதோடு, அவனுக்கு இறைவனாகிய இராமனைவிடவும் கூட சீதையே இப்பொழுது அவனுடைய அதிக பக்திக்குஉரியவளாகிவிட்டாள்

ஐந்து – மேற்கண்ட செய்திகளைத் தான் குறிப்பால் உணர வேண்டும் என்பது அனுமனின் விருப்பம்

மேற்காணும் கருத்துக்களைத் தெரிவிக்கும் கம்பனின் பாடல் பின்வருமாறு:

*" 'திண் திறல் அவன் செயல் தெரிய நோக்கினான்;*
*வண்டுறை ஓதியும் வலியள்; மற்று இவன்*
*கண்டதும் உண்டு; அவள் கற்பும் நன்று' எனக்*
*கொண்டனன் குறிப்பினால் உணரும் கொள்கையான்"*

அப்பொழுது அனுமனை அமைய நோக்கி உண்மைகளை உணர்ந்ததுபோல் இப்பொழுது சீதையை அமைய நோக்கி உண்மைகளை மதிப்பீடு செய்கிறான்.

இலங்கை யுத்தம் முடிந்த பிறகு தன் எதிரே வந்து நிற்கும் சீதையை இராமன் நோக்கும் இப்பொழுதில் அவனுடைய உள்ளத்தில் பல எண்ணங்கள் புரள, சீதையின் செய்கை, அது பிறரிடம் ஏற்படுத்தும் தாக்கம், அவள் தோன்றும் கோலம், சூழல் என்று எல்லாவற்றையும் பற்றிக் கணித்துச் செயல்பட வேண்டிய கட்டாயத்துக்கு விதியின் சதியால் உள்ளாக்கப்படுகிறான். எனவே இராமன் நிதானமாக ஆராய்ந்து செயல்பட

வேண்டிய தருணம் இது. எதிர்பாராதவிதமாக இடர் விளைவித்துத் தன்னைத் துன்புறுத்தும் விதி இன்னமும் தன்னை நிழல்போல் தொடர்ந்து கொண்டேதான் இருக்கிறது என்பதை இராமன் சரியாக உணரும் தருணம் இது. இராமனுடைய பொறுப்பும், கடமையும் அதிகரித்துவிட்ட தருணம் இது. காரணம், இராமன் சீதையைக் காணும் முன்னரே அவளை மற்றவர்கள் கண்டுவிட்டனர். அதுவரை நிசப்தமாக இருந்த இடத்தில் திடீரென்று கடலொலி போல் ஒலி எழும்பியதற்குக் காரணம், (இந்நிகழ்ச்சி முன்பே நூலில் விவரிக்கப்பட்டுள்ளது ... பக்கம் 278) அவளைக் கண்டு தங்கள் கருத்துக்களை மக்கள் பரிமாறிக் கொண்டதும், அதனால் அவளைக் காண இயலாதவர்கள், முண்டியடித்துக் கொண்டு முந்தி வர விழைந்ததும்தான். இராமன் தலையிட்டு ஆரவாரத்தை அடக்குகிறான். அமைதி சூழ்கிறது. எனவே உலகம் அவளைப் பற்றிய ஏதோ ஒரு கருத்தை உண்டாக்கிக் கொண்டுவிட்டது. அதன் பிறகுதான் இராமன் சீதையைப் பார்க்கிறான். கணிக்கிறான். இக்கருத்தைத் தெரிவிக்கத்தான் 'அன்புடைத் தலைவனும்' என்று 'உம் விகுதி' சேர்த்து இங்கு எழுதுகிறான் கம்பன். அதாவது அனைவரும் முன்பே பார்த்துவிட்டனர். அப்புறம் இராமனும் பார்த்தான். கற்பில் பழுதுற்றவள் இல்லை என்று அவன் உணர்ந்ததனால் அன்புடைத் தலைவன் என்று இராமனை இங்குக் கம்பன் குறிக்கிறான் என்பதை நோக்குக. தலைவன் என்ற சொல்லும் ஆய்வுக்குரியது. அக வாழ்க்கையில் இராமன் தலைவன்! சீதை தலைவி! எனவே கணவன் என்ற நிலையில் இராமனுக்குச் சீதை பால் ஐயமில்லை; மாறாக விதியின் விளையாட்டில் சிக்கித் துயருற்ற தன் மனைவியின் பால் அன்பு மிகுந்தவனானான். எனவே தனக்கு விருப்பமில்லாத – **அவ்விடத்துக்குத் தகுதியற்ற கோலத்தில் – சீதை தோன்றினாலும் இராமன் அவளுடைய கற்பின் மேல் வைத்திருந்த நம்பிக்கையிலோ அல்லது அவள் பால் வைத்திருந்த அன்பிலோ குறைவில்லை என்பது தெளிவு.** அன்புடைத் தலைவன் என்ற தொடர் இந்தக் கருத்தையே குறிக்கிறது. எனவே **இராமன் சீதையின் கற்பை இப்பொழுது கூட ஐயுறவே இல்லை என்பது உள்ளங்கை நெல்லிக்கனி போன்ற உண்மையாகும்.** அவ்வாறெனின் ஆழ்ந்து அமைதியாக சீதையை நோக்கும் இராமனின் மனத்தில் எத்தகைய எண்ணங்கள் ஓடியிருக்கக்கூடும் என்பதை இடம், பொருள், ஏவல் கருதி கற்போர் உய்த்துணர வேண்டும்.

இவ்விடத்தில் வாசகர்கள் மனத்தில் இருத்த வேண்டிய மிக முக்கியமான கருத்து ஒன்றுண்டு. அடுத்து நிகழ்கின்ற நிகழ்ச்சிகள், வெளியிடப்படுகின்ற சொற்கள் இவற்றையெல்லாம் இனி, இந்த ஒரு கருத்து உருவாக்கும் பின்னணியில்தான் ஆய்ந்து பார்க்க வேண்டும். அதுதான்; இராமன் சீதையின் கணவன் மட்டுமல்லன்; அயோத்தியின் மன்னன் என்பதும் தான். வனத்தில் வாழ்ந்தாலும் இராமனே

அயோத்தியின் மன்னன். பரதன் இராமனுடைய திருவடிப் பாதுகைகளை அயோத்தி அரியணையில் அமர்த்தி இராமனுடைய பிரதிநிதியாக அரசைக் காத்து வந்தான் என்பது முன்னரே நிறுவப்பட்டது (காசில் கொற்றத்து இராமன் – வாலி வதம் – காண்க) எனவேதான் அந்த நாள் முதல் முனிவர்களைத் தன் வில் திறத்தால் காக்கும் கோமகனாகவும், காவலனாகவும் இராமன் செயல்படுகிறான். அரசதர்மப்படி நல்லவர்க்குத் தாயினும் மேலோன் என்றும், தீயவர்க்குத் தீயினும் கொடியவன் என்றும் மன்னன் செயல்பட வேண்டும். இது இராமன் அறிந்து வைத்திருந்த அரச தர்மம். ஒரு அரசன் எப்படியிருக்க வேண்டும். மனுதர்மம் கூறுகிறது

*" 'நாயகன் அல்லன்; நம்மை நனி பயந்து எடுத்து நல்கும்*
*தாய்' என, இனிது பேணி, தாங்குதி தாங்குவாரை,*
*ஆயது தன்மையேனும், அற வரம்பு இகவாவண்ணம்*
*தீயன வந்தபோது, சுடுதி யால் தீமையோரை"*

*(கிட்கிந்தா – அரசியல் – 14)*

எனவே, *"அறத்தினது இறுதி, வாழ்நாட்கு இறுதி"*

*(கிட்கிந்தா – அரசியல் – 15)*

என்பதை அறிந்தவன் இராமன்.

ஆக்கம் அறத்தினால் வரும், கேடு அறமற்றதாகிய பாவத்தினால் வரும், அறமும் பாவமும் ஒன்றோடொன்று மோதும்பொழுது அறத்தைத்தான் பற்றி நிற்க வேண்டுமேயன்றி அரசன் தன்னலம் கருதி அறமற்ற காரியத்தைச் செய்து விடலாகாது காரணம் அது பின்வரும் தலைமுறை தலைமுறைக்கும் தவறான முன்னுதாரணங்களாகி மரபாக நிலைத்து விடும் என்பதையும் அறிந்தவன் இராமன்.

*"ஆக்கமும் கேடும், தாம் செய் அறத்தொடு பாவம் ஆய*
*போக்கி, வேறு உண்மை தேறார், பொரு அரும் புலமை நூலோர் ;*
*தாக்கின ஒன்றோடு ஒன்று தருக்குறும் செருவில், தக்கோய்!*
*பாக்கியம் அன்றி, என்றும், பாவத்தைப் பற்றலாமோ?"*

*(கிட்கிந்தா – அரசியல் – 16)*

எனவே,

*" 'இன்னது தகைமை' என்ப, இயல்புளி மரபின் எண்ணி,*
*மன் அரசு இயற்றி............................"*

*(கிட்கிந்தா – அரசியல் – 17)*

ஆள்வதே மன்னவன் கடமை என்பதில் ஆழமான நம்பிக்கை கொண்டவன்.

'யதோ ராஜன்; யதோ ஜன்' – அதாவது, 'மன்னன் எவ்வழி; மக்கள் அவ்வழி' என்பதால் 'அறநெறி முதற்றே அரசின் கொற்றம்' என்று அறத்தை முன்னிருத்தி வாழ்ந்து உலக மக்களுக்குத் தன் வாழ்க்கையை முன்னுதாரணமாக ஆக்க வேண்டிய கடமை புவியாளும் மன்னர்களுக்கு உண்டு. எனவே ஆட்சியாளர்களுக்குத் தனிப்பட்ட வாழ்க்கை என்பதே இல்லை. குடிமக்களுக்கு நன்மை தருவது தான் ஒரு அரசனுடைய அறம் தழுவிய நடத்தை என்பதால், தன்னுடைய தனிப்பட்ட வாழ்க்கையின், விருப்பு வெறுப்புகளுக்கு மாறாக இருந்தாலும், ஒரு செயலை அரசன் செய்யத்தான் வேண்டுமென்றால் அதைக் குறைவறச் செய்யக் கடமைப்பட்டவனே அரசன். இத்தகைய அரச நீதிகளைத் தன் உயிராகப் போற்றுபவன் இராமன். இத்தகைய அறச்சார்புக்காகவே 'அந்தமில் குணத்து இராமன்' என்றும், 'தருமத்தின் தனி மூர்த்தி' என்றும் போற்றப்படுபவன் இராமன். இராமனிடம் சொல் ஒன்று; செயல் வேறு என்ற பேச்சுக்கே இடமில்லை. அப்படி ஒருக்கால் நடக்க நேர்ந்தால், அதுவும் அரசனுடைய அறத்தை நிலைநாட்ட வேண்டியதற்காகவே இருக்குமேயல்லால், தன்னுடைய இன்பத்துக்காகவும் சுயநலத்துக்காகவும் இருக்காது.

கலைமகள் வாழும் மனிதனுடைய நா கூறுகின்ற சொற்கள் எல்லாம் மந்திரம்தான் இராமனுக்கு. தந்தை கைகேயிக்குக் கொடுத்த வாக்கைத் தசரதனே மீற விரும்பினாலும் இவன் தந்தையை அவ்வாறு செய்வதற்கு அனுமதிக்கமாட்டான்.

(தன்னை வனவாழ்க்கைக்கு அனுப்பும் கைகேயியிடம் தான் முரண்டு பிடித்து 'நான் நாட்டில்தான் இருப்பேன்; நீவிர் என்ன செய்ய முடியும்?' என்று போர்க்குணம் காட்டி இராமன் அயோத்தியில் இருந்துவிட்டால், அந்த நடத்தைகூடத் தனக்குச் சம்மதமே என்கிறான் தசரதன்.

*" "........................ இக கைகேசியையும் கண்டு, இந்*
*நாட்டே உறைவேன் என்றால், நன்று என் நன்மை!" என்றான்"*
*(அயோத்தியா – நகர் நீங்கு – 63)*

இதற்கு மாறாக இராமனோ,

*"எந்தையே ஏவ, நீரே உரைசெய இயைவது உண்டேல்,*
*உய்ந்தனென் அடியேன் ; என்னின் பிறந்தவர் உளரோ? வாழி!"*
*(அயோத்தியா – கைகேயி சூழ்வினை – 110)*

என்று கூறுகிறான்.

பொருள்: தந்தை ஆணையிட, தாய் அதை எடுத்துக் கூற, மைந்தனாகிய நான் அதைச் செய்யக் கூடிய நிலையில் இருந்து செய்தும் முடித்து விட்டால், அது என்னுடைய பிறந்த பயன் அன்றோ?

இராமன் நினைத்திருந்தால், கைகேயியின் சொற்களைப் புறந்தள்ளி, ஆட்சியைக் கைப்பற்றி இருக்கலாம். கைகேயியைத் தவிர, வேறு உள அனைவரும் இராமனையே தங்கள் மன்னனாகக் கண்டனர். 'இராமனுக்கு முடிசூட்டு விழா' என்றவுடன், அவரவர் தலையில் முடிசூட்டப்பட்டதாக உணர்ந்தனர். இராமனுக்குச் சூழ்நிலை மிகவும் சாதகமாகவே இருந்தது. ஆனால் இராமன் அதை அறமற்ற செயல் என்று எண்ணினான். அந்தக் கருத்து கூட தவறு. அத்தகைய எண்ணமே அவனுக்குத் தோன்றவில்லை. தன்னுடைய இருப்பே பல அறக்கோளாறுகளுக்கு வழிகோலும் என்றுணர்ந்து, அக்கணமே வனவாழ்க்கையை ஏற்றுக்கொண்டு விடை பெற்றுவிட்டான். இதுதான் இராமனுக்கும் ஏனைய அரசர்களுக்கும் – குறிப்பாக இராவணனுக்கும் உள்ள வேறுபாடு. இராவணனுக்கு அரச தர்மம் என்ற ஒன்றே இல்லை. அவன் நாடியது புலனின்பத்தைத்தான். தன் விருப்பமே அவனுக்கு மனு தர்மம்.

*" "ஒல்வது ஈது, ஒல்லாது ஈது" என்று எனக்கும் உலகத்து உண்டோ?"*
*(சுந்தர – காட்சி – 142)*

*"இச்சைக்கு ஏற்றன, யான் செய்த இத்தனை காலம்"*
*(யுத்த – இராவணன் மந்திர – 112)*

இராவணன் அறம் நோக்கான்; குடிமக்களுடைய அமைதியையும் நல்வாழ்வையும் நோக்கான்; தன் கிளைஞர் கேளிர் உயிர்க்கு உறும் துன்பமும் நோக்கான்; தன் இச்சையில் இருத்திய சீதை ஒருத்தியையே நோக்கினான். அவளோடு கலந்து பெறும் இன்பத்துக்காக, அடி முடி படியில் தோய ஏங்கி இறைஞ்சி நின்றான். இவன் எப்படிக் குடிபடைகளுக்குக் காவலன் ஆவான்?! படைவலிமையுடைய மாமன்னன் இராவணன், வனத்தில் வாழும் தவசியாகிய இராமனைப் பொய் மானால் வஞ்சித்தான்; இலக்குவனைப் பொய் மானின் பொய்க் குரலால் வஞ்சித்தான் ; சீதையைத் தன் பொய் வேடத்தால் வஞ்சித்தான். அறத்தை வீரத்தைப் புறத்தே தள்ளி, மாயா சனகன், மாயா சீதை என்று மயக்கம் காட்டியே இராமனை வெல்வதற்கு எண்ணும் இராவணன் எவ்வாறு வீரன் ஆவான்? சொல்லிலும், செயலிலும் வேற்றுமை காட்டி வழ்பவர் சுயநல நோக்கினரே! அவர்க்கு அவர் இச்சையே அறம். ஆனால் இராமன் மறை ஓதிய அந்தணனுக்கு மேலாக, மறை வழி வாழ்ந்து காட்டுபவன்.

மற்றவர்களுடைய வாழ்க்கைக்கு வழிகாட்டியாக வாழ்பவன். இராவணனுடைய தவறுகளையும், குற்றங்களையும் உலகம் பழித்தாலும் ஒதுக்கி விடும். ஆனால் இராமன் தவறு செய்தால் அதை உலகம் பொறுக்காது! அவனுடைய செயல்களையும் சொற்களையும் விவாதத்துக்குள்ளாக்கும் ( உதாரணம்: வாலி வதை நிகழ்ச்சி).

இராமன் தன்னை அவதார புருஷன் என்று சொல்லிக் கொள்ளவுமில்லை; எண்ணிக் கொள்ளவுமில்லை. அவனுக்கு இயல்பாக அமைந்திருந்த அற வழி நோக்கு தன்மையால் அவன் விரும்பினாலும், விரும்பாவிட்டாலும், அவனைப் போல வாழவே பிறர் விரும்பினர். அவனை முன்னுதாரணமாகக் கொண்டனர். இராமன் சிறந்த மனிதன் என்பது மட்டுமல்ல. அவன் அரசனும் ஆனதால், அரசர்கள் தெய்வாம்சம் பொருந்தியவர்கள் என்று குடிமக்கள் நம்பியதால், அவன் குற்றம் குறைகளின்றி வாழ்ந்து காட்ட வேண்டிய அவசியம் ஏற்பட்டது. அவ்வாறு அவன் குற்றமற்ற அரசனாக வாழ்ந்து காட்டினான் என்பது உண்மை. அதற்குச் சீதையின் சிறை மீட்பில் நடக்கும் நிகழ்ச்சிகளே சாட்சி.

மேலும், மாதரார் கற்பு எனப்படுவது தெய்வாம்சம் உரிய பண்பு என்று நம்பப்பட்ட காலம் அது. குலப் பண்புகள் எல்லாம் அந்த ஒரு பண்பையே அடிப்படையாகக் கொண்டது என்று ஏற்றுக் கொள்ளப்பட்ட காலம் அது. பரதன், 'அயோத்தி அரசுரிமையைத் தான் ஏற்றுக் கொள்வது என்பது, மங்கையர் கற்பு நிலை தவறும் பாவத்தைக் கூட பின்னுக்குத் தள்ளிவிட்டு முன்னே நிற்கக் கூடிய பாவமாகும்' என்கிறான். (எக்காலத்துக்கும் ஏற்ற பண்பும் அதுவே) தன் மனைவி ஒரு பகல் பிரிந்திருந்தாலும், கணவனோ அன்றிப் பிறரோ அவளை ஐயுறும்பட்சத்தில் அவள் அவனிடமிருந்து விலக்கி வைக்கப்பட வேண்டும் என்பது மனுதர்மம். அரசனிடத்தில் இத்தகைய வழக்கு வந்தால், அவன் தீர்ப்பும் அப்படியே இருக்கும். பழிக்குள்ளாகும் பெண் தன்னுடைய கற்பை நிரூபிக்கவும் அக்காலத்தில் வாய்ப்பு தரப்பட்டது. தீ வலம் வந்து அக்னி சாட்சியாகத் தன்னை ஆணிடம் ஒப்படைக்கும் பெண் தீயின் உதவியாலேயே தன் கற்பை நிரூபிக்க வேண்டும் என்பது மரபு.

இராமன் சீதையின் கற்பு நிலை பற்றி ஐயமற அறிவான். எனவே சீதையை அவன் ஏற்றுக் கொள்ளலாம். அவன் வனத்தில் வாழும் தவசியாக மட்டும் இருந்தால் அது சாத்தியமே. கௌதம முனிவரிடம் அகலிகையை அடைக்கலப்படுத்தியவன் இராமனே அல்லவா? உடலால் பிழைத்திருந்தாள் என்று கௌதமன் எண்ணும் பட்சத்தில், அகலிகை "நெஞ்சினால் பிழைத்திலள்" என்பதால் அவளை ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொண்டவனல்லவா இராமன்! எனவே சீதையை

ஏற்பதில் அவனுக்குத் தடை ஏதும் இருந்திருக்காது, அவன் சாதாரணக் குடிமகனாக மட்டுமே இருந்திருந்தால் ...

மீண்டும் ஒரு முறை நினைவு கூர்வோம். கம்பன் நூலை எழுதப் புகுமுன் பாயிரத்தில் கூறுவது என்ன? அன்புடைய கணவனின் கதையை எழுதுவது நூலின் நோக்கம் என்றா கூறுகிறான்? அன்று. 'குற்றமற்ற கொற்றவனின் கதையைக் கூறுவதே நூலின் நோக்கம்!' என்கிறான். காசில் கொற்றத்து இராமன் கதையில் தான் ஆசை கொண்டதாகக் கூறுகிறான். எனவே ஒரு மன்னன் என்னும் முறையில்தான் இராமன் சீதையின் சிறை மீட்பு நிகழ்ச்சியை அணுகவும் முடியும். சிறை மீட்பைச் செய்யவும் இயலும்.

உதாரணமாக, இன்று சீதையைச் சிறை மீட்டு விட்டான் இராமன் எனக் கொள்வோம். உடனே அயோத்திக்குச் சீதையுடன் சென்று மறுநாளே முடி சூட்டிக் கொள்கிறான் என்றும் கொள்வோம். அன்று மாலையில் குடி மக்களில் ஒருவன் வந்து ஒருநாள் தன் மனைவி தன்னைப் பிரிந்திருந்தாள் என்றும், அயலான் இல்லத்தில் வாழ்ந்திருந்தாள் என்றும் கூறி, இவள் இனி தனக்கு மனைவியல்லள் என்றும் கூறி, வழக்கு ஒன்றைக் கொண்டு வந்தால், இராமனின் நிலை என்ன? "உன் மனமே உன் மனைவியின் கற்புக்குச் சாட்சியாகும். எனவே அவளை மனைவியாக ஏற்றுக் கொள்! நான் அப்படித்தான் செய்தேன்" என்பானா? அன்றி, 'மன்னன் என்ற முறையில் நான் ஆதாரங்கள் சாட்சிகள் சான்றுகளோடுதான் வழக்கை ஆராய வேண்டும். அவற்றின் அடிப்படையில்தான் தீர்ப்பு அளிக்க வேண்டும்' என்பானா? இரண்டாவது அணுகுமுறைதானே மன்னனுக்குரிய நெறிமுறை! இராமன் விசாரணை எதுவுமின்றி, தன் விருப்பப்படி சீதையைச் சிறை மீட்டுச் செல்வானாகில் அவனுடைய தலைமையை மக்கள் மன பேதமின்றி ஏற்றுக் கொள்வார்களா? தற்காலிகமாக ஏற்றுக் கொண்டாலும், பின்னாளில் இது சங்கடத்தை விளைவிக்காதா? (உத்தர இராமாயணத்தில் இந்த நிகழ்ச்சி இடம் பெறுகிறது). முதலில் இத்தகைய வழக்குகள், அரசனாகிய இராமனிடம் எதிர்காலத்தில் வரவே வாய்ப்பில்லாமல் போகும். அவரவர் மனோ தர்மத்திற்குச் சட்ட திட்டங்களைத் தன்னலத்துடன் வகுத்துச் செயல்படுவர். ஏனெனில், அரசனே அப்படித்தானே செய்துள்ளான் என்பர். பொதுவான விதிகள் தூக்கி எறியப்படும். வாழ்க்கையின் எல்லாப் பரிமாணங்களிலும் இத்தகைய அணுகு முறையே பின்பற்றப்படும். அதற்கு இது ஒரு தவறான முன்னோடியாக அமைந்துவிடும்.

"மன்னன் எவ்வழி; மக்கள் அவ்வழி" என்பது நடைமுறை உண்மை. நாம் இருபத்தியோராம் நூற்றாண்டில் இருக்கிறோம். இராமன் வாழ்ந்த காலம் திரேதா யுகம்;

காலம் கணிக்க இயலாத காலம். எனவே இராமன் வாழ்ந்த காலத்தை மனத்தில் கொண்டு பிரச்சினையை நோக்க வேண்டும். தலைவனுக்குத் தவறு செய்யும் உரிமை இல்லை என்பதும், தர்மமும் சட்டமும் அவனையும் கட்டுப்படுத்தவே செய்யும் என்பதும், எக்காலத்திலும் பொருந்தும் உண்மை என்பதனையும் உணர வேண்டும். இத்தகைய சூழலில் இராமன் சீதையை அப்படியே ஏற்றுக் கொள்ள முடியுமா? சீதை அலங்காரத் தேவதையாக வந்து நிற்பதனால் மட்டும் ஏற்படும் சங்கடம் அல்ல இது. தவக்கோலத்தில் வந்திருந்தாலும் இராமன் சீதையை அப்படியே ஏற்றுக் கொண்டிருக்க முடியாது. மனுதர்மப்படி அரசாள வேண்டியவன், தன்னுடைய சொந்த வாழ்க்கையில் முதலில் அந்த தர்மத்தை நடைமுறைப்படுத்திக் காட்ட வேண்டியவனாகிறான்.

மற்றும் ஒரு கருத்து, அயோத்தி அரசுரிமை என்பது அரசியலின் பாற்பட்டதொரு கருத்து. அதை ஆதியில் தசரதன், மந்திரச் சுற்றம், அரசர் பெருமக்கள் ஆகியோருடைய விருப்பங்களையும் எண்ணங்களையும் கேட்டறிந்த பின் அரசியல் பாங்கில் தான் தீர்மானித்தான். ஆனால் ஓர் இரவு முடிவதற்குள் அது குடும்ப நிகழ்ச்சியாக மாறிவிட்டது. காரணம், மனைவிக்குத் தயரதன் கொடுத்திருந்த வாக்கு. அரசியல் களத்தில் எடுக்கப்பட்ட முடிவு, ஓரிரவில் அந்தப்புரத்து நிகழ்ச்சிகளால் மாறிக் குழப்பம் ஏற்படுகிறது. இந்தக் குழப்ப அரசியலில் நடுநாயகமாக இருந்தவன் இராமன். அனுபவபூர்வமாகத் தான் அறிந்த அக்குழப்ப அரசியலை இராமன் மீண்டும் அரங்கேற்ற விரும்பமாட்டான் அல்லவா? சீதை, இராமன் என்னும் தனிப்பட்ட குடிமகனுடைய மனைவியாக இருந்தால் பிரச்சினை இல்லை. அவள் இராமன் என்னும் அரசனின் தேவியாகும்பொழுது, சீதையின் கற்புநிலை பற்றிய விவாதம் அரசியல் விவாதமாக பிற்காலத்தில் உருவெடுக்கக்கூடுமல்லவா? எனவே இராமன் இப்பொழுதே - இலங்கையில் - இங்கேயே அதற்கொரு முடிவு கண்டு சீதையை விவாதத்திற்கு அப்பாற்பட்டவளாக்கி அயோத்திக்கு அழைத்துச் செல்ல வேண்டியதும் அவசியமாகிறது. இத்தகைய தர்ம சங்கடம் எழும் என்பதனால்தான், உரியன செய்து பழி நீக்கிச் சீதையைச் சிறை மீட்டுச் செல்ல வேண்டும் என்று சடாயு இறக்கும் தருவாயில் இராமனிடத்தில் கூறுகிறான்.

'சீதையைத் தனியளாக ஆக்கி, அயல் மகன் ஒருவன் சிறையெடுக்கும் சூழலை ஏற்படுத்திப் பழியை உண்டாக்கிக் கொண்டுவிட்டீர்' என்று இராம இலக்குவரைக் கடிகிறான் சடாயு.

*"வம்பு இழை கொங்கை வஞ்சி வனத்திடைத் தமியள் வைக,*
*கொம்பு இழை மானின் பின் போய் குலப் பழி கூட்டிக் கொண்டீர்"*
*(ஆரணிய - சடாயு உயிர்நீத்த - 124)*

என்கிறான்.

அடுத்து, சிறைபட்டவளுடைய கற்பினுக்கு இழுக்கில்லை என்பதை அவர்களுக்குத் தெரிவிக்கும் வண்ணம் சீதையை ‘அருந்ததிக் கற்பினாள்’ என்றும் கூறுகிறான். சடாயுவுக்கு இராவணனுக்குற்ற சாபம் பற்றித் தெரியுமா என்பதற்குக் காப்பியத்தில் ஆதாரம் இல்லை. ஆனால் இராவணன் சீதையைப் பன்னசாலையோடு பெயர்த்துச் சென்றதைக் கண்டவன் ஆதலால் அவளை அரக்கன் தீண்டவில்லை என்பது உறுதியான உண்மையாகிறது. அந்தச் செய்தியை இராமனிடம் சொல்கிறான் சடாயு.

*“வடுக் கண், வார் கூந்தலாளை, இராவணன் மண்ணினோடு*
*எடுத்தனன் ஏகுவானை .....................”*

*(ஆரணிய – சடாயு உயிர்நீத்த – 113)*

ஆகவே,

*“...................... “அருந்ததி அனைய கற்பின்,*
*காதலாள் துயரம் நீக்கி, தேவர்தம் கருத்தும் முற்றி,*
*வேதநூல் முறையின் யாவும் விதியுளி நிறுவி வேறும்*
*தீது உள துடைத்தி” என்றான் .....................”*

*(ஆரணிய – சடாயு உயிர்நீத்த – 125)*

அதாவது, சீதையை மனைவியாக ஏற்பதற்கு முன்னதாக, வேதவிதிப்படி முறையாகச் செய்ய வேண்டிய சடங்குகளைச் செய்து, அவளுடைய தூய்மையை இராமன் நிலைநிறுத்த வேண்டும்.

(இவ்விடத்தில் கதை தொடர்பான சில விளக்கங்கள் அவசியம்.

அயோத்திக்கு செல்லும்முன்பு இராமன் பல பிரச்சினைகளுக்குத் தீர்வு காண வேண்டியிருந்தது.

ஒன்று, தாய் கைகேயியும், தம்பி பரதனும், தந்தை தயரதனால் இதுகாறும் புறக்கணிக்கப்பட்டு உள்ளனர். அவர்களை இராமனும் தாய் என்றும், தம்பி என்றும் அயோத்தியில் உறவு கொண்டாட முடியாது. அதே சமயத்தில் தன் முடிசூட்டு விழாவில் அவர்களை ஒதுக்கி வைக்கவும் முடியாது. இந்தச் சிக்கலுக்கு இலங்கையிலேயே இராமன் தீர்வு கண்டுவிடுகிறான். இதன் விளக்கம் இந்நூலின் .......... பக்கத்தில் விரிவாக எழுதப்பட்டுள்ளது.

இரண்டு, பரதன் எரிபுகுந்து விடுவதைத் தடுப்பதற்காக அனுமனை முன்கூட்டியே பொறுப்புணர்ச்சியோடு அயோத்திக்கு அனுப்பி வைக்கிறான் என்பது இராமாயணக் கதை.

மூன்று, இத்தகைய பொறுப்புணர்ச்சியோடுதான் சீதையின் கற்பை இலங்கையிலேயே நிரூபித்துவிட வேண்டும் என்று எண்ணியும் இராமன் செயல்படுகிறான். சீதை தீக்குளித்து தன் கற்பை நிரூபிப்பது கதை. இது மாமன்னனாக ஒரு நாட்டை ஆளவிருக்கும் அரசனுக்குத் தகுதியுடைய செயலே என்பதைத் தயரதன் கூறுவதாக ஒரு நிகழ்ச்சி காப்பியத்தின் இறுதியில் கம்பனால் காட்டப்படுகிறது.

.......சீதையின் தீக்குளிப்புக்குப் பிறகு தேவருலகத்திலிருந்து இறங்கி வரும் தயரதன்

"நங்கை! மற்று நின் கற்பினை உலகுக்கு நாட்ட,
'அங்கி புக்கிடு' என்று உணர்த்திய அது மனத்து அடையேல்;
சங்கை உற்றவர் பெறுவதும் உண்டு; அது சரதம்"

*(யுத்த - மீட்சி - 121)*

என்றும்,

"பொன்னைத் தீயிடைப் வெய்தல் அப் பொன்னுடைத் தூய்மை-
தன்னைக் காட்டுதற்கு" என்பது மனக் கொனல் தருதி;
உன்னைக் காட்டினன் 'கற்பினுக்கு அரசி' என்று உலகில்,
பின்னைக் காட்டுவது அரியது" என்று எண்ணி....

*(யுத்த - மீட்சி - 123)*

என்றும் கூறுகிறான்.

உலகத்துக்குச் சீதையின் கற்புத் தூய்மையைத் தெரிவிக்கவே இராமன் அரசனுக்குரிய வகையில் நடந்தான் என்று அரச நீதி அறிந்த தயரதன் கூறுகிறான்.)

எனவே சீதை தவத்தியாகத் தோன்றியிருந்தாலும் இராமன் சீதையைத் தன் தேவியாக ஏற்கும் முன்பு, சடாயு அறிவுறுத்திய வண்ணம் வேதநூல் விதிப்படி செய்வன செய்து தீமையை விலக்கிப் பிறகுதான் ஏற்றுக் கொண்டிருப்பான்! அவன் அதற்கு எத்தகைய திட்டம் வைத்திருந்தான் என்று அறிய வாய்ப்பில்லை. சீதையின் கற்பு, உலகம் அறிந்த ஒன்றாக ஆகிவிட்டதால் (போர் நிகழ்ந்ததே அதற்கான சாட்சி) சிறையிருந்தமைக்காகச் சில சடங்குகள் செய்திருக்கலாம்... அனுமனை, வீடணனை சில விளக்கங்கள் தான் கேட்பதாக அமைத்திருக்கலாம். சீதையின் மாட்சிமைக்கு ஊறு நேராதவண்ணம் இராமன் முறையான திட்டங்கள் வைத்திருந்திருப்பான் என்பது உறுதி. அதை அழகாகச் செயல்படுத்தியும் இருப்பான். ஆனால் சீதை தோன்றும்

அதீத ஒப்பனை நிலையை – உண்மையை ஆத்மாவினால் உணரக்கூடிய அவனாலேயே ஒப்புக்கொள்ள முடியவில்லையே... உலகம் ஒப்புமா? சிறையிருந்தவள் – கணவனைப் பிரிந்து தவம் புரிந்தவளுடைய தோற்றமா இது! இலங்கை வாழ் நெறியை (புலனின்பத்தை அடிப்படையாகக் கொண்ட வாழ்நெறி விரும்பியவள் போன்றல்லவா தோற்றம் தருகிறாள்!

இக்குற்றத்தைச் சீதை உணராதது ஏன்? சீதையின் இத்தகைய மனநிலை இராமனால் பொறுத்துக்கொள்ள முடியாததாகிறது. காரணம், தானும் சீதையும் கருத்தினால் இணைந்த காதலர்கள் என்ற இறுமாப்பு கொண்டிருந்தவன் இராமன். ஒரு அன்புடைய கணவனின் நியாயமான இந்த இறுமாப்பு அவனுடைய காதல் மனைவியாலேயே இங்கு தகர்க்கப்பட்டுள்ளது. இது இராமனுக்குப் பொறுக்கவியலாத இழப்பு உணர்ச்சியைத் தருகிறது. இந்த இழப்பு உணர்ச்சி மிகவும் சூட்சுமமானது. ஒரு கணவன் மட்டுமே அனுபவித்து அறியக்கூடிய நுண்ணுணர்வு ஆகும் இது.

........... இராமனும், சீதையும் ஒருவரையொருவர் கண்டவுடன் காதல் கொண்டனர். இராமன் வில்லை முறித்த பின்னர், "விசுவாமித்திர முனிவனோடு கண்ட வில்லுடைய தோளன்தான் வில்லை முறித்தவனா அன்றி, வேறு யாருமா?" என்று ஐயத்தின் ஆளுகைக்குட்பட்டு மருகினாள் சீதை. அவ்வாறே இராமனும், 'வில்லாற்றல் கொண்டு தான் மணம் புரிய விரும்புபவள், கன்னிமாடத்து காரிகைதானோ அன்றி, வேறு எவருமோ' என்று இராமனும் ஐயுற்றான். "இந்த இப்பிறவிக்கு இரு மாதரைச் சிந்தையாலும் தீண்டேன்" என்று வரமளித்தான் இராகவன். சீதை அதை நடைமுறையில் காட்டினாள். அரச பதவியைத் துச்சம் என்றெண்ணித் துறந்தான் இராமன். சீதையும் அந்நிலையை ஏற்றுக் கொண்டாள். இராமன் மரவுரி தரித்து வனம் புகுந்தான். சீதையும் மரவுரி தரித்து அவனை நிழலாகத் தொடர்ந்தாள். இராமன் வேட்டுவக் குகனைத் தன் இளவல் என்று ஏற்றுக் கொண்டான். சீதையும் அத்தகைய உறவை ஏற்றுக் கொண்டாள். பரதனைப் பற்றிய மிக உயர்ந்த கருத்தைக் கொண்டிருந்தவன் இராமன். அக்கருத்தைக் காப்பியத்தில் சில இடங்களில் சீதையும் பிரதிபலிக்கிறாள். இராமன் முனிவர்களை அரக்கர்களிடமிருந்து காப்பதே தன் வனவாசத்தின் குறிக்கோள் என்று நெறி அமைத்துக் கொள்கிறான். சீதை அத்தகைய வாழ்நெறியைப் போற்றி அதைப் பற்றி இராவணனிடம் பெருமையாகப் பேசுகிறாள். தன்னை வனத்துக்கு அனுப்பிய சிற்றன்னை பால் இராமனுக்குச் சற்றும் மனத்தாங்கல் இல்லை. சீதைக்கும் அவ்வாறே. கைகேயியை இராமன் எவ்விடத்தும் தகுதி குறைவாகச் சுட்டுவதே இல்லை. சீதையும் அவ்வாறே, "சிறக்கும் மாமியர் மூவர்" என்று கூறிக் கைகேயியிடம் தனக்குள்ள

மதிப்பை வெளிப்படுத்துகிறாள். இராமன் விரும்பியபடியே தான் வளர்த்த பூவைக்குக் கைகேயியின் பெயரை வைத்து மகிழ்கிறாள்.

*("'என் ஓர் இன் உயிர் மென் கிளிக்கு யார் பெயர் ஈகேன்?*
*மன்ன!' என்றலும் "மாசு அறு கேகயன் மாது, என்*
*அன்னைதன் பெயர் ஆக" என அன்பினொடு, அந் நாள்,*
*சொன்ன மெய்ம் மொழி சொல்லுதி!"*
*(சுந்தர – சூடாமணி – 78)*

என்று சீதை இராமனுக்கு அடையாள நிகழ்ச்சியாக இதனைக் கூறுகிறான்.)

மிகவும் நுணுக்கமான ஒரு செய்தி. தன்னைக் காட்டுக்கு அனுப்பியதில் பெரும் பங்கு வகித்தவள் கூனியே என்ற கருத்தைக் கொண்டவன் இராமன். அந்தக் கருத்தைச் சீதையும் கூறுவது கருதுதற்குரியது. வாலி வதம் முடித்துச் சுக்ரீவனுக்கு முடி சூட்டும் இராமன், அவனுக்குச் சில அரசநீதிகளைக் கூறுகிறான். அப்பொழுது, "எவரையும் இகழ்ச்சியாக எக்காலத்திலும் நினைத்துவிடாதே! நான் கூனி என்பவள் முதுகில் சிறுவயதில் விளையாட்டுத்தனமாக எறிந்த மண்ணுருண்டையே எனக்கு வினையாகி என்னை வனம் போக்கியது" என்கிறான்.

*"சிறியர் என்று இகழ்ந்து நோவு செய்வன செய்யல் ; மற்று, இந்*
*நெறி இகழ்ந்து, யான் ஓர் தீமை இழைத்தலால் உணர்ச்சி நீண்டு,*
*குறியது ஆம் மேனி ஆய கூனியால், குவவுத் தோளாய்!*
*வெறியன எய்தி, நொய்தின் வெந்துயர்க் கடலின் வீழ்ந்தேன்!"*
*(கிட்கிந்தா – அரசியற் – 12)*

என்கிறான். அவ்வாறே, அசோகவனத்தில் சீதைக்குத் துயர் விளைவித்த அரக்கியரை அனுமன் அழித்து விடுவதற்குச் சீதையின் அனுமதி வேண்டும்பொழுது, சீதை அவனைத் தடுத்து, "கூனியின் கொடியர் அல்லரே இவர்கள்!" என்கிறாள். பிரிவாற்றாது இருவருமே உயிர் விடத் துணிகிறார்கள். குலப் பழியைத் துடைக்க எண்ணுகிறார்கள். சீதையின் அழகை இராமன் தன் கண்களால் சுவைத்த வண்ணம் அனுமனிடம் விளக்குகிறான். சீதையோ, இராமனின் அழகை அனுமன் வருணிக்கச் செவிகளால் சுவைக்கிறாள். இராமன் சீதையைத் தவக்கோலத்தில் காண விரும்புகிறான். சீதையும் அதனையே சிந்தை செய்கிறாள். (இது இராமன் அறியாத ஒன்று. வீடணனின் குறுக்கீட்டால் சீதையின் தவக்கோலத்தை இராமனும் உலகமும் காணவியலாமல் போனது முன்பே விளக்கப்பட்டது).

இவ்வாறு சீதை தன்னிடம் கருத்தால் ஒன்று பட்டிருப்பதை நன்றாக அறிந்தவன் இராமன்; அதை மனத்துள் பாராட்டி வரவேற்றவன். அத்தகைய தன் மனைவிக்கு, ஓராண்டுக் கால இலங்கைச் சிறை வாசத்தால் தன்னுடைய கருத்தினின்றும் மாறுபடும் மனோநிலை வந்துற்றது போலும் என்று தானே கணிக்கும்படிக்குச் சீதை, சூழ்நிலைக்கு ஒவ்வாத தோற்றத்தில் வந்திருக்கிறாள் என்பது அவனால் ஏற்றுக்கொள்ள இயலாததாகிறது. அவளது மேனியைத் தழுவி நிற்கும் அணிகலன்கள் எல்லாம் இராவணனின் கருவூலத்திலிருந்து பெறப்பட்டவையே அல்லவா? நறு நெய்யும், மணக் கலவைச் சாந்தமும் வெறி வீசி மணக்க, பட்டிலும் பகட்டிலும் தோன்றும் இச்சீதை தன் கருத்துக்கிசைந்த மனைவிதானா என்று இராமன் நினைப்பதில் தவறு ஏதும் உண்டா? பிறர் தன் அழகை ரசிக்கத் தூண்டும் விதத்தில் இந்திராணி போல் வந்து நிற்கிறாள் என்றால் யோகத்தை விரும்பும் இராமனிடமிருந்து மாறுபட்டு, போகத்தை விரும்பும் அரக்கர் வாழ்நிலையை விரும்பிவிட்டாள் என்றுதானே உலகம் பொருள் கொள்ளும்! பலரும் காண, இத்தகைய சிந்தனைகளை உலகத்தாரிடம் உண்டாக்கும் வண்ணம், உலகத்தின் முன் தான் தோன்றக்கூடாது என்பது இராமனைப் போன்ற அறத்தின் நாயகனுக்கு மனைவியாக அமைந்தவளுக்கு – இதுகாறும் கருத்தால் ஒன்றி வாழ்ந்தவளுக்குத் – தெரியாமல் போனது எப்படி? (வீடணனிடம் சீதை கோலம் புனைய மறுத்ததை இராமன் அறியவில்லை அல்லவா?) எனவே தன் மனைவி, கற்பு நிறை உடையவள்தான் என்று தான் நம்பினாலும், உலகத்துக்கு நிரூபிக்க வேண்டிய அவசியத்தை உண்டு பண்ணிவிட்டாளே என்று இராமன் நினைக்கிறான் என்றால் அதில் தவறேதும் உண்டோ?

தவறே இல்லை! முன்பே கூறப்பட்டது போல, அயோத்தியை ஆள நிற்கின்ற மாமன்னன் இராமனிடம், எதிர்காலத்தில் இத்தகையதொரு வழக்கு வந்தால் அவன் அதில் எவ்வாறு தீர்ப்பு கூறுவான்? மனு தர்மப்படி ஆட்சி செய்யும் இரவி குல நெறியைப் பின்பற்றுவானா? அன்றி, இலங்கையில் தனக்கென வகுத்துக் கொண்ட நெறிப்படி தீர்ப்பு தருவானா? இதைவிட ஒரு தர்மசங்கடமான நிலையை, இராமனின் உயிரனைய தேவி அவனுக்கு ஏற்படுத்தி இருக்க முடியாது.

சீதை தருமசங்கடத்தை உண்டாக்கிவிட்டாள் என்று எவற்றையெல்லாம் எண்ணிக் கொண்டு அவளை ஆழமாக அமைதியாக நோக்கினானோ அவ்வாறு உலகமும் நோக்கிக் கணிப்புகளைச் செய்து கொண்டிருக்கும்பட்சத்தில் சூழ்நிலையின் கனத்தை இராமன் உணர்ந்து கொண்டுவிட்டான். இராமனுடைய இத்தகைய அறிவார்ந்த கணிப்பைப் பற்றி நமக்குத் தெரிவிக்கத்தான் கம்பன், "அற்புடைத் தலைவனும் அமைய நோக்கினான்" என்று 'உம்' விகுதி கொடுத்து எழுதுகிறான். (அதாவது உலகம் நோக்கியது, இராமனும் நோக்கினான் என்று பொருள்)

சரி. சங்கடம் ஏற்பட்டுவிட்டது. அதை எவ்வாறு தீர்ப்பது? பல வழிகள் உள்ளன. அதில் இராமன் இங்கு உளவியல் வழியைத் தேர்ந்தெடுக்கிறான். பலர் சம்பந்தப்பட்டுள்ள ஒரு பிரச்சினையில் ஒரு முடிவை எட்டுவதற்கு உளவியல் ரீதியாக, ஒன்று, பிறர் கருத்தைத் தன் கருத்தாக மாற்றிக் கூறலாம். இரண்டு, தன் கருத்தைப் பிறர் கருத்தாக ஆக்கிக் கூறலாம். இத்தகைய உளவியல் அணுகுமுறையில் இராமன் மிக வல்லவன்.

இடம், பொருள் ஏவலுக்குத் தக்கவாறு இராமன் இவற்றில் ஏதாவது ஒன்றைத் தேர்ந்தெடுப்பான் (இத்தகைய வழி முறைகள் அரசர்களுக்கு இயல்பாக அமைய வேண்டிய பண்பு நலன்கள்). இராமனின் இந்தப் பண்பு காப்பியத்தில் யுத்த காண்டத்தின் தொடக்கத்தில் 'வீடணன் அடைக்கலப் படலத்தில்' வெளிப்படுகின்றது. அதனைக் காண்போம்.

இராவணனைவிட்டுத் தருமத்தின் தலைவனாகிய இராமனிடம் அடைக்கலம் கேட்டு வருகிறான் வீடணன். 'அபயம்' என்று வேண்டியவர்களுக்கு அடைக்கலம் அளிப்பது இராமனுடைய இயல்பு. எனவே வீடணனைத் தன்னோடு சேர்த்துக் கொள்வது என்று முடிவெடுத்துவிட்டான். ஆனால் சுக்ரீவன் முதலானவர்களுடைய கருத்துகளைக் கேட்டு அந்த முடிவை எடுப்பதாகவும், செயல்படுவதாகவும் பாவனை செய்வதே அப்போதைய சூழலில் உசிதம் என்றெண்ணி, மந்திராலோசனை கூட்டுகிறான். அப்பொழுது வீடணன், 'கைப்புகற்பாலனோ? கழியற் பாலனோ? இப்பொருள் கேட்ட நீர் இயம்புவீர், நும் உணர்வினால், ஒப்புற நோக்கி' என்று கூறி மந்திரக் குழுவின் கருத்தைக் கேட்கிறான். மந்திரக் குழுவோ வீடணனின் வரவை விரும்பவில்லை. சுக்ரீவன், "உறவினரை விடுத்து அச்சத்தின் காரணமாக வீடணன் நம்மிடம் வருகின்றான். மேலும் வஞ்சனையை மனத்தில் தேக்கிய நஞ்சு போல் அவனை நாம் கருதி மறுக்கத்தான் வேண்டும். ''பகைவனின் தம்பி நஞ்சினும் கொடியவனே!'' என்கிறான். நீலன் என்பவன் 'பகைவன் அணியினின்றும் ஒருவன் தானே முன் வந்து அடைக்கலம் தேடுவதில் அரசியல் ஆதாயம் என்ற கருத்து இருக்குமா என்று ஆய்ந்து பார்க்க வேண்டும்'' என்கிறான். சாம்பவானோ "அரக்கர் வஞ்சகர், மாயத்தில் வல்லவர். பொய் மான் நிகழ்ச்சியை மறந்துவிட வேண்டாம். அவனைப் போலவே எளியவன் என்ற முகமூடி அணிந்து இவன் வருகிறான். பகைவர் அணியினர் நமக்குப் பாதகம் செய்யும் வாய்ப்பே அதிகம்'' என்கிறான்.

இவர்களைத் தவிர,

*"மற்றுள மந்திரக் கிழவர், வாய்மையால்,*
*குற்றம் இல் கேள்வியர், அன்பு கூர்ந்தவர்,*
*'பற்றுதல் பழுது' என, பழுது உறா ஒரு*
*பெற்றியின் உணர்வினார், முடியப் பேசினார்"*
*(யுத்த - வீடணன் அடைக்கல - 82)*

எனவே, "வீடணனை நம் பக்கம் சேர்க்கக்கூடாது" என்று முடிந்த முடிவாக மந்திராலோசனைக் குழுவினர் கூறி விடுகின்றனர். இராமன் இத்தகைய கருத்துகளை எதிர்பார்த்தே இருந்திருக்க வேண்டும். திட்டமிட்டே இதுவரை அனுமனின் கருத்தைக் கேட்காமல் இருக்கிறான். இறுதியாக, "மாருதியின் கருத்து என்னவென்றும் கேட்டு விடலாமே" என்று அனுமனை நோக்குகின்றான். (அனுமன் வீடணனின் அற உணர்வு, திரிசடை சீதை பால் கொண்டுள்ள நட்பு ஆகியவை பற்றி இராமனிடம் முன்னரே கூறியிருந்திருக்க வேண்டும் அல்லவா? அத்துடன் மற்றவர்கள் போல் நடுவுநிலை தவறிப் பேசுபவனல்லன் அனுமன். எனவே, தன்னுடைய கருத்துக்குச் சாதகமாகப் பேசக்கூடிய – சொல்லின் சிறப்பால் பிறருடைய கருத்தைத் தனக்குச் சாதகமாக மாற்ற வல்ல ஆற்றலுடைய சொல்லின் செல்வனை – இறுதியாகப் பேச வைக்கிறான்.) மாருதி, தனக்கு இயல்பாகப் பொருந்தியுள்ள பணிவும், பக்தியும் துலங்க, அனைவரையும் வணங்கித் தன் கருத்தைக் கூறுகிறான். "தீயவன் வீடணன் என்று என்னால் கருத முடியவில்லை. அதற்குச் சில காரணங்கள் உண்டு. அகத்தின் கருத்தை முகம் காட்டுமல்லவா? கள்ளமில்லாதவன் வீடணன் என்பதற்குத் தோற்றம் ஒரு சாட்சி. அடுத்து, வாலியை வென்று சுக்ரீவனுக்கு முடி சூடிய செய்தியை அறிந்து, நின்னைச் சேர்ந்து, இராவணனைக் கொன்று, இலங்கைக்கு அரசனாகலாம் என்ற எண்ணத்துடன்தான் இங்கு வந்துள்ளான். நீவிர், பரதனுக்கு அரசு அளித்த பெருந்தகைக் கருணையன் என்பதை அறிந்தே உம்மிடம் வந்துள்ளான். இராவணனை வென்றவன் வாலி! அந்த வாலியைக் கொன்றவர் நீவிர்! எனவே, 'இனி அரக்கர் குலத்துக்கு இறுதியே!' என்பதைப் புரிந்து கொண்டு உம்மிடம் வந்துள்ளான். உறவினரின் அறம் திறம்பிய வாழ்நெறியில் உடன்பாடு இல்லாமல் தாமே அடைக்கலம் நாடி வருபவர்கள், அவர்களுடைய மாயம், வஞ்சனை பற்றிய கருத்துகளைச் சரியான நேரத்தில் உணர்த்தி நமக்கு மிகப்பெரும் உதவியாக இருக்க முடியும்(இது பிற்காலத்தில் உண்மை ஆகிறது). இராவணனுடைய சபையில் எல்லோரும் பார்த்திருக்க என்னைக் கொல்வதற்கு ஆணையிட்டான் இராவணன். ஆனால் வீடணன் மட்டுமே துணிந்து முன் வந்து 'தூதுவரைக் கொல்வது அறம் அன்று; பழியும் பாவமும் கூடிய செயல் அது' என்று அவனைத் தடுத்தான் இராவணன் உள்பட எல்லோரும் அக்கருத்தை ஏற்றுக் கொள்ளும் வண்ணம்

முன்னுதாரணங்கள் எடுத்துக்காட்டி அறச் சார்போடு மிகச் சிறப்பாகப் பேசினான். மேலும், இலங்கை மாநகரை நான் சுற்றி வந்த பொழுது இவனுடைய மனையில் மட்டுமே நல்ல நிமித்தங்களைக் கண்டேன். அவன் மனையில் அறிவைக் கெடுக்கும் நறவம் இல்லை. ஊன் உணவு இல்லை; தானமும் தருமமும் துலங்கிய அந்தணர் மனையாகப் பொலிந்தது வீடணனுடைய இல்லம். மேலும் வீடணனின் மகள் திரிசடையே நம் தேவிக்குத் தோழி! மாதர் வகையில் இராவணனுக்குற்ற சாபத்தைக் கூறித் தேவியின் இடரைக் களைந்து ஆறுதலாக நின்றவள் அவளே!''

"உம்முடைய வில் தொழிலால் இராவணனின் வஞ்சக வாழ்க்கை ஒரு முடிவுக்கு வரும் என்று உறுதியாக நம்பி வந்துள்ளான். தேவர்க்கும், தானவர்க்கும், திசைமுகன் முதலான மூவர்க்கும் இயலாத காரியத்தை முற்ற முடிப்பவர் நீவிர் என்ற உண்மையை உணர்ந்து வந்துள்ளான். அத்தகையவனுக்கு அச்சம் கொண்டு அபயம் அளிக்க மறுப்பது, கடல் நீர், கிணற்று நீர் தன்னிடம் கலக்க வருவது கண்டு அஞ்சிய புன்மைக்கே ஒப்பாகும். 'பகைப் புலத்தோர் துணைவர் ஆகமாட்டார்' என்று தீர்மானிப்பது நகைப்பிற்குரியது. தீரர்கள் இக்கருத்தை ஏற்கமாட்டார்கள். உறவினர் செல்வத்தின் பொருட்டு பங்காளிகள் ஆகிப் போர் புரிவது உலக இயற்கை என்றால் பகைவர் துணைவர் ஆவதும் இயல்பு அல்லவா? .... இவையெல்லாவற்றையும் கூட்டிக் கழித்துப் பார்த்தால் 'வீடணன் வரவு நல்வரவே ஆகும்' என்பது என் கருத்து'' என்று முடிக்கிறான் மாருதி.

இராமன் தான் கூற வேண்டியதையெல்லாம் வானரர் இனத்தைச் சேர்ந்த அனுமனையே கூற வைத்து விடுகிறான். எனவே மாருதியின் உரையை அப்படியே பற்றிக் கொண்டு,

"பிறகு என்ன? மாருதி கூறிய கருத்துக்களையும், செய்திகளையும் நாம் அனைவரும் கேட்டோம்'' என்று பேசத் தொடங்குபவன், வீடணன் பற்றிய பேச்சையே விடுத்து அடைக்கலத்தின் பெருமைகளைக் கூறத் தொடங்குகிறான். (இது வாலி வத நூலில் விரிவாக உரைக்கப்பட்டுள்ளது. கம்பன் இதற்காக 12 பாடல்கள் எழுதியுள்ளான்). 'அபயம்' வேண்டுவோர்க்கு அடைக்கலம் அளிக்கும் என்மேல் வைத்துள்ள எல்லையற்ற அன்பின் காரணமாக கருணைப் பண்பின் மேன்மையைப் பற்றி மிகச் சிறப்பாகக் கூறினீர் (அனுமன் கூற்றை அனைவரின் கூற்று என்பதாக மாற்றிக் கூறுகிறான்). எனவே உங்களுடைய கருத்துக்கு மதிப்பு கொடுத்து நானும் வீடணனை அடைக்கலம் ஏற்கிறேன்'' என்று பிரச்சினைக்கு இறுதியான முடிவு காணும் இராமன், சட்டென்று சுக்ரீவனைப் பார்த்து, "கதிரவன் மைந்தனே! குற்றமில்லாத வீடணனை நீயே பற்றி அழைத்து வந்து என் வசம் ஒப்படைப்பாய்!'' என்கிறான்.

சுக்ரீவன்தான் முதல் ஆட்சேபணையை எழுப்பியவன். உளவியல் அணுகுமுறையைக் கைக்கொண்டு, சுக்ரீவனையே அழைத்து வரப் பணித்து விடுகிறான். இறுதியில் பேசிய இராமனுடைய அடைக்கலப் பேச்சால் கவரப்பட்ட சுக்ரீவனும், 'தெய்வ நாயகன் ஐயம் போக்கினான்' என்று உள்ளம் தேறி "இதோ! இப்பொழுதே கொணர்வேன்" என்று பொருக்கென எழுந்து போனான். எனவே இராமன் இடம், பொருள், ஏவல் கருதி இத்தகைய உளவியல் அணுகுமுறையால், தன் கருத்தைப் பிறர் கருத்தாகக் கூறித் தன் காரியத்தைச் சாதித்துக் கொள்கிறான். வீடணனால் பெரும் நன்மைகள் எல்லாம் பெறுகிறான். இந்திரசித்துவைக் கொல்வதில் பெரும் பங்கு வகிப்பவன் வீடணனே ஆதலால் "இது வீடணன் தந்த வெற்றி!" என்று அனைவரின் முன்னும் பாராட்டவும் செய்கிறான்.

இப்பொழுது சீதை தொடர்பாகவும் உளவியல் அணுகுமுறையையே தேர்ந்தெடுக்கிறான் இராமன். சீதையின் கற்புநிலை பற்றிய முடிவைத் தான் எடுப்பது சரியாக இருக்காது என்று உணர்கிறான். 'சீதையின் கற்பில் தனக்குச் சற்றும் ஐயமில்லை. ஆயினும், சீதை இங்கு வந்த பொழுது ஒரே கூச்சலும் குழப்பமும் வந்தது எதனால்? துறவுக் கோலத்துக்கு ஒரு மாட்சிமை உண்டு. குறைந்தபட்சம் அணிகளின்றி, எளிமையாகவேனும் சீதை வந்திருக்கலாம்! அத்தோற்றம் மக்கள் மனத்திலே பக்தியை ஊட்டிச் சப்தத்தைக் குறைத்து நிசப்தத்தையே உருவாக்கிச் சூழ்நிலைக்கு மாட்சிமை சேர்த்திருக்கும். ஆனால் உலகம் அவளுடைய கற்பு பற்றி விவாதம் புரியும் நிலையைச் சானகி ஏற்படுத்திவிட்டாள்! எனவே பிறரை முதலில் பேச வைத்து இறுதியில் தீர்ப்பு கூறிய முந்தைய உளவியல் அணுகுமுறைக் கூறு இங்கு உதவாது. முதலில் தான் பேச வேண்டும். முடிவில் பிறர் பேச வேண்டும். இங்கு நிற்போர் மனத்துள் நினைந்து, எல்லோரும் அறியப் பலருக்குக் கூற முடியாமல், தவித்து, எதிர்காலத்தில் பழியாகப் பேசக்கூடிய சொற்களைத் தானே இப்பொழுது பேசி விடுதல் நலம்' என்று இராமன் முடிவெடுக்கிறான். அவ்வாறு, தான் சீதையைப் பழி சுமத்திப் பேசுவதன் மூலம் இரண்டு நன்மைகளைப் பெறலாம் என்றும் கருதுகின்றான். ஒன்று, வேண்டுதல் வேண்டாமை இன்றி நடுவு நிலையோடு பிரச்சினைகளை அணுகும் நல்லரசன் இராமன் என்ற புகழோடு அயோத்திக்குச் செல்ல இயலும். இரண்டு, இராமன் கூறும் பழிக்கு மறுப்புரையாகவும் சீதையின் கற்புக்குச் சாட்சியாகவும் பலர் இங்குப் பேசலாம். உதாரணமாக, பன்னசாலையோடு இராவணன் சீதையைக் கொண்டு சென்றதையும், அவள் கலன் கழித்ததையும் சுக்ரீவன் கூறலாம். இராவணனின் சாப வரலாறு முதலியவற்றைப் பற்றி வீடணனும் கூறலாம். சீதையிடம் திரிசடை கொண்ட நட்பு பற்றிக் கூறலாம். எனவே திரிசடையின் சாட்சியும் இங்கு உதவும் (திரிசடை சீதையிடம் பேசும் பொழுதெல்லாம் சீதையின்

தூய்மையைப் பாராட்டிக் கொண்டே இருக்கிறாள். உதாரணம்: நவையில் கற்பினள்– சுந்தர – காட்சி – 40) இறுதியாக அனுமனைப் பேச விட்டால், அவன் 'வாய்மை வாக்கினன்' என்பதை எல்லோரும் ஏற்றுக் கொண்டிருப்பதாலும், அவனே 'சொல்லின் செல்வன்' ஆதலாலும், அனைவரும் மனம் கொள்ளுமாறு அழகாக, அசோகவனத்துச் சீதையின் நிலை பற்றிக் கூறுவான்....... இப்படிப் பிறர் கூற, அதன்பின் சீதையின் கற்பு என்பது உலகம் ஏற்றுக் கொண்டு விட்ட உண்மை ஆதலால், தானும் அதனை ஏற்பதாக இராமன் முடிவில் கூறலாம். எனவே அன்பை மனத்தில் தேக்கி, ஆழமாகச் சீதையை நோக்கி, அமைதியாகச் சூழலைக் கணிக்கும் இராமன் இத்தகைய உளவியல் அணுகுமுறையைக் கைக்கொள்ள விழைந்தான் என்பது உறுதி. இவற்றையெல்லாம் சிந்தித்த வண்ணமே "அற்புடைத் தலைவனும் அமைய நோக்கினான்" என்கிறான் கம்பன்.

ஆக என்ன செய்ய வேண்டும். என்னென்ன பேச வேண்டும் என்று இராமன் முடிவெடுத்து விடுகிறான். .......... அத்துடன் இராமனுடைய சித்தத்தில் ஓடியிருக்கக் கூடிய மற்றொரு கருத்தையும் இங்கு ஆய்வு செய்வது அவசியமாகிறது.

சீதையின் குணத்தில் இயல்பாக அமைந்திருந்த குறை ஒன்று பல காலமாக இராமனுடைய மனத்தில் உறுத்தலாகவே இருந்தது. அதுதான் சீதையின் பிடிவாத குணம். மேலும் அவளுடைய விருப்பத்துக்குத் தடைகள் கூடிக் கொண்டே போனால், அப் பிடிவாதம் சினமாக உருக்கொண்டு, பிறரால் பொறுத்துக்கொள்ள இயலாத வகைக்குச் சீற்றமாக மாறி விடும் இயல்பும் கொண்டது. அத்துடன், நாவடக்கம் இன்றிச் சொற்களையும் உதிர்த்துவிடுவாள்! (வள்ளுவர் பெண்ணுக்கு இலக்கணம் வகுக்கும் போது **'சொற்காத்துச் சோர்விலாள் பெண்'** என்கிறார்). அந்த இயல்பின் மூலம் தன் விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்ளும் குணம் கொண்டவள் சீதை. சீற்றம் என்பது சச்சரவுக்கு உள்ள தனித்த பண்பு அல்லவா? அந்தச் சீற்றப் பண்பை வெளிப்படுத்தியே தன் காரியங்களை மூன்று முறை சாதித்துக் கொள்கிறாள் சானகி என்பது காப்பியம் காட்டும் உண்மை. அந்த உண்மையை உணர்ந்து கொண்டவன் இராகவன். அம்மூன்று நிகழ்ச்சிகளையும் காண்போம்.

முதலில் இராமனோடு வனம் புகுவது. இராமனுக்கும் சீதைக்கும் சிறு விவாதத்துக்குப்பின், இராமனின் முடிவைக் கேட்காமலேயே, சீரை உடுத்திக் கொண்டு வந்து அவன் கையைப் பற்றி நிற்கிறாள். இராமன் இறுதி முயற்சியாக "உன்னுடைய உடனிருப்பால் எனக்கு எல்லையற்ற இடர் வந்து சேரும். எனவே என்னுடன் வனத்துக்கு வரவேண்டாம்" என்கிறான். (இது எவ்வளவு உண்மை!) ஆனால் சீதையோ அனைவரும் காண இராமனிடம் சினந்து சீறிப் பேசுகிறாள்: "என் ஒருத்தியால்

மட்டும் தான் இடரோ? என்னை ஒழித்துவிட்டால் உமக்கு வாழ்வில் இன்பமே போலும்!'' என்கிறாள். காப்பிய வரிகள்,

*''முல்லையும் கடல் முத்தும் எதர்ப்பினும்,*
*வெல்லும் வெண் நகையாய்! விளைவு; உன்னுவாய்*
*அல்லை; போத அமைந்தனை ஆதலின்*
*எல்லை அற்ற இடர் தருவாய்'' என்றான் (இராமன்)*

*(அயோத்தி – நகர்நீங்கு – 227)*

*''கொற்றவன் அது கூறலும், கோகிலம்*
*செற்றது அன்ன குதலையள் **சீறுவாள்,***
*உற்று நின்ற துயரம் இது ஒன்றுமே?*
*என் துறந்த பின், இன்பம் கொலாம்?'' என்றாள் (சீதை).*

*(அயோத்தி – நகர் நீங்கு – 228)*

(கோகிலம் போன்று குதலை மொழியள் **சீறினாள்** என்கிறான் கம்பன்). இதற்குப் பிறகு ''பிறிது ஒரு மாற்றம் பெருந்தகை பேசலன்''. அதாவது சீதையின் சீற்ற வெளிப்பாட்டுக்குப் பிறகு இராமன் மறுமொழி எதுவும் கூறவில்லை. எனவே சீதை இராமனோடு சேர்ந்து வன வாழ்க்கையை மேற்கொள்கிறாள். இது இராமன் எடுத்த முடிவு அல்ல. சீதை எடுத்த முடிவே.

அடுத்து, பொய் மானைப் பிடித்துத் தர வேண்டும் என்ற நிகழ்ச்சி, இலக்குவனுக்கும் இராமனுக்கும் மான் குறித்து விவாதம் நடக்கிறது. இறுதியில் இலக்குவன் தானே போய்ப் பற்றி வருவதாகக் கூறி ஆயத்தமாகிறான். இவ்விடத்தில் சீதை இராமனிடம், ''ஏன்? உமக்கு மானைப் பிடித்து வரும் ஆற்றல் இல்லையோ?'' என்று சீதை சீறிச் சினந்து பேசுகிறாள். காப்பிய வரிகள்:

*'' 'நாயக! நீயே பற்றி நல்கலை போலும்' என்னா*
*சேயரிக் குவளை முத்தம் சிந்துபு **சீறிப் போனாள்''***

*(ஆரணிய – மாரீசன் வதை – 67)*

இவ்விடத்தில் கம்பன்,

*''ஆயிடை அன்னம் அன்னாள், அமுது உகுத்தனைய செய்ய,*
*வாயிடை, மழலை இன் சொல் கிளியினின் குழறி, மாழ்கி''*

*(ஆரணிய – மாரீசன் வதை – 67)*

என்கிறான்.

அதாவது, தன் இனிய சொல் தன்மையை ஒரு கணத்தில் மாற்றிக் கடுமை காட்டுகிறாள் என்கிறான். இராமன் மான் பின்னே செல்கிறான். சீதை தன் விருப்பம் நிறைவேறுவது குறித்து மகிழ்கிறாள்.

அடுத்து, இராமனின் அபயக்குரல் கேட்டும் இலக்குவன் அவனுக்கு உதவாதது பற்றிச் சீறிச் சினக்கிறாள். 'உன்னுடைய நெறியில் ஐயம் ஏற்படுகிறது' என்கிறாள். இவ்விடத்தில் சீதையை 'எடுத்த சீற்றத்தாள்' என்கிறான் கம்பன். சீதையின் சீற்றத்தைப் பொறுக்கவியலாது இலக்குவன் அவளைவிட்டு அகல்கிறான். இங்கும் சீற்றம் காண்பித்து தன் விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்கிறாள். இலக்குவனை அப்புறப்படுத்தும் முடிவை அவளே எடுக்கிறாள்.

பிறரைச் சரியாக எடைபோடும் பண்புள்ள இராமனுக்குச் சீதையின் இந்தக் குணம் பெரும் உறுத்தலாக இருந்திருக்க வேண்டும். ஆனால் இக்குறையைப் பெரிதாக எண்ணாமல் இராமன் பொறுத்திருந்த காரணம், மிகப் பல சிறந்த பண்புகளால் பொலிந்து நின்றவள் சீதை. வசிட்டரே 'மங்கை நல்லள்' என்று பாராட்டியிருக்கிறார். அரண்மனை வாழ்க்கையை விட்டுத் தன்னுடன் வனம் போந்தவள். வனவாழ்க்கையின் இடர்களைப் பற்றி எதுவும் எடுத்துரைக்காதவள். தன்னைப் பிரிய வேண்டாம் என்ற எண்ணத்தில்தான் சீற்றம் காட்டுகிறாள் போலும் என்று பெருந்தன்மையாக நினைந்தே இதுகாறும் இராமன் சீதையின் இக்குணக் குறையைச் சுட்டிக் காட்டவில்லை போலும்! (இராமன் காப்பியத்தில் எவ்விடத்திலும் சீதையைக் கடிந்து கொள்வதே இல்லை. அன்புடன் விளையாடி இனிமையாக இருந்தான்).

ஆனால் இப்பொழுது சீதை தருமத்துக்கே தரும சங்கடம் விளைவித்து நிற்கிறாளே! இத்தருணத்தைச் சரியான வாய்ப்பாக இராமன் பயன்படுத்திக் கொள்ள இயல்பாக விழைகிறான் என்றே சொல்ல வேண்டும். எதிர்பாராத தருணத்தில் எதிர்பாராத இடத்திலிருந்து மருமத்தில் பாயும் வண்ணம் எதிராளியிடமிருந்து வரும் சொற்கள் - எதிர் பேச்சு பேசாதவண்ணம் பிறரை வாயடைத்துப் போக வைக்கும் சீற்றமிகு வன் சொற்கள் - எத்தகைய தன்மையன என்று சீதை அறிந்து கொள்ள வேண்டாமா? சீற்றம் காட்டியே தன் விருப்பத்தைச் சாதித்துக் கொள்ளும் பண்பு கொண்டவள், நாளை அயோத்தியின் அரசி என்ற அதிகாரமும் சேர்ந்து விட்டால் என்னதான் செய்யமாட்டாள்! எத்தனை பேரைத்தான் ஆட்டிப் படைக்கமாட்டாள்! எனவே இந்தத் தீய குணத்தை இவளிடமிருந்து வேரோடு அகழ்ந்து எறிவதற்கு இராமனுக்கு இத்தருணம் விட்டால் வேறு எத்தருணம் வாய்க்கும்? என்னதான் அறிவுபூர்வமாக அறிவுரை எடுத்துரைத்தாலும் அனுபவம் தரும் பாடம் போல்

ஆகுமா? எதிர்பாராத இடத்திலிருந்து திடீரென்று ஒருவர் வெளிப்படுத்தும் சீற்றப் பண்பின் தீமையை சீதை எப்பொழுதுதான் உணர்வது? அதனை உணர்த்துவதற்குச் சரியான சமயம் என்று இத்தருணத்தைக் காண்கிறான் இராமன். எனவே இவ்விடத்தில் சீற்றம் கிளர்ந்தெழும் வகையில் சீதையைப் பார்க்கிறான்.

*"பணம் கிளர் அரவு என எழுந்து பார்ப்புறா"*
*(யுத்த - மீட்சி - 61)*

என்பது காப்பிய வரி.

சீதைக்கு இப்பொழுது தான் கூறப் போகிற சொற்கள் எதிர்பாராத இடத்திலிருந்து வருவதாக அவள் உணர வேண்டும். இவ்வாறு இராமன் கணிப்பதற்குக் காரணம். சீதை இராமனைக் கண்ணுற்ற கணத்தில் அவளுடைய உள்ளத்து உணர்வுகளில் ஆவல் பொங்கி மீதூற, உயிரைக் கண்ட பொய்யுடல் போல் இராமனின் அன்பை விழைந்து நின்ற முகத்தைக் கொண்டவளானாள். இராமனிடம் அன்பான அணுகுமுறையையே எதிர்பார்த்து வந்தாள்.

*"..............................................................................*
*போன பேர் உயிரினைக் கண்ட பொய் உடல்*
*தான் அது கவர்வுறும் தன்மைத்து ஆம் எனல்*
*ஆனனம் காட்டுகின்ற அவனி எய்தினாள்"*
*(யுத்த - மீட்சி - 58)*

தன் கற்பு நிலையில் குற்றமில்லை என்பதை உலகம் ஏற்கனவே உணர்ந்து விட்டதால் இராமன் உடனே தன்னை ஏற்றுக் கொண்டு விடுவான் என்று எண்ணுகிறாள். அதையே எதிர்பார்க்கிறாள். இராமனைப் போன்ற அறத்தின் நாயகனுக்குத் தேவியாக வாய்க்கும் பேறு பெற்றவள் இத்தனை பேதைமையுடன் நடந்து கொள்ளக்கூடாதல்லவா?

மேலும், இவ்விடத்தில், சிந்தனையைத் தூண்டும் மற்றுமொரு கருத்து... மிக மிக அவசியமானது ; ஆய்வும் மிகப் பொருத்தமானது.

சீதையின் சீற்றப் பண்பும் தன் முனைப்புக் குணமும் தன்னை மட்டுமே பாதித்திருந்தால், அதனை இராமன் இறுதி வரையில் பொறுத்தே வாழ்ந்திருப்பான். ஆனால் இத்தகைய சீதையின் குணக் குறைவினால் இறுதியாகவும் மிகவும்

மோசமாகவும் பாதிக்கப்பட்டவன் தன் அங்கத்தின் அங்கமாகிய இலக்குவன் என்னும் பொழுது அவன் அதைப் பொறுப்பது எங்ஙனம்?

ஆரணியத்தில் மாரீசன் வதை நிகழ்ச்சிக்குப் பிறகு, இராமனின் மனத்தை வாள் கொண்டறுக்கும் துன்பம் ஒன்று உள்ளது. அதுதான் அன்புணர்வு அன்றி வேறொன்றறியாத அணுக்கத் தொண்டனாகிய இளையோன் இலக்குவனின் ஒழுக்கத்தின் மேல் ஐயமுற்று சீதை அவனிடம் கூறிய சொற்கள். சூழ்நிலைக்கு ஒவ்வாத வகையில் கோலம் புனைந்து நிற்கும் சீதையின் ஒழுக்கத்தின் மேல் உலகம் ஐயுறக்கூடும் என்று இராமன் எண்ணிய வேளையில், இலக்குவனின் ஒழுக்கத்தின் மேல் ஐயுற்றுப் பேசிய சீதையின் தகாத சொற்கள் அண்ணலின் சித்தத்தில் அலைமோதுகின்றன என்றே நாம் ஊகிக்க வேண்டியுள்ளது. அந்த நினைவிலும், சூழ்நிலையின் இறுக்கத்தைக் கருதியும் இராகவன் சீதையின்பால் கடும் மனம் கொண்டவனாகப் பேச ஆரம்பிக்கிறான். தன் இயல்புக்குச் சற்றும் ஒவ்வாத வகையில், படம் எடுத்து நோக்கும் பாம்பைப் போல் அவளைச் சீற்றத்துடன பார்க்கிறான்; பேசுகிறான். பாம்பின் இயல்பு என்ன? தன் வழியே ஏகும் நாகம், தன் உயிருக்கு ஊறு ஏற்படும் சூழலில்தான் எச்சரிக்கை உணர்வோடு படம் எடுத்துச் சீறும். இங்கு அறத்துக்கு ஊறு விளைவித்து நிற்கிறாள் சீதை என்ற எண்ணமே அறத்தை நிலைநாட்டும் எச்சரிக்கை உணர்வை இராமனுக்கு உண்டாக்குகிறது. இராமன் தன் அன்புப் பார்வையை மாற்றிப் படம் எடுக்கும் பாம்பைப் போல் சீதையைப் பார்க்கிறான்.

...................

இளையவனுடைய ஒழுக்கத்தை ஐயுற்ற சானகியை இராமன் ஒருக்காலும் பொறுத்துக்கொள்ளமாட்டான். இலக்குவனின் அன்பை ஐயுறுவது என்பது தன்னையே ஐயுறுவதற்குச் சமம். இராமன் தன் அகவாழ்க்கையில் கற்பு நெறியைத் தழுவியவனாக இருந்தான். ஆனால் அவன் மட்டுமா அப்படி இருந்தான்? அவனுடைய நிழலாகவும் கண்ணின் ஒளியாகவும் வாழ்ந்த இலக்குவனும் அப்படித்தானே வாழ்ந்தான்! மேலும் இலக்குவனும் இராமனும் ஒருவர் பால் ஒருவர் கொண்டிருந்த அன்புக்கு ஈடு ஏது? இலக்குவனின் அன்னை சுமித்திரை இலக்குவன் இராமனுடன் காடேகும்பொழுது "வன வாழ்வில் ஏதேனும் இடர் ஏற்பட்டால் இராமனுடைய உயிரைக் காக்கும் முயற்சியில் நீ முன்னம் முடி" என்கிறாள். அத்தகைய பண்புள்ள தாயின் மகன், அவளுடைய சொற்களை அப்படியே பின்பற்றுகிறான். கர தூடணரை வதைக்க தானே முன் செல்வதாகக் கூறுகிறான். பொய்மானைப் பற்றி ஐயம் கொள்ளும் இலக்குவன், அது அரக்கர் வஞ்சனை என்றால் அது தனக்கே கேடு சூழட்டும் என்று கருதி, தானே சென்று பற்றி வருவதாகக் கூறுகிற பொழுதும் அவனுடைய இராமபக்தி வெளிப்படுகிறது.

இராமனுக்குக் கிடைக்கும் புகழும் பெருமையும் தனக்கே கிடைத்ததாக எண்ணும் இலக்குவன். இராமனுக்கு அயோத்தி அரசின் உரிமை இல்லை என்றானதும் மூட்டாத காலக் கடைத்தீ என மூண்டு எழுகின்றான். விதிக்கும் விதி செய்ய நிற்கும் தன் வில் தொழிலால், உதிக்கும் ஆதவனின் ஆணையால், தன் தமையனுக்கு அரசு உரிமை பெற்றுத் தர வேண்டி யுத்த சன்னத்தனாய்ப் போர்க்கோலம் பூணுகிறான், தந்தையோடு போர் புரிய மின் ஒத்த சீற்றக் கனலுடன் எழும் இலக்குவனை அடக்குவதற்கு இராமன் பெரும்பாடு படுகின்றான். இறுதியில் "நான் கூறும் அறிவுரையை நீ கேளாமல் என் சொற்களைக் கடந்து நீ காரியம் ஆற்றுவது (போர் புரிவது) உனக்கு ஈனம் இல்லையென்று எண்ணுவாயேயானால், நானும் தந்தையின் சொற்கடந்து அரசாள்கிறேன்" என்று கூறி இலக்குவனின் சினத்தைக் தணிக்கிறான். அதன் பிறகு மாற்றம் உரைக்கும் திறனழிந்து மனமடங்குகிறான் இலக்குவன். எனவே இராமனுடைய சொல்லை வேதம் எனக் கொள்ளும் இலக்குவன்,

*"நல்தாதையும் நீ; தனி நாயகன் நீ; வயிற்றில்*
*பெற்றாயும் நீயே; பிறர் இல்லை; "*

*(அயோத்தி - நகர்நீங்கு - 132)*

என்று கூறிச் சினம் தணிகிறான்.

இராமனுடைய விதியில் மனமுவந்து தானும் பங்கு கொள்கிறான் இலக்குவன். உதாரணமாக, தயரதன் இராமனைத்தான் வனத்துக்கு அனுப்பினான். ஆனால் இலக்குவன் அண்ணனோடு சேர்ந்து வாழும் வன வாழ்க்கையைத் தானே தேர்ந்தெடுத்துக் கொண்டான். அப்பொழுது இராமன் இலக்குவனின் முடிவை மறுத்து அன்னையர்க்குத் துணையாக இலக்குவன் அயோத்தியில் வாழ வேண்டுமென்று அறிவுறுத்துகிறான். அச்சொற்களைச் செவியுறவும் மனம் பொறாத இளையோன், தன்னுடைய திண் தோள் குலுங்க விம்மி, விம்மி அழுகிறான். கண்ணீரினூடே இராமனிடத்தில் கேட்கிறான் "நீ இவ்வாறு என்னைக் கைவிட்டு விட நான் உனக்கு என்ன பிழை செய்தேன்?" என்று.

*"ஈண்டு, உனக்கு அடியனேன் பிழைத்தது யாது? என்றான்".*

*(அயோத்தியா – நகர் நீங்கு – 151)*

மேலும், "பெண்ணொருத்தியின் சொற்கேட்டு, மனத்தில் சற்றும் ஈரமின்றித் தான் பெற்ற மகனை 'வனத்துக்கு ஏகு' என்று கூறிய தயரதனின் மைந்தன் நீ என்பதை காட்டுவதற்காகவே என்னை 'அயோத்தியில் இரு' என்ற அறிவுரையை இன்சொல் எனக் கருதிக் கூறுகிறாயோ?".

*“ ‘பைந்தொடி ஒருத்தி சொல் கொண்டு. பார்மகள்*
*நைந்து உயிர் நடுங்கவும் ‘நடத்தி கான்’ எனா,*
*உய்ந்தனன் இருந்தனன் உண்மை காவலன்*
*மைந்தன் என்று, இனைய சொல் வழங்கினாய்’ எனா”*

*(அயோத்தி - நகர்நீங்கு - 153)*

மேலும் “உனக்கு ஏற்பட்டுள்ள கொடுமையைக் கண்டு எனக்கு எழும் சீற்றத்தை நான் அடக்க வேண்டுமென்று நீ ஆணையிடுகிறாய்! இது உன்னை ‘வனம் போ’ என்று கூறிய தயரதனின் ஆணையை விடக் கொடுமையான ஆணையாக உள்ளதே” என்று புலம்புகிறான்.

*“ ‘மாறு இனி என்னை? “நீ வனம் கொள்வாய்” என*
*ஏறின வெகுளியை, யாதும் முற்றுற*
*ஆறினை, தவிர்க’ என, ‘ஐய! ஆணையின்*
*கூறிய மொழியினும் கொடியது ஆம்’ என்றான்”*

*(அயோத்தி - நகர்நீங்கு - 154)*

மேலும், “உன்னிடம் மாறாத அன்பு கொண்டு வாழும் என்னைக் கைவிட்டு விட்டாயா?” என்று இரக்கம் ததும்பக் கேட்கிறான்.

*“கைதுடைத்து ஏகவும் கடவையோ? - ஐயா!”*

*(அயோத்திய - நகர் நீங்கு - 155)*

கைம்மாறு கருதாத இத்தகைய அன்புக்கு இராமன் கடமைப்பட்டவனாகிறான்.

இராமனுக்காக உறக்கத்தைத் துறந்தவன் இலக்குவன். அண்ணனும், அண்ணியும் உறங்கும் இராப் பொழுதில் அவர்களுக்குக் காவல் புரியும் முகத்தான் இரவெல்லாம் உறங்காது வாழ்ந்தவன் இலக்குவன். இலக்குவனின் இத்தகைய இராம சேவையை கண்களால் கண்ட குகன், அதனைப் பரதனுக்கு பின்வருமாறு எடுத்துரைக்கின்றான்.

*“ ‘அல்லை ஆண்டு அமைந்த மேனி அழகனும் அவளும் துஞ்ச,*
*வில்லை ஊன்றிய கையோடும், வெய்து உயிர்ப்போடும் வீரன்,*
*கல்லை ஆண்டு உயர்ந்த தோளாய்! கண்கள் நீர் சொரிய கங்குல்*
*எல்லை காண்பளவும் நின்றான், இமைப்பிலன் நயனம்’ என்றான்”*

*(அயோத்தியா - கங்கை காண் - 42)*

இலக்குவனின் இப்பண்பைப் பற்றிக் காப்பியத்தில் இராவணனும் குறிப்பிடுகிறான்.

*"துறக்கம் எய்தியவரும் துறவாத*
*உறக்கம் என்பதனை ஓட முனிந்தான்"*
*(யுத்த – இராவணன் வானர தானை காண் – 22)*

மேலும், இக்கருத்து காப்பியத்தில் ஆரண்ய காண்டத்தில் கவிக் கூற்றாகக் கம்பனாலேயே கூறப்படுகிறது. சீதையைப் பிரிந்த இராமன் உறக்கம் துறந்து துயருறுகிறான். அவனுடைய உறக்கம் நீத்த நிலையை வருணிக்கப் புகும் கம்பன், பதினான்காண்டுகள் இரவில் துயில் நீத்த தம்பி இலக்குவனின் கண்களைப் போன்றே இராமனின் கண்களும் உறங்காதிருந்தன என்கிறான்.

*"................................ இமைத்தில இராமன் என்னும்*
*புண்ணியன் கண்ணும், வன் தோள் தம்பி கண் போன்றே அன்றே"*
*(ஆரணிய – அயோமுகி – 5 )*

இராமனுக்குத் திண்ணிய பன்னசாலை அமைப்பவன், அண்ணிக்குப் பெண்மையின் நலம் தோன்ற அழகுற வாழ்விடம் அமைக்கிறான். தனியனாய் இருந்து இலக்குவன் அமைத்த இலைக் குடிலைக் கண்டு "இந்தக் கலையை நீ எங்கு எப்பொழுது கற்றாய் இளையோய்?" என்று வியக்கிறான் இராமன். அறிவுசான்ற முறையில் பொய்மான் வஞ்சனையையும் இராமனுக்குக் காலம் தாழ்த்தாது விளக்குகிறான். வஞ்சனை மானால் கேடு சூழுமானால் தானே இராமனுக்கு முன்னால் உயிர் துறக்க வேண்டும் என்றெண்ணித் தானே மானைப் பிடித்து வரச் செல்வதற்கும் முனைகிறான். அம்மட்டோ! தமையனுக்கு இல்லாத வாழ்க்கையின் சுகங்களைத் தானும் அற்பமென எண்ணித் துறக்கிறான். உதாரணமாக, வனவாழ்க்கையில் புல்லிருக்கையில் அமரும் அண்ணனின் நிலையை எண்ணிக் கலங்கும் இலக்குவன், கிட்கிந்தை அரண்மனையில் சுக்ரீவன் தனக்கு அளிக்கும் நல்லிருக்கையைக் கூட மறுத்துவிடுகிறான்.

*"'கல் அணை மனத்தினையுடைக் கைகேசியால்*
*எல் அணை மணி முடி துறந்த எம்பிரான்*
*புல் அணை வைக, யான் பொன் செய் பூந் தொடர்*
*மெல் லணை வைகவும் வேண்டுமோ?' என்றான்."*
*(கிட்கிந்தா – கிட்கிந்தை – 108)*

என்பது காப்பியப்பாடல்.

மேலும் தமையன் உண்டு வைத்த எச்சத்தையே தானும் உண்கிறான் எனும் காப்பியச் செய்தி கற்போர் கண்களில் கண்ணீரை வரவழைப்பதாகும். இராமனுடைய விதியில் தானே மனமுவந்து பங்கு பெறும் இலக்குவன், தனக்கு, அரச மாளிகையில் விருந்து படைக்க சுக்ரீவன் முனையும் பொழுது அவ்விருப்பத்தை மறுக்கிறான். காரணம், ''இராமன் உண்டு எஞ்சிய பச்சிலை, கிழங்கு ஆகியவையே எனக்கு அமிழ்தம். அவனுடைய தவக்காலம் முடியும் முன்னர், நான் காணும் அறுசுவை உணவு எல்லாம் நாய் உண்ட எச்சிலே'' என்கிறான். காப்பியப் பாடல்:

*''பச்சிலை, கிழங்கு, காய், பரமன் நுங்கிய*
*மிச்சிலே நுகர்வது; வேறு நான் ஒன்றும்*
*நச்சிலேன்; நச்சினேன் ஆயின், நாய் உண்ட*
*எச்சிலே அது; இதற்கு ஐயம் இல்லையால்''*

*(கிட்கிந்தா – கிட்கிந்தை – 114)*

மேலும், 'இனி நான் சென்றுதான் அடகு வகைகளை (கீரை) திருத்தி அண்ணலுக்கு அமுது செய்விக்க வேண்டும். எனவே காலம் தாழ்த்தாது எனக்கு விடை கூறுங்கள்' என்கிறான்.

மேலும், சுக்ரீவனிடம், ''எனக்கு உணவு ஒன்று தனியே வேண்டாம். சீதை இருக்கும் இடத்தைக் காட்டினாயானால் அதுவே நீ எனக்கு அமுது ஊட்டினை எனக் கொள்வேன்'' என்கிறான்.

*''மூட்டிய பழி எனும் முருங்கு தீ அவித்து,*
*ஆட்டினை கங்கை நீர் – அரசன் தேவியைக்*
*காட்டினை எனின் – எமைக் கடலின் ஆர் அமிர்து*
*ஊட்டினையால்; பிறிது உய்வும் இல்லையால்''*

*(கிட்கிந்தா – கிட்கிந்தை – 113)*

புலனடக்கத்தில் தசரத குமாரர்களை விஞ்ச இவ்வுலகில் இனிப் பிறிதொருவர் பிறக்க இயலாது! வனத்திலே இராமனுக்கு உடன் வாழச் சீதை இருந்தாள். ஆனால் இலக்குவன் காம உணர்வைச் சிறு வயதிலேயே வென்று விட்டவனாகவே காட்சி தருகின்றான். ஒருக்கணம் கூட தன் மனைவியைப் பற்றிச் சிந்தித்தவனாகவே இலக்குவன் காணப்படவில்லை. இராம சேவையிலேயே தன் இளமையைக் கழிக்கின்றான். இராமனைவிட, புலனடக்கத்தில் இலக்குவனே, மேலானவன் எனும்படிக்கு அமைந்த சில நிகழ்ச்சிகளைக் காப்பியத்தில் காணலாம்.

ஆரண்ய காண்டத்திலே, இராமனை நாடி, சூர்ப்பணகை அழகிய கோல வடிவிலே வருகின்றாள். அந்தக் கோல வடிவமோ எந்த ஆணும் பார்த்து வியக்காமல் இருக்க முடியாது எனும் படிக்கு உள்ளது.

*“பஞ்சி ஒளிர் விஞ்சு குளிர், பல்லவம் அனுங்க,*
*செஞ்செவிய கஞ்சம் நிகர், சீறடியள் ஆகி,*
*அம் சொல் இள மஞ்ஞை யென, அன்னம் என மின்னும்*
*வஞ்சி என, நஞ்சம் என, வஞ்ச மகள் வந்தாள்”*

*(ஆரணிய – சூர்ப்பணகை – 31)*

*“கானின் உயர் கற்பகம் உயிர்த்த கதிர் வல்லி*
*மேனி நனி பெற்று, விளை காமம் நிறை வாசத்*
*தேனின் மொழி உற்று, இனிய செவ்வி நனி பெற்று, ஓர்*
*மானின் விழி பெற்று, மயில் வந்ததுஎன வந்தாள்”*

*(ஆரணிய – சூர்ப்பணகை – 33)*

நூபுரமும் மேகலையும் பூசலிட, வண்டிசைக்கும் குழலோடு வருகின்ற மங்கையை, எதிர்வந்த இராமன் கண்டு “அழகுக்கு எல்லையே இல்லை போலும்! விண்ணிலும் மண்ணிலும் இத்தகைய மென்மை நிறைந்த உருவத்துக்கு ஒப்பாக வேறொரு உருவத்தைக் காண்டல் அரிதே! யார் இந்த நேரிழையாள்?” என்று பார்க்கிறான். காப்பிய வரிகள்:

*“பேர் உழைய நாகர் – உலகில், பிறிது வானில்*
*பாருழையின், இல்லது ஒரு மெல் உருவு பாரா,*
*‘ஆருழை அடங்கும்! அழகிற்கு அவதி உண்டோ?*
*நேரிழையார் யாவர், இவர் நேர்?’ என நினைந்தான்”*

*(ஆரணிய – சூர்ப்பணகை – 36)*

இராமன் பெண்ணழகை ஆராதிப்பவன்தான். அவன் வாழ்க்கையில் அடைந்த பெண் சீதை ஒருத்தியே ஆகையால், அவள் அழகை மட்டுமே என்றும் ஆராதித்தான். அவளுடைய அழகே பெண்ணழகுக்கு எல்லை என்று நினைத்திருந்தான். சீதையும் பேரழகியேயல்லவா?

சீதையின் பேரழகை மண மண்டபத்தில் காணும் விசுவாமித்திரன், “இத்தகைய பேரழகியை மனைவியாகப் பெறுவதற்கு இராமன் ஒரு வில் என்ன, ஏழு மலைகளையும் இற்றுப் பொடியாக்கமாட்டானா?” என்று நினைக்கிறான்.

*"அச்சு என நினைத்த முதல் அந்தணன் நினைந்தான்;*
*பச்சை மலை ஒத்த படிவத்து, அடல் இராமன்*
*நச்சுடை வடிக் கண் மலர் நங்கை இவள் என்றால்,*
*இச் சிலை கிடக்க; மலை ஏழையும் இறானோ?"*

*(பால - கோலம் காண் - 36)*

சீதையின் மேனியழகை இராமன் வனம் புகும் கால முதற்கொண்டே வருணிக்கத் தொடங்கி விடுகின்றான். சித்திரக் கூடப் படலத்தில், அழகை ஆராதிக்கும் இராமனின் மன இயல்பு மிகச் சிறப்பாக வெளிப்படுகின்றது. இயற்கையழகையும், சீதையின் அங்கங்களின் அழகையும் இராமன் வருணிக்கும் பாங்கு மிக அழகு. மேலும் சீதையின் அழகைப் பற்றி அனுமனிடம் வருணிக்கும்பொழுது ஒரு நல்ல கலாரசனையுடைய கவிஞனை இராமனிடத்தில் காண்கிறோம். இத்தனை நுணுக்கமாகப் பெண்ணழகை ஓர் ஆண் கண்களால் சுவைக்க முடியுமா என்னும்படிக்கு விளங்கும் அதியற்புதமான வருணனையாக அது அமைகின்றது. வில்லறத்தில் வல்லவனாகிய இராமன் இல்லறச் செல்வியாகிய தன் மனைவியின் அழகை அணுவணுவாக நுகர்வதிலும் வல்லவனாகவே காட்சி தருகிறான். அழகைக் கண்களுக்கு விருந்தென்று சுவைப்பது தவறல்லவே! அதிலும் தன் மனைவியின் அழகைத்தானே ரசித்தான் இராமன்! ஆனாலும் எதிர்பாராமல் காமவல்லி போல சூர்ப்பணகை எதிர் தோன்றவும், இராமன் அவளழகில் ஒரு கணம் திகைத்துத்தான் போகிறான்! அவளது மேனியழகைக் கண்டு யார் இந்தப் பேரழகி என்றும் வியக்கிறான். அதிலும் தவறில்லைதான்! பிற பெண்டிரின் அழகைத் தனக்கு உரிமையாக்கிக் கொள்ள எண்ணினால்தானே தவறு! எனவே இராமன் அவளைக் கண்களால் கண்டதோடு சற்று உரையாடவும் செய்கிறான்! அதிலும் தவறில்லைதான்! தனியே ஒரு பெண் வனத்தில் நின்றால் எவரும் அவளைப் பற்றி உசாவி அறியவே விரும்புவர். ஆனால் சூர்ப்பணகை காம உணர்வுடன் பேசத் தொடங்கிய பின்னும் மேலும் இராமன் உரையைத் தொடர்வதுதான் தவறாகப் போய் விடுகிறது. ....... மென்மேலும் உரை நிகழ்த்தும் அவளிடம் இவ்விடத்தில் இலக்குவன் தொடர்பாக இராமன் ஒரு கருத்தைக் கூறுகிறான். 'நானாவது இத்தனை காலம் உன்னிடம் உரையாடினேன். இலக்குவன் கண்டால் வெகுண்டு இந்நேரம் உன்னை அழித்தேயிருப்பான். இவ்விடம் விட்டு ஓடிப் போ!' என்கிறான்.

*"இளையவன் முனியும்; நங்கை! ஏகுதி விரைவில் என்றான்"*

*(ஆரணிய - சூர்ப்பணகை - 67)*

இராமனின் இத்தகைய கருத்துக்கொப்ப, அரக்கியைக் கண்டவுடன், சீதைக்கு அவளால் ஆபத்து என்று உணரும் அக்கணத்திலேயே, இலக்குவன் சூர்ப்பணகையின் செவிகள், நாசி, முலைகள் ஆகியவற்றை வெட்டி அங்கபங்கம் செய்கின்றான். இவ்விடத்தில் இராமனைக் கூட ஒரு கணம் திகைக்கச் செய்த சூர்ப்பணகையின் மாய அழகு இலக்குவனிடத்தில் செல்லுபடியாகவில்லை.

அடுத்து, கிட்கிந்தையை ஆளும் சுக்ரீவனிடம் அவனுக்குள்ள கடமையை நினைவுபடுத்துவதற்காக அவன் வாழும் அரண்மனைக்கு இலக்குவன் செல்கின்றான். அப்பொழுது வானரக் குலத்து மங்கையர் அவ்வரண்மனையில் அரம்பையர் போல் திகழ்ந்து ஒளி வீச நிற்கின்றனர். மங்கையர் குழாம் என்றறிந்தவுடன் அந்தப் பக்கமே கண்களைத் திருப்பவும் அஞ்சியவனாய் ஒதுங்கிப் போகின்றான் இலக்குவன். காப்பியச் சான்று:

*"ஆர்க்கும் நூபுரங்கள் பேரி, அல்குல் ஆம் தடந் தேர் சுற்ற*
*வேற் கண், வில் புருவம் போர்ப்ப மெல்லியர் வளைந்தபோது,*
*பேர்க்க அரும் சீற்றம் பேர, முகம் பெயர்ந்து ஒதுங்கிற்று அல்லால்*
*பார்க்கவும் அஞ்சினான், அப் பனையினும் பெரிய தோளன்"*
*(கிட்கிந்தா – கிட்கிந்தை – 47)*

தாமரை வதனம் சாய்த்து, தனு நெடும் புரை தரையில் ஊன்றி, மாமியர் குழாத்திடை வந்த மைந்தன் போன்று தலைகுனிந்து நின்றான்.

எனவே, புலனடக்கத்தில் இராமனையும் விஞ்சியவன் இலக்குவன். எவரையும் சரியாகக் கணிக்கும் ஆற்றல் கொண்ட இராமன் இதைத் தெரிந்தே வைத்திருந்தான். ஆனால் அத்தகைய சான்றோனிடம் – மைந்தனைப் போல் அன்பு பாராட்ட வேண்டிய இலக்குவனிடம் – சீதை எத்தகைய வன் சொற்களை வீசினாள்! நாவால் சுட்டாள்! இலக்குவனின் மன ஒழுக்கத்திற்கே களங்கம் கற்பித்தாள்! உலகெலாம் தொழுது ஏத்த நிற்கும் காகுத்தனுடைய கற்புடைய மனைவி கூறக்கூடிய சொற்களா அவை! யாரைப் பார்த்து எத்தகைய பழியை நாக்கூசாமல் கூறுவது என்பதற்கும் ஒரு வரன் முறை உள்ளதே! எத்தகைய இக்கட்டிலும் இத்தகைய பழியைத் தன் தம்பியின் மேல் வீசிய சீதையைப் பொறுத்துக் கொள்வதற்குரிய மனவலிமை இராமனுக்கே இல்லை. இலக்குவனா? சீதையா? எனும் நெருக்கடியான கேள்வி எழுந்தால் இராமன் சீதையை விடுத்து இலக்குவனையே தேர்ந்தெடுப்பான். அந்த அளவுக்குத் தன்னுடைய நற்பண்புகளால் இராமனை இலக்குவன் ஈர்த்திருந்தான். இராமன் இலக்குவன் பால்

கொண்ட அன்பு சீதை என்ன, வேறெவர் மேலும் கொண்டிருந்த அன்பையும் விட பெரியது என்பதற்குக் காப்பியத்தில் சான்றுகள் ஏராளம். எடுத்துக்காட்டுக்கு ஒரு சில!

........... சீதையைத் தேடி வரும்போது இலக்குவன் காணாமல் போய் விடுகிறான். இராமன் அவனுடைய பிறிவாற்றாது புலம்பும் பொழுது, 'தாய், தந்தை, சீதை ஆகியோரைப் பிரிந்து வாழக்கூட மனம் ஒப்புவேன். ஆனால், உன்னைப் பிரிந்து உயிர் வாழ மனம் ஒருப்படேன்' என்கிறான்.

*"என்னைத் தரும், எந்தையை என்னையரை,*
*பொன்னைப் பொருகின்ற பொலங் குழையால் –*
*தன்னை, பிரிவேன்; உளென் ஆவதுதான்,*
*உன்னைப் பிரியாத உயிர்ப்பு அலவோ?"*

*(ஆரண்ய – அயோமுகி – 70)*

பிறகு அரக்கி அயோமுகியால் இலக்குவனுக்கு இடர் ஏற்பட்ட இடத்தை இராமன் கண்டடைந்தபொழுது, கன்றைக் கண்டுவிட்ட பசு போன்ற மனம் கொண்டவனானான் இராமன் என்கிறான் கம்பன்.

*"ஊற்று உறு கண்ணின் நீர் ஒழுக நின்றவன்,*
*ஈற்று இளங் கன்றினைப் பிரிவுற்று, ஏங்கி நின்று,*
*ஆற்றலாது அரற்றுவது, அரிதின் எய்திட*
*பால் துறும் பணி முலை ஆவின் பான்மையான்"*

*(ஆரணிய – அயோமுகி – 84)*

அதன்பின் இலக்குவனைப் பலமுறை ஆரத் தழுவித்தழுவி தன் கண்ணீராலேயே இளவல் மேனியைக் கழுவிக் கவலை தீர்ந்தான் இராமன்.

*"தழுவினன் பல்முறை; தாரைக் கண்ணின் நீர்*
*கழுவினன், ஆண்டு அவன் கனக மேனியை"*

*(ஆரணிய – அயோமுகி – 85)*

அடுத்து யுத்த காண்டத்தில் இந்திரசித்துவின் பிரம்மாத்திரத்தினால் கட்டுண்டு கிடக்கும் இலக்குவனை இறந்தவனாகக் கருதிக் கொண்டு அழும் இராகவன், "என்

இளையவனுக்கு இந்தக் கேட்டை சீதையின் பொருட்டு நான்தான் வருவித்தேன்'' என்கிறான்.

*''வேள்விக்கு ஏகி, வில்லும் இறுத்து, ''ஓர் விடம் அம்மா*
*வாழ்விக்கும்!'' என்று எண்ணினென், முன்னே வருவித்தேன்*
*சூழ்வித்து என்னைச் சுற்றினரோடும் சுடுவித்தேன்;*
*தாழ்வித்தேனோ, இத்தனை கேடும் தருவித்தேன்''*

*(யுத்த – பிரம்மாத்திர – 210)*

*" 'எந்தை இறந்தான்' என்றும் இருந்தேன்; உலகு எல்லாம்*
*தந்தனென் என்னும் கொள்கை தவிர்ந்தேன்; தனி அல்லேன்;*
*கந்தன் இருந்தாய் நீ என நின்றேன் ; உரை காணேன்;*
*வந்தனென் ஐயா! வந்தனென் ஐயா! இனி வாழேன்!''*

*(யுத்த – பிரம்மாத்திரப் – 205)*

*''தாயோ நீயே; தந்தையும் நீயே; தவம் நீயே;*
*சேயோ நீயே; தம்பியும் நீயே; திரு நீயே;*
*போயோ நின்றாய்; என்னை இகழ்ந்தாய்; புகழ் பாராய்*
*நீயோ; யானோ, நின்னினும் நெஞ்சம் வலியேனோ?''*

*(யுத்த – பிரம்மாத்திர – 20)*

இவ்வாறு இலக்குவனைக் குறித்துத் தன் பாசம் வெளிப்படப் புலம்பும் இராமன். இளையோன் இறந்துபட்டனனோ அன்றி, மூச்சு உள்ளதோ, இல்லையோ? என்று பதைக்கிறான்.

''உழைக்கும் ; வெய்து உயிர்க்கும் ; ஆவி உருகும், போய் உணர்வு சோரும் ;
இழைக்குவது அறிதல் தேற்றான், ''இலக்குவா! இலக்குவா!'' என்று

அழைக்கும் ; தன் கையை வாயின், மூக்கின் வைத்து, அயர்க்கும்; ''ஐயா!
பிழைத்தியோ!'' என்றும் ....................................''

(யுத்த – நாகபாச – 222)

இவ்வாறு அரற்றிப் புலம்புகிறான் இராமன்.

இராமனிடம் தன் உயிரையே வைத்து ஓர் அடிமையைப்போல் தொண்டு செய்யும் இலக்குவனிடம் இராமனும் தன் உயிரையே வைத்திருத்தல் இயல்பு அல்லவா? இத்தகைய அன்பனைச் சீதை - அது தன் பேரில் கொண்டிருந்த அபரிமிதமான அன்பின் காரணமாகவே என்றாலும் கூட - தீப்பொறி பறக்கும் சொற்களால் வசை பாடிய செய்கையை இராமன் எந்நாளும் பொறுத்துக் கொள்ளக்கூடியவன் அல்லன். மேலும், பெறக்கூடிய தியாகத்தையும், உழைப்பையும், தொண்டையும், பக்தியையும் இலக்குவனிடம் பெற்றுக் கொண்டுவிட்டு, தன் காதலுக்குரிய மனைவியின் பொருட்டு அவற்றைப் புறக்கணித்துவிடுவது என்பது இராமனின் கணிப்பில் நன்றி கொன்ற செயலேயாகும். அதுவே நன்றி மறந்த செயலென்றால், இலக்குவன் மேல் ஒழுக்க ரீதியாகப் பழியும் சுமத்துவது கழுவாய் இல்லாத பெரும் பாவம் அல்லவா? இத்தகைய பாவத்தைச் செய்தவள் சீதை. இதை இராமன் மறக்கவில்லை. அறத்தின் மூர்த்தியாக விளங்கும் இராமன் சீதையை இந்தக் குற்றத்திற்காக தண்டிக்கவே வேண்டும். இலக்குவனுக்குரிய நீதியையும் வழங்கவே வேண்டும்.

மேலும் ஒழுக்கம் பற்றிய கருத்தில் இராமனுக்கு ஒரு சிறப்பான அணுகுமுறை உள்ளதைக் காப்பியம் காட்டுகிறது. இராமனுக்கு வெளிப்புறச் சடங்குகளை விட பிற உயிர்கள் - அவை மனிதனாயினும், தேவனாயினும், விலங்காயினும், பறவையாயினும் - அவற்றின் மனத்தூய்மையே முக்கியம். இத்தகைய இராமனின் பண்பு நலன், அவன் வேட்டுவக் குகன், பக்தை சபரி, குரங்கன் சுக்ரீவன், அரக்கன் வீடணன், பறவை சடாயு, தேவன் விராதன், கவந்தன் (தனு) ஆகியோர் பால் கொண்ட அன்புச் செயல்களின் மூலம் வெளிப்படுகிறது. அகலிகையையும், “நெஞ்சினால் பிழைப்பு இலள்” என்று பொறுத்தருளியவன் அல்லவா? எனவே சீதையின் வசைச் சொற்கள் சீதையின் மனத்தூய்மையின்மையைக் காட்டுவதாகவே இராமன் எண்ணுவான். வள்ளுவனின் வாக்கும் அதுவேதான்.

*“சொற்கோட்டம் இல்லது செப்பம் ஒருதலையா*
*உட்கோட்டம் இன்மை பெறின்” - (குறள் - 119)*

என்பது குறள் வாக்கு.

பொருள்: மனத்தில் குற்றம் உண்டானால் தவிர சொல்லில் குற்றம் ஏற்பட வாய்ப்பில்லை.

பகைவனுக்கருளும் இராமனின் அருளுள்ளம்கூடப் பொறுக்க இயலாத படிக்குச் சீதை அப்படி இலக்குவனிடம் என்னதான் கூறினாள்? அவள் இலக்குவனை என்னதான் வசை பாடினாள்? இராமனுடைய குரல் போன்று ஒலிக்கும் பொய் மானின் அபயக் குரல் கேட்டும் பதற்றமடையாமல் நிற்கும் இலக்குவனைக் கண்டு சீதை சீற்றமடைகிறாள். "இராமனுடைய உயிருக்கு ஆபத்து என்று அறிந்தும் நீ இங்கு நிற்கும் தன்மையைக் கண்டால், ஒழுக்க நெறி பிறழ்ந்த நிலையினனாகத் தோன்றுகிறாய். (நின்ற நின் நிலை, இது, 'நெறியிற்று அன்று') இனி ஒரு கணம் நீ இங்கு நின்றாலும் நான் தீப்பாய்ந்து இறப்பேன்" என்கிறாள். அந்தப் பழி பாவச் செயலின் சிந்தனையும், அது தந்த வருத்தமும்தான் இப்பொழுது தூய்மையான சீதையின் கற்பைப் பழிக்கும்படியான சூழலை விதி இராமனுக்கு உருவாக்கித் தருவதாக அமைத்துவிடுகிறது. சீதையின் ஒழுக்கத்தைப் பழிக்கும் சிந்தனையையும் இராமனுக்குத் தந்து விடுகிறது.

*"ஒழுக்கமு டையவர்க்கு ஒல்லாவே தீய*
*வழுக்கியும் வாயாற் சொலல்" – (குறள் – 139)*

பொருள்: தவறியும் தீய சொற்களைப் பேசுதல் ஒழுக்கம் உடையவர்க்குப் பொருந்தாததாகும்.

எனவே ஒழுக்கம் என்பது கற்பு நிலையை மட்டும் குறிப்பதாகாது. எவரிடத்தில் எவ்வாறு ஒழுக வேண்டும் (நடத்தை, பேச்சு இவற்றில்) என்ற அறியாமையும் கூட ஒழுக்கம் தவறிய செயலேயாகும். எனவேதான் சீதை இலக்குவனிடத்தில் பேசிய சொற்கள் நல்லொழுக்கத்தின் பாற்பட்டன அல்ல என்ற எண்ணத்திலேயே இராமன் சீதையைப் பார்த்து, "ஒழுக்கம் பாழ்பட மாண்டிலை" என்றும், "உன் ஒழுக்கச் செய்தியால்" என்றும் வசைச் சொற்களை வீசுகிறான். காரணம், இலக்குவன் இராமன் பொருட்டு நல்ல உணவையும், உறக்கத்தையும் துறந்தவன் அல்லவா? அத்தகையவனுடைய ஒழுக்கத்தைப் பற்றிக் குறை கூற சீதைக்கு உரிமையில்லை என்ற கருத்தை மனத்தில் கொண்டே, இலக்குவனைப் போலன்றி "அரக்கர் மாளிகையில் நன்றாக உண்டும் உறங்கியும் வாழ்ந்தவள் நீ" என்று வசைபாட ஆரம்பிக்கின்றான் இராமன் என்று கற்போர் உய்த்துணர்ந்து கொள்ள வேண்டும்.

எளியார் மேல் இல்லாத பழியைச் சுமத்தினால் – அதிலும் ஒழுக்கத்தில் ஐயமுற்றால் – தூய்மையே உருவாகி, தவ வாழ்க்கையில் ஒழுகும் அன்புக்குரியவர்மேல் வசை சொற்களை வீசினால் அதன் வலி என்னவென்பதைச் சீதை அறிய வேண்டாமா? அரசன் என்ற நிலையில் தர்மம் அனைவருக்கும் பொது

அல்லவா? தன் மனைவி என்பதனால் தவறு சரியாகி விட முடியுமா? அறியாமையால் தவறுகள் பல செய்தவள் சானகி! தன் பால் அப்பழுக்கற்ற அன்பு கொண்ட நற்செயல் ஒன்றைத் தவிர அறியாமலும் கூட எந்தத் தவறும் செய்யாதவன் இலக்குவன்! இராமனுக்காக இளமை இன்பத்தையெல்லாம் துறந்தவன். வாழ்வின் அடிப்படைத் தேவையான நல் உணவும் துறந்தவன். இயற்கைக்கு மாறாக உறக்கமும் துறந்தவன்! அவனுக்கு இழைக்கப்பட்ட அநீதிக்கு வாய் திறந்து இலக்குவன் நீதி கேட்க மாட்டான்! அரசன் என்ற முறையில் இராமனே அவனுக்கு நீதியை வழங்க வேண்டும். சீதையின் தவறுக்குத் தண்டனையும் தரவேண்டும்.

சீதையின் அடாத செய்கைக்கு என்றாவது ஒரு நாள் தண்டனை தரக்கூடியவன்தான் இராமன்! அது அயோத்திக்குச் சென்ற பிறகும்கூட இருந்திருக்கலாம். தவற்றைச் சுட்டிக் காட்டுதலும், அதற்குரிய தண்டனையும் உறுதியாக உண்டு. வாய்ப்புக்காகக் காத்திருக்கும் பண்பினன் இராமன்! அந்த வாய்ப்பை இப்பொழுது சீதையே தந்துவிட்டாள். இதுதான் வினைப்பயன் என்பது.

இராமன் மறைகளை நன்கு கற்றுத் துறை போகியவன். ஆதலால் கர்மவினை தத்துவத்தைப் பழுதற அறிந்தவன். சுக்ரீவனிடம் உரையாடும்பொழுது இராமன்,

*"இறத்தலும் பிறத்தல்தானும் என்பன இரண்டும் யாண்டும்*
*திறத்துளி நோக்கின், செய்த வினை தரத் தெரிந்த அன்றே?"*
*(கிட்கிந்தா – அரசியல் – 15)*

என்கிறான். விதியின் பிழையே வாழ்க்கை நிகழ்ச்சிகள் என்பதனை மெய்ஞ் ஞானமாகக் கொண்ட இராமன், இப்பொழுது நிகழ்ச்சிகள் கூடி வந்து சீதை தன் முன் நிற்பதையும் விதியின் செயலாகவே காண்கிறான். விதியின் கைகளில் தான் ஒரு கருவியாகச் செயல்பட்டுச் சீதைக்குக் கர்ம வினைப் பயனை அளிக்கத் தொடங்க வேண்டியதுதான் என்று முடிவெடுக்கிறான். எனவேதான் இலக்குவனின் ஒழுக்கத்தை ஐயுற்று நாகம் போலச் சீறிச் சினந்த பண்பு காட்டிய சீதையை இராமனும், இங்குப் படம் எடுத்த பாம்பு போல் பார்க்கிறான். ................

* * * * *

தன்னைப் பற்றி இராமனுடைய மனத்தில் ஓடும் சிந்தனைகளைப் பற்றி அறியாதவளாக, தன் கற்புத் திறன் பற்றிய பீடும் பெருமையும் பொங்க, அழகுக் கோலத்தில் வந்த சீதை இப்பொழுது இராமன் முன் நிற்கிறாள். இராமனைக்

கண்டவுடன் சீதையின் கண்களிலிருந்து கண்ணீர் அருவியாகப் பெருகி முலைத் தடங்களின் வழியே ஓடிக் கொண்டே இருக்கிறது. பிரிந்த பின் கூடும் அனுபவத்தால் பெருகும் ஆனந்தக் கண்ணீர் அது. இராமனுக்காக நிறை காத்து வாழ்ந்த தன்னிடம் அவன் எத்தகைய அன்பான சொற்களைக் கூறப் போகிறானோ என்று ஏங்கும் உள்ளத்தோடு சீதை நிற்கிறாள். அந்த அன்பின் இனிமையே தன்னை உடைந்து போக வைத்துவிடுமோ என்ற ஐயப்பாட்டுடன் சீதை நிற்கிறாள். எல்லோரும் குழுமியுள்ள சபையில் தான் தன் உணர்வுகளைக் கட்டுப்படுத்திக் கொள்ள வேண்டும் என்ற குலமகளுக்குரிய உணர்வுடன் பெண்மை நலம் காத்து சீதை அங்கு நிற்கிறாள்................. இந்த உண்மையை, 'வணங்கு இயல் மயிலினை, கற்பின் வாழ்வினை' என்ற சொற்களைக் கொண்டு சீதையை இங்கு கம்பன் குறிப்பிடுவதால் உணர்கிறோம். கற்பினுக்கு வாழ்வே ஆன இத்தகைய சீதையை இராமன் படம் எடுத்து நிற்கும் நாகம் போன்று சீற்றத்துடன் பார்த்துப் பின்வருமாறு கூறுகிறான்:

*"ஊண் திறம் உவந்தனை; ஒழுக்கம் பாழ்பட*
*மாண்டிலை, முறை திறம்பு அரக்கன் மா நகர்*
*ஆண்டு உறைந்து அடங்கினை; அச்சம் தீர்ந்து இவண்*
*மீண்டது என் நினைவு? "எனை விரும்பும் என்பதோ?"*

*(யுத்த - மீட்சி - 62)*

பொருள்: "அரக்கருடைய நகரிலே இருக்கும் நல்ல உணவு உவந்து உண்டு, பெண்ணொருத்தி பற்றி ஒழுக வேண்டிய நெறிகளை மறந்து வாழ்ந்துவிட்டு, இப்பொழுது சற்றும் அச்சமின்றி என்னிடம் வந்துள்ளாயே! என்ன காரணம்? நான் எத்தகையவளாக இருந்தாலும், "என்னை விரும்பி இராமன் ஏற்றுக் கொள்வான்" என்ற எண்ணத்தினாலா?"..........

இந்தக் கேள்வி யாருக்காக கேட்கப்படுகிறது தெரியுமா? அங்கே குழுமியிருப்பவர்களில் எவராவது "சீதை கணவனைப் பிரிந்து வாழ்ந்தவள் போலவா தோன்றுகிறாள்? கணவன் தன்னை ஏற்றுக் கொள்வானோ, மாட்டானோ என்ற அச்சம் சிறிது கூட இல்லையே! இருக்கட்டும். இராமன் என்னதான் செய்கிறான் என்று பார்ப்போம். ஏற்றுக் கொண்டாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை! நீதி நெறி சட்டதிட்டங்கள் எல்லாம் நம் போன்ற குடிமக்களுக்குத்தானே! அரச குடும்பத்து நெறிகள் எல்லாம் வேறு! அங்கு அவர்களுடைய விருப்பம்தான் சட்டம்! என்னதான் நடக்கிறதென்று பார்ப்போம்!" என்று நினைத்துக் கொண்டு நிற்பவர்களுக்காகக் கேட்கப்படும் கேள்வி இது! இராமனுடைய திட்டம், "இந்தக் கேள்வியை இராமனே கேட்டவுடன், இப்படி நினைத்தவர்களுடைய மனம் உடனடியாக மாறும்! அழுது

கண்ணீர் வடிய நிற்கும் இவளைப் பார்த்து இப்படியா கேள்விகள் கேட்பது? இரக்கத்துக்குரியவள் அல்லவா இவள்!'' என்று சீதை பால் பார்வையாளர்கள் அன்பு கொள்வர் என்பதற்காகக் கேட்கப்பட்ட கேள்வி! இராமன் இக்கேள்வியைக் கேட்டதும், ''சரியாகத்தான் கேட்கிறார். கேட்க வேண்டிய கேள்விகள்தான்'' என்று அவர்கள் திருப்தி கொள்வதற்கு, அவர்களுக்காகக் கேட்கப்படும் கேள்வி இது.

அடுத்து கேட்கிறான் ;

*''உன்னை மீட்பான்பொருட்டு, உவரி தூர்த்து, ஒள்ளிர்*
*மின்னை மீட்டுறு படை அரக்கர் வேர் அற,*
*பின்னை மீட்டு, உறு பகை கடந்திலேன்; பிழை*
*என்னை மீட்பான்பொருட்டு, இலங்கை எய்தினேன்''*
*(யுத்த – மீட்சி – 63)*

பொருள்: ''கடலைக் கடந்து வந்து அரக்கர் குலத்தை வேரொடு அழித்தது உன்னை மீட்கும் பொருட்டல்ல என்பதை உணர்க. ''மனைவியில்லாதவன் – சிறையெடுத்தவனை அழித்துப் பகை முடிக்க இயலாதவன் – அயோத்தி அரசனாகி மக்களைக் காப்பது எங்ஙனம் சாத்தியம் என்ற பழியிலிருந்து என்னைக் காப்பாற்றிக் கொள்ளும் பொருட்டே இலங்கைக்கு வந்தேன் என்பதையும் உணர்வாயாக..............''

இந்த விளக்கம் யாருக்காக? கூட்டத்தில் எவரேனும், ''இப்படி நன்றாக உண்டு உறங்கி அச்சமின்றி வாழ்ந்தவளாகத் தோன்றும் இவளுக்காகவா இராமன் படாத துயர் எல்லாம் பட்டு கடல் தாண்டி வந்து உயிரைப் பணயம் வைத்து, இராவணனுடைய மூலபலச் சேனை முடிய முற்றாக அரக்கர்களை அழிக்க மனம் கொண்டான்? இவர்களை எவர் கேள்வி கேட்க முடியும்? சீதையின் எல்லாக் குறைகளையும் ஏற்றுக் கொண்டு கூட்டிக் கொண்டு போவதற்குத்தான் இந்தப் போரே நடந்தது போலும்!'' என்று பேசுவார்களாயின் அவர்களுக்காகக் கேட்கப்படும் கேள்வி இது. இராமனுடைய திட்டம் இராமனே சீதை மேல் குற்றம் சொல்லும்பொழுது உலகம் ''இது அநீதி! அரக்கன் இராவணனிடம் படாதபாடு பட்டுத் துன்புற்று வாழ்ந்தவளிடம் அன்புள்ள கணவன் பேசும் பேச்சா இது! என்ன இருந்தாலும் ஆண்களுக்கு அவர்கள் பெருமையே பெருமை! பெண்களுடைய தலைவிதி பழி ஏற்பதுதான்'' என்று கூறவேண்டும் என்பதுதான்.

அடுத்து, ''அரக்கர் வாழ் நிலையை நீயும் பின்பற்றினாய். ஊன் உண்டாய்! மது அருந்தினாய்! வாழ் நெறி மாறி வாழ்ந்துவிட்டு இறந்து போகாமல் இன்னும் உயிர்

வாழ்கின்றாயே! நான் ஏற்றுக் கொள்ளக்கூடிய விருப்பத்திற்குரிய பண்பு உன்னிடம் என்ன உள்ளது? உரை செய்வாய்'' இக்கருத்தமைந்த பாடல்:

*''மருந்தினும் இனிய மன்னுயிரின் வான் தசை*
*அருந்தினையே! நறவு அமைய உண்டியே?*
*இருந்தனையே? இனி எமக்கும் ஏற்பன*
*விருந்து உளவோ? உரை – வெறுமை நீங்கினாய்!''*

*(யுத்த - மீட்சி - 64)*

(இவ்விடத்தில் நமக்கு ஓர் ஐயம் தோன்றுகிறது. இந்திரனோடு இன்பம் அனுபவித்தவள் அகலிகை என்ற வரலாற்றைக் கேட்ட பின்னரும்,

*''நெஞ்சினால் பிழைப்பு இலாளை நீ அழைத்திடுக''*

*(பால - அகலிகை – 27)*

என்று கௌதம முனிவரிடம் கூறி, மாசு அறு கற்பின் அணங்காகிய அகலிகையை இராமன் வணங்கினான் என்று காப்பியம் கூறுகிறது. ''மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்து அறன்'' என்ற வள்ளுவனின் கருத்துக்கொப்ப, இங்கு இராமன், உடலால் பிழை செய்திருந்தாலும், மனம் அறியாமல் செய்த பிழையாகையால் அது குற்றம் ஆகாது என்று உலகமறியாத பால பருவத்திலேயே அழகாக அறம் போதிக்கின்றான் இராமன். ஆனால் சீதை மனத்தாலும் பிழைத்தவள் இல்லை என்றறிந்திருந்தும் இத்தகைய கேள்விகளைச் சினமும், சீற்றமும் கொப்பளிக்க இராமன் கேட்பதற்குக் காரணம் முன்பே கூறப்பட்டதுபோல் சீதையின் அலங்காரத் தோற்றம்தான். சீதையின் இலங்கைப் பண்பாட்டு முறையில் அமைந்திருந்த ஆடம்பரமான ஒப்பனையானது, சூழ்நிலைக்குப் பொருந்தாததாக இருந்ததுதான். சார்ந்த வண்ணமாகும் இயல்பு மனத்துக்கு உண்டு. இங்கு ''பாதாதிகேசம் கோலம் புனைந்து நிற்பதுதான் இலங்கைப் பண்பாட்டின் தவக்கோலம் போலும்! தவத்தினனாகிய இராமனை இந்திராணி போன்ற தோற்றத்தோடு எதிர்கொள்வதுதான் இலங்கைப் பண்பாட்டின் எழுதப்படாத சட்டம் போலும்!'' என்று உலகம் நினைக்கும்படியல்லவா நிகழ்ச்சிகள் நடக்கின்றன! இலக்குவன் இழைத்த இலைக்குடிலில் சீதை இதுகாறும் வாழ்ந்திருந்தாலும்கூட, மனத்தால் இராவணனை இவள் விரும்பியிருக்கலாம் என்று பிறர் எண்ணும்படியல்லவா அலங்கார தேவதையாக வந்து நிற்கிறாள் சீதை'' என்னும் ஆதங்கத்தில்தான் இராமனுடைய வாக்கில் ஆத்திரத்துடன் கூடிய சொற்கள் நெருப்புத் துண்டங்களாய் வந்து விழுகின்றன.)

ஆகவேதான் இராமன் மேற்கண்டவாறு கேள்விகள் கேட்கிறான். இக்கேள்விகள் யாருக்காக? "ஓராண்டு காலம் இலங்கையில் இருந்த சீதை என்ன உண்டிருக்க முடியும்? இங்கு ஊன் உணவும், நறவும்தானே முக்கிய உணவுகள்! (திரிசடையின் நட்பு பற்றியெல்லாம் உலகம் அறிந்திருக்க வாய்ப்பில்லையே) அவற்றைத்தானே உண்டிருப்பாள்! இராவணனை வெறுத்தாள் என்கிறார்களே! இவள் அணிந்திருக்கும் அணிகலன்கள் எவருடையவை? இராமனா கொண்டு வந்தார்? எல்லாம் இராவணன் அளித்த வெகுமதிகளாகத்தானே இருக்கும்! எத்தனை பொருத்தமான அணிகள் பார்! எவ்வளவு நேர்த்தியான அலங்காரம்! இதில் இலங்கைப் பண்பாட்டில் செய்யப்பட்டுள்ள ஒப்பனை வேறு! போகத்தை விரும்பும் இந்திராணி போல அல்லவா தோன்றுகிறாள்! இந்த ஒப்பனையைப் பார்த்தாலே தெரியவில்லையா, இவள் இலங்கையின் பழக்க வழக்கங்களைப் பின்பற்றி வாழ்ந்தவள் என்று" ....... இவ்வாறு கூட்டத்தில் எவரேனும் எண்ணினால் அவர்களுக்காகக் கேட்கப்பட்ட கேள்வி இது. அப்படி எண்ணியவர்களும் கூட, இராமனே இப்படிக் கேட்டவுடன், "அந்தோ! பரிதாபம்! உடல் மெலிந்து நலிந்து கிடக்கும் இவளிடம் கேட்க வேண்டிய கேள்வியா இது? ஏதோ கணவன் வெற்றி விழா கொண்டாடுகிறானே என்று சில அணிகலன்கள் அணிந்து கொண்டு வந்திருக்கிறாள். பல காலப் பிரிவுக்குப் பின்னர் கணவனைக் கூடும் பெண் அமங்கலமாக அணிகலன்கள் இல்லாமலா தோன்றுவாள்! இராமன் அபாண்டமாகப் பேசுகிறானே!", என்று மனம் மாறிக் கூறவேண்டும் என்பதுதான் இராமனின் திட்டம்.

அடுத்து,

*"கலத்தினில் பிறந்த மா மணியின் காந்துறு*
*நலத்தின் நிற் பிறந்தன நடந்த ; நன்மை சால்*
*குலத்தினில் பிறந்திலை ; கோள் இல்கீடம் போல்*
*நிலத்தினில் பிறந்தமை நிரப்பினாய்அரோ"*

(யுத்த – மீட்சிப் – 65)

பொருள்: உன் தந்தை ஏர்க் கலப்பையை நிலத்தில் ஓட்டிய பொழுது அங்கே கிடந்தவள் அல்லவா நீ! நல்ல குலத்தில் பிறக்கவில்லையே! நிலத்தில் வாழும் புழுவைப் போல் நீயும் புன்மையுடையவள் ஆனாய்.

இந்தச் செய்தி யாருக்காக? கூட்டத்தில் எவரேனும் "அரச குடும்பத்தில் எது நடந்தாலும் ஏற்றுக் கொண்டு விடுவார்கள். தர்மம், நீதியெல்லாம் குடிமக்களுக்குத் தான்! அரசகுமாரியான சீதை எந்தச் சட்டத்துக்குள்ளும் அடங்க வேண்டியதில்லை"

என்று எண்ணிக் கொண்டிருந்தால் அவர்களுக்காக இராமனால் கேட்கப்படும் கேள்வி இது. அவர்கள் "அப்படியா சங்கதி! சீதை நிலத்திலிருந்து கண்டெடுக்கப்பட்டவளாம்! இதுவரை இது நமக்குத் தெரியாதே! அதனால்தான் இராமன் எவரும் கேள்வி கேட்பதற்கு இல்லை என்ற துணிவினால் கேட்கக்கூடாத கேள்விகளையெல்லாம் கேட்கிறான் போலும்! சீதை நம்மில் ஒருத்தியல்லவா? அவளுக்கு இந்தப் பாதகம் நடக்கிறதே!" என்று நினைத்து சீதைக்காக உலகம் இரக்கப்பட வேண்டும் என்பதே இராமனுடைய திட்டம்.

அடுத்து,

*"பெண்மையும், பெருமையும், பிறப்பும், கற்பு எனும்*
*திண்மையும், ஒழுக்கமும், தெளிவும், சீர்மையும்*
*உண்மையும், நீ எனும் ஒருத்தி தோன்றலால்*
*வண்மை இல் மன்னவன் புகழின், மாய்ந்தவால்"*

*(யுத்த – மீட்சிப் – 66)*

பொருள்: "எவ்வாறு ஈகைக் குணம் இல்லாத மன்னவனுக்குப் புகழ் இல்லையோ அவ்வாறே பெண்மை, பெருமை, குலப்பிறப்பு, கற்பு, தெளிவு, சீர்மை, உண்மை ஆகிய பெரு நலப் பண்புகளை எல்லாம் விட்டொழித்து விட்ட உன்னாலும் பெண் குலத்துக்கே புகழ் இல்லாமல் போய்விட்டது".

இந்த விளக்கம் யாருக்காக? "சீதையை வளர்த்து ஆளாக்கி இராமனுக்கு மணமுடித்து வைத்த சனகனும், மருகியாகப் பெற்ற தயரதனும், அவளை மனைவியாக்கிக் கொண்ட இராமனும் வள்ளன்மை பண்புக்காகப் போற்றப்பட்டவர்கள். இத்தகைய சான்றோர்களுடைய குலத்தோடு தொடர்பு கொண்ட சீதை பெண்ணுக்குப் பெருமை கற்பு என்பதை அறியமாட்டாளா? மன்னர் குலப் பெண்ணானாலும் கணவனுடைய குற்றச்சாட்டுக்கு ஆளாவதுதான் பெண்ணினத்துக்கு விதிக்கப்பட்ட விதி போலும்!" என்று சீதையின் பால் உலகம் இரக்கம் கொள்ள வேண்டும் என்பதே இராமனின் திட்டம்.

அடுத்து,

*"அடைப்பர், ஐம் புலன்களை; ஒழுக்கம் ஆணியாச்*
*சடைப் பரம் புனைந்து, ஒளிர் தகையின் மா தவம்*
*படைப்பர்; வந்து இடை ஒரு பழி வந்தால், அது*
*துடைப்பர்; தன் உயிரொடும் – குலத்தின் தோகைமார்"*

*(யுத்த – மீட்சிப் – 67)*

பொருள்: கணவனைப் பிரிந்த குல மங்கையர், ஐம்புலன்களை ஒடுக்கி, ஒழுக்கத்தையே வாழ்வின் ஆதாரமாகக் கொண்டு, குழலைச் சடையாக்கி வாழ்வர். பழி வந்துற்றபோது, தம் உயிர் கொடுத்து அப்பழியைத் துடைப்பர். (இங்கு சீதையின் தவக் கோலத்தையே இராமன் விரும்பினான் என்பது தெற்றென விளங்குகிறது. சீதை தவக் கோலத்தில் வந்திருந்தால் இராமனுடைய அணுகுமுறை வேறாக இருந்திருக்கும் என்பதில் சற்றும் ஐயமில்லை. மேற்கண்டவகையில் வெளிப்படும் கடுமை இருந்திருக்காது என்பதும் உறுதி. இராமனுடைய திட்டம், வீடணன் – குறிப்பாக அனுமன் – இக்கருத்தை மறுத்துச் சீதையின் தவக்கோலம் பற்றியும், அவள் உயிர் விட எண்ணியது குறித்தும் உலகுக்கு இத்தருணத்தில் எடுத்துச் சொல்ல வேண்டும் என்பதே. அதற்கு இத்தருணம் விட்டால் வேறு எத்தருணம் வாய்க்கும்?)

அடுத்து இராமன் கூறுகிறான்:

*" "யாது யான் இயம்புவது? உணர்வை ஈடு அறச்*
*சேதியாநின்றது, உன் ஒழுக்கச் செய்தியால்;*
*சாதியால்; அன்று எனின், தக்கது ஓர் நெறி*
*போதியால்", என்றனன் – புலவர் புந்தியான்"*
*(யுத்த – மீட்சிப் – 68)*

பொருள்: நான் உன் வகையில் இனி கூறக் கூடியது என்ன உள்ளது? உன்னுடைய ஒழுக்கமிலாத நெறியால் என் உணர்வு ஈடு செய்ய இயலாத இழப்பைக் கண்டுள்ளது. இறுதியாக நான் உனக்குக் கூறுவது ஒன்றுண்டு. ஒன்று இறந்து போய் விடு, அன்றேல் தக்கதான ஒரு நெறியைப் பின்பற்றி எங்காவது போய் வாழ்ந்து கொண்டிரு" என்றான் புலவர் புந்தியான். புலவர் புந்தியான் என்ற சொற்றொடரின் பொருள், புலவர்களுக்குரிய அறிவுத் திரட்சிமிக்க இராமன் என்பதுதான்.

இவ்வாறு சீதையின் மேல் வரிசையாக ஒன்றன்பின் ஒன்றாகக் குற்றப்பட்டியல் வாசிக்கும் இராமன், இறுதியில் அவளை "இறந்து படு" என்று சொல்வதன் நோக்கம், இதுகாறும் இராமனுடைய பேச்சுகளை அமைதியாகக் கேட்டுக் கொண்டிருந்த முனிவர் கூட்டமும், மகளிர் ஈட்டமும், அமரரும் நிருதரும் – வேறு எவரும் சீதையின் பால் கருணை மிகக் கொண்டு கழிவிரக்கத்தால் 'அந்தோ! ஐயகோ! ஈதென்ன பெருந்துயரம்! இது நீதியில்லை! சீதை தூய்மையானவள்! இராமன் அநீதி செய்கிறான்" என்றெல்லாம் அரற்றவேண்டும் என்பதுதான். இராமனின் திட்டம், அவன் விரும்பிய விளைவை ஏற்படுத்துகிறது. இராமனுடைய உரையைக் கேட்டவர்கள் அனைவரும் கையறு நிலையினராய் அரற்றினார்கள்.

காப்பியப் பாடல்:

*“முனைவரும், அமரரும், மற்றும் முற்றிய*
*நினைவு அரு மகளிரும், நிருதர் என்று உளார்*
*எனைவரும், வானரத்து எவரும், வேறு உளார்*
*அனைவரும் வாய் திறந்து அரற்றினார் அரோ?”*

*(யுத்த - மீட்சிப் - 69)*

இராமன் திட்டமிட்டு தான் நினைக்காத குற்றங்களையெல்லாம் சீதையின் மீது உலகத்தார் பொருட்டு சுமத்தினான் என்பதற்குக் காப்பியத்தில் ஆதாரம் உண்டா? உண்டு.

குற்றப்பட்டியலை வாசித்து முடித்தவன் இராமன் என்றோ அல்லது அவனுக்கு காப்பியத்தில் அறத்தோடு தொடர்பு கொண்ட எத்தனையோ அடைமொழிகளைப் பயன்படுத்துகின்றானே கம்பன் - அந்த அடைமொழிகளில் ஒன்றையோ (உதாரணமாக, ஐயன், அண்ணல், அறவோன் என்றெல்லாம்) பயன்படுத்தவில்லை. தொடர்பே இல்லாத ஒரு தொடரைப் பயன்படுத்துகிறான். அதுதான் புலவர் புந்தியான் என்பது. அதாவது குற்றப்பட்டியலை வாசித்து முடித்தவன் புலவர்களுடைய புத்தியோடு செயல்பட்டவன் என்கிறான். புலவர்களுடைய புத்தி எப்படி வேலை செய்யும்? கற்பனைகளைத்தான் அழகாகப் பிறர் ஏற்றுக்கொள்ளும்படியும் ரசிக்கும்படியும் கூறும்! இல்லதை உள்ளது என்று காட்டும், உள்ளதை இல்லாததாகக் காட்டும். புலவர்களுடைய தொழிலே பொய் கூறுவதுதானே! எனவே இராமன் மனத்தில் இருந்த உண்மை வேறு, புனைந்துரைத்த கட்டுரைகள் வேறு. **இராமன் சீதையின் கற்பில் ஐயுறவில்லை! திட்டமிட்டு உலகுக்காக அவன் நடத்திய நாடகமே இது என்பதற்குச் சான்று கம்பனது ‘புலவர் புந்தியான்’ என்ற தொடரே ஆகும்.**

‘புலவர் புந்தியான்’ என்ற சொற்றொடர் புலவர்களுள் அறிவுடையோன் என்ற வேறு ஒரு கருத்தும் கொடுக்க வல்லது. விளக்கம் பின்வருமாறு: பொதுவாக புலவர்கள் புலமைமிக்கவர் என்பதால் அறிவுடையோரே ஆவர். புலவர்களுடைய புந்தி என்றால் அறிவுடையோரின் அறிவு என்ற பொருளும் ஆகும். புலவர் புந்தியான் என்ற சொற்றொடர் இங்கு அறிவுடையோரிடம் காணப்படும் கூர்த்த அறிவைக் கொண்டிருந்த இராமன் என்ற பொருளைத் தருவதாகும். இந்தக் கருத்தின் விளக்கம் என்ன? எந்த ஒரு நிகழ்ச்சியையோ, பொருளையோ பற்றிப் பிறர் மனம் கொள்ளும் வண்ணம் விளக்க முனையும்பொழுது, அதற்குரிய சரியான மொழி, நடை, சந்தம் ஆகியவற்றைச் சரியாகப் பயன்படுத்தித் தாம் எண்ணிய விளைவைப் பிறர் மனத்தில் ஏற்படுத்தும்

அறிவுக் கூர்மை உடையவர்கள் புலவர்கள். இங்கு சீதையின் பால் இந்த உலகத்தின் இரக்கத்தைத் தூண்டுவதே இராமனுடைய நோக்கமாக உள்ளது. அந்த நோக்கம் நிறைவேறுவதற்குரிய சரியான உத்தியை இவ்விடத்தில் சரியான மொழி பேசி இராமன் கைக்கொண்டான் என்பதே கம்பனுடைய கருத்து. இச்செய்தியை இவ்விடத்தில் கம்பன் பயன்படுத்தும் 'புலவர் புந்தியான்' என்ற தொடரிலிருந்து ஐயத்துக்கிடமின்றி வாசகர்கள் அறியலாம்.

(கம்பன் இவ்விடத்தில் இத்தகைய சொற்றொடரைக் கையாண்டிருப்பதே, கம்பனே 'புலவர் புந்தியான்' என்பதற்குச் சான்றாக உள்ளது. இராமன் கற்பனையாகப் புனைந்து சீதையைப் பற்றிக் குற்றப்பட்டியலிட்டான் என்பதைச் சரியான ஒரு தொடரின் மூலம் கூறிவிட்டான் அல்லவா?) **ஆக, இராமன் சீதையின் கற்பில் இறுதி வரை ஐயுறவே இல்லை. பிறர், தன் மனைவியின் மேல் கூறக் கூடிய குற்றங்களைத் தானே முந்திக் கொண்டு கற்பனைக் குறைகளையே சீதையின் பால் சுமத்தினான் என்பதே உண்மை.**

அடுத்து நடக்கும் நிகழ்ச்சிகளைக் காண்போம். செந்தணலைத் தலையில் வாரிக் கொட்டிய இராமனுடைய பேச்சால் சீதை அடைந்த நிலை பற்றி எவ்வாறு சொற்களால் எடுத்துரைக்க முடியும்? இராமனைக் கண்களால் கண்டவுடன் அருவியெனப் பெருகிய கண்ணீருடன் இப்பொழுது குருதியும் சேர்ந்து கொண்டது. சொற்களின் வலி தாளாமல் அவமான உணர்வுடன் மண் மகளைக் கண்களின் கண்ணீர் நனைக்கத் தலைகுனிந்து நின்றாள் சீதை.... அசோகவனத்துச் சிறையிருப்பால் புண்பட்ட உள்ளத்துடன் இருந்த சீதை, இராமனுடைய வெற்றிச் செய்தியால் மகிழ்ந்தாள் என்பது உண்மையே. வீடணனின் வழிகாட்டுதலால் வருத்தம் போக்கியவள் போல் தோன்ற முயற்சி எடுத்துக் கொண்டு விழாவுக்கு வந்தாள்... ஆனால் புண்பட்ட உள்ளத்தின் வலி மனத்தில் இருந்து கொண்டு தானே இருந்தது!! அதை ஆற்றுவிக்கும் மருந்து என்றல்லவா இராமனை அணுகினாள்!! ஆனால் அவனோ நோய் கொண்ட புண்ணிலே கோல் கொண்டு குத்துகிறானே! அந்த இரக்கமற்ற செய்கையால் ஏற்படும் வேதனை தாளாமல் விம்மி விம்மி அழுதாள். உள்ளமும் உணர்வுகளும் மரத்துப் போன நிலையை எய்தினாள்.

*"கண் இணை உதிரமும், புனலும் கான்று உக,*
*மண்ணினை நோக்கிய மலரின் வைகுவாள்,*
*புண்ணினைக் கோல் உறுத்தனைய பொம்மலால்*
*உள் நினைப்பு ஓவி நின்று உயிர்ப்பு வீங்கினாள்"*

*(யுத்த – மீட்சி – 70)*

............... பருந்துகள் வட்டமிடும் பாலைவனத்திலே தாகவிடாய் கொண்டு தவித்த மானினப் பேடு ஒன்று தண்ணீருக்காக அலைந்து திரிந்தது. உயிர் போகும் நிலையை எட்டியது. அக்கணத்தில் நீர் நிறைந்து தளும்பும் தடாகம் ஒன்றை மிக அருகிலேயே கண்டது. போகவிருந்த உயிர் மீண்டது என்ற நம்பிக்கையில் தன் உயிர் சக்தியையெல்லாம் திரட்டி ஆர்வமுடன் அத்தாடகத்தை நோக்கி மெல்ல தன் கால்களைப் பெயர்த்து நடக்கத் துவங்கியது. துவங்கியதுதான் தாமதம் .......... கால்கள் தீப்பட்டன போன்று கனன்று காந்தின. உற்றுப்பார்த்தால் தனக்கும் தடாகத்துக்கும் நடுவில் நெருப்பாறு ஒன்று ஓடுவதை உணர்ந்தது... இனி உயிர் விடுவதைத் தவிர வேறு கதியில்லை என்று உணர்ந்தது... அப்படிக் கதியற்று நின்ற மான் வேறு யாருமல்ல தானே என்றுணர்ந்தாள் சீதை.

*“பருந்து அடர் சுரத்திடை, பருகு நீர் நசை,*
*வருந்து அருந் துயரினால், மாளலுற்ற மான்,*
*இருந் தடம் கண்டு, அதின் எய்துறாவகைப்*
*பெருந் தடை உற்றெனப் பேதுற்றாள் அரோ”*

*(யுத்த – மீட்சி – 71)*

உண்டு உறங்கி வாழும் இன்பத்துக்காகவா சீதை உடலில் உயிரை வைத்திருந்தாள்! அன்று! இராமனைக் காணலாம் எனும் ஆசையால் உயிர் தரித்திருந்தாள். அவனைக் கண்களால் கண்டவுடனேயே இனி இறப்பினும் நல்லதே என்று எண்ணினாள்.

காப்பியப்பாடல்,

*“பிறப்பினும் துணைவனை, பிறவிப் பேர் இடர்*
*துறப்பினும் துணைவனை, தொழுது “நான் இனி*
*மறப்பினும் நன்று ; இனி மாறு வேறு வீழ்ந்து*
*இறப்பினும் நன்று” என ஏக்கம் நீங்கினாள்.”*

*(யுத்த – மீட்சி – 59)*

இப்பிறவியில் ஒரு முறையாவது இராமனைத் தன் கண்களால் காண வேண்டும் என்ற தன் விருப்பத்தை அனுமனிடம் தெரிவித்திருந்தாள் அல்லவா? இன்று இராமனைக் கண்டவுடன் அந்த ஆவல் நிறைவேற இதயத்தின் ஏக்கம் நீங்கியது.

ஆனால் இராமனுடைய எரிதழல் சொற்களைச் செவியுற்ற பின்னர் நினைக்கிறாள் ; “நான் எப்பொழுதோ உயிரை விட்டிருக்க வேண்டும். உயிரை உடலில்

தக்கவைத்து இருந்ததால் நான் பெறும் அவமானம் இது'' என்று செவ்வரி ஓடும் கண்கள் செங்குருதியை உகுக்க, ஆவி குலைவுறுகிறாள். பின்னர் உலகை நோக்கிக் கூறுகிறாள்.

*''உற்று நின்று, உலகினை நோக்கி, ஓடு அரி*
*முற்றுறு நெடுங் கண் நீர் ஆலி மொய்த்து உக,*
*'இற்றது போலும், யான் இருந்து பெற்ற பேறு ;*
*உற்றதால் இன்று அவம்!' என்று என்று ஓதுவாள்;''*
*(யுத்த – மீட்சி – 72)*

(''இராமன் என் கற்புநிலைக்கு என்ன சான்று என்று கேட்டால் நான் எதை எனக்குச் சாதகமாகக் காட்ட முடியும்?'' என்ற எண்ணத்தில்தானே தன்னுயிரை மாய்த்துக்கொள்ள முயன்றாள். அப்பொழுது மாருதி, 'இராம தூதன், நான்' என்று கூறி உயிரை உருக்கினான். அவன் தன்னுடைய கற்பு நிலைக்குச் சாட்சியாகிவிட்டான் என்றே, தன்னைப் பற்றிய கம்பீர உணர்வோடு வந்திருந்தாள். ஆனால் இராமன் கூறிய வன்சொற்களாலும், தன் மீது வீசிய பழியாலும் அவளுக்கு ஓர் ஐயம் பிறந்தது. இது எவருக்கும் ஏற்படும் ஐயம் தான். அந்த ஐயத்தைக் கேட்கிறாள்).

அனுமன் வந்து, ''நீ இங்கு வருவாய் என்று கூறினானே! (அது கேட்டதால் தானே நான் உயிருடன் இருந்தேன்!) நான் இறப்பை நாடிச் சென்ற என் அவல நிலை பற்றி அவன் உன்னிடம் கூறவில்லையா? ஒருக்கால் அவன் உன்னுடைய தூதுவனும் இல்லையோ?'' (தூதுவனுக்குள்ள இலக்கணங்கள் எல்லாம் அவனிடம் காணப்பட்டதால்தானே அவனுடைய சொற்களை நம்பினேன். ஒரு தூதுவனுக்குரிய காரியங்களை அவன் சிறப்பாகச் செய்வான் என்று நம்பி ஒருக்கால் நான் ஏமாந்து விட்டேனா? என்னைக் கண்டதையும் இங்கு நடந்த நிகழ்ச்சிகளையும் பற்றி அவன் எதுவும் கூறவில்லையா?)

காப்பியப் பாடல்;

*'' மாருதி வந்து, எனைக் கண்டு, ''வள்ளல் நீ*
*சாருதி ஈண்டு'' எனச் சமையச் சொல்லினான்;*
*யாரினும் மேன்மையான் இசைத்தது இல்லையோ,*
*சோரும் என் நிலை? அவன் தூதும் அல்லனோ''*
*(யுத்த – மீட்சி – 73)*

இந்த இடத்துக்காகத்தான் இராமன் காத்திருந்தான்! இராமனுக்குச் சீதையின் கற்பில் ஐயமில்லை என்ற கருத்து இக்கட்டுரையில் முன்பே உறுதி செய்யப்பட்டது. இராமன் – அடுத்து அரசாள நிற்கும் இராமன் – வனவாசம் முடிந்துபோன கால நிலையில் அயோத்தியின் முடிசூடா மன்னனாக நிற்கும் இராமன் – தன்னுடைய அரச தோரண பாவனையில் கேட்க வேண்டியதும், அவனால் வேண்டப்படுவதும் ஒரு வழக்குக்கான சரியான தீர்ப்பைக் கூற உதவும் சரியான சாட்சியங்களே!

இவ்விடத்தில் சீதை அனுமனை அழைத்திருக்க வேண்டும்! அல்லது அனுமனுடைய காட்சியத்தைப் பயன்படுத்திக் கொள்ள இராமனுக்காவது வாய்ப்பு கொடுத்திருக்க வேண்டும். உண்மையை உள்ளபடி உரைப்பவன் என்ற புகழைப் பெற்றவனாதலாலும் (மெய்ம்மையின் வேலி போல்வான்), சொல்ல வேண்டிய கருத்தைப் பிறர் மனங்கொண்டு நம்பும் வகையில் சொற்களைப் பெய்து உரை செய்யும் சொல்லின் செல்வன் ஆதலாலும், அவன் உரை செய்யின், அதுவே வழக்குக்கான தீர்ப்புமாகும். சொல்லின் செல்வனாகிய அனுமன், அசோகவனத்தில் தான் கண்ட சீதையின் தவக்கோலத்தை அங்கே மிக அழகாக வருணித்திருப்பானே! குறிப்பாக சீதை உயிர் துறக்க முயன்றதை முன்பு இராமனிடம் கூறினானல்லவா?

*"அன்னது ஓர் பொழுதில் நங்கை ஆர் உயிர் துறப்பதாக*
*உன்னினள், கொடி ஒன்று ஏந்தி, கொம்போடும் உறைப்பச் சுற்றி,*
*தன் மணிக் கழுத்தில் சார்த்தும் அளவையில் தடுத்து, நாயேன்*
*பொன் அடி வணங்கி நின்று, நின் பெயர் புகன்ற போழ்தில்"*
*(சுந்தர – திருவடி தொழுத – 39)*

*"அஞ்சன வண்ணத்தான் தன் பெயர் உரைத்து, அளியை என்பால்*
*துஞ்சுறு பொழுதில் தந்தாய் துறக்கம்" என்று சீதை உவந்து சொன்னாள்*
*(சுந்தர – திருவடி தொழுத – 40)*

என்ற அதே வாசகங்களை அனுமன் இப்பொழுது கூறமாட்டானா? அன்றி, சீதை பிறந்ததால் பெண்மையின் மாட்சி அழிந்தது என்ற இராமனுடைய குற்றச்சாட்டுக்கு அனுமன்,

*"சோகத்தாள் ஆய நங்கை கற்பினால், தொழுதற்கு ஒத்த*
*மாகத்தார் தேவி மாரும், வான் சிறப்பு உற்றார்; மற்றைப்*
*பாகத்தாள்; இப்போது ஈசன் மகுடத்தாள்; பதுமத்தாளும்*
*ஆகத்தாள் அல்லள், மாயன் ஆயிரம் மௌலி மேலாள்"*
*(சுந்தர – திருவடி தொழுத – 34)*

பொருள்: சீதை பூண்டொழுகும் கற்பு நெறியின் திறத்தால், மண்ணுலகத்துப் பெண்ணினமின்றி விண்ணுலகத்துத் தெய்வப் பெண்ணினமும் மேன்மையுற்றது. அந்தப் பெருமிதத்தால் சிவனுடைய இடப்பாகத்தில் வாழும் பார்வதி இப்பொழுது அவனுடைய மகுடத்தில் இடம் பெற்றுக் கொண்டாள். இந்திராணி, சரஸ்வதி போன்ற தேவியர் இப்பொழுது வான் சிறப்புற்றனர். திருமகளும் திருமாலின் திரு மார்பைவிட்டு, மாயனுக்கு விதானம் விரிக்கும் ஆதிசேடனின் தலைமேல் போய் அமர்ந்து கொண்டாள். (எனவே சீதையால் தெய்வப் பெண்கள் மேலும் சிறப்புற்றனர்). இந்தக் கருத்தைத்தான் அனுமன் இங்கு கூறியிருக்கமாட்டானா?

அவ்விடத்தில் வீடணனும் உள்ளான். நிருதர் குலம் அங்கே திரண்டு நிற்கிறது. அமரர் முனிவர் அடங்கிய கூட்டமும் கூட நிற்கின்றது. ஒருவர் பேச ஆரம்பித்தால் பிறகு ஒவ்வொருவராகப் பேசும் வாய்ப்பும் உள்ளது. ஆனால் அத்தகைய வாய்ப்பைச் சீதை பயன்படுத்திக் கொள்ளவில்லை. இராமன் இங்கு தலையிட்டு ஏதும் பேசுவதற்குக் கூட வாய்ப்பே தராமல் தன்னுடைய உரையை நிறுத்தாமல் தொடர்ந்து பேசுகிறாள் சீதை.

*"எத் தவம், எந் நலம், என்ன கற்பு, நான்*
*இத்தனை காலமும் உழந்த ஈது எலாம்*
*பித்து எனல் ஆய், அவம் பிழைத்ததாம் அன்றே,*
*உத்தம! நீ மனத்து உணர்ந்திலாமையால்"*

*(யுத்த - மீட்சி - 74)*

பொருள் : ஓ! நீ என் கற்பில் ஐயமுறுகிறாயோ! என் தவம், என் நலம், என் கற்பு, நான் இதுநாள் வரை அனுபவித்துக் கிடந்த துன்ப வாழ்வின் அனுபவம். இவையெல்லாம் பயனற்றதாகிவிட்டதே! 'பாருக்கெல்லாம் பத்தினி'தான் என்றாலும், தன் கணவன் ஆகப்பட்டவன் தன் கற்பை ஐயுற்றால், அந்த ஐயத்தைத் தீர்க்க தெய்வத்தாலும் ஆகாதே!

*"பார்க்கு எலாம் பத்தினி, பதுமத்தானுக்கும்*
*பேர்க்கல் ஆம் சிந்தையள் அல்லள், பேதையேன் ;*
*ஆர்க்கு எலாம் கண்ணவன் "அன்று" என்றால் அது*
*தீர்க்கல் ஆம் தகையது தெய்வம் தேறுமோ?"*

*(யுத்த - மீட்சி - 75)*

பிரம்மனும், சிவனும், திருமாலும் அண்ட கோளங்களில் உள்ள கருத்துக்கள் அனைத்தையும் உணர இயலும். ஆனால் மங்கையர் மனம் மட்டும் உணர வல்லர் இல்லை போலும்!

*"பங்கயத்து ஒருவனும், விடையின் பாகனும்,*
*சங்கு கைத் தாங்கிய தரும மூர்த்தியும்,*
*அங்கையின் நெல்லிபோல் அனைத்தும் நோக்கினும்,*
*மங்கையர் மனநிலை உணர வல்லரோ?"*

*(யுத்த - மீட்சி - 76)*

எனவே, நீயே ஐயுற்ற பிறகு இனி உலகத்தில் எவரிடம் எப்படி என் பழுதற்ற கற்பு நெறியை நிரூபித்துக் காட்டுவேன். எனவே 'சாதல் இனிது' என்று முடிவெடுத்துவிட்டேன்; தக்க செயலும் அதுவே. உன் ஆணையும் அதுவே! என் விதியும் அதுவே!" என்றாள்.

*"ஆதலின், புறத்து இனி யாருக்காக என்*
*கோது அறு தவத்தினைக் கூறிக் காட்டுகேன்?*
*சாதலின் சிறந்தது ஒன்று இல்லை; தக்கதே*
*வேத ! நின் பணி; அது விதியும்" என்றனள்.*

*(யுத்த - மீட்சி - 77)*

உடனே இலக்குவனை நோக்கி "தீயை மூட்டு" என்றும் ஆணையிடுகிறாள்.

*"இளையவன் தனை அழைத்து 'இடுதி, தீ' என*
*வளை ஒலி முன் கையாள் வாயின் கூறினாள்;"*

*(யுத்த - மீட்சி - 78)*

(சீதை இவ்விடத்தில் தவறு செய்கிறாள். தன்னுடைய நிறையை நிரூபிக்க தன் அதீத அலங்காரத் தோற்றம் தடையாகி விட்டது என்ற உண்மையை அவள் உணரவில்லை. மேலும், சீதையின் மேல் தான் சுமத்தும் பழியைப் போக்குவதற்குப் பிறருடைய - அனுமன், வீடணனுடைய - வாக்குமூலத்தைப் பயன்படுத்திப் பிறகு சீதையின் கற்பை ஐயத்துக்கிடமின்றி உலகுக்குத் தன் வாயால் அறிவிக்கலாம் என்று இராமன் கொண்டிருந்த திட்டத்தைச் செயல்படுத்த சீதை இங்கு வாய்ப்பே தரவில்லை. இறுதி முடிவைக் கூற வேண்டியவன் இராமனே என்பதையும் அறியவில்லை. அயோத்தி அரியணையில் இராமனோடு சரிநிகர் சமானமாக அமரப்போகும் சீதைக்கு

மரபுகள் தெரியவில்லை என்பது குணக்குறையல்லவா? இராமனுடைய பங்களிப்பைப் புறந்தள்ளிவிட்டு தனக்குரிய தீர்ப்பைத் தானே எழுதிக் கொள்வதும் தவறல்லவா?)

வள்ளுவர் பெண்ணுக்கு வகுக்கும் 'சொற்காத்தல்' என்ற அடக்கப் பண்பு அற்றவளாகத்தான் இப்பொழுது சீதை காட்சித் தருகிறாள்.

**ஆக, தீப்புகுந்து தன் கற்பை நிரூபிக்க வேண்டும் என்ற முடிவை எடுப்பவள் சீதையே என்பதை வாசகர்கள் இவ்விடத்தில் உணர வேண்டும்.**

இராமனைத் தன் கணவன் என்று மட்டுமே இவ்விடத்தில் பார்க்கிறாள் சீதை. இராமனோ அரசன் என்ற நிலையில் நிற்கிறான். இராமனுக்குரிய வனவாச நாட்கள் முடிவுற்றதை அவள் புரிந்திருக்க வேண்டாமா? அவன் அயோத்திக்கு மீண்டும் சென்று அரசுரிமையைப் பெற நிற்பவன் என்பதைச் சீதை அறிந்தவளே அல்லவா? சுந்தர காண்டத்தில் இதுபற்றி எண்ணும் சீதையைக் கண்டோம். பிரிவுத் துன்பத்தில் தெளிவாக இருந்த அறிவு, பிரிவு நீங்கிய இன்பத்தில் சானகிக்கு மழுங்கித்தான் விட்டதோ?

"வனவாச காலம் முடிந்து போய், தமியரும் தம்பியரும் மற்றோரும் வனத்துக்கு வந்து கொற்ற மா நகரத்துக்குக் கொற்றவனை அழைத்துச் சென்றுவிட்டார்களோ?" என்று அசோகவனத்தில் ஐயுறுகிறாள். அடுத்து அனுமனிடம் செய்தி சொல்லும் பொழுது,

*"அரசு வீற்றிருந்து ஆளவும், ஆய் மணிப்*
*புரசை யானையின் வீதியில் போதவும்,*
*விரசு கோலங்கள் காண விதி இலேன்;"*
*(சுந்தர - சூடாமணி - 36)*

என்கிறாள். அதாவது, இராமன் அயோத்தியை ஆளும் காட்சியைக் காணும் விதி இலேன் என்கிறாள்.

*"தன்னை நோக்கி உலகம் தளர்தற்கும்,*
*அன்னை நோக்கும், பரதன் அங்கு ஆற்றுறும்*
*இன்னல் நோக்கும், அங்கு ஏகுவது அன்றியே*
*என்னை நோக்கி, இங்கு, எங்ஙனம் எய்துமோ?"*
*(சுந்தர - சூடாமணி - 37)*

என்றும் புலம்புகிறாள்.

பொருள்: இராமனுடைய ஆட்சிக்காக உலகம் காத்துக் கொண்டுள்ளது. அன்னையரோ பிரிவு நோயால் துன்புறுகின்றனர். பரதனுடைய இன்னலோ எல்லையற்றது. அங்கு போய் அவர்களுடைய துயரம் தீர்க்க எண்ணுவானேயல்லால், என்னைச் சிறை மீட்க இராமன் வருவானா என்ன?

இவ்வாறு மன முதிர்ச்சியோடு அனுமனோடு பேசிய சீதை இத்தகைய இடர்ப்பாடுகள் இராமனுக்கு உள்ளதை இப்பொழுது எப்படி மறந்தாள்! மேலும் அசோக வனத்தில் சிறைப்பட்டிருந்தபொழுது சில கருத்துக்களை நடைமுறைக்கு ஒத்தவாறு சிந்தித்தவள் சீதை!

உதாரணமாக, 'யுத்தம் புரிந்து என்னைச் சிறை மீட்டு விட்டாலும், அரக்கன் நகரில் சிறைப்பட்டிருந்தவளைப் புனிதன் இராமன் மீண்டும் தீண்டுவானா? (தீண்டமாட்டான்).

''நிறை இரும் பல் பகல், நிருதர் நீள் நகர்ச்
சிறை இருந்தேனை. அப் புனிதன் தீண்டுமோ?''

*(சுந்தர – உருக்காட்டு – 11)*

என்றும்,

சிறை மீட்டபின்பு, இராமன் ''நீ என்னோடு இல்லறம் நடத்த இனி தகுதியுடையவள் அல்ல' என்று கூறினாள் நான் என் கற்புநிலையை நிரூபிக்க வேண்டி இருக்குமே! அதனை எவ்வகையில் செய்ய வல்லேன்?

''அற்புதன், அரக்கர்தம் வருக்கம் ஆக அற,
விற்பணி கொண்டு, அருந் சிறையின் மீட்ட நாள்,
'இல் புகத் தக்கலை' என்னில், யானுடைய
கற்பினை, எப்பரிசு இழைத்துக் காட்டுகேன்?''

*(சுந்தர – உருக்காட்டு – 20)*

என்றும் புலம்பினாள்.

.....இவ்வாறு நடைமுறைக்கு ஏற்றவாறு அப்பொழுது சிந்தித்தவள் இப்பொழுது அவற்றை எல்லாம் எப்படி மறந்தாள்? இராமனைப் போன்ற உத்தமனுக்கு மனைவியாகவும் பேறு பெற்றவள், பலகாலத்துத் துயரங்களுக்குப் பிறகு பெற்ற அனுபவங்களால் பேதைமையை ஒழித்து மனப்பக்குவம் அடைந்திருக்க வேண்டாமா?

இராமன் போர்க்கோலம் பூண்டு மாமன்னன் ஒருவனை வீரத்தால் வென்று நிற்கும் அரசன் என்று அவள் உணர்ந்திருக்க வேண்டாமா? இனி இராமனுக்கு அரசன் என்னும் அடையாளம் ஏற்பட்டு விட்டதால் அவனுடைய செய்கைகள் எல்லாம் அத்தகைய தோரணையில்தான் இருக்கும் என்பதை உணர்ந்திருக்க வேண்டாமா? தான் ஒப்பனை புரிந்து இந்திராணி போல வந்து நிற்க (அதிலும் இராமன் வெறுக்கின்ற ஆடம்பரமான புனைந்த கோலத்தில்), தன்னை அப்படியே ஏற்றுக் கொண்டு விடுவான் என்று எண்ணுவது அறிவீனம் அல்லவா? அதனால்தான் இராமன்,

*“............................................ அச்சம் தீர்ந்து, இவண்*
*மீண்டது என் நினைவு? “எனை விரும்பும்” என்பதோ?”*
*(யுத்த - மீட்சி - 62)*

என்று கேட்கிறான். இராமன் பேரில் இங்கு என்ன தவறு காண முடியும்? நாட்டை ஆளும் மாமன்னனுக்குப் பட்ட மகிஷியாக அமரப் போகிறவள் இவற்றையெல்லாம் எண்ணியிருக்க வேண்டியவள் அல்லவா? அன்றி, அந்தப்புரத்தில் ஊடல் புரிபவள் போல், ‘என் மேல் ஐயுற்றால், நான் இறப்பேன்’ என்று கூறுவதை இராமன் போன்ற ஆளுமையுள்ள கணவன் - அரசனாகவும் உள்ளவன் - எப்படி ஏற்க முடியும்? இராமனின் உயரத்தையும் தகுதி மேன்மையையும் உணராதவர்களே இராமன் மேல் பழி சுமத்துவர். தங்களுடைய நிலையைக் கொண்டே பிறரை அளக்கும் மனநிலைதானே பொதுவான விதியாக உள்ளது! இராமனுடைய வாழ்நெறியையும், விஷயங்களை அணுகும் முறையின் நுணுக்கங்களையும் அறிந்தவர்கள் அவன் மேல் குற்றம் காண மாட்டார்கள். காரணம், இராமன் குற்றமற்ற கோமகன்.

சீதை தனக்குத்தானே தீர்ப்பை வழங்கிக் கொண்டவுடன் இராமன் இங்கு பேசுவதற்கு என்ன உள்ளது? இராமனையும் இலக்குவனையும் அவர்கள் அடுத்துப் பேசுவதற்கு இயலாத வகையில் பேச்சடைக்க வைப்பது சீதைக்கு ஒன்றும் புதிய செயல் அல்லவே? இராமன் அத்தகைய மனநிலையில் வாய் திறந்து பேசும் பண்பிலன் என்பதை முன்னமேயே கண்டோம். சீதை வனம் செல்வதற்குத் தானே முடிவெடுத்து வன்சொற்கள் பேசவும், ‘பேசவும் மறந்தனன் பெருந்தகை’ என்கிறான் கம்பன். அவ்வாறே சீதை இங்கே இராமன் கூற வேண்டிய தீர்ப்பைத் தானே கூறி, இராமன் இட வேண்டிய ஆணையையும் தானே இளவலுக்கும் இட்டுவிட்டாள். இராமன் ‘சீதையை தீக்குளிக்கச் சொன்னான்’ என்று அரற்றுபவர்கள் உணர வேண்டிய உண்மை இது. “தீக்குளிக்கச் சொல்லி இராமன் ஆணையிடவில்லை” என்ற உண்மைதான் அது.

பலர் கூடியுள்ள சபையில் சீதை, இளவலுக்கு ஆணையிடும் உரிமையையும் தானே எடுத்துக் கொண்டு விடுகிறாள் என்பதையும் உணர வேண்டும். ஆனால்

இலக்குவன் தர்மங்கள் அறிந்தவன். ஆதலால் இப்பொழுது சீதை ஆணையிட்டால் அதைச் செய்யக் கடமைப்பட்டவனல்லன். இராமனை நோக்குகிறான். இராமனும் கண்களாலேயே சீதையின் விருப்பத்துக்கு ஒப்புதல் அளிக்கிறான்.

.................. எத்தனையோ சித்தாந்தங்களும், எவ்வளவோ வேதாந்தங்களும் பேசலாம். ஆனால் மனிதனின் வாழ்க்கை, விதியால் நிர்ணயிக்கப்படுகிறது என்பது மட்டும்தான் முடிவான உண்மை. நடைமுறை வாழ்க்கையின் தேவைகளுக்கு வேண்டுமானால் நம் அறிவும், அனுபவமும் சிறிதளவு உதவலாம். ஆனால் வாழ்க்கையின் திருப்புமுனைகளில் எல்லாம் மனித வாழ்வானது, பேரறிவு திட்டமிட்டு விட்ட விதியின் வழியிலேயே செல்லும். இதுதான் வாழ்க்கையின் இறுதியான உண்மை.

இந்தப் பேருண்மையை மனித குலத்துக்கு உணர்த்துவதற்காக விதியே தேர்ந்தெடுத்த முன்னுதாரண வாழ்க்கையே இராமனுடைய வாழ்க்கை என்றால் அது மிகையே இல்லை. இராமனுடைய வாழ்க்கையில் விதி விளையாடியது போல் வேறு எவருடைய வாழ்க்கையிலும் விளையாடி இருக்காது. கம்பனே அதனால்தான் "இழைக்கின்ற விதி முன் செல்ல தருமம் பின் இரங்கி ஏக" நடந்தான் இராமன் என்கின்றான். "நீர் வழிப் படுஉம் புணை போல ஆருயிர் முறை வழிப் படுஉம்" என்பதைப் புறநானூற்றுப் புலவனும் கூறுகிறானல்லவா? இந்த உண்மையை நன்றாக அறிந்தவன் இராமன். இன்றேல் அரச அடையாளங்களுடன் அணிகளும் ஆடையும் பூண்ட இராமன் அடுத்த சில கணங்களிலேயே மரவுரி தரித்திருப்பானா? அன்றி பொய்மானைத்தான் துரத்திப் போயிருப்பானா? அல்லது மனைவியின் தூய்மையை ஐயந்திரிபற அறிந்திருந்தும் அவளை அவனே பழி சொல்லும் தன் பங்களிப்பைத்தான் ஆற்றியிருப்பானா? இப்பொழுது சீதை தான் தீக்குளித்து இறந்து படுகிறேன் என்கிறாள். விதியை எவரே வெல்ல இயலும்! "இல்லை! இல்லை! இறக்க வேண்டாம். உன் கற்பில் நான் ஐயப்படவில்லை. ஏற்றுக் கொள்கிறேன். உடனே அயோத்திக்குச் செல்வோம், வா!" என்று இராமன் இப்பொழுது கூற முடியுமா?

இராமனுக்குத் துறவு என்பது புதிய சொல் அல்ல! கண நேரத்தில் மண்ணாசையைத் துறக்க வல்லவனுக்குப் பெண்ணாசை ஒரு பொருட்டல்ல. மேலும், சீதையின் பொருட்டு, அவள் மேல் கொண்ட அன்பாலும், இரக்கத்தாலும்தான் வாழ்க்கையில் தவறுகள் புரிந்துவிட்டதாக ஏற்கனவே இராமன் உணர்கிறான்.

*"பேதைப் பெண் பிறந்து, பெற்ற தாயர்க்கும், பிழைப்பு இலாத*
*காதல் தம்பியர்க்கும் ஊர்க்கும் நாட்டிற்கும் காட்டிற்று அன்றே"*
*(யுத்த - மாயா சீதை - 78)*

*"தீரும் இச் சீதையோடும் என்கிலது அன்று, என் தீமை;*
*வேரொடு முடிப்பது ஆக விளைந்தது; ..........."*
*(யுத்த - மாயா சீதை - 76)*

இலக்குவன் பிரம்மாத்திரத்தில் இறந்துபட்டான் என்று நினைத்துக் கொண்டு புலம்பும் பொழுது சீதையை விரும்பி மணந்த என்னால் அன்றோ என் சுற்றத்தினுக்கெல்லாம் இடர் வந்தது என்று கூறிப் புலம்புகிறான்.

*"வேள்விக்கு ஏகி, வில்லும் இறுத்து ஓர் விடம் அம்மா*
*வாழ்விக்கும்" என்று எண்ணினேன், முன்னே வருவித்தேன்;*
*சூழ்வித்து என்னைச் சுற்றினரோடும் சுடுவித்தேன்;*
*தாழ்வித்தேனோ, இத்தனை கேடும் தருவித்தேன்?"*
*(யுத்த - பிரம்மாத்திர - 210)*

சீதையின் பால் கொண்ட அடிமனத்துக் காதல் காரணமாகத்தானே அவள் தன்னோடு வனம் புகுதலை ஏற்றுக் கொண்டான். இன்றேல் தன்னோடு வனம் புக எண்ணிய தாயை ஆற்றுவித்ததுபோல் சீதையையும் ஆற்றுவித்திருக்கலாம் அல்லவா? முடிந்த முடிவாக சீதையைத் தடுத்து நிறுத்த இயலாமல் போனது ஏன்? சீதையின் பிடிவாதம் தன்பால் கொண்ட அன்பால் விளைந்தது என்ற சீதையின் காதலை விழையும் தன்னுடைய காதல் உணர்வினால்தானே! இந்தத் தன்னுடைய குணக்குறையை வாய்விட்டுப் புலம்பிக் கூறுகிறான் இராமன். இந்திரசித்து விட்ட பிரம்மாத்திரத்தால் இளவல் இலக்குவன் முதல் வானர வீரர்கள் ஈறாகப் பலர் இறந்தனர் என்று மயங்கும் இராமன், மனம் தாளவியலாது துன்பத்தால் துயருற்றுப் புலம்புகிறான்.

*"'சீதை என்று ஒருத்தியால் உள்ளம் தேம்பிய*
*பேதையேன்,சிறுமையால் உற்ற பெற்றியை*
*யாது என உணர்த்துகேன்!' ..............."*
*(யுத்த - மருத்துமலை - 70)*

சீதைமேல் கொண்ட காதலால், தன் இளையவனின் அறிவுரையைப் புறக்கணித்த தன் சிறுமைக்கும் வருந்துகிறான்.

*" 'மாயை இம் மான் என, எம்பி வாய்மையான்,*
*தூயன உறுதிகள் சொன்ன சொல் கொளேன்,*
*போயினென்; பெண் உரை மறாது போகலால்,*
*ஆயது இப் பழியுடை மரணம்' ................"*

*(யுத்த - மருத்து மலை - 71)*

உறவுகளையெல்லாம் கூற்றுவனுக்கு இரையாக்கி விட்டுத் தன் மனைவியை மீட்டுச் சென்றால், சீதைமேல் தான் கொண்ட காதலே உலகத்தோரால் பழிக்கப்படும் என்றும் கூறுகிறான்.

*" 'தாதையை இழந்த பின், சடாயு இற்ற பின்*
*காதலின் துணைவரும் மடிய, காத்துஉழல்*
*கோது அறு தம்பியும் விளிய, கோள் இலன்,*
*சீதையை உவந்துள்ளான்' என்பர், சீரியோர்"*

*(யுத்த - மருத்துமலை - 79)*

பொய்மானைப் பற்றிச் சற்று இராமன் சிந்தித்திருக்க வேண்டாமா? கனக மேனியுடன் மணிகள் பதித்த கால்களும், செவிகளும், வாலும் கொண்ட மான், அரக்கரின் மாயமாக இருக்கலாம் என்ற இலக்குவனின் உரையைச் சற்றும் சிந்திக்காமல் சீதை வருந்துவாள் என்றே, "உலகில் எதற்கும் முதலும் முடிவும் இப்படித்தானிருக்க வேண்டும் என்பதில்லை" என்று வேதாந்தமும் பேசுகிறான். "நீரே மானை பற்றித் தர வேண்டும் நாயக!" என்று சேயரிக்குவளைக் கண்களால் கண்ணீர் உகுக்கும் சீதையின் ஊடலைத் தணிக்கவே இராமன் மான் பின் சென்றான் என்கிறான் கம்பன்.

*"போனவள் புலவி நோக்கி, புரவலன்.....*
*மான் இது நானே பற்றி, வல்லையின் வருவென்"*

*(ஆரண்ய - மாரீசன் வதை - 68)*

எனவே இத்தகைய கணவனின் மனநிலை இனி ஒரு அரசனுக்கு ஒவ்வாதது அல்லவா? அதனைத் தெளிகிறான் இராமன் இங்கே! காரணம், வசிட்ட மாமுனி இராமனுக்குக் கூறிய அறிவுரைகளில் காமத்தை மன்னன் வெல்ல வேண்டும் என்பதும் ஒன்று. காப்பியச் சான்று:

*"தூமகேது புவிக்கு எனத் தோன்றிய*
*வாம மேகலை மங்கையரால் வரும்*
*காமம் இல்லை எனின், கடுங் கேடு எனும்*
*நாமம் இல்லை; நரகமும் இல்லையே"*
*(அயோத்தி - மந்தரைசூழ்ச்சி - 29)*

மங்கையர் பால் கொள்ளும் காம உணர்வு கேட்டையே விளைவிக்கும் என்று உறுதிப் பொருள் கூறுகிறார் வசிட்டர்.

இராமன் கணவன் எனும் நிலையில் சீதையின் பால் காம உணர்வு கழி மீதூற வாழ்ந்தவன்தான். மனைவியின் பால் காம உணர்வை நெறிப்படுத்தி வாழ்தல்தானே சிறந்த இல்லறம்! சீதையின் பிரிவால் துயருறும் இராமன், அன்பு மிகுந்த கணவன் எனும் நிலையில் துயர் உறுவதோடு, கார் காலத்தில் காதல் மீதூற விரகதாபமும் கொண்டவனாகவே இருக்கின்றான். இது அவன் சீதையின் பால் உணர்வு பூர்வமாகக் கொண்ட உரிமைக் காதலுள்ளத்தையே காட்டுவதால், இது இராமனுக்குப் பெருமை சேர்ப்பதே ஆகும். சீதையின் தீக்குளிப்பை அங்கீகரிப்பவன் ஆதலால் அவன் அன்பிலன் என்றோ, காதலுணர்வும், ஆண்மையும் அற்றவன் என்றோ உலகம் நினைத்துவிடக் கூடாது என்றே கம்பன் இராமனுடைய காதல் உணர்வுகளைப் பற்றி வாய்ப்பு நேரிடும் பொழுதெல்லாம் விவரிக்கின்றான். சீதையைப் பிரிந்த காலத்தில் இயற்கையின் தோற்றமெல்லாம் சீதையின் தோற்றமாகவே இராமன் காண்கிறான். விரகதாபத்தால் உறக்கமின்றித் தவிக்கின்றான். கனவுக்கும் நனவுக்கும் வேறுபாடு அறியாமல் மயங்குகிறான். காமவேள் தன்னிடம் கருணையின்றி நடந்து கொள்வதற்காக அவனைக் கடிகிறான். சீதை ஒருத்தியிடம் மட்டுமே இத்தகைய காமஉணர்வைக் கொண்டவன் இராமன் என்பதைக் கம்பன் பல இடங்களில் தெரிவிக்கிறான். அதில் ஒன்று. அனுமன் சீதையின் சூடாமணியை இராமனிடம் தருகிறான். அதனைத் தீண்டியவுடன் அவன் உள்ளத்தில் உறைந்து கிடந்த காம உணர்வு மெல்ல மெல்ல மேலெழுந்தது என்கிறான் கம்பன். காரணம், தீ வலம் வந்து, தன் கைத்தலம் பற்றிய சீதையின் மணிக்கை எனத் திகழ்ந்தது அந்த சூடாமணி என்பதுதான்.

*"பை பையப் பயந்த காமம் பரிணமித்து உயர்ந்து பொங்கி*
*மெய்யுற வெதும்பி, உள்ளம் மெலிவுறு நிலையைவிட்டான்;*
*ஐயனுக்கு அங்கி முன்னர், அங்கையால் பற்றும் நங்கை*
*கை எனல் ஆயிற்று அன்றே - கை புக்க மணியின் காட்சி!"*
*(சுந்தர - திருவடி தொழுத - 47)*

*"பொடித்தன உரோமம்; போந்து பொழிந்தன கண்ணீர் பொங்கி*
*துடித்தன மார்பும் தோளும்; தோன்றின வியர்வின் துள்ளி*
*மடித்தது மணி வாய்; ஆவி வருவது போவது ஆகித்*
*தடித்தது, மேனி ..............................................."*

*(சுந்தர - திருவடி தொழுத - 48)*

சீதையின் அன்பின் உருகும் இராமன் இவனே! பிரிவு ஏற்படுத்தும் உணர்ச்சியில் இவ்வாறெல்லாம் உணர்வது இயற்கையே! இத்தகைய உணர்வுகள் இருவர் மட்டும் உணரும் தனிப்பட்ட அக உணர்வுகள்.

ஆனால் சீதையை சிறை மீட்பதும், அவளை மனைவியாக – பட்டத்து அரசியாக – ஏற்றுக் கொள்வதும் தனிப்பட்ட மனிதனின் முடிவாக இருக்க முடியாது அல்லவா? தனிப்பட்ட முறையில் கைகேயிக்கு வரம் தந்ததனால் அன்றோ, தயரதன் அரசு முறை வழுவி, மூத்தவன் இராமன் இருக்க, பரதனுக்கு அரசுரிமையை நல்க வேண்டிய இடருக்கு ஆட்பட்டான்! காம வாழ்வுக்கு ஈடாக தயரதன் அரச மரபை விலையாகக் கொடுத்துவிட்டான் என்று இலக்குவனே தந்தையின்மேல் வசைபாடுகிறான். இப்பொழுது 'சீதையின் பால் கொண்ட காம உணர்வினால் இராமன் அறத்தையும் நீதியையும் விலைபேசி விட்டான்' என்ற பழியும் வராதா? எல்லோருக்கும் அமைந்த விதிகளின்படியே இவ்விடத்தில் அவனும் நடக்க வேண்டியது அவசியம் அல்லவா? அதே சமயத்தில் இன்னொரு சங்கடமும் அவனுக்கு உண்டு. சீதை நிறை கற்பினள் என்பதை அறிந்தவன் ஆதலால் அவளுக்குரிய நீதியை வழங்கவும் கடமைப்பட்டவன் இராமன். சீதையின் கற்பு நிலையை உலகத்துக்கு நிருபிக்கும் கடமை – உண்மையை உணர்ந்த இராமனுக்கு உண்டு. எனவே சீதையை அவன் தண்டிக்கவும் முடியாது. எனவே அதற்கான திட்டங்களை அவன் கட்டாயம் வைத்திருந்திருக்கவே வேண்டும்.

........... அனுமன் ஒருவன்தான் இங்கு உதவக்கூடியவன். இராமனுடைய எண்ணத்தில் அனுமனே சரியான சாட்சியாகவும் இடம் பெற்றிருக்க வேண்டும். ஆனால் சீதை தான் தீக்குளிப்பது என்ற தீர்ப்பைத் தனக்குத்தானே கொடுத்துக் கொண்ட பின் இராமன் என்ன செய்ய முடியும்?

அனுமன் தானே முன் வந்து சாட்சி சொல்லியிருக்க முடியுமா? முடியாது. இராமனின் கண்களின் குறிப்போ அல்லது நாவின் ஆணையோ இல்லாது குறுக்கீடு செய்து பேசும் பண்பு கொண்டவன் அல்லன் அனுமன். சுக்ரீவன், வீடணன் போன்ற அரசர்கள் நிற்கும் இடத்தில், அவர்கள் வாய்மூடி மௌனமாக நிற்கும் இடத்தில், ஒரு வானர வீரனாகிய அனுமன், எவரும் ஆணையிட்டாலன்றி வாய் திறந்து பேச இயலாது. மேலும் சுக்ரீவன், வீடணன் எல்லோரும் இராமனின் போர்க்கால ஆளுமையைக்

கண்ட பிறகு அச்சத்தின் வாய்பட்டுக் கிடக்கின்றனர். வீடணன் சற்று முன்னர் இராமன் தன்னிடம் கடுமை காட்டிய கணத்தில்,

*"………. வெய்து உயிர்த்து, அலக்கண் எய்தி,*
*கோது இலா மனனும் மெய்யும் குலைந்தனன்………"*
*(யுத்த - மீட்சி - 54)*

என்கிறான் கம்பன்.

இராமன் ஒருவனுடைய ஆணை மட்டுமே செல்லுபடியாகும் இடம் இது. வழக்கை நடத்த வேண்டிய முறையில் நடத்தி இறுதித் தீர்ப்பை அளிக்கும் உரிமையும் அவனுக்கே உள்ளது.

ஆனால் சீதை தனக்குத்தானே தீர்ப்பைக் கூறிக் கொண்டு தண்டனையை அனுபவிக்கவும் ஏற்பாடு செய்வது, இராமனே எதிர்பார்க்காத ஒன்று. எதிர்பாராமலும், நம் திட்டத்துக்கு மாறாகவும் நடப்பதுதான் விதி. வாழ்க்கை விதியின் விளையாட்டு என்பதை ஆழமாக அறிந்து வைத்திருந்தவன் அல்லவா இராமன்!

அந்த விளையாட்டு பிறிதொருவனுடைய இல்வாழ்க்கையைப் பாதிக்கு மானால், அத்தகைய பாதிப்பை மாற்றியமைப்பது என்பது மனித முயற்சிக்கும் அப்பாற்பட்டது என்று இராமன் காரண காரியங்களோடு புரிந்துகொள்வானேயானால், பாதிக்கப்பட்டவனிடம், "இது விதியின் பிழை என்று ஏற்றுக்கொள்வதே அறிவுடைமை" என்றே கூறுவான். பிறருக்குக் கூறக் கூடிய அந்த அறிவுரையைத் தனக்குத் தானே சொல்லிக் கொள்ளவும் வேண்டும் அல்லவா? அதுவே அறம் அல்லவா?

தக்கன செய்து, தகாதன விலக்குவதே அறம். இத்தகைய நெறிமுறை இல்லையென்றால், மனிதகுலம் கெடும் என்கிறான் வள்ளுவன்.

*"செய்தக்க அல்ல செயக்கெடும் - செய்தக்க*
*செய்யாமையானும் கெடும்" - (குறள் - 466)*

பொருள்: தகாதவற்றைச் செய்வதும் கேடு; தக்கனவற்றைச் செய்யாமல் விடுதலும் கேடு. இராமனே தகாததைச் செய்தான். ஒரு மானுக்குப் பொன் மயமான மேனி இருக்க முடியுமா என்று ஆய்வு செய்ய மறுத்ததோடு, இலக்குவனின் ஆய்வையும் புறந்தள்ளினான். சீதையின் சொற்கேட்டு பொய்மான் பின்னே சென்றான். அதற்குரிய தண்டனை மனைவியை எப்பொழுதும் பிரிவதே என்பது

தெய்வத்தின் விதியானால் இராமன் அதை மௌனமாக ஏற்றுக் கொள்ளவே செய்வான். வாழ்க்கையின் அனுபவங்களிலிருந்து தான் மென்மேலும் அறிவைக் கூர்மைப் படுத்திக்கொள்ள வேண்டும் என்று விரும்புபவன் இராமன். முதலில் செய்யக் கூடாததை, சீதை மேல் வைத்த காதலால், செய்துவிட்டான். இப்பொழுது அவள்மேல் வைத்த காதலால், செய்ய வேண்டியதைச் செய்யாமல் விடக் கூடாது. இப்பொழுது சீதையின் பழி அறவே அகற்றப்படுவதற்குத் தன்னால் இயன்றதைச் செய்யவே முயல்கிறான் இராமன். தன்னுடைய முயற்சி வெற்றி பெறாத நிலையில் அது தெய்வத்தின் தீர்ப்பு என்றே ஏற்றுக் கொள்வான். இதை தமிழில் மனச்சீர்மை என்றும், சமஸ்கிருத மொழியில் 'நிஷ்காம்ய கர்மம்', 'அப்ரியக் கர்மம்' என்றும் கூறுவர் அறிஞர். பயனில் மனம் வைக்காமல் அறத்தின் போக்கிலேயே காரியம் ஆற்றுவது. இதைக் கர்மயோகம் என்று போற்றுகிறது கீதை. எனவே விதியின் போக்கை ஏற்றுக் கொள்கிறான் இராமன். சீதையின் ஆணையை நிறைவேற்றும்படி இலக்குவனுக்குக் கண்களாலேயே இசைவு தருகிறான். தன் அக வாழ்வில் ஒரே ஒரு பெண்ணுக்கு மட்டும்தான் (சீதை) இடம் என்ற உறுதியில் இருந்த இராமன் – பெண் பால் கொண்ட காம உணர்வையும் துறக்கிறான். இதை உணர்பவரே இராமனைப் போற்றுவர். உண்மையை உணராதவரே அவனைத் தூற்றுவர். காரணம் பெண்பால் கொண்ட காமத்தைத் துறக்க வல்லவரே பெரியோர்; அத்தகைய ஆற்றல் இல்லாதவர் சிறியோர் என்பது கம்பனின் கருத்து.

*'பெண்கள்பால் வைத்த நேயம்*
*பிழைப்பரோ, சிறியோர்' (பாலகாண்டம் – காட்சி –10)*

என்பன கம்பன் வரிகள்.

இங்கு இராமனின் மனநிலை என்ன? "சீதை உலகத்தவர் பழியிலிருந்து மீள வேண்டும் என்பதே! சீதை தீக்குளிக்க முடிவெடுத்துவிட்டாள்! தனக்குத் தடுக்க வகையில்லை! இந்தச் சோதனையில் தேறி விட்டால் பழி நீங்கும்! எனவே சீதையின் தீக்குளிப்பின் முடிவு எப்படியிருந்தாலும் பழியைப் போக்கும் முடிவு என்பது எட்டப்பட்டு விடும் என்பது உறுதி. இதனால் பழியற்றவனாகத் தான் அயோத்தி மீள்வது சாத்தியமாகும் அல்லவா? இத்தருணத்தைத் தவறவிட்டுவிட்டு அவசரத்திலும், சுயநல நோக்கிலும், சீதையை அயோத்திக்கு அழைத்துக் கொண்டு போய், அவளை அரசியாக்கியபின் ஒருக்கால் அங்கே இது பிரச்சினையாக வெடிக்குமேயானால் அதுவல்லவா அவமானம்! எனவே சீதையின் பழி போக்குதலே இராமனின் நோக்கம். ஆகையால் அது நிகழ வேண்டிய இடம் இதுவே என்று சீதையின் எண்ணத்துக்கு இசைவு தெரிவிக்கின்றான் இராமன்.

சான்றோரின் வாழ்நெறி என்ன?

*"புகழெனின் உயிரையும் ஈகுவர் பழியெனின்*
*உலகுடன் பெறினும் கொள்ளலர்" (புறநானூறு)*

மேலும் ஒருவனுடைய சாவு பிறர் கண்களில் கண்ணீரை வரவழைக்கக்கூடிய புகழைக் கொடுக்குமானால், அத்தகைய புகழை யாசித்தாவது அவன் பெற்றுக் கொள்ள வேண்டும் என்கிறது வள்ளுவம்.

*"புரந்தார்கண் நீர்மல்கச் சாக்காடு சாகிற்பின்*
*இரந்துகோள் தக்க உடைத்து" - (குறள் - 780)*

மேலும் சாக்காட்டினால் புகழ் பெறும் பேறு சான்றோனுக்கே ஏற்படும் என்றும் கூறுகிறது.

*"நத்தம்போல் கேடும் உளதாகும் சாக்காடும்*
*வித்தகர்க் கல்லால் அரிது" - (குறள் - 235)*

உயிர் வாழ்ந்தால் துன்பமும், உயிர் வீழ்ந்தால் புகழும் சான்றோர்களுக்கே வாய்க்கும் அரிதான நிலை என்கிறது வள்ளுவம். இந்த அரிதான புகழுக்குச் சீதையை உரியவளாக்கும் நோக்கம்தான் இராமனுடைய செயலின் நோக்கம் என்பதால் இராமன் சீதையின் இறப்பையே விரும்பியிருந்தாலும் அதில் குற்றமில்லை.

உயிரினும் மேலானது எது? என்று வள்ளுவன் கேட்டால், இராமன் கூறக்கூடிய பதில் 'ஒழுக்கமே' என்பதாகத்தான் இருக்கும்.

*"ஒழுக்கம் விழுப்பம் தரலான் - ஒழுக்கம்*
*உயிரினும் ஓம்பப் படும்" - (குறள் - 131)*

ஒழுக்கத்தின் மாண்பை உலகுக்குணர்த்தவே சீதை உயிர் விடத் துணிந்தாள். அதனை ஏற்றுக் கொள்பவனாகவே இராமன் இங்குத் தோன்றுகின்றான். 'வசை ஒழிய வாழ்பவரே வாழ்வர்' என்ற மனு நீதியை அறிந்தவனல்லவோ இராமன்!

...... எனவே கண்களால் இராமன் இசைவு தெரிவிக்க, இளையவன் நீர் இழிந்த கண்ணினனாய், துயரம் விம்மிய உள்ளத்தவனாய், எரி விதி முறைப்படி அக்னி குண்டம் அமைக்கிறான். விதியின் விளையாட்டுக்கு இவ்விடத்தில் இராமன் சாட்சியாக

நிற்கிறான். .......... பஞ்சவடியில் இலக்குவனின் ஒழுக்கத்தை ஐயுறும் பிராட்டி, "நீ இவ்விடத்தை விட்டு அகலவில்லையென்றால் நான் எரியிடை மூழ்குவேன்" என்கிறாள். இல்லாத பழியை மைந்தன் போன்ற இலக்குவன் மேல் சுமத்தும் பாவத்துக்கு உரிய தண்டனையை அவள் அன்றே தனக்கு விதித்துக் கொண்டுவிட்டாள் போலும்! அறம், பாவம், புண்ணியம் இவற்றை எண்ணியும், தொடர்புபடுத்தியும் வாழ்க்கையைப் பார்க்கும் நோக்கு மக்களிடத்தில் சிலரிடம் மட்டுமே காணப் படுகின்றது. மறை நூல்களின் கூற்றுப்படி கர்மவினையே உலகை நடத்திச் செல்வதால் தேவர்களும் கூட கர்மவினை சுழற்சியிலிருந்து தப்ப முடியாது என்பது இராமன் அறிந்த நீதி.

*"இறத்தலும் பிறத்தல்தானும் என்பன இரண்டும் யாண்டும்*
*திறத்துளி நோக்கின், செய்த வினை தரத் தெரிந்த அன்றே........"*
*(கிட்கிந்தா – அரசியல் – 15)*

என்று இராமன் கர்மவினை தத்துவத்தைப் பற்றிச் சுக்ரீவனிடம் பேசுவது காண்க!

எனவே விதியின் போக்கைத் தடுக்கும் வல்லமையின்றியும், தனக்கு இனி நடப்பதில் பங்களிப்பு இல்லை என்று எண்ணியும், சீதையின் விருப்பத்துக்கு இசைவு தெரிவித்துவிட்டு நிற்கிறான் இராமன்.

இராகவனுடைய இசைவைப் பெற்ற இலக்குவன் ஏங்கும் இதயமும், இழியும் கண்ணீரும் கொண்டவனாக விதிமுறைகளுக்குட்பட்டு எரிதழல் குண்டம் அமைத்தான்.........

.................. சீதை எரிதழல் குண்டத்தை நோக்கி நடக்கிறாள். சீதை நடக்க நடக்க நான்மறைகளும், நல் அற உயிர்களும் வாய் திறந்து அரற்றின .... சீதை தீயைச் சுற்றி வலம் வருகிறாள்... வலம் வர, வர, வான் முதல் உலகமும், உயிர்களும் ஓலமிட்டன. அலக்கண் உற்று அஞ்சி நடுங்கின. 'ஐயனே! இது தக்கது அன்று' என்று சாற்றின. இந்திர தேவியர் முதல் ஏழையரும், அந்தர வானத்தில் நின்று அரற்றினர்; தம் செந்தளிர்க் கைகள் கொண்டு சேயரிக் குவளைக் கண்கள் மேல் மோதினர்; நான்முகன் முதலான தேவ நாயகர்கள் நடுங்கினர்; உலகத்தைத் தாங்கும் ஆதி சேடனோ தன் தலைப்படத்தின் வீரியம் குறைந்து தாழ்ந்தனன்; அவனிடமிருந்து வெளிப்பட்ட நஞ்சை உலகம் உண்டு விடமுடைத்ததுபோல் வெதும்பிற்று ஞாலம்! அண்ட கோளங்கள் எல்லாம் இடம் திரிந்தன. ஏழு கடல்களும் ஏங்கி அழுதன.

சீதை துளபமாலை அணிந்து நின்ற புனிதனாகிய தன் நாயகனுக்கு முதலில் வணக்கம் போக்கினாள். பின் தீயுடைக் கடவுளைப் பார்த்து,

*''மனத்தினால், வாக்கினால், மறு உற்றேன்எனின்,*
*சினத்தினால் சுடுதியால் தீச் செல்வா!''*
*(யுத்த - மீட்சி - 84)*

என்று கூறி சற்றும் மனக் கலக்கமின்றி, புனலிடைப் பூத்து நிற்கும் தாமரை மலருள் புகுவாள் போல், அனலிடை இறங்கினாள்...

காப்பிய வரிகள்:

*''நீந்த அரும் புனலிடை நிவந்த தாமரை*
*ஏய்ந்த தன் கோயிலே எய்துவாள் எனப்*
*பாய்ந்தனள்; பாய்தலும், பாலின் பஞ்சு எனத்*
*தீய்ந்தது அவ் எரி, அவள் கற்பின் தீயினால்''*
*(யுத்த - மீட்சிப் - 85)*

அவள் தீயில் இறங்கிய அக் கணத்தில் (சீதையின் கற்புக் கனலின் வெம்மை தாளாது) தீயிடைப்பட்ட பஞ்சு கணத்தில் கரிந்ததுபோல் தீயே அணைந்தது!

............ இந்நிகழ்ச்சி இயற்கைக்கு மாறுபாடானது என்றும், கவியின் கற்பனை என்றும் வாதிடுவோர் உண்டு! ஆனால் இதற்கு அறிவியல் ரீதியாகவும், உலகியல் ரீதியாகவும், பருப் பொருண்மை ரீதியாகவும் விளக்கங்கள் அளிக்க முடியும். அவ்விளக்கங்கள் பின்வருமாறு:

தீக்கடவுள் சீதையின் பரு உடலைத் தீண்டவில்லை என்பது உண்மையே என்பதை ஆன்மிக உலகம் ஏற்றுக் கொள்கிறது. காரணம் மன ஒருமைப்பாட்டுடன் ஒருவன் செய்யும் தவத்துக்கு அற்புதங்கள் நிகழ்த்தக்கூடிய சக்தி உண்டு என்று அவ்வுலகம் நம்புகிறது.

....... சீதை உண்ணாமல், உறங்காமல், வெயில் மழை ஆகிய இயற்கை நிகழ்ச்சிகளினால் பாதிக்கப்படாதவளாக இராம நாமத்தையே உச்சரித்துச் செய்யும் தவம் என்பது, வெங்கனல் ஓம்பியும், தண் புனல் மூழ்கியும் துறவியோர் புரியும் நோன்பினும் உன்னதமானது என்று அனுமன் வியக்கிறான் என முன்பே கண்டோம்.

அத்தகைய தவசியர் மனம் எதை விழைகிறதோ, அதை அவர் அடைவர் என்கிறார் வள்ளுவர்.

*"வேண்டிய வேண்டியாங் கெய்தலால் - செய்தவம்*
*ஈண்டு முயலப் படும்" - (குறள் - 265)*

என்றும்,

*"கூற்றம் குதித்தலும் கைகூடும் நோற்றலின்*
*ஆற்றல் தலைப்பட்ட வர்க்கு" - (குறள் - 288)*

என்றும் வள்ளுவர் கூறும் கருத்து சீதையின் விஷயத்தில் உண்மையாகிறது. சீதை தன்னை தீக்கடவுள் தீண்டக் கூடாது என்று வேண்டுகிறாள். அந்த வேண்டுதல் கைக்கூடுகிறது. இதற்கு மேலும் விளக்கம் தேவையெனில், கீழுள்ள வரிகள் காண்க.

ஒரு மனிதனின் பரு உடலைச் சுற்றி ஒரு குறிப்பிட்ட வட்ட வரையறைக்குள் அவனுடைய சூக்கும உடல் உள்ளது. தாங்கரும் தவமியற்றும் ஆற்றலுடைய தவசியர், அத்தவத்தின் மூலம் அண்ட வெளியில் நிறைந்துள்ள காந்த சக்தியை ஏராளமாகக் கிரகித்துத் தம் உயிர்ச் சக்தியில் ஏற்றிக் கொள்வர். அத்தகையோர் தம் மனத்தால் நினைத்த மாத்திரத்தில் அச் சக்தியைப் பிற உயிர்களின் மேல் பிரயோகித்து நன்மை தீமைகளைச் செய்வர். அஃதேபோல், இயற்கை சக்தியோ அல்லது பிற உயிர்களின் சக்தியோ தம் பரு உடலைத் தாக்காதவாறும் தம்மை அவர்கள் காத்துக் கொள்வர். இது எவ்வாறு நிகழும் என்றால், தவசியரைத் தாக்கும் எந்த சக்தியும், அவர்களுடைய சூக்கும உடலில் படும் பொழுதே, அவ்வுடலில் ஆற்றல் வாய்ந்த காந்த சக்தியோடு மோதும் வலிமையின்றிச் சக்தியிழந்து விடும். எனவே தவசியருடைய பரு உடலை அடையும் முன்னரே அவை சக்தியற்று விரயமாகிக் கீழே விழுந்து விடும். ( துறவியர், தம் தவத்தின் சக்தியையெல்லாம் தண்டத்தில் சேமித்து வைத்துத் தம்மைப் பிறரிடமிருந்து காத்துக் கொள்ள அத் தண்டத்தையே முன்னிறுத்துவர் என்பதை ஈண்டு நினைவு கூர்தல் நலம்)

சீதை தவத்தின் மூலம் பெற்ற அத்தகைய ஆற்றலால் தீக்கடவுளை நோக்கி "நான் மாசுடையவள் என்றால் என்னைத் தீண்டு" என்று ஆணையிடுகிறாள் (மாசில்லாதவள் என்றால் தீண்டாதே என்ற பொருள் உட்கிடக்கை). அவளுடைய இத்தகைய வாக்குக்குக் கட்டுப்பட்டு தீ அவளைத் தீண்டாமல் அணைந்தது. அதாவது தீக்கடவுள் அனுப்பிய தீயின் வெம்மை சீதையின் சூக்கும உடலைத் தீண்டி, முட்டி மோதி, அதனைத் துளைத்து உள்ளே புக இயலாமல் மீண்டு திரும்பித் தன்னையே

தாக்கிவிட, அதன் வெம்மை தாளாமல் தானே அழிந்ததாக அக்னி பிறகு இராமனிடம் கூறுகிறான்.

இந்நிகழ்ச்சிக்கு முன்பே சீதை சுந்தர காண்டத்தில், "எல்லை நீத்த உலகங்கள் யாவையும் என் சொல்லினால் சுடுவேன்" என்கிறாள். இங்கு உலகங்களை அழிப்பேன் என்று சீதை கூறவில்லை. "சுடுவேன்" என்ற சொல்லைத்தான் பயன்படுத்துகிறாள் என்பதை நோக்குக. மேலும், அனுமனைத் தீ தீண்டலாகாது என்றும் ஆணையிட்டு வெற்றியும் பெறுகிறாள். கற்புக்கனல் தன்னுடைய உயிர்ச் சக்தியில் குடியேறிவிட்டது என்பதை அப்பொழுதே அறிந்தவள் சீதை. எனவேதான் அத்தகைய அறிவோடு இப்பொழுது இராமனுடன் வாழ்வதற்காகத் தான் நீத்துவிட்டு வந்த தாமரையில் அமர்பவள் போல் தீயினுள் புகுந்தாள் சீதை...............

........... ஒருவருடைய பேச்சைக் கேட்டு மற்றொருவர் மனம் மாறுவது எதனால்? பிறருடைய சூக்கும உடலைத் துளைத்து உள்ளே சென்று பரு உடலை ஊடுருவிப் பிறகு அவர்களுடைய மன அதிர்வலைகளோடு கருத்துக்கள் சென்று கலக்கும் மாயவித்தை நடைபெறுவதால்தான். ஒருவருடைய மனம் இன்னொருவருடைய மனத்தை ஆளும் ஆற்றல் கொண்டது என்பது அறிவியல் உண்மை. இது உண்மையெனும்பட்சத்தில் பல மடங்கு பெருக்கப்பட்ட ஒருவரது மன ஆற்றல் இயற்கை சக்தியையும் (அதாவது அண்டத்து அதிர்வலைகளையும்) புறங்காணச் செய்ய இயலும் என்பதும் சாத்தியம்தானே!

இந்த உண்மையைத் தவத்தின் பெருமையை உணர்பவர்களே ஏற்றுக் கொள்வர். இத்தகைய அரிய தவத்தையும் அரிதாக சிலரே இயற்ற இயலும் என்றும் கூறுகிறார் வள்ளுவர்.

*"இலர்பல ராகிய காரணம் நோற்பார்*
*சிலர்பலர் நோலா தவர்" - (குறள் - 270)*

அடுத்து இந்த நிகழ்ச்சிக்கான உலகியல் ரீதியான விளக்கம் பின்வருமாறு:

அந்தணர்கள் வேள்வித் தீயை வளர்க்கும் பொழுது, அதற்குள் பல பொருட்களை ஆகுதியாக இடுவர். தழலை வளர்க்கக் கூடிய பொருட்களைத்தான் இட வேண்டும் என்றில்லை. பக்தர்கள் சமர்ப்பிக்கும் எவையும் ஆகுதியாகும். சில பொருட்களைக் குண்டத்தில் இடும்போது தீ அணைந்து போகவும் வாய்ப்புண்டு, ஆனால் அது அணைந்து போகாமல் இருக்க நெய்யை மென்மேலும் ஆகுதியாக அளிப்பர்; தீயும் வளரும்.

இலக்குவன் அமைத்தது வேள்விக் குண்டம் இல்லையாதலால் நெய்யூற்றித் தீ வளர்க்கும் பணி இங்கு இல்லை. மனித உயிரை ஆகுதியாக ஆக்குவதற்கு அமைக்கப்படும் தீக்குண்டம் சேய்மையில்தான் அமைக்கப்பட்டிருக்க வேண்டும். அணிமையில் இருந்திருக்காது. இலக்குவன் மூட்டிய தீக்கொழுந்துகள் வீரியமாக எரிந்து கொண்டிருக்கும்பொழுது, சீதை சில அடிகள் நடந்து தூரத்தைக் கடந்து செல்வதற்குள் தீக்கொழுந்துகள் வீரியம் குறைந்து போயிருக்கலாம். தீ அணையும் தறுவாயில் இருந்து, சீதை தீயில் இறங்கிய அக்கணத்தில் தீ முற்றும் அணைந்து போயிருக்கலாம். மேலும் தீக்குள் இறங்குபவர்களுக்கு நீர்க்குளியல் நடத்தப்படும். அது இங்கு விளக்கப்படவில்லை. நீருடன் இறங்கினால் அணையும் தறுவாயிலிருக்கும் தீ முற்றும் அணைவதற்கு முழு வாய்ப்பும் உள்ளது.

தீச்சட்டி தூக்குதல், தீமிதி போன்ற சடங்குகள் கிராமப்புறத்துக் கோயில் திருவிழாக்களில் இன்றளவும் பிரசித்தம். கிராமப்புறத்து மரபு வழியில், கோயிலில் வளர்க்கப்படும் தீக்கங்குகள் மீது விரதம் பூண்டு மக்கள் நடப்பதும், தங்கள் மீது சுமத்தப்பட்ட பழியைப் போக்கிக் கொண்டு தன் குற்றமற்ற தன்மையை நிரூபிப்பதற்காகத் தீயில் நடப்பதும், பாரதத்தில் இன்றளவும் மிக இயல்பாக ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ள செயல்கள். சைவத்தின் மேன்மையை நிலை நிறுத்தும் பொருட்டு, தன் தேவாரப்பாடல்களைத் தீயிலிட்டும் எரியாமல் காத்தார் ஞானசம்பந்தர் என்பது இலக்கியம் கூறும் உண்மை.'அங்கி நுங்கிடாதது நின்றது' என்பது, ஞானசம்பந்தர் அனல் வாதத்தில் வென்றார் என்பதற்குச் சாட்சியான இலக்கியச் சான்று வரிகள். இங்கும் அங்கி நுங்கிடாமல் சீதை நின்றாள்; சோதனையில் வென்றாள்.

(2005 ஆம் ஆண்டின் தினசரி (தினமணி)- யில் தமிழகத்தின் குக்கிராமம் ஒன்றில் ஒரு பெண் தன் கற்பை நிரூபிப்பதற்காகத் தன் உள்ளங்கையில் தென்னங்கொப்பரை ஓட்டை வைத்து அது கையைச் சுட்டுவிடாதபடிக்கு எரித்துக் காட்டினாள் என்ற செய்தி வெளியாகி இருந்தது).

(2008 ஆம் ஆண்டின் தினசரியில் (தினமணி) மார்ச் மாதம் ஏழாம் நாள் ஒரு செய்தி பிரசுரிக்கப்பட்டிருந்தது. மார்ச் ஆறாம் நாளன்று நடந்த சிவராத்திரி பூசையில், கொதிக்கும் எண்ணெயில் கைவிட்டுத் துழாவி அப்பத்தை புரட்டிப் புரட்டிப் போட்டு கைகளாலேயே வெளியே எடுத்து பக்தர்களுக்கு ஒரு மூதாட்டி பக்தியோடு வினியோகம் செய்தாள் என்ற செய்தி நிழற்படத்துடன் வெளியிடப்பட்டிருந்தது).

எனவே சீதை தீக்குளித்தாள்; தீயின் கனல் தாக்காது பிழைத்தாள் என்பது கற்பனை என்று ஒதுக்கித் தள்ளிவிட முடியாது. அப்படியே கவிஞன் கவித்துவ

அழகுக்காக அத்தகைய காட்சிகள் அமைத்திருந்தாலும்கூட, சீதை தனியாக தீயில் இறங்கியிருக்க வேண்டுமா என்ன? இராமன்தான் அவளை அக்னிச் சொற்கள் எனும் எரிதழலை அவள்மீது கொட்டுகிறானே!! அது 'தீக்குளித்தல்' என்ற செயலுக்கு ஒப்பானதுதானே!!

......... இராமன் சீதையை ஏற்றுக் கொள்ளும் முன் இரண்டு உண்மைகள் நிலை நிறுத்தப்பட வேண்டும் என்பதுதான் கருத்து. ஒன்று, சீதையின் நெறிநிலைக்கு இராமனுக்குச் சாட்சியம் வேண்டும். ஏனென்றால் இராமன் அரசன் என்ற நிலையில் சரியான மற்றும் இறுதியான சாட்சியம் இன்றி வழக்கைத் தீர்க்கமாட்டான் என்பது அறத்தின் நாயகனுக்கு உள்ள நிலைப்பாடு.

அந்த இறுதி சாட்சியத்தோடு சீதை தன்னுடைய நெறியை நிரூபித்தால் அன்றி ஒரு குலப் பெண்ணாக அவள் அரசன் இராமனைச் சேர முடியாது. அயோத்திக்குச் செல்லவும் இயலாது. பேரரசன் ஒருவனுடைய மனைவி குடிமக்களுடைய ஐயங்களுக்கு அப்பாற்பட்டவளாக இருக்க வேண்டும். எனவே அவள் தொடர்பான குற்றங்கள் ஐயந்திரிபற நீக்கப்பட வேண்டும். மேலும் இராமன் பாரபட்சமின்றி நீதி வழங்கும் தன்மையனாக மனத்தளவில் இருந்தால் மட்டும் போதாது. குடிமக்களுக்கு நம்பிக்கையூட்டும் வண்ணம் வெளிப்படையாகப் புறத்திலும் நடந்துகாட்ட வேண்டும். இந்த உண்மைகளுக்கொப்பவே அடுத்து நிகழ்ச்சிகள் நீளுகின்றன.

.......... சீதை தீயில் இறங்கியவுடன் தீ அணைந்தது. அக்னி தேவன் சீதையை இரு கைகளிலும் ஏந்தி, இராமனிடம் கொணர்ந்தான். சீதையோ, பாடிய வண்டோடும் பளித்த தேனோடும் அமைந்த அவளுடைய சூடிய மலர்கள் வாடாமல் துலங்கினாள்.

சீதையைத் தகைமையுடன் கண்டவுடன் திரிந்த உலகங்கள் செம்மையடைந்தன. பரிதவித்த உயிர்கள் எல்லாம் பயம் தீர்ந்தன ; பெண்ணின் கற்பு நிலைத்தது என்று அருந்ததி அனைய வானத்து மகளிர் நாணமும் பொறையும் கூட இழந்து ஆடிக் களித்தனர்.

அவ்வமயம், அக்னிதேவன் இராமனை நோக்கி, "கற்புக் கனல் என்னும் தெய்வீக வெம்மையால் என்னை அவித்து என் வலிமையைப் போக்கிக் காட்ட நீர் மனம் கொண்டது ஏனோ? உமக்கு என்மேல் அந்த அளவுக்குக் கோபம் ஏற்படக் காரணம் யாது?" என்று முறையிட்டான். இராமன், உண்மையைத் தான் அறியாதவன் போல் நடித்து, "நீ யார்? புன்மையுடைய இப்பெண்ணைச் சுடாமல் விடுத்தது ஏன்? அதை முதலில் (உலகத்துக்குக்) கூறு" என்றான்.

(இராமன் சீதையின் வழக்கைச் சரியான தீர்ப்போடு முடிக்க ஒரு சரியான, தகுதியான சாட்சியைத்தானே வேண்டினான்! அக்கினி தேவன் சிக்கிவிட்டான்! எதையும் எரித்து வெண்ணீறாக்கித் தூய்மைப்படுத்தும் தீக்கடவுளே சீதையின் தூய்மையை உலகுக்குப் பறைசாற்ற முன்வரும்பொழுது அதைவிட இராமனுக்கு வேறென்ன வரம் வேண்டும். "அவனே சாட்சி சொல்லட்டும்! உலகம் அதைக் கேட்கட்டும்!" என்பது அண்ணலின் கருத்து.)

இராமனின் ஆணையைத் தொடர்ந்து தீக்கடவுள் பேசுகிறான் பின்வருமாறு:

"உலகத்து உண்மைகளுக்கெல்லாம் சான்றாக நிற்கும் ஐயனே! தீயாகிய நான், அன்னை சீதையின் கற்பு எனும் பொங்கு வெம்மைக் கனல் பொறுக்காமல் எரிந்தேன். இதனைக் கண்ணுற்ற பின்னரும் நீவிர் ஐயம் தீர்ந்திலரோ? தூய வேள்விக்கு வேண்டுபவன் நானே! மங்கையரின் தூய கற்புக்குச் சாட்சியும் நானே! எந்தப் பொருளைப் பற்றியும் ஐயம் திரிபற மெய்ச் செய்திகளை அறிய வேண்டுமானால், அதற்கு என்னையே நாடவேண்டும் என்று நான்மறைகள் கூறுகின்றன! இக் கட்டுரைகள் நீ அறியாதனவா? அன்றி 'பொய்யில் மாருதி'யின் உரையை மெய்யுரையென்று நீ போற்றத்தான் இல்லையா?"

"தேவரும், முனிவரும், திரியும் கோள்களும் மூவகை உலகமும், சீதை என்னை அணுகியபொழுது, "ஆ! ஆ!" என்று அரற்றியதை நீவிர் கேட்கவில்லையோ? 'அறம் பிறழ்ந்தவன் இராமன்' என்ற பழி உன் மீது சேர ஏன் இப்படி ஒரு வினை செய்தாய் ஐயனே?"

**"கற்புக் கனலியான அன்னை சீறினால், உலகில் மழை பொழியுமா? புவித்தாய் பொறுமையைத்தான் இனி போற்றுவாளா? அறம் தன் நெறியில் செல்லுமா? உலகம்தான் உய்யுமா? அன்னை சபித்தால் மலர் மிசை ஏகிய மாயவனும் மாய்வான் அன்றோ?"**

இவ்வாறு பணி மொழிகள் பல கூறிய வண்ணம், தீயுடைத் தேவன், களிக்கின்ற தேவரோடு உலகம் ஆர்த்து எழ, மயிலன்ன சீதையை மாட்சிமையோடு மன்னவன் இராமன் பக்கத்தில் இருத்தினான்.

**அவ்வளவில் இராமன், "பழி நீக்கும் அழிவில்லாத சாட்சி நீ ஒருவனே! "*சீதை* பழியற்றவள்" என்று நீயே கூறிவிட்டாய்! *சீதை* இனி பழிப்புக்கும் உரியவளல்லள்! என் இழப்புக்கும் உரியவள் அல்லள்!" என்று இறுதித் தீர்ப்பு அளித்தான் கருணை உள்ளத்தான் இராமன்.**

காப்பியப் பாடல்:

*"அழிப்பு இல சான்று நீ, உலகுக்கு; ஆதலால்*
*இழிப்பு இல சொல்லி, நீ இவளை, "யாதும் ஓர்*
*பழிப்பு இலள்" என்றனை; பழியும் இன்று ; இனிக்*
*கழிப்பிலள்" என்றனன் - கருணை உள்ளத்தான்*
*(யுத்த - மீட்சி - 97)*

சீதை குற்றமற்றவள் என்பதை இராமன் அறிந்தவன் ஆதலால் அவளுக்குரிய நீதியை அளிக்கவே அவன் மனம் கொண்டிருந்தான். அந்தக் கருணை மனத்துடன்தான் வழக்கை ஆரம்பித்தான். கருணை நிறைந்த தீர்ப்பை வழங்கும் சூழல் ஏற்பட அதனைத் தடையின்றி வழங்கினான் இராமன் என்ற உண்மையை உணர்த்தவே வழக்கை முடித்த இராமனைக் கருணை உள்ளத்தான் என்று குறிப்பிடுகின்றான் கம்பன். இக்கருத்தை மேலும் விளக்க வேண்டியது அவசியம்.

தன் முன் வந்து நின்ற சீதையை நோக்கிய இராமனை, வழக்கு ஆரம்பிக்கும் நிலையில் "அன்புடைத் தலைவன்" என்றான் கம்பன். அதாவது, சீதையின் மேல் வெறுப்புற்று அவளைத் தவிர்க்கும் எண்ணம் இராமனுக்கு இல்லையென்பதைச் சுட்டவே - அவனது அன்புள்ளத்தைப் பற்றிச் சுட்டவே - அத்தொடரைக் கையாள்கிறான் கம்பன். இனி எவரும் எதிர்காலத்தில் சீதையின் நெறியை ஐயுற வாய்ப்பே இல்லாதபடிக்கு வழக்கை முடித்துச் சரியான தீர்ப்பைக் கூறியதனால் 'கருணை உள்ளத்தான்' என்கிறான். மேலும், கருணை மனம் கொண்டவர்கள், தம் நலத்தையும் துறந்து பிறர் நலம் நாடுவர். இராமனும் இங்குத் தான் பழிபூண்டு, சீதையைப் பழியினின்று நீக்கினான்.

கம்பன் போன்ற கவிப் பேரரசன் காரணமின்றிச் சொற்களைப் பயன்படுத்த வாய்ப்பில்லை. சீதையின் மேல் பழிச் சொற்களைச் சொரிந்து நின்றவனைப் 'புலவர் புந்தியான்' என்றதுபோல், இங்கு இராமனைக் 'கருணை உள்ளத்தவன்' என்ற தொடரால் குறிப்பதற்கும் விரிவான காரணம் உண்டு. அதன் விரிவான விளக்கத்தைக் காண்போம்.

⌘ ⌘ ⌘

# புகழ் வீக்கிய இராமன்

ஆணுக்குப் பழுதற்ற வீரம் புகழ் சேர்க்கும், பெண்ணுக்குப் பழுதற்ற கற்பே புகழ் சேர்க்கும். மனித மனம் இயற்கையாக நாடுவது பொருட்செல்வத்தை . இயல்பாக மயங்குவது அழகில். இது தவிர்க்க இயலாத மனித மன நடத்தைகள். ஆனால், 'கல்லார் கண் பட்ட திரு' தீமையையே செய்யும் என்கிறான் வள்ளுவன். நன்மை தீமையைப் பகுத்துத் தெளிவாக அறியும் வகைக்குக் கல்வி கற்றவனிடத்தில் செல்வமும் சேருமானால், அது

*"ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்*
*பேரறி வாளன் திரு" (குறள் – 215)*

என்று போற்றப்படும் நிலையை அடையும். எனவே செல்வத்தோடு கல்வியும் சேர்ந்தால்தான் சமுதாயம் சிறக்கும். அஃதேபோல் பெண்ணின் பேரழகோடு கற்பு எனும் பொற்புடைப் பண்பு சேர்ந்தால்தான் இல்லறம் சிறக்கும். இன்றேல், கற்பு நிலை தவறும் மனத்தையுடைய பெண், வாய்ப்பு கிடைக்கும் பொழுது கணவனைக் கொன்றழித்துவிடக் கூடிய "தண்டோச்சிப் பின் செல்லும் (கணவன்பின்) கூற்று" (நாலடியார்) என்பவளே ஆவாள் என்று கருதினர் நம் முன்னோர். எனவேதான்,

*'கல்வி இல்லாத செல்வம் பாழ்'*
*'கற்பு இல்லாத அழகு பாழ்'*

என்ற கருத்தையும் நிலை நாட்டினர்.

பெண்ணின் கற்பே குடும்ப அமைப்புக்கு அச்சாணியாகும். பெண்ணின் நிறை தடுமாறினால் குடும்ப உறவுகள் தடுமாறும்; மன உணர்வுகளில் குழப்பம் ஏற்படும்; வன்முறை பெருகும்; வன்முறை எண்ணங்களுக்கேற்ப இயற்கையும் நிலைதடுமாறும் என்று நம்பிய முன்னோர்கள் உலகம் பெறுகின்ற மும்மாரிகளில் ஒன்று கற்புடைய மகளிரால் பெறப்படுவது என்றனர்.

மறைநூல் ஓதுகின்ற அந்தணர்களுக்கு ஒரு மழை
நீதி நெறி தவறாத மன்னவர்க்கு ஒரு மழை
கற்பு நிலை திரியாத மங்கையர்க்கு ஒரு மழை

என்று அறம் போதித்தனர். கம்பனும்,

*"....................................... மாதரார்*
*அற்பின் நின்றன, அறங்கள் அன்னவர்*
*கற்பின் நின்றன கால மாரியே"*

*(பால - ஆற்று - 59)*

என்கிறான்.

எனவே, அமைதியான வாழ்க்கைக்கு அடித்தளம் இடுவது பெண்ணின் கற்பே என்று உறுதி செய்யப்பட்டது. வள்ளுவனும் உலகத்தில் எல்லாவற்றுக்கும் மேலான, சிறந்த உயர்ந்த பொருள் எது என்று தேடிப் பார்த்து ஆய்ந்த பிறகு கூறுகிறான்; கற்புடைய பெண்ணே உலகத்திலே மேன்மையான பொருள் என்று.

*"பெண்ணிற் பெருந்தக்க யாவுள - கற்பென்னும்*
*திண்மை யுண்டாகப் பெறின்" - (குறள் - 54)*

என்பது வள்ளுவர் கருத்து.

எனவே, பெண்ணின் கற்பு நிலைநாட்டப்பெற வேண்டியது அவசியம். இதை உணர்ந்து செயல்பட்டான் இராமன்.

'சத்யம் வத' என்பது மறைமொழி. உண்மை நிலைநாட்டப் பெற வேண்டும். இராமன் இங்கு அதற்குத்தான் பாடுபடுகிறான். சீதையின் கற்பை மீண்டும் மீண்டும் உறுதி செய்ய அவன் எடுக்கும் முயற்சிகள் அவனுக்குப் பழியைச் சேர்க்கும் என்பதை அறியானா இராமன்? அறிவான். **ஆயினும் தனக்கேற்படும் பழியைவிட, சீதையின் பழி துடைக்கப்பட வேண்டும் என்பதிலேயே அதிக நாட்டம் கொண்டவன் ஆனான் இராமன்.** காரணம் ஆணுடைய தவறுகளுக்கு - அதிலும் அரசர்களுடைய தவறுகளுக்கு - உலகம் எப்படியும் நியாயம் கற்பித்து அவர்களை ஏற்றுக் கொண்டு விடும். ஆனால் பெண்ணுக்கு ஏற்படும் பழி என்றைக்கும் மாறாது. இதை நன்கு அறிந்தவன் இராமன். தன்னை வனம் போக்கிய வகையில் அன்னை கைகேயி தவறு எதுவும் செய்யவில்லை என்பதை இராமன் அறிவான்! தனக்கு உரிமையில்லாத அரசைத் தனக்கு அளித்துத் தவறு செய்தவன் தந்தை தயரதனே

என்பதையும் அறிவான். தாய்க்கு ஏற்பட்டுவிட்ட பழியைப் போக்குவதற்கு வாய்ப்பு நேரிடும்பொழுதெல்லாம் முனைகிறான். இறுதியில் தன் தந்தையைக் கொண்டே அவளது குற்றத்தைக் களைகிறான். அவனே தன்னுடைய நாவால் 'தெய்வம்' என்று போற்றிவிட்டான். ஆயினும் கைகேயி இன்றளவும் பழி சுமந்தவளாகிவிட்டாள். 'தீயினும் சிறந்த தீயாள்' என்று அழிக்கும் ஆற்றல் கொண்ட தீயவளாகவே பழிக்கப்படுகிறாள். தயரதனோ, "வையமெலாம் நடந்த வாய்மை மன்னனாகிவிட்டான். எனவேதான் பெண்ணுக்குற்ற பழியை நீக்குவதில் (தாய் கைகேயி, மனைவி சீதை) முனைந்து நிற்கிறான் இராமன்" என்பதை நிகழ்ச்சிகளைக் கூர்ந்து நோக்குபவர் உணர்வர்.

'குன்றே அனைய குற்றங்கள் குணமே என்று நீ கொண்டனையே!' என்று இறைவனின் அருளிச் செயல் பண்பைக் கூறுகிறார் மணிவாசகர். அவ்வாறு அகலிகை தொடர்பான பிரச்சினையில், கௌதமனிடம், "அகலிகை நெஞ்சினால் பிழைத்தலள்" என்று கூறி அருள்புரிந்தவன், சீதை நெஞ்சினாலும் பிழைக்கவில்லை என்று அறிந்தும் கருணை புரியாது ஒழிவானோ? பெண்ணினத்துக்குப் பெருமை சேர்க்கும் பண்பினனே இராமன். **கைகேயியை இராமன் 'தெய்வம்' என்று ஏன் போற்றுகின்றான்? தந்தை தயரதன் வாய்மையைக் கைவிட இருந்தவன். தன் நா தந்த வாக்கைத்தானே மீறுவதற்கு இருந்தவன். அந்தக் குற்றத்திலிருந்து அவனைக் காத்து, அவன் மீது விழவிருந்த பழியைத் தன் மீது தாங்கியவள் கைகேயி ஆதலால், அவளைத் தெய்வம் எனத் தொழுகிறான்.** அவ்வாறே இப்பொழுது இராமன் தன் மீது பழி வந்துற்றாலும் பாதகமில்லை என்று பெண் (சீதை) மீது விழுந்த பழியைப் போக்க முனைந்து நின்றதால் கம்பன் இங்கு இராமனைக் கருணை உள்ளத்தவன் என்று கூறி முடிக்கிறான்.

**(இராமனுடைய கணிப்பின்படி, இன்றளவும் சீதை 'கற்புக்கனலி' என்று போற்றப்பெறுகிறாள். அவளுடைய கற்பை நிலைநாட்ட முயன்ற இராமன்** பழிக்குள்ளாகியிருக்கிறான் என்பதை ஓர்க)

**குற்றமற்ற அரசன் ஒருவனுக்கு என்னென்ன குணங்கள் வேண்டும்?** பட்டியலிடுகிறான் வசிட்டன்.

*"இனிய சொல்லினன்; ஈகையன்; எண்ணினன்;*
*வினையன்; தூயன்; விழுமியன்; வென்றியன்;*
*நினையும் நீதி நெறி கடவான்" எனில்*
*அனைய மன்னர்க்கு அழிவு உண்டாம்கொலோ?"*

*(அயோத்தி – மந்தரை சூழ்ச்சி – 26)*

மேலே கூறப்பட்டுள்ள அத்தனைக் குணங்களும் இராமனுக்குப் பொருந்தியவை. இறுதியாக வசிட்டர் கூறும் அறம், நீதி வழங்குவதில் மன்னர் நெறி பிறழாதவனாக இருக்க வேண்டும் என்பதே. இது மன்னனுக்கு மிகவும் அவசியமான பண்பு. நெறி கடந்து நீதி வழுவிய மன்னன் நெடுஞ்செழியன்,

*'மன்பதைக் காக்கும் தென்புலம் காவல்*
*என்முதற் பிழைத்தது கெடுக என் ஆயுள்''*
*(சிலப்பதிகாரம் - மதுரை காண்டம்)*

என்று தன் உயிரையே விட்டான் அல்லவா? அறம் பிழைத்தவர்க்கு அறமே கூற்றாகும். அறம் பிழைக்காதிருக்க வேண்டுமாயின் அரசர்க்கு நடுவு நின்ற நன்னெஞ்சம் வேண்டும். நடுவு நிலைமை என்று போற்றப்படும் இப்பண்பு இராமனையே தன்னிருப்பிடமாக தேர்ந்தெடுத்துக் கொண்டது. எனவேதான் தவறு செய்தவன் தானாகவே இருந்தாலும் தனக்கே தண்டனை கொடுத்துக் கொள்ளும் அறத்தின் நாயகனாக இராமனைக் காண்கிறோம். இத்தகைய நடுவு நிலைப் பண்பை வள்ளுவர் பின்வரும் குறட்பாக்கள் மூலம் நாவாரப் போற்றுகின்றார்.

*'தகுதி எனவொன்று நன்றே - பகுதியால்*
*பாற்பட்டு ஒழுகப் பெறின்' - (குறள் - 111)*

பொருள்: பாரபட்சமற்ற முறையில் பகுத்துப் பார்த்துச் செயல்பட்டால் நடுவுநிலைமை என்னும் அறம் சிறக்கும்.

*'செப்பம் உடையவன் ஆக்கஞ் சிதைவின்றி*
*எச்சத்திற்கே ஏமாப்பு உடைத்து' - (குறள் - 112)*

பொருள்: நடுவு நிலைமை மாறாத மனச் செம்மையுடன் செயல்படுபவனுடைய செல்வம், சிதைவில்லாத புகழ் என்றும் பொருள் செல்வமாக எஞ்சி நிற்கும்.

*'கேடும் பெருக்கமும் இல்ல நெஞ்சத்துக்*
*கோடாமை சான்றோர்க்கு அணி'' - (குறள் - 115)*

என்றும்,

*'சமன்செய்து சீர்தூக்கும் கோல்போல் அமைந்தொரு பால்*
*கோடாமை சான்றோர்க்க அணி' - (குறள் - 118)*

என்றும் நடுவு நிலைமை எனும் பண்பு சான்றோருக்குச் சிறப்பு சேர்த்து அழகு தரும் சிறந்த அணிகலன் என்று போற்றுகின்றான் வள்ளுவன். (குற்றத்துக்குரியவள் தன் மனைவியே என்ற போதும், தகுந்த சாட்சியமின்றி, குற்றத்தினின்றும் அவளை இராமன் விடுதலை செய்ய முயலவில்லை அல்லவா? தனக்குற்றவரே ஆயினும், பொதுவான சட்டத்துக்குட்பட்டே அனைவரும் தம் பழியைப் போக்கிக் கொள்ள வேண்டும் என்ற அறத்தைத் தன் நடுவு நிலைமைப் பண்பால் இராமன் நிலைநாட்டினான்.)

சான்றாண்மைக் குணங்களின் ஒட்டுமொத்த கொள்கலனாக மன்னன் இருத்தல் வேண்டும். குடிமக்களின் உயிர் உறையும் உடலாக மன்னன் தயரதன் இருந்தான் ('உயிரெலாம் உறைவதோர் உடம்பும் ஆயினான்') என்கிறான் கம்பன். அத்தகைய மன்னன் அறம் கடவாது, வினை புரிந்தால் அவனைவிட அருளாளன் வேறு யார் என்றும் கேட்கிறான் கம்பன்.

*"வையம் மன் உயிர் ஆக, அம் மன் உயிர்*
*உய்யத் தாங்கும் உடல் அன்ன மன்னனுக்கு*
*ஐயம் இன்றி, அறம் கடவாது, அருள்*
*மெய்யில் நின்றபின், வேள்வியும் வேண்டுமோ?"*

*(அயோத்தி – மந்தரை சூழ்ச்சி – 25)*

அறத்தைக் காத்தல் என்பதே பெருமுயற்சியுடன் ஆற்றப்பட வேண்டிய செயலாதலால் அறம் காக்கும் மன்னர்கள், பெரு வினையாகிய வேள்வியை இயற்ற வேண்டும் என்ற அவசியம் இல்லை என்கிறான் கம்பன்.

அறம் என்னும் கருத்து ஒரு சமயத்துக்கு மட்டும் உரியதன்று. அது சமயம் கடந்தது. மனித குலத்துக்கே பொதுவானது.

பாரதப் பண்பாட்டு நோக்கிலே, ஒரு தனி மனிதன் தனக்கும் மற்றவர்களுக்கும், ஆற்ற வேண்டிய கடமைகளை முறையாகவும், ஒழுங்காகவும் செய்வதுதான் அறமாகும். அண்டத்தையும் அதனுள் அடங்கிய அனைத்தையும் இயக்குகின்ற அடிப்படை விதியின் சீரான ஒழுங்கமைதியின் ஓர் அங்கமே அறம் ஆகிறது. அத்தகையதோர் ஒழுங்கும் நியதியும் அண்டத்தில் இருக்குமாயின், மனிதனும் அதனுடன் தன்னைப் பொருத்திக் கொண்டு இணக்கமாகச் செயல்பட வேண்டும். அவ்வாறே தனி மனிதர்களின் ஒட்டுமொத்த ஒழுங்கும் நியதியும் அண்டத்திலும் பிரதிபலிக்கும். இதுவே இயற்கையும் மனிதனும் இயைந்து வாழும் அறவாழ்வாகும்.

ஆக, திருமாலின் அவதாரம் என்று மக்களால் கொண்டாடப்பெற்ற இராமனின் மனைவியேயானாலும், திருமகளின் அம்சம் என்று சான்றோரால் ஏற்றுக் கொள்ளப்பட்ட தெய்வ மகளேயானாலும் – சீதை தொடர்பான ஒரு வழக்குக்கு, அந்த வழக்குக்கு இறுதி சாட்சியாக நிற்கக்கூடிய தீக்கடவுளின் சாட்சியை ஏற்ற பிறகே இராமன் தீர்ப்புக் கூறினான் என்றால், பிற வழக்குகளை அறம் பிறழாமல் நடுவு நின்ற நன்னெஞ்சினனாய்க் கண்டு தீர்ப்பு வழங்குவான் என்ற உண்மை உணர்த்தப்பட்டது. இப்பொழுது வசை ஒழிந்த மனையாளை இசை கூர ஏற்றுக் கொண்டு, அயோத்திக்கு அரசி என்ற தகுதியைப் பெருமையுடன் வழங்கலாமல்லவா? இராமனின் இத்தகைய அறச் சார்பு நிலையைத்தான் இந்தச் சிறை மீட்பு, தீக்குளித்தல் ஆகிய நிகழ்ச்சிகளில் காண வேண்டுமேயன்றி, இராமன் ஆணாதிக்கப் பண்பினன் என்று குற்றம் காண்பது அறிவுடைமை ஆகாது. இராமன் அறத்தின் நாயகனாகக் காணப்பட வேண்டும் என்பதே ஈண்டு பெறப்படும் கருத்து. எனவேதான், அறச்சார்புடைய நல்லாட்சியை எவர் நல்கிய பொழுதும், அந்த நல்லாட்சி "இராம ராஜ்யம்" என்று போற்றப்படும் வழக்கு தோன்றி, பிற்காலத்தில் பாரதநாட்டில், அச்சொல் வழக்கு மரபாகி நிலைத்தது என்பதையும் உணர வேண்டும்.

'இராம ராஜ்யம்' என்பது என்ன? கம்பன் கூறுகிறான்:

*'வையம் மன் உயிர் ஆக, அம் மன் உயிர்*
*உய்யத் தாங்கும் உடல் அன்ன மன்னன்'*

*– (அயோத்தி – மந்தரை சூழ்வினை -25)*

ஆளும் ராஜ்யமே 'இராம ராஜ்யம்' ஆகும் என்று. அதாவது, மன்னுயிர்களை ஆளும் மன்னன், அவ்வனைத்து உயிர்களும் உறையும் உடலாகத் தன்னைப் பாவித்து, அவ்வுயிர்களின் நலம் ஒன்றை மட்டுமே நாடி ஆட்சி புரிய வேண்டும். அது மட்டுமன்று. 'தம் அனைவருடைய உயிரும் ஒன்று கூடிய ஒருயிரே தம் மன்னனுடைய உடல்' என்று ஒவ்வொரு குடிமகனும் நினைக்கவும் வேண்டும். தேரில் ஏறித் தெருவில் செல்லும் இராமனை அயோத்தி மக்கள் அப்படித்தான் நினைத்தார்கள் என்கிறான் கம்பன்.

காப்பிய வரிகள்:

*'..................................................*
*................இன் உயிர் யார்க்கும் ஒன்றாய்ப்*
*பொரு அரு தேரில் செல்ல, புறத்திடைக் கண்டார் போல்வார்'*

*(அயோத்தி – கைகேயி சூழ்வினை -87)*

எனவேதான், இராவண யுத்தம் முடிந்து, அயோத்தி மீண்டு வந்து, இராமன், வசிட்டர் கையால் முடிபுனைந்து கொண்டபொழுது, அயோத்தி மக்கள் மட்டுமன்றி, மூவுலகத்து உயிர்களும்கூட, தத்தம் தலையில் அம்முடி புனையப்பட்டதாக எண்ணினர் என்றான் கம்பன்.

காப்பியப் பாடல்:

*"சித்தம் ஒத்துளன் என்று ஓதும் திருநகர்த் தெய்வ நன்னூல்*
*வித்தகன் ஒருவன் சென்னி மிலைச்சியது எனினும் மேன்மை*
*ஒத்த மூவுலகத்தோர்க்கும் உவகையில் உறுதி உன்னின்*
*தத்தம் உச்சியில் மேல் வைத்தது ஒத்தது அத் தாமமோலி"*

*(யுத்த - திருமுடிசூட்டு -40)*

நாடாளும் மன்னர்களும், பாராளும் வேந்தர்களும் இராமனைப் போல் இருந்துவிட்டால் இந்த உலகம் எப்படி இருக்கும்? பதில் கூறுகிறான் கம்பன்.

இராமனைப் போல் நாட்டை ஆள்பவர்கள் அமைந்துவிட்டால் இந்த உலகம் இமையவர் நாடு போல் இன்பமாக விளங்காதா! என்று கேட்கிறான். ஒளி இருக்கும் இடத்திலே இருளுக்கு இடம் ஏது? அறம் துலங்கும் ஆட்சியில் துயரத்துக்கு இடம் ஏது? இராமன் ஆண்ட அயோத்தியில் அறம் தழைத்தது. ஒழுக்கம் நிறைந்தது. வளம் பெருகியது. எல்லாரும் எல்லாப் பெருஞ்செல்வமும் எய்தலால் இல்லாரும் இல்லை ;உடையாரும் இல்லை என்ற சமத்துவ வாழ்நெறி துலங்கியது. இராமன் வாழ்ந்த அயோத்தி எப்படி இருந்தது? கம்பன் எழுதுகிறான்.

*"கூற்றம் இல்லை; ஓர் குற்றம் இலாமையால்;*
*சீற்றம் இல்லை; தம் சிந்தையின் செம்மையால்;*
*ஆற்றல் நல் அறம் அல்லது இலாமையால்;*
*ஏற்றம் அல்லது இழித் தகவு இல்லையே"*

*(பால - ஆற்று - 39)*

*"வண்மை இல்லை; ஓர் வறுமை இன்மையால்*
*திண்மை இல்லை; ஓர் செறுநர் இன்மையால்*
*உண்மை இல்லை; பொய் உரை இலாமையால்*
*வெண்மை இல்லை; பல கேள்வி மேவலால்"*

*(பால - ஆற்று - 53)*

அங்கே,

*''கலம் சுரக்கும் நிதியம்; கணக்கு இலா,*
*நிலம் சுரக்கும், நிறை வளம்; நல மணி*
*பிலம் சுரக்கும்; பெறுதற்கு அரிய தம்*
*குலம் சுரக்கும்; ஒழுக்கம் குடிக்கு எலாம்''*

*(பால - ஆற்று - 38)*

செங்கோல் ஏந்தியவர்கள் எல்லோரும் மன்னர்கள் அல்லர்; பதவி பெற்றவர்களெல்லோரும் ஆட்சியர் அல்லர். **பதவியால் ஒருவன் பெருமை பெறக்கூடாது. மனிதனால் பதவிக்குப் பெருமை சேர வேண்டும்.** அரச பதவிக்கே பெருமை சேர்த்தவன் இராமன். தவநெறியோடு அறம் வளர்த்த இராகவனைப் போல் ஆட்சியர் அமைந்துவிட்டால் உலகம் வானவர் வாழும் துறக்கமாகி விடாதா? மனித குலம் அன்பில் வாழ்ந்து, அறத்தில் தழைத்தால், விண்ணுலகில் பெறக்கூடிய பேரின்ப நிலையை, மனிதகுலம் மண்ணுலகிலேயே கண்டுவிட இயலாதா? எல்லாம் சாத்தியம்தான். ஆனால் அதற்கு இராகவன் போன்ற ஆட்சியர் வேண்டுமே?! ஏங்குகிறான் கம்பன்! அவனுடைய ஏக்கம் கவிதையாக உருப்பெறுகிறது.

*''புண்ணியம் புரிந்தோர் புகுவது துறக்கம்*
*என்னும் ஈது'' அரு மறைப் பொருளே;*
***மண்ணிடை யாவர் இராகவன் அன்றி***
***மா தவம் அறத்தொடும் வளர்த்தார்?***
*எண் அருங் குணத்தின் அவன், இனிது இருந்து இவ்*
*ஏழ உலகு ஆள் இடம் என்றால்,*
*ஒண்ணுமோ, இதனின் வேறு ஒரு போகம்*
*உறைவு இடம் உண்டு என் உரைத்தல்?''*

*(பால - நகர - 5)*

இராமனுடைய கதையை தன் உயிர் நிலையில் நிறுத்தி உருகியவன் கம்பன். இராமனின் அரும்பெருங் குணங்களால் ஆத்மார்த்தமாக ஈர்க்கப்பட்டவன் கம்பன். அவனுடைய செப்பருங்குணங்களை அனுதினமும் ஆராதித்தவன் கம்பன்.

*“மூலமும் நடுவும் ஈறும் இல்லதோர் மும்மைத்தாய*
*காலமும் கணக்கும் நீத்த காரணன் கை வில் ஏந்தி,*
*சூலமும் திகிரி சங்கும் கரகமும் துறந்து தொல்லை*
*ஆலமும் மலரும் வெள்ளிப் பொருப்பும் விட்டு அயோத்தி வந்தான்”*

*(சுந்தர - பிணி வீட்டு - 80)*

என்று இராமனை மூலப் பரம்பொருளாகக் கண்டவன். மூலப் பரம்பொருளின் எண்ணிலடங்காத குணங்களை மொழியில் கூறுதல் இயலுமோ? இயலாது. ஓசை பெற்று உயர்ந்து ஓலமிடும்பெருடங்கடலை ஒரு பூனை தன் நாவால் நக்கிக் குடித்து முற்ற வைத்துவிட முடியுமா? முடியாது. ஆயினும் ஆசையின் காரணமாக அது முயற்சியைச் செய்கிறது. அந்தப் பூனையைப் போலவே தானும், குற்றமில்லாத இராமனின் குண மேன்மைகளின்மேல் ஏற்பட்டுவிட்ட ஆசை காரணமாகவே இராம காதையை எழுத முற்பட்டு முடிக்கிறான்.

இராம காதையின் நாயகன் இராமன், **“குற்றமற்ற கோமகன்”** எனும் கருத்து நாட்டப்பட்டது.

*“அறம் தலை நிறுத்தி, வேதம் அருள் சுரந்து அறைந்த நீதித்*
*திறம் தெரிந்து உலகம் பூணச் செந்நெறி செலுத்தி, தீயோர்*
*இறந்து உகநூறி, தக்கோர் இடர் துடைத்து ஏக, ஈண்டுப்*
*பிறந்தனன்- தன் பொற்பாதம் ஏத்துவார் பிறப்பு அறுப்பான்”*

*(சுந்தர -பிணிவீட்டு -81)*

⌘ ⌘ ⌘

*“ஓயாத மலர் அயனே முதல் ஆக உள் ஆகி,*
*மாயாத வானவர்க்கும், மற்று ஒழிந்த மன்னுயிர்க்கும்,*
*நீ ஆதி முதல் தாதை, நெறி முறையால் ஈன்று எடுத்த*
*தாய் ஆவார் யாவரே? - தருமத்தின் தனி மூர்த்தி”*

(ஆரணிய - விராதன் வதை - 52)

⌘ ⌘ ⌘

அண்ணல் இராமன் அமைத்து அளித்த
அறம் தழைக்கும் அரசாட்சி
அகிலமெங்கும் அமைக.

**முற்றும்**

மணிமேகலைப் பிரசுரம்



# இராமன்
# குற்றமற்ற கோமகன்



## ஆசிரியர் பற்றிய குறிப்பு



| | | |
|---|---|---|
| பெயர் | : | இரா. மணிமேகலை |
| கல்வித் தகுதி | : | எம்.ஏ (பொருளாதாரம்)<br>எம்.ஏ. (தமிழ் இலக்கியம்) |
| வேலை | : | பொருளாதாரப் பேராசிரியர்<br>அறிஞர் அண்ணா அரசினர்<br>கலைக் கல்லூரி, காரைக்கால்<br>புதுவை மாநிலம். |
| எழுதியுள்ள பிற நூல்கள் | : | தெய்வக் கற்பினள்<br>கதை சொல்லும் ஒரு கவிதை<br>சங்கத் தமிழ்க் காதல் |